Koviloor Digital Library

# மாதவீகங்கணம்

(முதல் இரண்டு பாகங்கள்)

4102

ஸ்ரீயுத ரமேச சந்திர தத்தர்

இயற்றியது

வழி நூல் ஆசிரியர் :

ஸ்ரீ வெ. கா. ராமநாதன், பி.ஏ., பி.எல்.

KVC0141

அல்லயன்ஸ் கம்பெனி
மயிலாப்பூர் : : சென்னை

காபிரைட்] [விலை ரூ. 2-0-0

Koviloor Digital Library

பனங்குளம்

(THE LAKE OF PALMS)

ரமேச சந்திர தத்தர்

——— எழுதியது ———

விரைவில் வெளிவரும்

சாது அச்சுக்கூடம்,
சென்னை, (194067111)

Koviloor Digital Library

4102

# முன்னுரை

பாரத மாதாவின் தவப் புதல்வராம் ஸ்ரீயுத ரமேச சந்திர தத்தர் தமது தாய்ப் பாஷையாகிய வங்க பாஷையிலும், ராஜ பாஷையாகிய ஆங்கிலத்திலும் அரும்பெரும் நூல்கள் பல இயற்றிப் போந்தார். இந்நூல் ஆங்கிலத்தில் 'ஆக்ரா நகரத்து அடிமைப் பெண்' என்றும், வங்க பாஷையில் 'மாதவீ கங்கணம்' என்றும் வழங்கும் அக்பர் காலத்துச் சரித்திர சம்பந்தமான ஒரு நவீனத்தின் தமிழ் வழி நூலாகும்.

ஸ்ரீயுத ரமேச சந்திர தத்தர் அவர்களின் சுருக்கமான ஜீவியக் குறிப்பும் இந்நூலில் சேர்க்கப்பட்டிருக்கிறது.

இப் புத்தகம் சுமார் 600 பக்கங்கள் வருமாதலால், 2 தொகுதிகளாகப் பிரித்து வெளியிடப்படுகிறது.

வெ. கா. ராமநாதன்,
சென்னை, 31—5—40

Koviloor Digital Library

# அர்ப்பணம்

'ஆநந்தமடம்', 'சந்திரசேகரன்' முதலிய வங்க நூல்களைத் தமிழ்ப்படுத்தியவரும், 'ஸ்ரீ ராம கிருஷ்ண விஜயம்' 'ஸ்ரீ விவேகானந்த விஜயம்' என்னும் முதனூல்களைத் தமிழிலாக்கியவரும், ஆங்கிலம், ஸம்ஸ்க்ருதம், வங்காளி, தமிழ், தெலுங்கு இப்பாஷைகளில் பூர்ண பாண்டித்தியம் படைத்தவரும், கன்னடம், மலையாளம், ஹிந்துஸ்தானி இப்பாஷைகளில் மிக்க பரிசயமுடையவரும், சிங்கப்பூர் ஸுப்ரீம் கோர்ட்டில் பாரத பாஷா த்விபாஷியாயிருந்து காலஞ்சென்றவருமான 'மஹேச குமார சர்மா என்னும் இலக்கியப் புனைபெயர் வாய்ந்த ஸ்ரீயுத மா. குப்புஸ்வாமி ஐயர் என்னும் புலவர்பெருமான் அவர்களுடைய தூண்டுதலின்பேரில்தான் நான் இத்தமிழ்வழிநூலை இயற்றத்தொடங்கினேன். இந்நூல் கையெழுத்துப் பிரதியாயிருந்தபோது, இதனை அவர் ஆங்காங்கே சோதித்தும், பின்னர் ஒருமுறை முழுநூலையும் பரிசோதித்துப் பிழைகளைத் திருத்தியும் எனக்குப் பெரிதும் உதவி செய்தனர்.

எனக்குத் தமிழ் அமுதை ஊட்டுவித்த அன்னையெனவும், எனக்குத் தமிழ்க் கலையைப் போதித்த ஆசான் எனவும் என்றைக்கும் நான் அவரைக் கருதியுள்ளேனாதலால் இந்நூலினை அவருடைய ஞாபகார்த்தமாக அவருக்கே அர்ப்பணஞ் செய்கின்றேன்.

லாயிட்ஸ் ரோட்,<br>ராயப்பேட்டை, சென்னை

இப்படிக்கு<br>வே. கா. ராமநாதன்.

412

Koviloor Digital Library

## ஸ்ரீயுத ரமேச சந்திர தத்தர்

## ஜீவியக் குறிப்பு

ஜனனம் : **13-8-1848** : : மறைவு : **30-11-1909**

*வங்க மாதாவின் வரபுத்திரர் ; தாய்மொழியை வளர்ப்பதில் தன்னயம் பாராட்டாத சிரத்தைகொண்டவர். தீர்க்காலோசனையும் ஆழ்ந்த அறிவுமுடைய ராஜநீதி நிபுணர். காங்கிரஸ் மஹாசபையின் அபிவிருத்தியில் அக்கரைகொண்டு உழைத்து அதற்குத் தலைமையும் வகித்தவர். ரிக் வேதத்தை வங்காளி பாஷையில் மொழிபெயர்த்தவர். ஆங்கில இலக்கியத்தில் கரைகண்டவர். பற்பல ஆங்கில நூல்களை எழுதியவர். அரசிறை, சட்ட நிரூபணம் இவைகளின் நுணுக்கமறிந்தவர் ; தருமநூல் வல்லவர். கர்ஸன் பெருமானுடன் வாதம் புரிந்து வெற்றிபெற்றவர். பரோடா ஸம்ஸ்தான திவான் பதவியிலிருந்து அந்நாட்டினருக்குச் சகல அனுகூலங்களும் புரிந்தவர்.*

*1869-ஆம் ஆண்டு இந்தியன் ஸிவில் ஸர்விஸ் பரீட்சையில் புகழுடன் தேறினவர். 1871-ஆம் ஆண்டு இவர் பாரிஸ் சென்றிருந்தபோது விதேசீய கம்யூனிஸ்ட் கக்ஷியைச் சேர்ந்தவரெனப் பிரஞ்சு கவர்ன்மெண்டாரால் சந்தேகிக்கப் பட்டு ஓர் இரவு பாதுகாப்பில் இருந்து மறுநாள் விடுவிக்கப் பெற்று மீண்டவர். ஸிவில் ஸர்விஸ் உத்தியோகஸ்தராகப் பதினோராண்டுகள் புகழுடன் வேலைபார்த்தவர்.*

*மாஜி வைஸிராய் ரிப்பன் பிரபு, ரமேச சந்திரரைப் பற்றிப் பின்வருமாறு புகழ்ந்திருப்பது கவனிக்கற்பாலது :*

Koviloor Digital Library



"நான் பாரத நாட்டைவிட்டுப் போவதற்குமுன், உங்களை ஒரு தடவை பார்க்க வேண்டுமென்று இங்கே வரவழைத்தேன். நீங்கள் உங்களுடைய அலுவலைச் செய்யும் திறமை சீமையிலுள்ளவர்களுக்குத் தெரியவரும் பக்ஷத்தில், துரைத்தன நிர்வாகத்தில் பாரதவாசிகளுக்குச் சாமர்த்தியம் இருக்கிறதா எனும் விஷயத்தில் இனி அவர்களுக்குச் சந்தேகமே உண்டாகாது."

ஸ்ரீ ரமேசர் வங்க சட்டசபை அங்கத்தினரில் ஒருவராக அமர்ந்து அனைவரும் மதிக்கும்படி வேலை செய்தவர். 1892-ஆம் ஆண்டு அவருக்கு 'இந்திய ஸம்ராட நேசன்' எனும் பட்டம் கவர்ன்மெண்டாரால் அளிக்கப்பட்டது.

ரமேச சந்திரர் வடமொழியிலும் தேர்ந்த அறிவினர். 1893-ஆம் ௵ வங்க ஸாஹித்ய பரிஷத் என்னும் கழகத்தை ஸ்தாபித்து வங்காளி பாஷையில், "மாதவீ கங்கணம்", "பனங்குளம்", "விமலா" முதலிய நவீனங்களை எழுதியவர். ஆங்கிலத்திலும் இவை மொழிபெயர்க்கப்பட்டுப் போற்றப் படுகின்றன. இவர் எழுதிய "புராதன இந்தியரின் நாகரிகம்" என்னும் நூல், இன்றும் சரித்திரம் படிப்பவரின் முதனூலாகி நிற்கிறது.

### இவர் எழுதிய வேறு நூல்களுள் சில

1. கர்ஸன் பிரபுவிற்கு எழுதிய பகிரங்கக் கடிதங்கள்.
2. விக்டோரியாவின் காலம்.
3. புராதன இந்திய சரித்திரத்தின் வரலாறு.
4. இந்தியக் குடி நிர்வாக சரிதை.
5. ஆங்கிலக் கவியில் ராமாயண மஹாபாரத இதிஹாஸங்கள்.

Koviloor Digital Library

# பொருளடக்கம்

தொகுதி 1 :: Vol. I

4102.

Koviloor Digital Library

## தொகுதி 2 : : Vol. II

### மூன்றாம் பாகம்



### நான்காம் பாகம்

Koviloor Digital Library

# மாதவீ கங்கணம்

## முதல் அத்தியாயம்

## விளையும் பயிர் முளையிலே

அக்பர் சக்கரவர்த்தி அரசாட்சி செய்துவருங் காலம்; 1590-ஆம்வருடம், ஒருநாள் மாலை நேரம்; மூன்று குழந்தைகள் கங்கையாற்றங்கரையில் விளையாடிக் கொண்டிருந்தார்கள். இந்த இடம் மிகவும் ரமணீயமாயும் மனோகரமாயும் இருந்தது; இத்தேச சரித்திரத்தில் பிரசித்தமான சம்பவங்கள் எத்தனையோ இங்கே நிகழ்ந்திருக்கின்றன. இந்த அகன்ற நதியானது கிழக்கு முகமாய்ப் பலநூறு மைல் தூரம் பாய்ந்துவந்து, இந்த இடத்தில் ராஜமஹால் என்னும் குன்றுகளைச்சுற்றி வளைந்து திரும்பித் தென் திசையாகப் பிரவகிக்கின்றது. இந்தக் குறுகிய வாயிலின் வழியாக மேற்குப் பிரதேசத்திலிருந்து படையெழுச்சி அலைகள் பல தடவையும் வங்காள நாட்டின் செழித்த சமபூமிகளை நோக்கிப் புரண்டுவந்திருக்கின்றன. ராஜவம்ச ஸ்தாபகர்கள் பலரும் அரசியற்சூழ்ச்சிக்கேற்ற இந்த ஸ்தானத்தில் பல

Koviloor Digital Library


முறையும் தம் அதிகாரத்தை நிலைபெறச் செய்திருக்கின்றனர். கௌடம், தொண்டம், ராஜமஹால் முதலிய இடங்கள் இக்காலத்தில் எளிய பட்டணங்களாகவோ ஜனங்கள் அதிகமில்லாத குக்கிராமங்களாகவோ இருந்த போதிலும், முற்காலத்தில் ஹிந்து, ஆப்கானிய, மொகலாய அரசர்களும், வெற்றி வீரர்களும் அரசாட்சி செய்துவந்த பிரதான பட்டணங்களாய் இருந்தன. இதுவுமல்லாமல் வங்காள நாட்டின் ஸௌபாக்கிய தௌர்ப்பாக்கிய கதிகளைத் தீர்மானிப்பனவாய் அடிக்கடி உண்டாகிய ராஜ்யப் பிரளயங்களில் உபய பக்ஷங்களில் ஏதாவதொன்றைச் சேர்ந்திருந்த அஞ்சாநெஞ்சராகிய வீரர்களையும் திடஸங்கற்பமுள்ள தலைவர்களையும் கொண்ட ராஜவம்ச மொன்று, பதினாறும் நூற்றாண்டில் நடந்த போர்களால் இந்தப் பிரதேசத்திலேயே தழைத்தோங்குவதாயிற்று.

இவ்வளவு உலகப்பிரசித்தியும் இயற்கையழகும் வாய்ந்த இடத்திலே மேலே கூறிய மூன்று குழந்தைகளும் மணலில் விளையாடிக் கொண்டிருந்தார்கள். அவர்களுக்குப் பின்புறத்தில் பசுமையான நெற்கதிர்கள் காற்றினால் அசைந்து கொண்டிருக்கும் மால்தா சமநிலங்கள், உலகத்திலே இனிப்பிலும் நேர்த்தியிலும் சிறந்த கனிகளை இன்னும் தருவனவாகிய மாந்தோப்புகளின் தொடர்ச்சியாக ஓர் இருண்ட ரேகைபோல் விளங்கின. அவர்களுக்கு எதிராகப் புண்ணிய தீர்த்தமாகிய கங்காநதி பாய்ந்து கொண்டிருந்தது. அந்நதிக்கு அப்புறம் ராஜமஹால் குன்றுகளின் செங்குத்தான சிகரங்கள் உயரமாய்க் கிளம்பியிருந்தன.

ஆற்றிலோ சாமான்கள் நிறைந்த கணக்கற்ற படகுகள் அன்றிரவு தங்கியிருப்பதற்காக அங்கே நங்கூரம் போட்டிருந்தன. அப்படகுகளிற் சில, வங்காளத்தில் உற்பத்தியாகும் சர்க்கரை, உப்பு, பருத்திவஸ்திரங்கள், பட்டு,

Koviloor Digital Library



பீதாம்பரங்கள் முதலியவற்றை வடஇந்தியாவுக்கு ஏற்றிக் கொண்டு போகின்றவை; மற்றவைகள் பீஹாரின் நவதானியங்களையும், காசிப் பட்டணத்துப் பித்தளைப் பாத்திரங்களையும் சித்திரப்பூம் பட்டாடைகளையும் மேலை இந்தியாவின் இராசதானி நகரங்களின் அழகிய கைத்தொழிற் சாமான்களையும் கொண்டுவருபவை.

அக்காலத்தில் அகலமும் ஆழமும் அதிகமாயுள்ள கங்கா நதியே வட இந்தியாவில் நடந்துவந்த வர்த்தகத்துக்கு ராஜமார்க்கமாய் இருந்தது. அவ்வாற்றில் மேலுங் கீழும் போய்வந்து கொண்டிருந்த ஆயிரக் கணக்கான படகுகள் மெல்லச் செல்பவைகளாய் இருந்தபோதிலும், அழகிய உருவங்களுடையனவாய் அதன் அகன்ற நீர்ப் பரப்பைக் கவிந்துகொண்டிருக்கும் காட்சியானது இன்னும் உயிருடனிருக்கும் வயோதிகர்களுடைய ஞாபகத்திலிருக்கலாம். இக்காலத்திலோ ரயில் மார்க்கம் ஏற்பட்டுவிடவே நதிமார்க்கமாய் நடந்துவந்த வர்த்தகம் குறைந்துவிட்டது; அன்றியும் படகும் மாட்டு வண்டியுமே போக்குவரவுக்குரிய சாதனங்களாயிருந்த காலத்தில்விட இக்காலத்தில் பிரயாணம் அதி சீக்கிரத்தில் நடக்கிறது. ஆனல் அக்காலத்தில் உயிர் வாழ்க்கை அமைதியுடையதாக இருந்தது; ஸ்திரீ புருஷர்கள் தத்தம் பரம்பரையான தொழில்களைச் செய்து கொண்டு அதிக அலைச்சலின்றி ஓய்வு உடையவர்களாக இருந்தனர்; தங்கள் கிராமங்களில் இந்த நாட்டுக்கு உரிய ஆடம்பரமற்ற ஸாமான்யமான வாழ்க்கை யின்பத்தை அதிகமாய் அநுபவித்தார்கள்.

நக்ஷத்திரங்களின் மங்கிய ஒளியிலே இரண்டு சிறுவர்கள் அவ்வாற்றங்கரையில் மண்ணையும் மணலையும் குச்சிகளையுங்கொண்டு சிறு வீடுகள் கட்டிக்கொண்டிருக்க, ஒற்றை நாடி சரீரமும் கறுத்த விழிகளுமுள்ள ஒரு பெண் மௌன

Koviloor Digital Library


மாய் அவ்விளையாட்டை உற்றுப் பார்த்துக்கொண்டு நின்ருள். அப்போது சூரியன் அஸ்தமித்தது; இரவின் இருள் எங்கும் சூழ்ந்துகொண்டது. சமீபத்திலுள்ள வீரநகரம் என்றும் பட்டணமானது மாந்தோப்புகள் அடர்ந்த ஓர் இருண்ட ரேகையாகத் தோன்றியதேயல்லாமல், மற்றப்படி அநேகமாய்க் கண்ணுக்குப் புலப்படவில்லை. மரங்களின் இடையில் சில விளக்குகள் மினுக்கு மினுக்கென்று பிரகாசித்துக்கொண்டிருந்தன. ஆற்றங்கரையோ இவ்வாறில்லாமல் அதிகச் சுறுசுறுப்புள்ள காட்சியுடைதாய் இருந்தது. படகுக்காரர்கள் பகலெல்லாம் இறக்குமதி ஏற்றுமதி விஷயமாய் உழைத்துவிட்டு இரவில் உல்லாஸத்துடன் பாடிக்கொண்டிருந்தனர்.

இராப்போஜனத்துக்காக ஒவ்வொரு படகிலும் தீமூட்டப்பட்டிருந்தது. அப்பாலகர்கள் இருவரும் சம வயதுடையவர்கள்; சுமார் பதினைந்து வயதிருக்கலாம். ஆனாலும், உருவத்திலும் குணத்திலும் ஒருவருக்கொருவர் எவ்வளவோ தாரதம்யம் இருந்தது. அவர்களுள் ஸ்ரீசன் என்பவன் கள்ளங்கபடு அற்றவன்; சூதுவாது இல்லாதவன்; மஹா பலசாலி; நல்ல திடகாத்திரன்; யௌவன பருவத்திற்கேற்ற சௌந்தரியமும் அவனிடம் பொருந்தியிருந்தது.

நரேந்திரனுடைய ஒளி பொருந்திய தேககாந்தியோ அவன் கௌரவமான வம்சபரம்பரையையுடைய உயர் குடியிற் பிறந்தவன் என்பதை அறிவித்தது. அவனுடைய அழகு வாய்ந்த சரீர அமைப்பும், சுகுமாரமான வடிவமும் வசீகரமான முகமும் பார்ப்பவர் கண்களைப் பறிப்பனவாயிருந்தன. அவனது விசாலமான நெற்றியின் மேற்புறத்தில் இரண்டு மயிர்ச் சுருள்கள் தவழ்ந்துகொண்டு இருந்தன. அவனுடைய கரிய விழிகள் அவன் மணலில் இங்குமங்கும் ஓடித் திரியும்போது சந்தோஷத்துடன் ஜ்வலித்துக்கொண்

Koviloor Digital Library



டிருந்தன. இவ்வளவிருந்தும், அவன் எளிதில் அற்பமான விஷயத்துக்கும் கோபம் கொள்பவனுயிருந்தபடியால், அவன் முகமானது கோபாக்கினியால் விகாரமடைந்தது. அத்தருணங்களில் அவனிலும் பலசாலியான அவனுடைய தோழன் அவன் முகத்தில் விழிக்கமாட்டான்.

பிறப்பினுலாவது செல்வத்தினுலாவது உண்டாகக் கூடிய அநுகூலங்கள் எவையுமின்றிப் பிறந்த ஸ்ரீசன் நல்ல புத்தியும், பொறுமையும், ஸ்திரமான ஊக்கமும் உடையவன். நரேந்திரனே ஐசுவர்யத்திலேயே புரள்பவன்; அந்தப் பிரதேசமெங்கும் மிகவும் கௌரவிக்கப்பட்ட பிரசித்தமான ஒரு பட்டத்துக்குப் பாத்தியஸ்தன். தகப்பனிடமிருந்து பிள்ளைக்கு வம்சக்கிரமமாய் வருவதாகிய கூரிய அறிவும் அவனுக்குப் பிறப்பினுலேயே அமைந்திருந்தது. ஆயினும் சாந்தம் என்னும் ஒரு நற்குணம் மாத்திரம் இராமையினுல், இவ்வளவு பாக்கியங்களும் ஆற்றிற் கரைத்த புளிபோல் பயனற்றுப் போயின. அவன் எடுத்த காரியமெல்லாம் அபஜயமாகவும் துக்ககரமாகவுமே முடிந்தன. இது ஒரு பெருங்குறை.

அன்று ஸாயங்காலம் நக்ஷத்திர வெளிச்சத்தில் மணல் வீடு கட்டிக்கொண்டிருந்தபோது நரேந்திரனுக்கு நிச்சயமாகவே அபஜயம் உண்டாயிற்று. சாதாரணமாக ஸாமர்த்தியமும் மதியூகமும் உடையவனு யிருந்தபோதிலும், அருகில் மௌனமாய் நின்றுகொண்டிருந்த அந்த ஒற்றை நாடிப் பெண் தன் வேலையைக் கண்கொட்டாது பார்த்திருப்பதைக் காண அவனுக்குக் கூச்சமுண்டாயிற்று.

ஹேமலதை சாந்தமும் தயையுமே ஒன்றுசேர்ந்து உருவெடுத்துவந்த பன்னிரண்டு பிராயமுள்ள ஓர் இனிய பெண் மணி. அப்பெண்மணியை நரேந்திரன் குழந்தைப் பருவமுதல் அறிவான். ஸ்திரமில்லாமல் க்ஷணத்துக்கு க்ஷணம் மாறி

Koviloor Digital Library



மாறி உள்ளத்தில் எழும் உணர்ச்சியால் தனக்கு அன்பான வஸ்துவினிடத்தில் அதிக ஆசை வைத்திருக்கும் ஒரு குழந்தையைப்போல் நரேந்திரன் ஹேமலதையை நேசித்து வந்தான். பரிவுடன் செவிகொடுத்துக் கேட்கும் அப் பெண்ணினிடத்தில் நரேந்திரன் தன்னுடைய அந்தரங்க வருத்தங்களையும், தன் உள்ளத்தில் எழும் பேரவாக்களையும் விரிவாக எடுத்துச் சொல்வான்.

அச்சிறுவனுக்கு உண்டான உணர்ச்சிகளும், அவன் பட்ட கஷ்டமும், கொண்டிருந்த ஆசையும் இத்தன்மை யனவென்று அவ்விளங்கொடிக்குச் சிறிதும் புரியவில்லை யாயினும், அவள் அவனிடத்தில் வேறு எவருக்கும் இல்லாத அநுதாபங்கொண்டு அடிக்கடி அவனுக்கு ஆறுதல் கூறி வந்தாள். அவ்விருவரும் அந்தரங்க நேசத்தால் ஒருவருக் கொருவர் கட்டுண்டு வளர்ந்துவந்தார்கள். அந்த நேசமும் வெளியாருக்குத் தெரியக் கூடாததாக இருந்தபடியால், இன்னும் தீவிரமாய்ப் போஷிக்கப் படுவதாயிற்று.

இவ்வாறு நேசமாய் வளர்ந்துவருகையில் ஸ்ரீசன் இவர்களுக்கிடையில் வந்து தோன்றினான். ஹேமலதை அச்சிறுவனிடம் அதிக அன்புடையவள். இருவரும் விளையாட்டுத் தோழர்கள். ஸ்ரீசன் அதைவிட அதிக மாய் ஒன்றும் எதிர்பார்க்கவில்லை. அவன் அதிகமாய் மனோராஜ்யம் செய்தாலுங்கூட, அந்தப் பிரதேசத்தில் அப்போது சர்வாதிகாரியாக இருந்த அவள் பிதாவுக்கு ஏக புத்திரியாகிய அந்தக் கட்டழகியை அடையவேண்டுமென்ற எண்ணம் அவனது மனத்தில் ஒருபோதும் உதித்ததில்லை. பொறுமையும் கருணையும் பொருந்தியிருந்த அவனது கண்கள் ஒருவராலும் இன்னதென்று அநுமானிக்கமுடியாத ஆழ்ந்த சிந்தையும் தீர்க்காலோசனையும், உறுதிப்பாடும் அவனிடம் குடிகொண்டிருப்பதை உணர்த்தின. அவனுக்

Koviloor Digital Library



கும் ரஹஸ்யமான பேரவாக்கள் இருந்திருக்கலாம்; நாம் அறியோம். ஆனால் அப்படி ஏதாவது இருந்திருந்தாலும், அவன் அவற்றை எக்காலத்தும் வெளியிட்டதில்லை.

இன்றிரவு தான் செய்யும் வேலையை ஹேமலதை இமைகொட்டாது கவனித்து வருவதைக் கண்டு திருப்தி யடைந்து ஸ்ரீசன் ஆத்திரப்படாமல் ஜாக்கிரதையாய்த் தன் மணல் வீட்டைக் கட்டிக்கொண்டிருந்தான். நரேந்திர னுக்கோ என்றும் இல்லாத லஜ்ஜையும் கூச்சமும் உண் டாகவே, அவன் ஸ்ரீசனிடம் அஸூயைகொண்டான். தன் பொறாமையை வெளிக்குக் காண்பித்துக்கொள்ளாமல் அவன் ஸ்ரீசனையும் ஹேமலதையையும் அடிக்கடி பார்க்கலானான். ஸ்ரீசனின் வேலை முடிந்துவிட்டது; ஒரு மணல் வீடு கட்டி யாயிற்று. எப்போது லஜ்ஜையும் கூச்சமும் தோன்றினவோ, அந்த க்ஷணமே நரேந்திரனுடைய வேலை தடைப்பட்டு விட்டது. ஸ்ரீசன் கட்டிய சிறுவீடு மிகவும் அழகாய் அமைந்திருப்பதைக் கண்டு சந்தோஷமடைந்து ஹேமலதை தன் மெல்லிய கைகளைக் கொட்டி ஆரவாரித்தாள். அவள் அவ்வாறு கைகொட்டி ஸ்ரீசனின் வேலையை மெச்சியது நரேந்திரனுக்குத் தேள் கொட்டியதுபோல் சுருக்கெனத் தைத்தது; அவனுடைய கைகள் நடுக்கங் கொண்டன; குறையாயிருந்த அவனுடைய சிறுவீடும் கீழே விழுந்து விட்டது.

கையாலாகாதவனுக்குக் கோபம் வருவதற்குக் கேட் பானேன்? நரேந்திரனுக்குக் கோபம் அஸாத்தியமாய் வந்து விட்டது. அவனுக்கு ஒன்றும் தோன்றவில்லை. அப்போது ஹேமலதையுடன் கைகோத்துக்கொண்டு ஸ்ரீசன் அவன் இருந்த இடம் வந்து, "ஏனப்பா, நரேந்திரா, என்ன இன்று ஸாயங்காலம் ஒன்றையுஞ் செய்யக் காணோம்.

Koviloor Digital Library



எங்கே போயிற்று நீ பெருமையாய்ப் பேசிக்கொண்ட உனது திறமை எல்லாம் ?" என்று கேட்டான்.

கீழே விழுந்தது போக மிகுந்திருந்த பாகத்தை காலால் உதைத்துத் தள்ளிவிட்டு, "இன்றைக்கு நான் ஒன்றும் செய்யப்போகிறதில்லை" என்று அஸூயையுடன் பதில் சொன்னான் நரேந்திரன்.

"அப்படியானால் என்னை ஏன் ஆற்றங்கரைக்கு வரச் சொன்னாய் ? நீ ஒன்றும் செய்யாததற்கு இந்தப் பெண்ணை ஏன் இவ்வளவு நேரம் காக்கவைத்தாய் ? இவ்வளவு நேர மாகியும் நமது செல்வக்குழந்தை இன்னும் வீட்டுக்கு வரவில்லையே யென்று ஹேமலதையின் தகப்பனார் அலைந்து கொண்டிருப்பாரே !"

"அவளுடைய தகப்பனாருக்குச் சமாதானம் சொல்ல எனக்குத் தெரியும். நீ உன் வேலையைப்பார். உனக்கு நான் பதில் சொல்லவேண்டிய அவசியமில்லை."

"நரேந்திரா, உனது திறமைக்கு ஏற்றவாறே இருக் கிறது உன்னுடைய குணமும் ; சாந்தமாய்ப் பதில் சொல்லக்கூடாதா ? ஏன் இவ்வளவு ஆத்திரமும் அகங் காரமும் ? உன் மணல் வீட்டுடனே போய்விட்டது போலிருக்கிறது உனது பொறுமையும் ?"

"மணல் வீடு போனால் அதைவிட மேலான பொன் வீடு எனக்கு இருக்கிறது. தங்களுடையதென்று சுதந்திர மாய்ச் சொல்லிக்கொள்ளக்கூடிய கூரைக் குடிசைகூட இல்லாத கனவான்களும் இருக்கிறார்களே !"

ஸ்ரீசன் அக்காலத்தில், ஹேமலதையின் தந்தையை ஆசிரயித்து ஜீவித்துவந்தபடியால், அவனை வேண்டுமென்று அவமானம் பண்ணுவதற்காகவே நரேந்திரன் அவ்வாறு பேசினான். ஸ்ரீசனுக்கு இதைக் கேட்டு மனம் சகிக்கக் கூடவில்லை. ஆயினும் அவன் நரேந்திரனைப்போல் ஆத்திரக்

Koviloor Digital Library



காரன் அல்ல; தன் கோபத்தை அடக்கிக்கொண்டு ஸ்ரீசன் நரேந்திரனுடைய அந்தஸ்துக்கேற்ற மரியாதையுடன் விடையளித்தான்.

"நரேந்திரா, என்னுடைய அந்தஸ்தும் நான் இருக்கும் ஸ்திதியும் எனக்கு நன்ருய்த் தெரியும். நீ அதை எனக்கு எடுத்துக்காட்டவேண்டியது அநாவசியம். என் அந்தஸ்து எனக்கோர் அவமானமன்று. நீ உன் அந்தஸ்தை உள்ளவாறு அறிந்து உன் பாட்டனுருடைய வம்சத்துக்கேற்ப யோக்கியதையும், சாந்த குணமும் உடையவனுய் நடந்துகொள்ள வேண்டுமென்பதே எனது மனப்பூர்வமான கோரிக்கை."

"என் பாட்டனுரைப்பற்றியும் மஹாப் பிரசித்திபெற்ற அவருடைய வம்சத்தார்களைப் பற்றியும் உயர்வாய்ப் பேசியது உனது நற்குணத்தைக் காட்டுகின்றதப்பா. அவர் உயிருடன் இருக்கும்போது கருடனைக் கண்ட சர்ப்பத்தைப் போல் நடுங்கிக் கொண்டிருந்தவர்கள் இப்போது அவருடைய சொத்தையும், நாட்டையும் அபகரிக்கப் பிரயத்தனப் படுகிருர்கள். ஒரு வேளை நீயும் அவர்களுடன் சம்பந்தப் பட்டவனுக இருக்கக்கூடும். யாருக்குத் தெரியும் உன்னுடைய மோசக்கருத்தும் சதியோசனையும்?"

அவனுடைய வார்த்தைகளையெல்லாம் ஒரு பொருட்டும் செய்யாமல் ஸ்ரீசன், "உனக்குத் தோன்றியதையெல்லாம் நீ சொல்லிக்கொண்டிரு. உன்னுடைய அசட்டு வார்த்தைகளுக்கெல்லாம் பதில் சொல்லிக்கொண்டிருக்க எனக்கு நேரமில்லை. ஹேமலதையின் தகப்பனுர் இந்நேரம் அவளைக் காணுமல் அலைந்து கொண்டிருப்பார். ஆகையால் அவளை அழைத்துக்கொண்டு நான் வீடுநோக்கிச் செல்லுகிறேன்" என்ருன்.

இதைக்கேட்டு ஹேமலதை ஸ்ரீசனின் அருகே செல்வதைக் கண்டு சற்றும் பொருதவனுய் நரேந்திரன், "அடே,

Koviloor Digital Library



நீ யார், அவளை அழைத்துப்போக? எத்தனை தினங்களாயிற்று இந்த 'கார்டியன்' வேலை உனக்கு வந்து? யார் உனக்கு இந்த உத்தியோகம் கொடுத்தது ?" என்று கோபத்துடன் கேட்டான்.

"நரேந்திரா, நான் அவளுடைய 'கார்டியன்' என்று உன்னிடம் சொல்லிக்கொள்ள வரவில்லை. ஆனால் உன்னைப் போன்ற வெறியர்களிடம் அவள் இருக்க நான் பார்க்க மாட்டேன் " என்றான் ஸ்ரீசன்.

"சீ, ஒதுங்கி நில். ஆற்றோரத்துக்கு அவளை அழைத்து வந்தவன் நான் ஆதலால், வீட்டிற்கு அழைத்துப் போக வேண்டியவனும் நான்தான் " என்று அம்மூர்க்கன் பதில் உரைத்தான்.

"மரியாதையாய் நடந்துகொள்ள உனக்குத் தெரிய வில்லை. முதல் முதலில் மரியாதையுடன் நடக்கக் கற்றுக் கொள். அப்புறம் நீ அவளை அழைத்துப் போகலாம். இன்றைக்கு உனக்கு மூர்க்கத்தனம் மேலிட்டிருக்கிறது. மட்டு மரியாதை தெரியாத சிறு பிள்ளையாகிய உன்னிடம் அவளை ஒப்பித்தல் தகாது. இன்றிரவு அவளை நான்தான் வீட்டிற்கு அழைத்துப் போவேன் " என்றான் ஸ்ரீசன்.

"எட்டி நில்லடா, ஈனஜாதிப் பயலே, அவள் பக்கத்தில் நிற்க உனக்கு என்ன யோக்கியதையடா இருக்கிறது ?" என்று நரேந்திரன் கூறியதைக் கேட்டவுடன் ஸ்ரீசனுக்கு அடங்காக் கோபம் ஜனித்துவிட்டது. ஆயினும் இந்த மூடப்பயலுடன் வார்த்தையாடுவதில் பயனில்லை என்று உணர்ந்து ஹேமலதையைக் கூட்டிக்கொண்டு வீடு நோக்கிப் புறப்பட்டான்.

ஸ்ரீசன் ஹேமலதையின் இடுப்பைச் சுற்றிக் கை போட்டுக்கொண்டு போவதைக் கண்டு நரேந்திரனுடைய மனம் பொங்கிற்று. பித்தம் தலைக்கேறியவனாய் நரேந்திரன்

Koviloor Digital Library



ஸ்ரீசனைப் பலமாய் அடிக்க முயன்றான். ஹேமலதை அச்சங் கொண்டு கதறினாள். ஸ்ரீசன் நரேந்திரனைவிட அதிக பலசாலியென்று நாம் முன்னமே சொல்லியிருக்கிறோம்; அவனை ஒரு நொடியில் அடக்கி வைக்கக்கூடிய வல்லமை உடையவன். தன்னைத் தாக்கியவுடன் ஸ்ரீசன் அச்சிறுவனை இடுப்பில் கையைக்கொடுத்து மேலே தூக்கி மணலின்மேல் விட்டெறிந்தான். ஐயோ பாவம்! நரேந்திரனுக்குப் பலத்த காயம் பட்டது. எழுந்திருக்கச் சக்தியற்று மணலின்மீது இறைக்க இறைக்க விழுந்து கிடந்தான்.

அப்பெண்ணின் முன்னிலையில் தான் தோல்வியடைந்ததைப் பற்றி அதிக அவமானமும் மனவருத்தமும் உற்றவனாய் நரேந்திரன் ஒரு பெரிய கல்லையெடுத்து ஸ்ரீசனின் தலையைப் பார்த்துப் பலமாய் எறிந்தான். அக்கல் ஸ்ரீசனின் வலது கண்ணிற்குச் சிறிது மேலே பட்டு அங்கே நன்றாய்த் துவாரமாக்கிவிட்டது. இரத்தம் தாரையாய்ப் பெருகிற்று. ஸ்ரீசன் உட்கார்ந்து தன் துணியால் இரத்தத்தைத் தடுக்க முயன்றான். ஹேமலதை இவற்றையெல்லாம் மௌனமாய்ப் பார்த்துநின்றனள். மட்டுமரியாதையை மீறி, துர்நடத்தையில் பிரவேசித்த அச்சிறுவனை வெறுப்புடன் உற்று நோக்கினாள்; அவள் கண்களில் நீர் ததும்பிற்று. கண்களைத் துடைத்துக்கொண்டு நீரண்டை போய்த் தன் சிற்றாடையின் நுனியை நன்றாய் நனைத்துக் கொண்டுவந்து ஸ்ரீசனின் முகத்திலிருக்கும் இரத்தத்தைத் துடைத்தாள். ஸ்ரீசனுக்குப் பலமான காயமில்லை; ஆயினும் அவன் எழுந்த பிறகுங்கூடக் காயத்திலிருந்து இரத்தம் கசிந்துகொண்டிருந்தது.

“ஹேமலதா! வெகு நேரமாய்விட்டது. புறப்படு, வீட்டிற்குப் போகலாம்” என்று ஸ்ரீசன் சொன்னவுடன் ஹேமலதை புறப்பட்டுவிட்டாள். இருவரும் நரேந்திரனைத்

Koviloor Digital Library


திரும்பிக்கூடப் பாராமல், கையோடு கை கோத்துக் கொண்டு வீட்டுக்குப் போனார்கள்.

நன்றாய் இருட்டும் வரை, நரேந்திரன் அங்கே தனியாய்ப் பரிதாபமான நிலையில் இருந்தான். அப்போது என்ன என்னவோ எண்ணங்களெல்லாம் அவன் மனத்தில் உதித்தன. மிகப் புராதனமானதும் பிரசித்திபெற்றதுமாகிய ஒரு வம்சத்தின் சந்ததியானகிய நரேந்திரன் தன்னுடைய மடமையினல் தான் நேசித்தவளிடத்தில் தன் மதிப்பைக் குறைத்துக்கொண்டான். பணிவுள்ள ஒரு பராதீனனகிய ஸ்ரீசன் அவனுடைய குற்றங்களைப் பெருந்தன்மையுடன் மன்னித்து அந்த அழகிய இளகிய இளங்கொடியாகிய ஹேமலதையின் உள்ளத்தைக் கவர்ந்தனன். யானைவரும் பின்னே மணியோசை வரும் முன்னே.

Koviloor Digital Library

## இரண்டாம் அத்தியாயம்

## பரஸ்பரம் வைரமுற்ற வம்சங்கள்

நமது கதை ஆரம்பிப்பதற்கு முன் சில வருஷங்களாக வீரநகரம் என்னும் பட்டணத்தில் ராஜ்யப் புரட்சிகள் அநேகமும், கோரமான யுத்தங்கள் பலவும் நடந்துகொண்டிருந்தன. நான்கு நூற்றாண்டுகளாக ஆப்கானிய அரசர்கள் வங்காளத்தில் சண்டை சச்சரவுகளின்றி அமைதியாய்ச் செங்கோல் செலுத்தி வந்தனர். ஆனால் வட இந்தியாவில் அக்பர் சக்கரவர்த்தி மொகலாய இராஜ்யத்தை ஸ்தாபித்த போது, வங்காளத்தில் ஆப்கானிய அரசாட்சி க்ஷீணதசை அடைய ஆரம்பித்தது. 1574-ஆம் வருஷத்தில் பாட்னா நகரை அக்பர் சக்கரவர்த்தி நேரில் முற்றுகை போட்டுக் கைப்பற்றிக்கொண்டனர்; அது முதற்கொண்டு, அபஜயம் இன்னதென்று எப்பொழுதும் அறிந்திராத மஹா பராக்கிரம சாலிகளாகிய மொகலாயர்களுக்கும், பலமுறை தோல்வியடைந்தும் வீர தீரத்தையும் அஞ்சா நெஞ்சத்தையும் கைவிடாத ஆப்கானியர்களுக்கும் வங்காளத்தில் வெகுகாலம் வரை போர் நடந்துகொண்டிருந்தது.

ஹிந்து ஜமீன்தார்கள் தத்தம் கிராமங்களையும் ஜாகீர்களையும் ஜமீன்களையும் அமைதியாய் ஆண்டுவந்தனர். ஆப்கானிய அரசர்களுக்குரிய கப்பங்களைக் கட்டிவிட்டு அவர்கள் தங்கள் ஜமீன்களில் சர்வாதிகாரங்களையும் செலுத்திவந்தனர். கள்வர், கொலைஞர் முதலிய குற்றவாளிகளைத் தாங்களே தண்டித்தார்கள்.

Koviloor Digital Library


தங்களுடைய நியாயஸ்தலங்களிலேயே ஸிவில், கிரிமினல் ஆகிய இரண்டுவித வியாஜ்யங்களையும் விசாரித்துத் தீர்ப்புச் சொல்லி வந்தார்கள். குடிகளின் சுகதுக்கங்களைத் தங்களுடைய சுகதுக்கங்களாக எண்ணி, சண்டை சச்சரவு, கலகம் யாதொன்றுமின்றி அவர்களைக் காப்பாற்றிவந்தனர். அவர்களுடைய ஸம்ஸ்தானங்களில் பல்வேறு பண்டிதர்களும், வித்துவான்களும் கவிச்சிரேஷ்டர்களும் ஒரு குறைவுமின்றி மனஸ்ஸந்துஷ்டியுடன் ஜீவித்து வந்தனர். ஸகல விதமான கலைகளையும், நானாவித கைத்தொழில்களையும் அதிக ஊக்கத்துடன் அபிவிருத்தி செய்தார்கள். தாங்கள் கப்பங்கட்டும் அரசர்களுக்கு ஆபத்து வந்தகாலத்து உதவி புரியவும், தங்களுடைய நாடுகளைப் பகைவர்களிடமிருந்து பாதுகாத்துக்கொள்ளவும் போதுமான சேனைகளையும், யானை குதிரைகளையும், படகுகளையும் தயாராய் வைத்திருந்தனர்.

இக் கதையின் உற்பத்தி ஸ்தானமாகிய வீரநகரம் என்னும் பட்டணத்தில் பழைய காலந்தொட்டுப் பெருமை வாய்ந்த ஒரு ஹிந்து ராஜவம்சஸ்தர்கள் ஆண்டுவந்தனர். அக்பரும் அவருடைய மொகலாய வீரர்களும் பாட்னாவைக் கைப்பற்றி, வங்காளமெங்கும் பரவியிருந்தபோது, உண்ட வீட்டிற்கு இரண்டகம் நினையாமல் கடைசி ஆப்கானிய அரசனாகிய தாயுத்கான் பக்கமிருந்து போர்புரிந்தவர் வீரநகரம் ஜமீன்தாரர் ஒருவர்தாம். மொகலாயரிடமிருந்து நகரத்தைக் காப்பாற்றிக்கொள்ள முடியாதவராய் அவர் காட்டுக்கு ஓடி மறைந்தபோது, அக்பரது சிறந்த தளகர்த்தர்களாகிய முநாயிம் என்பவரும் தோடர்மல்லர் என்பவரும் வீரநகரத்து அரண்மனையைத் தமது ரதகஜதுரகபதாதிகளுடைய இருப்பிடம் ஆக்கிக்கொண்டனர். தாயுத்கான் வங்காளத்தை அக்பருக்குக் கொடுத்துவிட்டு அவருடன்

Koviloor Digital Library



உடன்படிக்கை செய்துகொண்டு ஒரிஸ்ஸாவிற்குப் போய் விட்டான். அதற்கு அப்புறந்தான் வீரநகர ஜமீன்தார் தமது பட்டணத்திற்குத் திரும்பி வந்து தோடர்மல்லருக்கு மரியாதை செய்து வங்காளத்து நூதன அதிபதிகளுக்குக் கீழ்ப்படிந்து கப்பங்கட்டுவதாக ஒப்புக்கொண்டார்.

ஆனால், தாயுத்கானே சத்தியத்திற்குக் கட்டுப்படாதவனாய், மொகலாயர்களிடமிருந்து வங்காளத்தைக் கைப்பற்றிக்கொண்டு வீரநகரம் ஜமீன்தாரைச் சேனைகளுடன் தன் ஒத்தாசைக்கு வரும்படிக்குக் கட்டளையிட்டான். தைரியமுள்ள கிழச் சிங்கமாகிய ஜமீன்தார் அவனுடைய ஆக்ஞையை நிராகரித்து அவனிடமிருந்து வந்த தூதர்களுக்குப் பின்வருமாறு பதில்சொல்லி அனுப்பினார்: "எப்போது தம் ராஜ்யத்தைக் காப்பாற்ற வல்லமையற்றவராயினரே அப்பொழுதே அவர் அதை இழந்தவராகிறார். மேலும் அவர் வங்காளத்தை மொகலாயருக்கு விட்டுவிடுவதாக ஒப்புக்கொண்டு மாட்சிமைதங்கிய மாபெரும் அக்பர் சக்கரவர்த்தியுடன் உடன்படிக்கை செய்துகொண்டனர். தம் சொல்லை மீறி நடப்பது கிரீடம் புனைந்த ஓர் அரசருக்கு அழகன்று. ராஜதருமத்துக்கும் ஏற்றதன்று. அவ்வாறு சொல் தவறுவது கேவலம் ஈனமான காரியம். எனது வம்சத்தில் எவரும் அவ்வாறு இதுவரைக்கும் நம்பிக்கைத் துரோகம் புரிந்ததில்லை. ஆக்ராவின் மொகலாய சக்கரவர்த்திக்கு நான் செய்த வாக்குத்தத்தத்தை மீறி நடவேன். இவ்விஷயத்தை உம் எஜமானருக்குத் தெரிவியுங்கள்."

இவ்வார்த்தைகள் தாயுத்கானுக்கு எட்டியவுடன் அவன் கோபாக்கிராந்தனானன். அவன் கண்கள் சிவந்தன. வீரநகரத்தைத் துவம்ஸஞ் செய்து வயதுமுதிர்ந்த ஜமீன்தாரை விலங்கிட்டுக் கொண்டுவரும்படி அவன் ஒரு பெரிய சேனையை அனுப்பினான். ஆனால் வயோதிகராயும் தைரியத்

Koviloor Digital Library



திலும் ஸாமர்த்தியத்திலும் சற்றுங் குறைவுபடாத அந்த ஜமீன்தார் முன்னதாய்த் தேவையான பந்தோபஸ்தெல்லாஞ் செய்துவிட்டுப் போருக்குச் சித்தமாயிருந்தார். நகரத்தைச் சுற்றியுள்ள செங்கல் சுவரும் கோட்டைகளும் பழுது பார்க்கப்பட்டன. அவைகளின் மேற்புறத்தில் கூர்மையான முளைகள் நாட்டப்பட்டன. உருவின கத்திகளுடன் போர்வீரர்கள் இரவும் பகலும் ஓயாமல் நகரத்தைச் சுற்றி வந்துகொண்டிருந்தார்கள். அடர்ந்திருந்த புதர்களில் வில்லும் அம்பும் கொண்டு வில்லாளிகள் மறைந்திருந்தனர். இவ்வளவு ஜாக்கிரதையுடன் இருந்தபடியால் திடீரெனப் பட்டணத்தில் நுழைந்து நாசஞ்செய்வதற்குப் பகைவர்களுக்கு இடமில்லாமற் போயிற்று. வெகுநாளாக யுத்தமின்றிப் புஜங்கள் தினவு கொண்டிருக்கும் ஜமீன்தார் தம்மால் கூடிய மட்டும் பட்டணத்தைக் காப்பதாகவும், தவறினால் தம் முன்னோர்கள் ராஜ்யபாரம் புரிந்த இடத்திலேயே கடைசி வரைக்கும் போர்புரிந்து தம் உயிரை மாய்த்துக்கொள்வதாகவும் வீரசபதஞ் செய்தனர். அவரும் மற்ற ஸாமான்ய யுத்த வீரர்களைப்போல் கத்தி கேடயங்களுடன் நகரப் பிரதக்ஷிணம் செய்துகொண்டிருந்தார்.

இவ்வகையான அற்பக்காப்புக்கள் எவ்வளவு காலந் தான் வீரநகரத்தைப் பகைவரிடமிருந்து ரக்ஷிக்குமென்பது தெய்வத்துக்குத்தான் வெளிச்சம். தாயுத்கானுடைய சேனையோ அதிசாமர்த்தியமாய்ப் பழக்கப்பட்ட சேனை. ஆனால் தாயுத்கானின் விரோதி, ஜமீன்தார் ஒருவரே அல்ல; ஜமீன்தாரைவிடப் பராக்கிரமசாலிகளாகிய பலர் அவனுடைய சத்துருக்கள். கானின் துரோகச் செயலைக் கேட்டு ராஜா தோடர்மல்லர் மறுபடியும் வங்காளம் வந்து, அம்மாகாணத்து மொகலாய ராஜப்பிரதிநிதியைத் துணைக் கொண்டு, ஆப்கானிய அரசனை ஆக்மஹல் என்னுமிடத்தில்

Koviloor Digital Library



முற்றுகை யிட்டனர். அவ்விடத்தில் நடந்த போரில் ஆப்கானியர்கள் அபஜயமடைந்து புறங்காட்டி ஓடிவிட்டார்கள். அந்த யுத்தந்தான், வங்காளத்தில் மொகலாயருக்கும் ஆப்கானியர்களுக்கும் நடந்த கடைசி யுத்தம். தாயுத்கான் ராஜா தோடர்மல்லர் அவர்களால் சிறைபிடிக்கப்பட்டு 1576-ஆம் வருஷத்தில் கொலையுண்டனன். ராஜா தோடர் மல்லர் வீரநகரத்து ஜமீன்தாருக்குப் பேட்டி கொடுத்து, அவருடைய நன்றியறிவை மெச்சி, அவருக்குச் சக்கரவர்த்தியவர்கள் உத்தரவுப்படிக்கு ஒரு புதிய ஸநதை அளித்தார்; அருகிலுள்ள தேவிபுரம் ஜமீனும் அவர் பார்வையில் ஒப்பிக்கப்பட்டது. அந்த ஜமீன்தார் ஆப்கானியருடன் கூடி மொகலாயருக்கு எதிராகப் போர்புரிந்தான்; ஆப்கானியர் அபஜயமடைந்ததால் அவன் தன் நாட்டை இழக்கவேண்டியதாயிற்று. இவைகளெல்லாம் வீரநகரத்து ஜமீன்தாரர் போர்முகத்துக் காட்டிய ராஜபக்தியை அக்பர் வள்ளல் மெச்சினதற்கு அடையாளமாக அளிக்கப்பட்ட நன்கொடைகள். அவ்வயோதிகர் தம் புத்திரனையும் பௌத்திரனையும் தோடர்மல்லர் முன்னிலையில் அழைத்துவந்து தாமும் தம் சந்ததியாரும் எந்நாளும் அக்பருக்கும் அவருடைய வம்சத்தாருக்கும் கீழ்ப்படிந்து நடப்பதாக வாக்குத்தத்தஞ் செய்தார். வீரநகரத்தார் அனைவரும் அத்தினத்தை ஒரு சுதினமாகக் கொண்டாடினார்கள்; கவிகளும் பண்டிதர்களும் அக்பரை வாயார வாழ்த்திக் குதூகலித்தனர். நகர முழுவதும், 'அக்பர் சக்கரவர்த்தி நீடூழி வாழ்க' என்னும் கோஷமே பெரிதாயிருந்தது. அன்றிரவு அப்பட்டணமெல்லாம் தீபத்தோரணங்களால் பகல்போல் விளங்கிற்று. ராஜா தோடர்மல்லரும் அவர் நண்பர்களும் யானைமீது நகர்வலம் வரும்போது வீதிகளின் இருபுறங்களினின்றும் கற்புடைய மாதர்கள் புஷ்பத்தை வாரிச்

Koviloor Digital Library


சொரிந்தனர். நகரத்தில் எங்கே பார்த்தாலும் அக்பர், தோடர்மல்லர் முதலியவர்களைப்பற்றிய பேச்சே யொழிய வேறொரு வர்த்தமானமும் இல்லை.

தேவிபுரம் ஜமீன் கிடைத்த சில மாதங்களுக்கெல்லாம், பூரணவயதினராகிய வீரநகர ஜமீன்தார் காலமாய்விட்டனர். சில தினங்களுக்கெல்லாம் மகனும் தந்தையைத் தேடிச்சென்றான். இவர்களுக்குப்பின் பட்டத்துக்கு வர வேண்டிய ராஜகுமாரனுக்கு வயது இரண்டுதான் ஆயிற்று. அவன்தான் நாம் கங்கையாற்றங்கரையில் கண்ட நரேந்திரன். தகப்பன், பாட்டன் இருவரும் ஏறக்குறைய ஏககாலத்தில் மரணமடைய, நரேந்திரன் பால்யத்திலேயே இரண்டு ஜமீன்களுக்கும் அபரிமிதமான ஐசுவரியத்துக்கும் அதிபதியானான்.

நெருங்கிய பந்துக்கள் இருவரையும் இழந்த நரேந்திரனுக்குத் தகுந்த போஷகர்கள் எவரும் இல்லை. அவனோ அதி பால்யன் ; பால்மணம் மாறாக் குழந்தை. இவ்வயதில் அவன் இரண்டு பெரிய ஜமீன்களுக்கு எஜமானனாயினன். தேவி புரத்துப் பூர்வ ஜமீன்தாரோ சாமான்யமானவன் அல்லன்; வலிய பகைவன். அவன் எவ்வளவு கஷ்டங்களை அனுபவித்தாவது தன் ஜமீனைத் திரும்ப அடையவேண்டுமென்ற பிரதிக்கினை செய்தனன். இவ்வளவு கஷ்டங்களுக்கிடையில் நரேந்திரன் புயற்காற்றில் அகப்பட்ட கப்பல்போல் இருந்தனன்.

வீரநகரமும் தேவிபுரமும் பல வருஷங்களாகப் பரஸ்பரம் வைரமுற்றவைகளாய் இருந்தன. எத்தனையோ தலைமுறைகளாக இரண்டு ஜமீன்தார்களும் ஒருவரையொருவர் பகைத்துப் பரஸ்பர வைரிகளாய் மல்லிட்டு வந்தார்கள். அத்தி பூத்ததுபோல் எப்போதோ சிற்சில சமயங்களில் இரண்டு கக்ஷியாரும் தமக்குள் சம்பந்தம் செய்துகொண்ட

Koviloor Digital Library



னர். ஆனால் கல்யாணப்பெண்டிர் பிறந்த அகத்தை விட்டுப் புக்ககத்துக்குச் சென்றவுடன், தம் தகப்பனாருடைய வைரிகளை அறவே மறந்து, கணவர்களுடைய அபிப்பிராயங்களையும் அவர்களுடைய விரோதங்களையும் முற்றிலுங் கைப்பற்றி வந்தனர். அவர்களுடைய வயிற்றிலுதித்த குழந்தைகளும் தங்கள் தாய்வீட்டாரை ஜன்மவிரோதிகளென்று எண்ணும் படிக்கே கற்பிக்கப்பட்டனர். ஆகையால் இவ்வித பரஸ்பர ரத்தஸம்பந்தம் ஏற்பட்டுங்கூட இரண்டு வம்சத்தினருக்கும் ஒற்றுமையும் சமாதானமும் உண்டாகாமலே இருந்துவிட்டன.

இரண்டு வீட்டாருக்கும் மெய்காப்பாளர் என்னும் வீரர்கள் இருந்தனர். ஒரு வீட்டார் மற்றொரு வீட்டாரைச் சந்தித்துவிட்டால் போதும்; உடனே அடிதடி சண்டைதான். குறைந்த பக்ஷம் நாலைந்து தலைகள் உருண்டுவிடும். ஏரி, குளங்களில் மீன் பிடிப்பதைப் பற்றியும் சந்தை சாவடி முதலியவைகளைப் பற்றியும் அடிக்கடி இருதிறத்தாருக்கும் விவாதம் உண்டாய்விடும். அவ்வித விவாதங்கள் உண்டாகுங் காலத்தில் முதலில் அடி; பின்னால்தான் பேச்சு. கைகலந்து சண்டை செய்து யார் வெற்றியடைகிறார்களோ அவர்கள் கோர்ட்டாருக்குப் பூர்த்தியாய் லஞ்சம் கொடுத்துத் தாங்கள் சண்டையில் அடைந்ததை நியாயப் பிரகாரம் தங்கள் வசப்படுத்திக் கொள்வார்கள். தலைமுறை தலைமுறையாய்ப் பரஸ்பரம் இவ்வளவு வைரமும் சண்டை சச்சரவுகளும் இருந்தபோதிலும் இருவரும் சில காலங்களில் ஒன்றுகூடி ஒருவர்க்கொருவர் மரியாதை செய்துவருவதில் மாத்திரம் இளைப்பதில்லை. அச்சமயங்களில் அவர்கள் மிக்க நேசர்களைப்போல் காணப்படுவார்கள்.

Koviloor Digital Library



தேவிபுரத்து அதிபனாகிய நவகுமாரன், வீரநகரத்து ஜமீன்தாரிடம் தன் முன்னோர்கள் பரம்பரையாய் மிகவும் பயபக்தியுடன் அநுஷ்டித்து வரும் வைரியையும் விரோதத்தையும் கிஞ்சித்தேனும் மறவாமல் பூரணமாய் மனத்தில் பாராட்டினான். சுபாவமாகவே அயலார் வாழ்ந்தால் ஐந்து நாள் பட்டினியிருப்பவனாகிய நவகுமாரன் வீரநகர ஜமீன்தாரரின் புகழும் பெயரும் தினே தினே அதிகமாய்ப் பரவுவதைக் கண்டு மனம் பொறாதவனானான். தான் எண்ணிய எண்ணத்தை எவ்விதமான தந்திரத்தாலும், சதியோசனையாலும் சூழ்ச்சியாலும் நிறைவேற்றுவதில் சற்றும் பின்னடையாதவனாகிய தேவிபுரத்துத் தலைவன் தன்னுடைய எதிரியை எவ்விதத்திலாவது ஒழித்துவிட வேண்டுமென்று கங்கணங் கட்டிக்கொண்டான். சூதுவாது சிறிதுமின்றி ஆண்மையையும் பெருந்தன்மையையுமே அணிகலன்களாகக் கொண்ட நரேந்திரனுடைய பாட்டனாரை ஜனங்கள் கனவிலும் வாழ்த்துவார்கள். குடிகெடுக்கும் யோசனையும், அந்தரங்க சூழ்ச்சிகளுமே அவதாரமெடுத்தது போலிருக்கும் நவகுமாரனை அவர்கள் நிந்திக்காத தினமே கிடையாது. நரேந்திரன் பாட்டனாரைக் காணும்போதெல்லாம் நவகுமாரன் கற்றோரைக்கண்ட கல்வியில்லாத பேதைபோல் தனது சிறுமையெல்லாம் தனது ஞாபகத்துக்கு வரப் பதங்கி நிற்பான்.

ஆகையால் ஆப்கானிய அரசனான தாயுத்கான் ஆக்மஹனுக்கருகில் மொகலாயருடன் கடைசிமுறை பெரும் போர் புரியும்படி சுற்றுப்பக்கத்து ஜமீன்தாரர்களைக் கூப்பிட, வீரநகர ஜமீன்தாரர் அவனுடைய கட்டளையை மறுத்தபோது தன் எதிரிக்குத் தீங்கிழைத்துத் தன் மனோபீஷ்டத்தை நிறைவேற்றத்தக்க சமயம் வாய்த்ததெனக் கருதினான் நவகுமாரன். இத்தருணத்தில் தாயுத்கான் உதவிக்கழைத்த

Koviloor Digital Library



சுற்றுப்புறத்து ஜமீன்தாரர்களில் தானும் ஒருவனுயிருந்தது நவகுமாரனுக்குப் பழம் நழுவிப்பாலில் விழுந்ததுபோல் சந்தோஷமாயிருந்தது. உடனே வீரநகரத்துக்குச் சென்று கோட்டை கொத்தளங்களைத் தவிடுபொடியாக்கி நகரத்தைச் சூறையாடும்படித் தன் சேனையை ஏவிவிட்டான். ஆனுல் சில வேளைகளில் நாமொன்று நினைக்கக் கடவுள் ஒன்று நினைப்பதில்லையா? ஆக்மஹால் போர்க்களத்தில், ராஜாதோடர் மல்லர் வாகைமாலை சூடியது நவகுமாரனுக்கு அடிவயிற்றில் இடிவிழுந்தது போலாயிற்று. அவனுடைய மனோராஜ்யங்களெல்லாம் நாசமாயின. அவனுடைய சொத்தெல்லாம் மாற்ருன் வசப்பட்டன. அவனுடைய ஜமீனும் வீரநகரத்துடன் சேர்க்கப்பட்டது.

அவன் குழந்தையாய்ப் பிறந்ததுமுதற்கொண்டு தோல்வியென்பது இன்னதென்றே அறியாதவன்; அத்தகையவனுக்கு இப்போது தன் நாடுநகரங்களையும் வீடுவாசல்களையும் விட்டுப் போகவேண்டிய காலம் வந்தது. ஆயினும் அவன் தைரியத்தை விடவில்லை. தன் கைகளை விட்டுப்போன தன் சொத்துக்களை மீட்டுக்கொள்ளச் சமயம் எப்போது வாய்க்குமென்று பொறுமையுடன் எல்லாப் பிரயத்தனங்களையும் செய்துகொண்டிருந்தான். அவனுக்கு ஆப்த நண்பனும், அமைச்சனுமாகிய கோகுல்தாஸ் தன் எஜமானனுக்கு உண்டான கஷ்டங்களைத் தானும் பகிர்ந்துகொண்டான்.

ஆதிமுதற்கொண்டே மொகலாயருக்கும் ஆப்கானியருக்கும் நடக்கும் யுத்தம் ஒருவிதமாக முடிவுபெறும் வரைக்கும் தாயுத்கான் பக்கம் சேரவேண்டாமென்று கோகுல்தாஸ் பல முறையும் நவகுமாரனுக்குச் சொல்லிவந்தான். இதுவரைக்கும் அந்தச் சாதுரிய யுக்தி நவகுமாரன் புத்திக்குப்படவில்லை. கெட்டலைந்து குட்டிச்சுவரான பின்பே கோகுல்தாஸ் தன்னிடம் அடிக்கடி இடித்துரைத்த யோசனை

Koviloor Digital Library


யின் அருமையை அவன் உணர்ந்தான். எஜமானன் ஊழி யன் இருவரும் அஞ்ஞாதவாசம் செய்துவந்தனர். ராஜா தோடர்மல்லர் வங்காளத்தினின்றும் போய்விட்ட கொஞ்ச காலத்துக்கெல்லாம் நரேந்திரன் தகப்பனும் பாட்ட னும் பரகதியடைந்தாரென்று நாம் முன்னமே கூறியிருக் கிறோமல்லவா? அத்தருணமே ஏற்ற தருணமெனக் கருதி னன் நவகுமாரன். ஆத்திரக்காரனுக்குப் புத்திமட்டு. நவ குமாரன் நாலுபக்கங்களிலும் சிதறியிருக்கும் தன் போர் வீரர்களை ஒன்று சேர்த்துத் தன் படைவலிமையாலேயே தேவிபுரஜமீனைக் கைப்பற்றிக்கொண்டு,பிறகு பணங்கொண்டு அரசனது சம்மதத்தைப் பெறலாமென்று எண்ணினன். ஆனல் அதிக தந்திரசாலியாகிய கோகுல்தாஸ் தன் தலைவ னிடம் சென்று, "ராஜா தோடர்மல்லர் திரும்பவும் சீக்கிரத் தில் வங்காளம் வருகிறார். வீரநகரத்து ராஜகுடும்பத்தை அவர் மறந்துவிட்டாரென எண்ணவேண்டாம். வீரநகர ஜமீனுக்கு நியாயமாய்ப் பாத்தியஸ்தனான ராஜகுமாரனுக் குத் தீங்கிழைப்பவர்களை அவர் எளிதில் விடமாட்டார். ஆதலால் நாம் பொறுக்கவேண்டும். வேறு விதமான பிர யத்தனங்கள் செய்துபார்க்க வேண்டும். 'பொறுத்தார் பூமி யாள்வார்' என்னும் முதுமொழி தங்களுக்குத் தெரியாதா?" என்று சொல்லி முன்பின் யோசியாமல் ஆத்திரப்பட்டுச் செய்யப்புகும் இக்காரியத்தினின்றும் தன் எஜமானனைத் தவிர்த்தான்.

அவர்களுடைய மனோபீஷ்டம் பூர்த்தியாகும் காலம் சீக்கிரத்தில் வந்துவிட்டது. ராஜா தோடர்மல்லர் வங்காளத் துக்கு மூன்றாவது முறை வந்தார். இந்தத் தடவை வந்தது ஆப்கானியருடன் சமர்புரிவதற்கன்று. அவர்களுடைய வல்லமையெல்லாம் முன்னரே ஒடுங்கிப் போய்விட்டது வங்காளத்திலிருந்த மொகலாயச் சிற்றரசர் கலகஞ்செய்யத்

Koviloor Digital Library



தொடங்கினர். அக்பரால் கைப்பற்றப்பட்ட வங்காள நாட்டில் இம்மொகலாயர் ஒவ்வொருவரும் சிறுசிறு ஜமீன்கள் சொந்தத்தில் ஏற்படுத்திக் கொண்டனர். இதனுடன் நிற்காமல் தருமப்பிரபுவாகிய அக்பரையும் அவரது செங்கோலையும் அலக்ஷியஞ் செய்யத் தலைப்பட்டனர். இவர்களையெல்லாம் அரைகொடியில் அடக்கவல்லவர் அக்பர். தம் ராஜ்யத்தை வலிவான அஸ்திவாரம் போட்டு ஒன்று சேர்த்துச் சாசுவதமாக நிலைநிறுத்திச் சேனை வலிவிலும் மேன்மையான வல்லமையாயிருந்த தம் புத்தி சாதுர்யத்தையும், பெருந்தன்மையையும், மனப்பூர்த்தியான அன்பையும் துணையாகக்கொண்டு,அவர் ஹிந்துக்களுக்கும் முகம்மதியர்களுக்கும் ஒரேவிதமான சுதந்திரங்களை அளித்து அவர்களிருசாரரையும் பக்ஷமாய்ப் பாதுகாத்துவந்தார்.இதற்குமுன் ஆப்கானியருடன் போர்புரிந்து இருமுறை வங்காளத்தை அக்பருடைய ராஜ்யத்தில் சேர்த்தவராகிய தோடர்மல்லர் என்னும் ஹிந்து தளகர்த்தரே இம்முறையும் மொகலாயச் சிற்றரசர்களது கொழுப்பை அடக்க எண்ணிறந்த யுத்த வீரர்களுடன் வங்காளத்துக்கு வந்தார்.

தோடர்மல்லர் இம்முறை வங்காளத்துக்குத் தளகர்த்தர் பதவியோடு வரவில்லை. அக்பர் அவரை வங்காளத்துக் கவர்னராக நியமித்தார். அவர் வங்காளத்துக்கு வந்து மாங்கீரில் தங்கியிருந்தார். ராஜத்துரோகிகளும், செய்ந்நன்றியை மறந்தவர்களுமாகிய மொகலாயர்கள் முப்பதாயிரம் குதிரையாட்களுடன் வாகல்புரம் என்னுமிடத்தில் யுத்தசந்நத்தர்களாய் இருந்தனர். மாங்கீரும் வாகல்புரமும் தேவிபுரத்துக்கு அதிக சமீபத்திலுள்ளன. தன் பிதுரார்ஜித சொத்தைத் தன்னிடமிருந்து தயை தாக்ஷண்யமின்றிப் பிடுங்கித் தன் பகைவனுக்களித்த தோடர்மல்லருக்கும் அக்பருக்கும் எதிராக மொகலாயச் சிற்றரசர்களுடன்

Koviloor Digital Library



சேர்ந்து விடலாமா என்று பலமாய் யோசித்தான் நவகுமாரன்.

"இத்தகைய புத்தியீனமான காரியம் ஒரு காலமும் செய்யக்கூடாது. ராஜா தோடர்மல்லருக்கு நிகரான யுத்தவீரரும் தளகர்த்தரும் இந்தியா முழுவதும் ஒருவரும் இல்லை. அவரை மறுபடியும் நீர் எதிர்ப்பீரானால், நீர் அழிவது நிச்சயம். நீரே உமது தலைமேல் மண்ணைப்போட்டுக்கொள்ளப் பார்க்கிறீர். வேண்டாம் அந்த யோசனை. போர்முனையில் 'வினைவலியும் தன் வலியும் மாற்றான் வலியும் துணைவலியும்' இத்தன்மையனவென்று ஆலோசிக்க வேண்டும். நீர ஆலோசிக்காமல் பதற்றமாய்க் காரியம் செய்தால் பைத்தியக்காரத்தனமாய் முடியும். நாம் தோடர் மல்லர் பக்கம் சேர்ந்து அவருக்கு உதவி செய்வோம். அவர் யுத்தத்தில் வெற்றிபெறுவது நிச்சயம். கலகம் அடங்கியபின் அவரை மன்னிப்புக் கேட்டுக்கொள்வோம்" என்று கூறினான் கோகுல்தாஸ்.

"தாயுத்கான் பக்கமிருந்து அவருக்கு விரோதமாய்ப் போர் புரிந்து இன்னும் வருஷம் நாலாகவில்லை. இதற்குள் அவர் நமது பகையை மறந்துவிடுவாரோ? அவர் நம்மை மன்னிப்பாரென்று நீர் எண்ணுகிறீரா?" என்றான் நவகுமாரன்.

"நீர் சொல்வது சுத்த தப்பு. ராஜா உயர்குடியிற் பிறந்த தருமமூர்த்தி. அவர் பெருந்தன்மையும் தயாள சிந்தையும் உடையவர். கண்மூடித்தனமாய்ப் பழிக்குப் பழி வாங்கும் இயல்பினரல்லர். உண்ட வீட்டுக்கு இரண்டகம் நினையாமல் கடைசி ஆப்கானிய அரசனுடன் சத்தியமாய்ப் போர்புரிந்த ஒருவன், அந்த ஆப்கானிய அரசன் நசித்துப் போனபின் இப்போது மொகலாயச் சக்கரவர்த்திக்குக் கீழ்ப் படிந்து சத்தியமாய் உழைப்பானானால் அவர் அவனை மன்

Koviloor Digital Library



னித்து அவனுக்குத் தகுந்த மரியாதை செய்வார் என்பது நிச்சயம்" என்று ஹிதோபதேசஞ் செய்தான் கோகுல்தாஸ்.

"கோகுல்தாஸ்! என்ன, இத்தனை நாள் பழகியும் என்னுடைய சுபாவம் அறியாமல் பேசுகிறீர். என் தகப்பனுர், பாட்டனுர் இவர்கள் பரம்பரையாய் அனுபவித்து வந்த ஜமீனை எனக்கில்லாமல் செய்த அக்பருடைய சேனுதிபதிக்கா நான் கீழ்ப்படிவேன்? அவரையா நான் மன்னிப்புக் கேட்பேன்? என்ன, சற்றும் யோசனையின்றிப் பேசுகிறீர்? நீர் சொல்வது என்றைக்காவது நடக்குமா? நான் உயிருடன் இருக்கும் வரையில் இது இயலாது."

"நவகுமாரரே, உமது முன்னேர்கள் வங்காளத்தில் வெகுகாலந்தொட்டு அரசு செய்து வந்த ஆப்கானியருக்குக் கீழ்ப்படிந்து நடந்தனரல்லவா? அவர்களுடைய ஸம்பிரதாயத்தினின்றும் தாங்கள் விலகலாமா? வங்காள நாட்டிற்குப் புதிய அதிபதிகளாகக் கடவுளால் ஏற்படுத்தப்பட்ட மன்னர்களுக்குக் கீழ்ப்படிந்து நடக்கவேண்டியது அல்லவா தருமம்?"

"என் அரிய நண்பரே, உமது சாதுர்ய புத்திமதியை நான் அங்கீகரிக்கின்றேன்; நீர் சொல்வது ஒருவேளை சரியாக இருக்கக்கூடும். ஆனுல் என் மனம் வேறு வழி செல்கின்றது. மொகலாயச் சிற்றரசர்களுடன் கூடி அந்த இருமாப்புள்ள ராஜாவின்மீது பழிக்குப் பழி வாங்கி அவரது கொழுப்பை அடக்கிவைக்க என் மனம் துடிக்கின்றது."

"இனி நான் சொல்லக்கூடியது ஒன்றுமில்லை. என் மனத்துக்கு யுக்தமாய்ப்பட்டதை நான் தங்களிடம் ஒளிக்காமல் சொல்லிவிட்டேன். என் கடமையை நான் செய்தேன். இனித் தங்கள் சித்தம். நவகுமாரரே, தங்களுக்கு எது உசிதமாய்த் தோன்றுகிறதோ அவ்வாறு செய்யுங்கள். நான் என்றைக்கும் தங்கள் ஊழியன். பல நூற்றுண்டுகளாக

Koviloor Digital Library



என் பெரியோர்கள் உழைத்துவந்தபடி நானும் தாங்கள் காலாலிட்ட கட்டளையைத் தலையால் வகித்து அதையே மனப்பூர்வமாய் நிறைவேற்றச் சித்தமாயிருக்கிறேன்" என்று பணிவுடன் மறிமொழியுரைத்தான் கோகுல்தாஸ்.

தன் நண்பனும் அமைச்சனுமாகிய கோகுல்தாஸ் கூறிய புத்திமதியை ஆத்திரத்திலும் அவசரத்திலும், நிராகரித்த போதிலும் நவகுமாரன் இரண்டொரு நாள் நன்றாய் ஆலோசனைசெய்து, தன் மந்திரி சொல்லியதே சரியென்று தெளிந்தான். தனது அபரிமிதமான படைகளுடனும் திரவியத்துடனும் தன்னால் கூடியமட்டும் தோடர்மல்லருக்கு உதவிசெய்வதென்று தீர்மானித்தான்.

ராஜா தோடர்மல்லர் எந்தக் காரியத்தையும் உள்ளுற ஆய்ந்தோய்ந்து பார்த்துச் செய்பவர். ஆழ்ந்த ஆராய்ச்சியும் தீர்க்காலோசனையும் இன்றி ஒரு தொழிலிலும் அவர் தலையிட்டுக் கொள்ளார். இந்தக் குணவிசேஷத்தாலன்றோ அவர் இணையற்ற ரணசூரரென்று பெயரெடுத்தார்! ஸம்பிரதி உத்தியோகத்தில் அவருக்குச் சமானமானவர் ஒருவரும் அக்காலத்தில் இலர். இவ்வளவு ஸாமர்த்தியமுடையவர் வீணில் ஜனங்களை மடிக்கச்செய்ய இஷ்டப்படுவாரா? அவர் வங்காளத்துக்கு வந்த சில தினங்களுக்கெல்லாம் ஒரு சண்டையாவதின்றிக் கலகக்காரரை அடக்கிவிட்டார். சிறந்த ஜமீன்தாரர்களை ஒவ்வொருவராகத் தம் வசப்படுத்திக் கொண்டார். வாகல்புரத்திலிருக்கும் கலகக்காரர்களுடைய சேனைக்குப் போகும் போஜன பதார்த்தங்கள் தடைப்பட்டு விட்டன. ராஜா தோடர்மல்லர் பக்கம் நவகுமாரனைப்போல் வேறெந்த ஜமீன்தாரரும் அவ்வளவு கஷ்டப்பட்டு உழைக்கவில்லை. அவன் அக்பர் சக்கரவர்த்திக்காக அதிகப் பாடுபட்டான். ஒவ்வொரு ஜமீன்தாரிடமும், பாளையக்காரனிடமும் போய்

Koviloor Digital Library



அவன் அதிகப் பிரயாசைப்பட்டு அவர்களை அக்பருக்குக் கீழ்ப்படியும்படி செய்தான். அவன் வார்த்தையைக் கேட்டுச் சிற்றரசர்கள் யாவரும் ராஜா தோடர்மல்லர் கக்ஷியில்சேர்ந்தனர். ஒவ்வோர் இரவும் மாறுவேஷம் பூண்டு நவகுமாரன் மாங்கீருக்குள் பிரவேசித்து மொகலாயச்சிற்றரசர்களுடைய அந்தரங்க ஏற்பாடுகளையும் அவர்களுடைய செய்கைகளையும் ராஜா அவர்களுக்குத் தெரியப்படுத்திவந்தான். முயற்சியுடையார் இகழ்ச்சியடையார். அவன் எடுத்தகாரியம் கைகூடிற்று. மொகலாயர்களுடைய நண்பர்கள் ஒருவர்பின் ஒருவராகச் சத்துருவின் பக்கம்போய்ச் சேர்ந்தனர். மொகலாயப் படைவீரர்களுக்கு ஆகாராதிகள் வருவதற்கு வழியில்லாமற் போய்விட்டது. சோற்றுக்கு வழியில்லாமல் பசியாலலைந்து நெல்லிக்கனிபோல் நாலு திசையுஞ் சிதறியோடலாயினர்.

கலகக்காரர்களுடைய கொட்டமெல்லாம் அடங்கிப் போய்விட்டது. நாடு முழுதும் சமாதானம் நிலைபெற்றது. அக்பருக்கு உதவி செய்த சிற்றரசர்கள், ஜமீன்தாரர்கள், வீரர்கள் முதலியவர்களுக்குப் பரிசளிக்கும் உற்சவத்தை யாவரும் ஆவலாய் எதிர்பார்த்திருந்தனர். ராஜா தோடர் மல்லர் நவகுமாரன் செய்த உபகாரமே எல்லாவற்றிலுஞ் சிறந்ததென்று கருதிச் சபையில் அவனை யழைத்து, "நவகுமாரரே, நம் காருண்ய அதிபதியவர்களுக்காக இம்முறை நீர் செய்த உபகாரம் ஸாமான்யமானதன்று. சக்கரவர்த்தியவர்கள் உம்மை என்றும் மறக்கமாட்டார் உம்முடைய மனத்தில் குறைகள் ஏதாவதிருப்பினும் சரி, இல்லாவிட்டால் நீர் உன்னத பதவி எதற்காவது ஆசைப்பட்டாலும் சரி, உம்முடைய வேண்டுகோளைப் பூர்த்திசெய்கிறோம்" என்று சொன்னார்.

"எனக்கென்ன் வேண்டுகோள் இருக்கிறது? நான் செய்துள்ள குற்றத்தை மன்னித்தால் அதுவே எனக்கு

Koviloor Digital Library


ஆயிரம் பரிசுக்குச் சமானம். தலைமுறை தலைமுறையாக என்னுடைய முன்னோர்கள் கீழ்ப்படிந்துவந்த ஆப்கானியர் பக்கம் நானும் சேர்ந்து தங்கள்மீது படையெடுத்தேன்."

"நீர் சொல்வது அதிசயமாயிருக்கிறதே! நவகுமாரரே, வங்காள நாடு மொகலாயர் வசமாகும் வரையில் அதன் பூர்வ அரசர்களாகிய ஆப்கானியர் பக்கம் உழைத்ததற்காக நீர் பெறவேண்டியது வெகுமானம். அப்படியிருக்க மன்னிக்க வேண்டுமென்கிறீரே! தங்களுடைய பூர்வ அரசர்களுக்காகச் சண்டைசெய்த சுத்த வீரர் எவரையும் அக்பர் இதுவரைக்கும் தண்டித்ததாகக் காணோம்."

நவகுமாரன் பதில் சொல்லத் தெரியாமல் திகைத்தான். அவன் வாய்திறவாமல் பிரமை கொண்டவனைப்போல் நின்றான். அவனுக்குப் பின்னால் தோடர்மல்லரிடம் பேச வேண்டியவர்கள் பலர் இருந்தனர். தான் அநேக நாட்களாகக் காத்திருந்த தருணம் வந்தும் நவகுமாரனுடைய மௌனத்தால் அத்தருணம் தவறிவிடுமென்று கோகுல்தாஸ் பயந்தான். அவன் தோடர்மல்லருடைய குணநிசயங்களை அறிந்தவன். அவருடன் எவ்விதம் பேசினால் காரியம் சித்தியாகுமென்பது அவனுக்கு நன்றாய்த் தெரியும். தன் மனோபீஷ்டம் பூர்த்தியாவதன்மேலேயே கண்ணுங் கருத்துமாயிருந்த கோகுல்தாஸ் அதிக வணக்கத்துடன் மனத்திலொன்று வெளிக்கொன்றாக இல்லாமல் யதார்த்தமாகப் பேசலுற்றான்.

"என் எஜமானருடைய குற்றம் அதனுடன் நிற்கவில்லை. தாயுத்கான் தான் சக்கரவர்த்தியினிடம் செய்த வாக்குத்தத்தத்திற்கு மாறாக மகாகனம் பொருந்திய அக்பர் மகிபருடன் ஆக்மஹலில் போர்புரிந்தபோது என் எஜமானரும் தாயுத்கானுக்குத் தம்பியாய்த் தங்கள்மீது படையெடுத்து வந்தார்."

Koviloor Digital Library



தோடர்மல்லரின் முகம் கறுத்தது. அவர் கண்கள் சிவக்க, "அந்த ஆப்கானியன் செய்தது கேவலம் நம்பிக்கைத் துரோகம்; விசுவாச காதகம்; அத்தகைய துரோகச் செயலுக்காக கடவுள் அவனைச் சரியானபடி தண்டித்தார்" என்று கோபாக்கிராந்தராக உரத்துப் பேசினார்.

"ஆம் வாஸ்தவந்தான். மஹாராஜா, அந்தத் தாயுத்கானுடன் கூடிய என் எஜமானரும் நம்பிக்கைத் துரோகி தான். ஆனால் அவர் தாம் செய்த குற்றத்தை ஒளிக்காமல் இந்தச் சபையில் ஒப்புக்கொண்டு அதற்காக மிகவும் பச்சாத்தாபப்படுகிறார். மூந்நூறு வருஷகாலமாக ஆப்கானிய அரசர்களுக்குக் கீழ்ப்படிந்து நன்றியறிவுடன் உழைத்து வந்த என் எஜமானர் ஏதோ கண்மூடித்தனமாய்க் குற்றமென்றறியாமல் தம் கடமையையே பெரிதாகக் கொண்டு செய்த பிழையை மஹாதயாளுவாகிய மொகலாய வள்ளல் கருணைகூர்ந்து பொறுத்தருள வேண்டும். தயை செய்து குற்றங்களைப் பொருள்செய்யாமல் எங்களைத் தங்களுடைய ஊழியர்களாக்கிக் கொள்ளவேண்டும். நவ குமாரருடைய வம்சத்தார் இதுவரைக்கும் ஆப்கானியர் களுக்கு உழைத்ததுபோல் இனி மொகலாயருக்கு உழைக் கும்படிக் கருணைபுரிவது தங்களுடைய பொறுப்பு" என்று விண்ணப்பித்துக்கொண்டான் கோகுல்தாஸ்.

ராஜா தோடர்மல்லர் மௌனம் சாதித்திருப்பதைக் கண்ட கோகுல்தாஸ் தன்னுடைய வார்த்தைகள் ராஜபுத்திர வீரருடைய மனத்தை உருக்கியதென்று தெரிந்துகொண்டு பின்னும் பேசலானான்.

"வீரநகரமும் தேவிபுரமும் ராஜபக்தியிலும் ஸைன்ய பலத்திலும் ஒன்றுடனொன்று போட்டி போட்டுக்கொண்டு ஆப்கானியர்களுக்காகப் பல வருஷகாலம் உழைத்துவந்தன. மேல்சமுத்திரம் முதற்கொண்டு கீழ்சமுத்திரம் வரையில்

Koviloor Digital Library


வியாபித்திருக்கும் மொகலாய ராஜ்யத்தின் பிரதான நக ராகிய ஆக்ரா பட்டணத்தில் செங்கோல் செலுத்தும் மஹா பலாட்டியராகிய அக்பர் பெருமானுக்கும் அவருடைய சந்ததியாருக்கும் இவ்விரு ஜமீன்களும் ஆப்கானியரின்கீழ் இருந்ததுபோலவே இப்போதும் ராஜ்யபக்தியும் இதர ராஜசேவைகளிலும் ஒன்றுக்கொன்று பின்னடையாமல் செழித்துவரும்படி ஆக்ஞாபிக்கவேண்டும்" என்று கேட்டுக் கொண்டார்.

"வீரநகரமா? நன்றாய் ஞாபகம் இருக்கிறது. இந்தப் பிராந்தியத்தில் இதர அரசர்கள் அனைவரும் எதிரியின் பக்கம் போய்ச் சேர்ந்தபோது, அவர்களுக்குப் பயப்படாமல் தருமத்தையே கடைப்பிடித்து எங்கள் பக்கம் தனியாயிருந்து போர்புரிந்த கிழச் சிங்கத்தை எப்படி மறப்பேன்? அவர் நாட்டிற்கு நான் எத்தனையோ முறை சென்றிருக்கிறேன். அவருடன் அநேக நாட்கள் பழகியிருக்கிறேன். அவ ருடைய வீரத்தையும் நன்றியையும்பற்றி அக்பர் அவர்கள் மெச்சிப் பேசியதைக் கூடுமானால் இன்னொருமுறை அவ ருக்குத் தெரிவிக்க வேண்டுமென்பது என்னுடைய கோரிக்கை."

"இவ்வுலகத்தில் பேரும் புகழும் வாய்ந்து வசித்திருந்த அவர் தாங்கள் இந்நகரத்தை விட்டுச் சென்ற சிறிது காலத் துக்கெல்லாம் பரலோக மடைந்தார். அவருடைய இளம் பேரப் பிள்ளைதான் இப்போது வீரநகரத்திற்கும், சிறிது காலம் தேவிபுரத்திற்கும் அதிபதி."

இம்மொழிகளைக் கேட்டுத் தோடர்மல்லர் பெருத்த யோசனையில் ஆழ்ந்தார். சபை முழுவதும் நிச்சப்தமா யிருந்தது. ஒருவராவது வாய் திறக்கவில்லை. அந்திய காலத்தில் வைத்தியர் கை பார்த்து என்ன சொல்லப் போகிறாரோவென ஆவலுடன் காத்திருக்கும் நோயாளியின்

Koviloor Digital Library



நெருங்கிய சுற்றத்தார்களைப்போல் நவகுமாரர், ராஜா தோடர்மல்லர் வாக்கிலிருந்து வரப்போகும் மொழிகளை எதிர்பார்த்திருந்தார்.

சற்று நேரத்துக்கெல்லாம் ராஜா தோடர்மல்லர் தம் தீர்ப்பைக் கூறத் தொடங்கினார்:

"நவகுமாரரே, உமது நம்பிக்கையுள்ள அமைச்சர் உமக்காக ஸாமர்த்தியமாகப் பரிந்து பேசினார். அதைவிட அதிக பலமான சிபார்சாக, நடந்த போரில் நீர் செய்திருக்கும் உதவியொன்று இருக்கிறது. அந்த உபகாரத்துக்கு ஏற்ற சம்மானம் உமக்குக் கிடைக்கும். நான்கு வருஷங்களுக்கு முன் தாங்கள் செய்த துரோகத்தின் அந்தரங்கக் காரணங்கள் எனக்குத் தெரிய வேண்டியது சற்றும் அவசியமில்லை. நீர் செய்த பிழைகள் எல்லாவற்றையும் அக்பர் சக்கரவர்த்தி மன்னித்துவிட்டார். இனி நீர் அவ்வித் நடத்தைக்கு உட்படாமல் என்றைக்கும் ராஜபக்தியில் சிறந்து விளங்குவீரென்று நம்புகிறோம். வீரநகர ஜமீன்தாருக்குப் பரிசாகக் கொடுத்ததை இவ்வளவு சீக்கிரத்தில் திரும்ப எடுத்துக்கொள்வது சக்கரவர்த்தியவர்களுடைய பெருமைக்கும் அந்தஸ்துக்கும் சிறிதும் ஒவ்வாத காரியம். இன்னும் கொஞ்சகாலம் கழிந்த பிறகுதான் உமது ஜமீன் உம் கைவசமாகும். அதற்குள் நீர் உமது நல்ல நடத்தையால் சக்கரவர்த்தி யவர்களுடைய தயையைப் பெறவேண்டும்.

வீரநகர ஜமீன்தாருக்கு இன்னும் யுக்த வயது வரவில்லை; அவரை ராஜ்ய வியவகாரங்களில் பழக்கவும், அவருடைய ஜமீன் விஷயங்களைச் சரிவரப் பார்த்து வரவும் ஒரு நம்பிக்கையான உத்தியோகஸ்தர் தேவை. அவ்விரண்டு உத்தியோகங்களையும் நீர் பார்த்து வாரும். நீர் சக்கரவர்த்தியவர்களுடைய மனத்துக்குத் திருப்தியாய் உமக்கு இட்ட காரியத்தைச் செய்துவந்தால், அந்தப் பால்ய

Koviloor Digital Library



ஜமீன்தார் உரிய பருவம் அடைந்தவுடன் தேவிபுரம் உமக்குக் கிடைக்கும். உமது வம்சத்தைப் போன்ற புராதன வம்சங்கள் க்ஷீணித்துப் போகாமல் கூடிய மட்டும் நெடுங்காலம் தழைத்தோங்க வேண்டுமென்பது சக்கரவர்த்தியவர்களுடைய மனப்பூர்வமான கோரிக்கை. ஆதலால் நம்பிக்கையாய் ஊழியஞ்செய்து உமது ஜமீனைத் திரும்பப்பெற்றுக்கொள்ளும் வழியைத் தேடும். என்றைக்கும், கனவில் கூட, நினைக்கவேண்டாம் நம்பிக்கைத் துரோகம் என்பதை. நண்பரையும் அவர்கள் புரியும் உதவியையும் எப்படி என்றைக்கும் மறப்பதில்லையோ, அப்படியே நாம் நமது சத்துருக்களைப் பூண்டற நாசம் செய்யும் வரையில் அவர்களை மறப்பதில்லை. இது உமக்கு ஞாபகத்தில் இருக்கட்டும்."

தோடர்மல்லர் செய்த பிரசங்கம் ஆஸ்தான மண்டபமெங்கும் ஒலித்தது. அவர் கூறிய ஒவ்வொரு வார்த்தையும் நவகுமாரர் மனத்தில் பசுமரத்தில் ஆணிபோல் பதிந்தது. அவர் மனம் துடித்தது. தன் ஜன்ம சத்துருவினது வீட்டில் திவானும் காரியஸ்தனும் வேலை பார்க்கத் தாம் நியமிக்கப்பட்டிருப்பதாகத் தோடர்மல்லர் கூறியது அவருக்கு நாராசங் காய்ச்சி நடுச்செவியில் ஊற்றியதுபோல் இருந்தது. அவர் மனம் பெரிதும் துன்பப்பட்டது. அவருக்கு அடங்காக் கோபமும் ஆத்திரமும் உண்டாகிவிட்டன. அவருடைய உதடுகள் சிறிது அசைந்தன. அவர் ராஜ கட்டளையை மீறிப் பேசுவார்போல் இருந்தது. ஆனால் அவர் பக்கத்தில் இருவர் இருக்கவில்லையா? கோகுல்தாஸ் அப்போது அங்கே இருந்திராவிட்டால் கைக்கெட்டிய பழம் வாய்க்கெட்டாமல் போய்விட்டிருக்கும். நவகுமாரர் ஏதாவது பதற்றமாய்ச் சொல்லியிருப்பார். சக்கரவர்த்தி நவகுமாரர் செய்த பழைய துரோகங்களையெல்லாம் மன்னித்துவிட்டார். திவான் உத்தியோகம் அவரை

Koviloor Digital Library


உண்மையில் வீரநகரத்துக்கும் தேவிபுரத்துக்கும் தலைவராக்கியது. மேலும் சில வருஷங்களுக்கெல்லாம் தேவிபுரமும் தம் எஜமானர் கைவசமாகும் என்னும் உறுதிமொழியும் கிடைத்தது. இவ்விஷயங்களை யெல்லாம் ஆரத்திர யோசித்த கோகுல்தாஸ் இப்போது மௌனமாயிருப்பது விபரீத புத்தியென்று துணிந்து, தோடர்மல்லர் முன்னிலையில் நமஸ்கரித்து மலர்ந்த முகத்துடன் மொழியலுற்றார்.

" கருணையே உருவாய் வந்த உத்தமரே, தங்களுடைய தயாளகுணத்தால் என் எஜமானர் பேசச் சக்தியற்றவராயிருக்கிறார். அவர் ஆனந்த பரவசராய் விட்டார். தங்களுக்கு வந்தனம் அளிப்பதைக்கூட அவர் மறந்துவிட்டார். இந்திய சக்கரவர்த்தியவர்கள் அந்தஸ்துக்கே தகும் இம்மொழிகள்; உமது திருவாய் மூலமாய் வெளிவந்தது சர்க்கரைப்பந்தலில் தேன்மாரி பொழிந்தது போலிருக்கிறது. சில வருஷங்களுக்குமுன் போர் முகத்தில் தங்களுக்குத் தீங்கிழைத்த எங்களுடைய யோக்கியதைக்கு அதிகமான இம்மரியாதையை என் எஜமானர் மிக்க மனச்சந்துஷ்டியுடனும் வணக்கத்துடனும் ஏற்றுக்கொள்கிறார். இந்த உதாரச்செயலுக்காக நவகுமாரர் தங்களுக்கு என்றைக்கும் நன்றிசெலுத்தக் கடமைப்பட்டிருக்கிறார். அவர் உயிருடன் இருக்கும்வரை மனப்பூர்வமாய் தில்லி சக்கரவர்த்தியின் சார்பில் உழைத்து வருவார் என்பதில் சந்தேகமில்லை. இன்னும் கொஞ்சகாலங் கழித்து ஆப்கானியர்கள்கீழ் இருந்தது போலவே தேவிபுரம் வீரநகரம் இரண்டும் மொகலாயரின்கீழும் ஒன்றுக் கொன்று பின் வாங்காமல் நம்பிக்கையாய் உழைத்து வருவதைக் காண நீங்கள் நெடுங்காலம் வாழ்ந்திருக்க வேண்டும். "

நவகுமாரர் தம் மனைவியுடனும் தம் பெண் ஹேமலதையுடனும் வீரநகரத்துக்கு வந்துசேர்ந்தார். ஸகல நற்குணங்

Koviloor Digital Library



களும் அமையப் பெற்றவளாகிய அவருடைய மனைவியும் அவரும் நரேந்திரன், ஹேமலதை இருவரையும் கருத்தாய் வளர்த்து வந்தார்கள். ஹேமலதை அழகிற் சிறந்தவள். நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாக இரண்டு குழந்தைகளும் வளர்ந்து வருங்காலையில் இருவருக்குள் சிநேகம் அதிகரித்தது. தம் முன்னோர்கள் உழைத்தபடியே இன்றும் தேவிபுரத்து ராஜ குடும்பத்தாருக்கு மனப்பூர்வமாய் உழைத்து வரும் கோகுல்தாஸனும் நவகுமாருடன் வீரநகரம் வந்தார்.

இந்நிகழ்ச்சிகளெல்லாம் நடந்து இப்போது பத்து வருஷமாயிற்று. அக்பர் சக்கரவர்த்தியின் தளகர்த்தருள் மற்றொரு ஹிந்துவாகிய ராஜா மாநஸிம்ஹர் அப்போது வங்காளத்தில் மண்டலாதிபதியாக இருந்தார். ஆக்மஹாலைத் தலைநகராக்கி அதன் பெயரை 'ராஜமஹால்' அதாவது 'அரசர்கள் வசிக்குமிடம்' என்று மாற்றினர். நரேந்திரனும் ஹேமலதையும் விளையாடிக் கொண்டிருந்த வீரநகரம் இந்த ராஜமஹாலுக்கு அருகில்தான் இருக்கிறது. ஆனால் இந்தப் பத்து வருஷ காலத்துக்குள் ஸ்ரீசன் என்னும் ஓர் அந்நியன் அவர்களுக்கிடையில் வந்து தோன்றினன்.

Koviloor Digital Library

## மூன்றும் அத்தியாயம்

## மந்திராலோசனை வல்ல மங்கை

தம்மிடம் ஒப்பிக்கப்பட்ட ஜமீன்களை நவகுமாரர் அதிகமான சிரத்தையுடன் ஸாமர்த்தியமாய்ப் பரிபாலித்து வந்தார். பத்து வருஷகாலத்துக்குள் வீரநகரம் தேவிபுரம் இரண்டும் சமாதான நிலைக்குவந்தன. நாடெல்லாம் ஸௌபிக்ஷம் அடைந்தது. ஆப்கானிய மொகலாய யுத்தம் நடந்த காலத்துப் பாழடைந்துபோன கிராமங்களிலெல்லாம் ஜனங்கள் மறுபடியும் வந்து குடியேறினர். பீதியடைந்து வீடு வாசல்களைவிட்டு ஓடிய குடித்தனக்காரர்களும் தொழிலாளிகளும் சண்டைச் சச்சரவுகள் அடங்கிச் சமாதானம் நிலைபெற்றவுடன் தத்தம் கிராமங்களுக்குத் திரும்பி வந்து பழையபடியே தம் வீடுகளைச் சீர்படுத்திக்கொண்டு, ஜீவிக்கத் தலைப்பட்டார்கள். புல்பூண்டு செடி கொடிகளால் மூடப்பட்டுப்போன நிலங்களும் வயல்களும் மறுபடியும் சாகுபடி செய்யப்பட்டன.

சிறு பிள்ளைகள் வயல் புறங்களில் சுற்றித் திரியும் போது தங்கள் கையில் அகப்பட்ட பீரங்கிக் குண்டுகளையும், உடைந்துபோன துப்பாக்கிகளையும் கொண்டுவந்து அவைகள் அங்கே கிடக்கவேண்டிய காரணமென்னவென்று தங்கள் தகப்பன் பாட்டன்மார்களை ஆவலுடன் கேட்டார்கள். பெரியவர்களும் தங்கள் இளம்பருவத்தில் கண்ணுற்ற சேனைகளுடைய போக்குவரவுகளைப் பற்றியும், அவர்கள் புரிந்த யுத்தங்களைப்பற்றியும் ஞாபகம் இருந்தவரை

Koviloor Digital Library


யில் கதை கதையாகச் சொன்னார்கள். அப்பெரியவர்களுள் சிலர், தாயுத்கான் அல்லது தோடர்மல்லர் பக்கமிருந்து சண்டைசெய்த யுத்த வீரர்கள். அவர்கள் மரநிழலில் உட்கார்ந்து அதிக உத்ஸாஹத்துடன் தங்களைச் சுற்றியிருந்த சிறுவர்களிடம் தாங்கள் செய்த ஸாஹஸங்களை எடுத்துச் சொல்லிக் களித்தனர். எத்தனை முறைதான் திரும்பத் திரும்பச் சொன்னாலும் கதைகள் சுவையிற் சிறிதளவும் குன்றவில்லை. பிரதிதினமும் ஊரார்கள் அக்கதைகளை ஆவலுடன் கேட்டு அவர்கள் புரிந்த வீரச்செய்கைகளில் ஒன்றிரண்டுகூடத் தங்களால் ஆகாதென்று எண்ணி, அவர்களுக்கு மரியாதை செலுத்தி வந்தார்கள்.

பிறர் செய்யும் ஒவ்வொரு காரியத்திலும் குற்றங்குறை கண்டு பிடிப்பதே தொழிலாக இருப்பவர்கள்கூட நவகுமாருடைய ராஜ்யகாரியங்களில் பிழை கூறமுடியவில்லை. வீரநகரத்துப் பழைய உத்தியோகஸ்தர்களையும் சேவகர்களையும் அவர் வேலையில் நிறுத்திக்கொண்டு, அவர்களுக்குத் தக்க சம்பளங்களையும் பரிசுகளையும் அளித்து வந்தார். நரேந்திரனுடைய பாட்டனார் ஏற்படுத்திய தரும கைங்கரியங்கள், தேவாலயங்கள், தருமசாலைகள் யாவற்றையும் சீராய்ப் பரிபாலித்து வந்தார். ஸகல ராஜகாரியங்களையும் டம்பமின்றி அமரிக்கையாய் நடத்திவந்தார்; ஆகையால் அவர் தம் அதிகாரத்தை வெளிப்படையாய்க் காண்பித்துப் பொதுஜன பீதியைஉண்டு பண்ணவில்லை. வங்காளத்து மண்டலாதிபதியாய் ராஜா மாநஸிம்ஹர் வீரநகரம் வந்தபோது, ராஜா தோடர்மல்லர் செய்த ஏற்பாடு ஒழுங்காயிருப்பதைக் கண்டு திருப்தியடைந்தார். நவகுமாருடைய ராஜபக்தியையும், ராஜ்ய பரிபாலன முறையையும் மெச்சி, ராஜா மாநஸிம்ஹர் அவருக்குத் தக்க மரியாதை செய்து, வீரநகரத்து இளவரச

Koviloor Digital Library


ருக்கு யுக்த வயது வந்தவுடன் தேவிபுரத்தை அவருக்கு அளிப்பதாகத் தோடர்மல்லர் காலத்தில் செய்த வாக்குத் தத்தத்தை ஸ்திரப்படுத்தினர்.

நரேந்திரனுடைய பாட்டனரிடத்தில் நெடுங்காலம் உத்தியோகஞ் செய்து இப்போது அதிக வயோதிக தசையிலிருப்பவர்களுள் இரண்டொருவர் மாத்திரமே நவகுமாரருடைய உட்கருத்தை அறிந்திருந்தார்கள். அவர்கள் நவகுமாரரிடம் உள்ளும் புறமும் ஒத்திருக்கவில்லை என்பதை நன்குணர்ந்தனர். நவகுமாரர் வெளிக்குச் சிரித்த முகமும், அன்பும் உடையவராகத் தோற்றிய போதிலும், அவர் மனத்தில் ஏதோ வித்தியாசமான யோசனைகளும், ஆழ்ந்த கருத்துகளும் வைத்திருக்கிருரென்று அவர்கள் சந்தேகித்தார்கள். இரண்டு ஜமீன்களிலுமுள்ள பிரதானமான பிரபுக்களையும் உத்தியோகஸ்தர்களையும் இரகசியமாய் அவர் தம் வசப்படுத்திக் கொண்ட விஷயம் அவர்களுக்கு நன்ருய்த் தெரியும்.

வீரநகரத்து வேவுகாரர்களும் ஒற்றர்களும் தங்கள் எஜமானர் இட்ட கட்டளைகளை ஒவ்வொரு கிராமத்திலும் சந்தையிலும் அதிக சுறுசுறுப்பாக நடத்தி வந்தார்கள். தேவிபுரத்தில் நூதனமாகச் சில கோட்டைகள் கட்டப்பட்டன. பழைய கோட்டைகளும் மதிற்சுவர்களும் பழுது பார்க்கப்பட்டன. போர்வீரர்களுடைய தொகையும் நாளுக்குநாள் விருத்தியடைந்து வந்தது. இந்த மாறுபாடுகள் ஏற்பட்டதன் காரணங்களை அவர்கள் நன்கு யூகித்த போதிலும், அவைகளை வாய்விட்டுப் பேசத் துணியவில்லை. நரேந்திரன் வாலிபப்பருவம் நீங்கும் ஸ்திதியில் இருந்தான். இப்போது நல்ல அழகும், அஞ்சாநெஞ்சமும், வீரதீரமும் பொருந்திய ஒரு வீரசிகாமணியாக விளங்கினன். அந்நரேந்திரனை எங்காவது மனிதர் நடமாட்டமற்ற இடத்

Koviloor Digital Library



தில் சந்தித்தால் அப்போது அவர்கள் தங்கள் மனத்தில் தோன்றிய சந்தேகத்தை அவன் செவிகளில் வற்புறுத்தி உரைப்பார்கள்.

"ராஜா தோடர்மல்லர் அதிக தைரியசாலி. சௌரியத்தில் அவருக்கு இணையானவர் வேறெவரும் இல்லை. ராஜா மாகஸிம்ஹரைப்போல் ஸாமர்த்தியவானை இம்மொகலாய ராஜ்யத்தில் காண்பது அரிது. ஆனால் அவர்கள் இருவரும் நவகுமாரர் மனத்தில் குடிகொண்டிருக்கும் மோசக் கருத்தை அறிந்திலர். "உன் பாட்டனாருடைய ஜமீன் இப்போது அவர்கையில் நன்றாய்ச் சிக்கியிருக்கிறது. நவகுமாரர் பிடி உடும்புப் பிடிதான். அவர் ஸாமான்யரல்லர். தம் எண்ணத்தை எவ்விதத்திலாவது நிறைவேற்றிவிடுவார். ராஜகுமாரா, நாங்கள் சொல்வதை அசட்டை செய்து விடாதே, ஜாக்கிரதை!" என்று அவ்வயோதிகர்கள் பல முறையும் நரேந்திரனிடத்தில் கூறியதுண்டு.

ஜமீன்தாரரின் அரண்மனை கடைத்தெருவுகளுக்கு மத்தியில் அமைந்திருந்தது. அவ்விடத்தில் ஜனநெருக்கம் அதிகம். அந்த விசாலமான அரண்மனையின் சிலபாகங்கள் இருநூறு முந்நூறு வருஷங்களுக்குமுன் கட்டப்பட்டனவாதலால் கொஞ்சம் சிலமாயிருந்தன; இன்னும் சிலபாகங்கள் அதற்குப் பின்னர், கட்டப்பட்டனவாதலால் அவைகள் அவ்வளவு ஜீரண ஸ்திதியில் இல்லை. இவ்வாறு சிலபாகங்கள் நாளடைவில் சிலமடைந்துவர, அவ்வப்போதைய ஜமீன்தாரர்கள் புதிய அறைகளும், கூடங்களும், கொலுமண்டபங்களும் கட்டிவந்தனர். பரம்பரையாய் வழங்கிவரும் சம்பிரதாயப் படியே நரேந்திரன் பாட்டனார்காலத்திற் கட்டப்பட்ட கொலுமண்டபம் கடைத்தெருவைநோக்கி அதிக கம்பீரமாய் அமைந்திருந்தது. பழைய ஜமீன்தார் ராஜாதோடர்மல்லரை வரவேற்று உபசரித்ததும், இப்போது சில நாட்களுக்கு

Koviloor Digital Library



A102

முன்னர்தான். நவகுமாரர் ராஜா மானஸிம்ஹருக்கு விருந்தளித்ததும் இவ்வழகிய கொலுமண்டபத்தில்தான்.

அரண்மனையைச் சேர்ந்தாற்போல் பெரிய முற்றம் ஒன்றிருந்தது. அம்முற்றத்தைச்சுற்றி நாலு பக்கத்திலும் சித்திரவேலை செய்யப்பட்டிருக்கும் ஸ்தம்பங்கள் கம்பீரமாய் நின்றுகொண்டிருந்தன. முற்காலத்திய அதிபதிகள் தனிமையாயும் ஏகாந்தமாயும் காலங் கழிக்க விரும்பாதவர்களாதலால், அம்முற்றத்தில் சதாசர்வகாலமும் ஜமீனின் நான்கு திசையிலிருந்து வந்த ஜனங்களும் கூடி இருந்தனர். அக்காலத்தில் ஒவ்வொரு ஜமீன்தாரர் வீடும் ஒரு பெரிய கச்சேரிபோல்தான் இருக்கும். ஏனெனில் ஜமீன்தாரர்கள் எப்பொழுதும் தங்கள் குடிகளுடைய சுகதுக்கங்களை நேரில் விசாரித்துப் பரிகாரம் செய்தும், அவர்களுடன் அடிக்கடிச் சம்பாஷித்து அவர்களுடைய அபிப்பிராயங்களையும் நோக்கங்களையும் அறிந்தும் வருவது வழக்கம்.

முற்றத்தைச் சுற்றியிருக்கும் விசாலமான அறைகளில்தான் ஜமீன் வியவகாரங்கள் நடைபெற்று வந்தன. கிராமாதிகாரிகள் தாங்கள் வசூல் செய்த பணத்தையும் தங்களுடைய கணக்குகளையும் ஒப்பிக்க இவ்விடம் வருவார்கள். அதிக மழையினாலாவது அல்லது மழையின்மையாலாவது சாகுபடி திருப்தியாயிராத நிலங்களுடைய தீர்வையைத் தள்ளுவதற்கும், ஏரிகளை மராமத்து செய்வதற்கும், புது ஏரிகள் கட்டுவதற்கும் கால்நடை, விதை, தானியம் வாங்கவாவது, வீடு கட்டவாவது முன்பணம் கடன் கேட்பதற்கும் கிராம மஹாஜனங்கள் அடிக்கடி ஜமீன்தாரரிடம் வந்து விண்ணப்பஞ் செய்துகொள்வது வழக்கம். இவ்விடத்தில்தான் ஜமீன் உத்தியோகஸ்தர்களும், நியாயாதிபதிகளும் வழக்குகளை விசாரித்துக் குற்றவாளிகளைத் தண்டிப்பது வழக்கம். சில சமயங்களில்

Koviloor Digital Library


ஜமீன்தார் நேரிலேயே இவ்வியவகாரங்களை நடத்துவதும் உண்டு. இவ்வாறு துஷ்ட நிக்ரஹ சிஷ்ட பரிபாலனஞ் செய்து நாட்டைச் ஸௌபிக்ஷமாக அரசு புரிந்துவரும் காருண்ய அதிபதியைக் கண்டுபோக வேண்டுமென்ற ஆசையினால் திரளான ஜனங்கள் இந்தச் சபைக்குப் பிரதி தினமும் வருவார்கள்.

முற்றத்தைச் சுற்றியிருக்கும் மாடி அறைகள் அரச குடும்பத்தினர்களுடைய இருப்பிடம். மேலே விவரிக்கப் பட்ட கொலுவறைகள் முற்றத்தின் முன்புறத்தில் இருந்தன. அதன் பின்புறம் ராஜஸ்திரீகளினுடைய அந்தப்புரம். அரண்மனைக்குள் மிகவும் அழகிய அறையில் நரேந்திரன் இருந்தான். அந்த அறையைப்போல் அவ்வளவு அழகு வாய்ந்திராத வேறு இரண்டு அறைகளில் ஹேமலதையும் அவளுடைய தாயாரும் இருந்தனர். ஜமீன்தாருடைய பந்துக்கள் பலர் அந்த மாளிகையின் மற்றப் பாகங்களில் தங்கள் குடும்பங்களுடன் வசித்துவந்தனர்.

அந்தப்புரத்துக்குப் பின்புறத்தில் மற்றோர் அந்தஸ்துக் கட்டடம் இருந்தது. அவ்விடத்தில் ஸ்திரீகள்தான் நடமாடுவார்கள். அவ்விடத்தில்தான் அரிசி பருப்பு முதலிய போஜன பதார்த்தங்கள் வைக்கப்பட்டிருந்தன. பிரதி தினமும் பால், தயிர், மோர், கறிகாய் முதலியன ஏராளமாய் வரும். சூரியோதயம் முதல் அர்த்த ராத்திரி வரைக்கும் அடுப்பு எரிந்தபடியே இருந்தது. வயதுமுதிர்ந்த சமையல்கார ஸ்திரீகளும் இதர வேலைக்காரர்களும், மிகவும் கஷ்டப்பட்டுத் தங்கள் வேலைகளைச் செய்துகொண்டிருந்தார்கள். அந்தக் கட்டில் குழந்தைகள் குதூஹலமாய்க் குதித்து விளையாடிக்கொண்டிருந்தன. கூடத்தில் பூஜை மண்டபம் இருந்தது. சூரியோதய அஸ்தமன காலங்களில்

Koviloor Digital Library


ஒவ்வொரு நாளும் ஒரு வைதிகப் பிராமணர் அவ்விடத்தில் தேவதாபூஜை செய்துபோவது வழக்கம்.

வீட்டுக்குச் சிறிது தூரத்துக்கு அப்பால் உத்தியான வனம் இருந்தது. அவ்விடத்தில் பெரிய ஏரி ஒன்று இருந்தது. அதன் கரையில் நல்ல இனிப்பான பழமரங்கள் வளர்ந்திருந்தன. அந்த ஏரியின் நாலுபக்கத்திலும் ஒரு பெரிய சுவர் எழுப்பப்பட்டிருந்தது. அச்சுவரில் பல வாயில்கள் அமைக்கப்பட்டிருந்தன. அவ்வாயில்களின் வழியாக ராஜஸ்திரீகளும் இன்னும் இதர உயர்குல மாதர்களும் நதிக்குப்போய் ஸ்நானஞ்செய்து, தேவாலயஞ்சென்று ஈசுவரனை நமஸ்கரித்துவிட்டுத் தங்கள் நண்பர்களைக்கண்டு பேசி வருவார்கள். ஜமீன்தாரரகத்து ஸ்திரீகள் வழக்கமாகப் பின்கட்டு வாசற்படியாகத்தான், நதி தேவாலயம் முதலிய இடங்களுக்குப் புறப்பட்டுப் போவார்கள்.

பூர்வகாலத்து ஜமீன்தாரர்களுடைய மனைவிகளிடம் காணப்படும் குணநிசயங்கள் யாவும் ஒருங்கே திரண்டு உருவெடுத்து வந்தவள் நவகுமாரரின் மனைவி. குலத்துக்கேற்ற காம்பீர்யமும், அந்தஸ்துக்கேற்ற பெருந்தன்மையும் அமைந்தவளாய் அம்மாது சிரோமணி வைதிகக் கிரியைகளிலும் ஆசார வியவகாரங்களிலும், விரதங்கள் முதலிய அநுஷ்டானங்களிலும் சிறிதேனும் பிறழாமல் அந்தப் பெரிய குடும்பத்தின் தலைவியாகத் தான் செய்ய வேண்டிய காரியங்கள் எல்லாவற்றையும் சற்றும் சலிக்காமல் செய்துவந்தாள். சூரியோதயத்திற்கு முன்னமே புண்ணிய தீர்த்தமாகிய கங்காநதியில் ஸ்நானஞ் செய்துவிட்டு அரண்மனை நந்தவனத்தில் நரேந்திரன் பாட்டனார் கட்டிய திருக்கோயிலிற்குச் சென்று ஸ்வாமி தரிசனஞ் செய்த பிறகு வீட்டுக்குத் திரும்பிவந்து, செய்யச் செய்யத் தொலையாமல் வளர்ந்துகொண்டே வரும் வீட்டு

Koviloor Digital Library


வேலைகளில் தலையிட்டுக்கொண்டு பாதி ராத்திரி வரைக்கும் ஓயாமல் உழைப்பாள்.

ஸ்திரீகள், குழந்தைகள் உள்பட வீட்டிலுள்ளோர் யாவரும் போஜனஞ் செய்தபின்னரே அவள் சரியாய் உச்சி வேளைக்கு சிறிது உணவு உட்கொண்டு சற்றே கண் அயர்வாள். மறுபடியும் ஸாயங்காலம் வீட்டு வேலைகளை மேல் பார்த்துவிட்டு மத்தியான்னம் போலவே, எல்லோரும் சாப்பிட்டான பிறகு தானும் ஒரு வாய் அள்ளிப்போட்டுக் கொண்டு அவள் நித்திரை செய்வதற்குள் ஏறக்குறைய நிசியாய்விடும்.

இவ்வளவு அந்தஸ்தும் பதவியும் இருந்தும் அவள் சற்றேனும் டம்பம் இல்லாமல் இருந்தாள். அரண்மனையில் வசிக்கும் ஜமீன்தாருடைய பந்துமித்திரர்கள் யாவரும் அவளுடைய மொழிகளை வேதவாக்காகக் கருதி அவள் மனது சற்றுங் கோணாமல் நடந்து கொள்வார்கள். சில சந்தர்ப்பங்களில் நவகுமாரர்கூட ராஜாங்க விஷயங்களில் அவளுடைய சாதுர்ய புத்திமதியைக்கேட்டு அதன்படி நடப்பார். தமக்கு ஈடு எவருங் கிடையாதெனக் கருதி இரண்டு ஜமீன்களையும் விமரிசையாய்ப் பரிபாலித்துவரும் நிபுணராகிய நவகுமாரர் அவளுடைய மனோபீஷ்டத்துக்கு மாறுகச் செய்ய அஞ்சுவாரென ராஜஸ்திரீகள் தங்களுக்குள் அடிக்கடி ரஹஸ்யமாய்ப் பேசிக்கொள்வதுண்டு.

தானும் வீரநகரத்து ராஜவம்சத்தில் உதித்த காரணத்தினாலேயோ, அல்லது உயர்குலத்தில் அவதரித்து மன்மதனைப் பழிக்கத்தக்க உருவத்தையுடைய அவ்வநாதைக் குழந்தையின் பரிதபிக்கத்தக்க நிலைமையைக்கண்டு மனம் இளகியோ, நவகுமாருடைய மனைவி நரேந்திரனைத் தன் சொந்தப் புத்திரனாகப் பாவித்துச் செல்வமாய் வளர்த்து வந்தாள். தன் வயிற்றிற் பிறந்த ஹேமலதையையும் அவ்விளங்

Koviloor Digital Library



குமரனையும் அவள் ஒரு சீராக வளர்த்தாள். அவர்கள் இருவரும் தோட்டத்திலாவது ஏரிக்கரையிலாவது கூடி விளையாடுவதைக் காணும்போதெல்லாம் மனம்பூரிப்பாள். ஒரு தாய்வயிற்றுக் குழந்தைகளைப்போல் அவர்களை அன்பாக ஆதரித்துவந்த அவளுக்கு அவர்கள் தற்சமயத்தில் இருப்பதற்கேற்ப வருங்காலத்திலும் இருக்க வேண்டுமென்ற விருப்பம் ஸஹஜமாய் உண்டாயிருக்கும்.

ஹேமலதைக்குப் பன்னிரண்டுப் பிராயம் ஆயிற்று. விவாககாலம் நெருங்கிவிட்டது. நரேந்திரனுடைய வயது பதினாறு. ஒருநாள் காலை ஸ்நானஞ் செய்துவிட்டு ஆலயத்துக்கு வரும் வழியில் அரண்மனை நந்தவனத்தில் குழந்தைகள் இருவரும் செடிகளுக்கு ஜலம் பாய்ச்சுவதை அவள் கண்டாள். நரேந்திரன் தடாகத்திலிருந்து நீர் கொண்டுவர, ஹேமலதை அதை வாங்கித் தான் நட்ட மல்லிகைச் செடிகளுக்குக் கொட்டிக்கொண்டிருந்தாள். ஹேமலதையின் தாய் சற்று நிதானித்துக் குழந்தைகள் இருவரும் ஒருவரையொருவர் நேசித்துக் குதூஹலமாயிருப்பதைக் கண்டு அந்த க்ஷணமே தன் மனத்தில் ஒரு தீர்மானத்தைச் செய்துகொண்டாள்; ஆலயத்துக்குச் சென்று தன் மனோபீஷ்டத்தைப் பூர்த்தி செய்து வைக்கவேண்டுமென அம்பிகையை வேண்டிக்கொண்டாள்.

அன்றைத்தினம் பகலில் நவகுமாரர் போஜனஞ்செய்து, உண்ட அலுப்புத் தொண்டருக்கும் உண்டு என்ற வசனத்துக்கேற்ப இளைப்பாறிக்கொண்டிருக்கும்போது அவருடைய மனைவி அவர் படுக்கையண்டை வந்தாள். கணவரைத் தன் கரியவிழிகளால் அன்பாய்நோக்கி, "தங்களுடையமுகம் அதிகக் கவலையாலும் வேலையாலும் வரவர வெளுத்துக்கொண்டு வருகிறது. உங்களுடைய கண்களும் நாளுக்குநாள் காந்தி குன்றி உள்ளுக்குப் போய்க்கொண்டிருக்கின்றன. நீங்கள்

Koviloor Digital Library



அதிகச் சிரமம் வைத்துக்கொள்கிறீர்கள். உங்கள் தேகம் மிகவும் இளைத்துப் போயிற்று" என்று பணிவாய்க் கூறினள்.

"புருஷர்களுக்கு எத்தனையோ வேலைகளும், எவ்வளவோ மனக்கவலைகளும் இருக்கின்றன. ஒரு நாட்டுக்கு அதிபதியென்றால் அவனுக்கிருக்கும் கவலைக்குக் கேட்பானேன்? ஸ்திரீ ஜாதியாகிய உனக்கு அவைகளெல்லாம் எவ்வாறு தெரியும்?"

"ஆம், நீங்கள் சொல்வது உண்மைதான். ஒரு ஸ்திரீ தன் புருஷனுடைய மனக்கவலையைத் தானும் பகிர்ந்து கொண்டு அவைகளைக் கூடியமட்டும் நீக்குவதற்காகத் தன் பிராணநாதனுடைய மனக்கவலைகளை அறியவிரும்பாளோ? சென்ற சில வாரங்களாக ஏதோ புதிய கஷ்டம் ஒன்று தங்கள் மனத்தை வருத்துகிறதென்று நினைக்கிறேன். இதற்குமுன் இரண்டொரு தடவை தாங்கள் தங்கள் கஷ்டத்தை என்னிடம் சொல்லியிருக்கிறீர்கள். இம்முறை நான் தங்களுடைய கஷ்டத்தைப் பகிர்ந்துகொள்ள யோக்கியதையற்றேனோ?"

"ஒவ்வொரு வருஷமும் புதிய புதிய கவலைகள் எனக்கு ஏற்படுகின்றன. எப்போதும் உனது யோசனையைக் கேட்க மறக்கமாட்டேன். நரேந்திரனுக்கோ யுக்த வயது வந்து விட்டது. வீரநகரத்தை இன்னும் கொஞ்சகாலத்துக்குள் அவனிடம் ஒப்பிக்கவேண்டும்."

"திக்கற்று நாதனற்று இருந்த குழந்தையை வளர்த்து, அவனுடைய ராஜ்யத்தையும் சீராகப் பரிபாலித்து யுக்த வயது வந்தவுடன் அவனுடைய பிதுரார்ஜித சொத்தை அவனிடம் சேர்ப்பதைக் கண்டு ராஜமஹாலே இப்போது அரசாட்சி புரியும் சக்கரவர்த்தி யவர்கள் உட்பட எல்லா ஜனங்களும் உங்களை மெச்சுவார்கள். நாடெங்கும் உங்கள் பெருமையும் பிரதாபமும் சூரியனைப்போல் பிரகாசிக்கும்."

Koviloor Digital Library



" ஆஹா! என்ன பெருமை! என்ன பிரதாபம்! சரி சமானமாகவோ அல்லது ஒருபடி உயர்ந்தோ - ஒருபோதும் தாழாமல் - மட்டுமே விஜய வீரர்களாகிய என் முன்னோர்கள் அடியெடுத்து வைத்த நாட்டில் நான் காரிய தரிசியாக வேலைபார்த்து வருவது ஒரு பெருமையன்றோ! நன்றாய்ச் சொன்னாய்! தேவிபுரத்து மஹிஷியாக ஒரு காலத்தில் நீ இருந்ததைக் கூட மறந்து விட்டனையோ? தேவிபுரத்து ராணியைப்போல் நீ பேசவில்லையே?"

" நாதா, நான் ஒன்றையும் மறக்கவில்லை. நமது தேவிபுர வம்சத்தாரின் நோக்கங்கள், அந்தஸ்து, மரியாதை எல்லாம் என் ஞாபகத்தில் இருக்கின்றன. அந்த ஒன்றான பகவானது திருவருளால் நாம் நமது ராஜ்யம், பதவி, அந்தஸ்து யாவற்றையும் திரும்பிப் பெறுவோம் என்பதற்குச் சந்தேகமே இல்லை."

" கடவுள் கிருபையிருந்தால் அடைவதற்குச் சந்தேகமா? நவகுமாரன் மாத்திரம் தன் பழைய ஸாமர்த்தியத்தை இழக்காதிருக்க வேண்டும். தேவிபுரம் முன்னிலும் பதின்மடங்கு அதிகப் பெருமையுடன் விளங்காதா?"

" அப்படியே ஆகுக, நம்மை இதுவரைக்கும் எவ்வளவோ கஷ்டங்களினின்றும் விடுவித்த பகவான், நமக்கு வருங்காலத்தில் முன்னிலும் அதிகமான கீர்த்திக்கு வழி செய்துகொண்டிருக்கிறார்."

" மனத்திலுள்ளதை ஒளிக்காதே. உள்ளதை விட்டுப் பேசு. நீ பேசுவதைப் பார்த்தால் ஏதோ உன் மனத்தில் சில எண்ணங்கள் குடிகொண்டிருக்கின்றனபோல் தோன்றுகிறது; இதுவரைக்கும் உன் யோசனை வீண்போனதில்லை. பலமுறையும் நான் உன் யோசனையைக் கேட்டுப் பயன் அடைந்திருக்கின்றேன்."

" நாதா, நம் குழந்தை ஹேமலதைக்கு என்ன வயது?"

Koviloor Digital Library



" ஏன் ? இப்போது அவளுக்கு வயது பன்னிரண்டு. நாம் தேவிபுரத்திற்கு வரும்போது அவள் இரண்டு வயதுக் குழந்தை. நாம் வந்து பத்துவருஷம் ஆகவில்லையா !"

" அவளுடைய விவாக விஷயத்தைப்பற்றி யோசிக்கக் காலமாயிற்றல்லவா ?"

" ஆம், அதைப்பற்றி நான் இதுவரைக்கும் யோசிக்க வில்லை. நமது ராஜ்யம் நம் வசம் இருந்தால் நாட்டிலுள்ள சீமான்களெல்லாம் அவளை எனக்கு உனக்கென்று கேட் பார்கள். நாம் வீரநகரத்தில் உத்தியோகத்தில் இருக்கு மட்டும் நம்மை யார் மதிப்பார்கள் ?"

" அப்படிச் சொல்வானேன் ? தேவிபுரத்து இளவரசி யைத் தருந்த சீமான்கள் பலர் விரும்புகின்றனர். தூர தேசங்களிலிருந்துகூட பல ராஜகுமாரர்கள் அவளை நாடி வருகின்றனர். ஈசுவரனது அருளால் நமக்கு இருக்கும் இந்த ஒரு குழந்தையையும் விட்டுப் பிரிந்திருக்க என்னால் முடியாது. ஹேமலதையை அனுப்பிவிட்டு என்னால் ஒரு நிமிஷமும் உயிர் தரித்திருக்க முடியாது."

" ஹேமலதை உனக்கு எப்படியோ அப்படியேதான் எனக்கும்; அவள் உனக்கு எவ்வளவு அருமையோ அதைவிட அதிக அருமை எனக்கு. எனக்குப் பின்னர் என் ராஜ்யத் துக்கு அவள்தான் தலைவி. அவளை மணம்புரிந்து நமக்குப் பின் நமது நாட்டை அரசுபுரிய எவன்தான் மறுப்பான் ? கரும்பு தின்னக் கூலி வேண்டுமோ ?"

" நரேந்திரனைச் சமீபத்தில் எப்போதாவது பார்த் தீர்களா ?"

" ஏன் ? பிரதிதினமும் பார்க்கிறேன். அதைப்பற்றி என்ன கேள்வி இப்போது ?"

Koviloor Digital Library



"அவன் எவ்வளவு அழகாயிருக்கிறான்? அவ்வளவு பிரகாசமான முகமும், பெருந்தன்மையான நடத்தையும் வேறு எவரிடத்திலும் நான் இதுவரையில் கண்டதில்லை."

"நல்ல ரூபவான்தான்; தன்னைவிட அழகிலும், ஸாமர்த்தியத்திலும் சிறந்தவர் ஒருவரும் இல்லை என்ற எண்ணம் பூர்த்தியாயிருக்கிறது. சொல்வார் வார்த்தைகளை யெல்லாம் கேட்டு அவன் கெட்டுப்போயிருக்கிறான். கர்வம் தலைக்குமேல் ஏறியிருக்கிறது. சில பழங்கந்தைகள் அவன் செவியில் கண்டதெல்லாம் போதனை செய்திருக்கின்றன. அதைக் கேட்டு அவன் சிறிது மனோராஜ்யத்தில் இருக்கிறான்."

"நாதா, அவன் பிறந்த வம்சத்தையும், அவனுடைய அந்தஸ்தையும் நாம் யோசிக்க வேண்டாமா? அவனுக்கு அவ்வித எண்ணங்கள் உதிக்கக் காரணம் இல்லையா? அவனுடைய பாட்டனார் வீற்றிருந்த ஸ்தானத்தில் அவன் வீற்றிருக்கக் காலம் வரும்போது அப்பெருமையும், காம்பீர்யமும் அவனுக்கு உண்டாகாவோ?"

"ஆஹா, பாட்டனார் அந்தஸ்துக்கு இவன் வரமாட்டானோ? அவர் என்ன, இவன் என்ன? எனக்குச் சில சமயங்களில் தீங்கிழைத்துள்ள போதிலும், அவரைப்போல் ஆண் மகன் இனி எவனாவது அகப்படுவானோ? சொல்வார் வார்த்தையைக் கேட்டுத் தறுதலையாய்ப் போன இந்தச் சிறுவனோ அவன் பாட்டனார் ஸ்திதிக்கு வருவது?"

"நாதா, நான் சொல்வது தங்கள் மனத்துக்குப் பிடிக்காவிட்டாலும், என் வார்த்தையைச் சற்றே செவி கொடுத்துக் கேளுங்கள். இவ்விஷயங்களில் ஸ்திரீகளுக்குத் தெரிந்தவளவு புருஷர்களுக்குத் தெரிவதில்லை. வீரநகரத்தில் இதுவரைக்கும் அரசு புரிந்துவந்த தலைவர்கள் எவருக்கும் நரேந்திரன் குறைந்துவிடமாட்டான்."

Koviloor Digital Library


நவகுமாரர் அலக்ஷியமாய்ச் சிரித்துக்கொண்டே, "உன்னைப்போல் எனக்கு அவ்வளவு கண்கள் சுத்தமாய் இல்லை. அவனிடத்தில் நீ சொல்லும் உயர் குணங்கள் இருப்பதாக எனக்குப் புலப்படவில்லை" என்றார்.

"திரும்பவும் நான் சொல்கிறேன், கேளுங்கள். மனிதரது முகத்தையும் அவர்களுடைய முகதேஜஸையும் பார்த்து அவர்களுடைய பெருமை சிறுமைகளை யூகித்தறிவதில் புருஷர்களைவிட ஸ்திரீகளே சதுரர்கள். சென்ற சில வருஷங்களாக நான் அவனைப் பிரதிதினமும் கவனமாய்ப் பார்த்துக்கொண்டு வருகிறேன். புருஷர்களுடைய அந்தரங்க யோசனைகளும் நோக்கங்களும் ஸ்திரீகளுக்குக் கரதலாமலகம் போல் புலப்படுகின்றன."

"ஓர் அசட்டுக் கர்வமும் மூடத்தனமுந்தான் அவன் முகத்தில் குடிகொண்டிருக்கின்றன. வேறொன்றும் எனக்குத் தெரியவில்லை."

"அவ்வளவு காம்பீர்யமும், மனோதிடமும், தைரியமுமுள்ள நரேந்திரன் நம் குழந்தை ஹேமலதையைக் கண்டால் அவற்றையெல்லாம் அறவே மறந்து அவள் காலால் இடும் கட்டளையைத் தலையால் செய்துமுடித்து, ஆவலுடன் அவளுடைய புன்சிரிப்பை எதிர்பார்த்துக்கொண்டு நிற்பதைத் தாங்கள் கண்டதில்லையா? வேண்டுமானால் அவன் அவளுக்காகத் தன் உயிரைக்கூட ஆபத்துக்குள்ளாக்கிக் கொள்வான்போலத் தோற்றுகிறது."

"என்ன சனியன் இதெல்லாம்? அவன் அடிக்கடி நம் குழந்தையுடன் கூடியிருப்பது எனக்கு மிகவும் அருவருப்பாக இருக்கிறது. இரண்டொருமுறை ஜாடையாய்ச் சொல்லியும் அவன் மானமற்றவனாக இருக்கிறான். இனி அதிகமாக இருவரும் சந்திக்காமல் இருக்கும்படிப் பார்த்துக்கொள்."

Koviloor Digital Library
410 உ



"அவனுக்கோ இது யௌவனப் பருவம். அப்பருவத்துக்குரிய எண்ணங்களும் யோசனைகளும் அவன் மனத்தில் குடிகொண்டிருக்கின்றன. அதனால் எத்தனை கிஷ்டங்கள் நேர்ந்தாலும், அவன் ஹேமலதையை மணம்புரியத் தன்னாலானமட்டும் பிரயத்தனஞ் செய்வான். அத்தகைய சந்தோஷகரமான விவாஹத்தால் நெடுநாளாக ஜன்ம விரோதத்தால் பிரிவுற்றிருக்கும் வீரநகர தேவிபுர ஜமீன்கள் ஒன்றுசேர்ந்து விடும். தங்களுடைய நாமதேயம் என்றைக்கும் விளங்கிக்கொண்டிருக்கும்."

"இவ்வளவு நேரம் வார்த்தை சொல்லிக் கடைசியில் இவ்வாறாகவா முடித்தனை! இதுவோ உன் கருத்து? இத்தனை வருஷங்களாய் என்னுடைய மனைவியாயிருந்தும், நீ இவ்வாறு அபிப்பிராயப்படுவது அதிசயமாயிருக்கிறது. இந்த இரண்டு குடும்பங்கள்தமக்குள் ஆதிமுதற்கொண்டு அழியாமல் இருந்துவரும் வித்தியாசங்கள், விரோதங்கள் அனைத்தையும் நீ மறந்துவிட்டனையோ? ஏதோ காலவித்தியாசத்தால் பத்து வருஷங்களாக முள்மேல் நிற்பதுபோல் இந்த வீரநகரத்தில் இருந்துவருவதால் பழைய ஞாபகங்களெல்லாம் என் மனத்தைவிட்டு அகன்றுவிடுமா? பதரிலும் கேடுகெட்ட இந்தச் சிறு பயலுக்கு என் ஹேமலதையை விவாஹம் செய்துகொடுத்து, முந்நூறு வருஷகாலமாகப் பிறருக்குக் கீழ்ப்படியாமல் கம்பீரமாய் இருந்துவரும் தேவிபுர ஜமீனை வீரநகரத்தானுக்கு உரிமையாக்கி விடுவேனென்று நீ எவ்வாறு நினைத்தாய்? இது என்றைக்காவது ஸாத்தியமாகக் கூடியதா?"

தன் இஷ்டத்துக்கு விரோதமான மொழிகளெவற்றையும் காதுகொடுத்துக் கேட்கச் சகியாத வண்ணமாய் அப்புண்ணியவதி, "நீங்கள் சொல்வது எனக்கு ஒன்றும் அர்த்தமாகவில்லை. முந்நூறு ஆண்டுகளாகப் பிரிவுற்றிருந்த போதி

Koviloor Digital Library


னும் என்றைக்காவது ஒரு நாள் இரண்டு நாடுகளும் ஐக்கியப்படும் என்று நான் மனப்பூர்வமாய் எண்ணியிருந்தேன். அவ்வாறு ஐக்கியப்பட்ட நாட்டிற்கு நமது ஹேமலதை அரசியாயிருப்பது நமக்கு எவ்வளவு பெருமையாயிருக்கும்! நமக்கோ புத்திர பாக்கியமில்லை. ஹேமலதையின் புருஷனே தங்களுக்குப் பின்னர்த் தேவிபுரத்துக்கு அதிபதியாயிருப்பான். அந்த ஸ்தானத்துக்கு ஸகலவிதத்திலும் தகுதியுடையவன் நரேந்திரன். ஹேமலதைக்கு ஏற்ற கணவன் அவனே. அவனுக்குத்தான் ஹேமலதையைக் கன்னிகாதானம் செய்துகொடுக்க வேண்டும்" என்று ஒரே பிடிவாதமாய்க் கூறினாள்.

நவகுமாரர் பதில் சொல்லத் தெரியாமல் திகைத்தார். மனைவி இவ்வளவு தீரமாய்ச் சொன்னதற்கு மாறாகச் சொல்ல அவருக்குத் தைரியம் இல்லை; மௌனமாயிருந்தார். தன் புருஷனுடைய மனோநிலைமையை உணர்ந்த அம்மாது சற்று நிதானமாய்ப் பின்னும் பேசலாயினள்: "என் அருமை நாயகரே, நான் சொல்வதில் ஒன்றும் பிழை போகாது. நரேந்திரனை நான் வெகுகாலமாய்க் கவனித்து வருகிறேன். அவனுடைய மனத்தை நான் நன்றாய் அறிவேன்; ஹேமலதையை மணம்புரிபவன் தேவிபுரத்தில் வந்திருக்கவேண்டுமென்று நாம் கூறினால் அவன் ஒரு தடையும் சொல்லமாட்டான்; தேவிபுரம் அதிகப் பிரபலமாகும்; வீரநகரம் என்றைக்கும் தேவிபுரத்துக்கு அடங்கியதாய்விடும். தேவிபுரம் கீர்த்தியடைவதற்குத் தாங்கள் எவ்வளவு பிரயாசைப்படுகிறீர்களோ அதைவிட அதிகமாய் நான் படுகிறேன். தேவிபுரத்து ராஜ வம்சத்தின் நன்மையையும் கீர்த்தியையும் முன்னிட்டுத்தான் நான் இந்த யோசனை செய்தேன்; இவ்வாறாகப் பேசினேன்."

Koviloor Digital Library



நவகுமாரர் ஒன்றும் பேசவில்லை ; தம் மனைவி கூறியதும் ஒருவாறு பொருத்தமானதுதான் என்றெண்ணினார். வீரநகர தேவிபுரச் சண்டை ஒழிந்து இரண்டு ஜமீன்களும் என்றைக்கும் ஒன்று சேர்ந்து ஸௌபிக்ஷமடைவதும் விரும்பத் தக்கதென்று கருதினார். வீரநகரம் சேர்ந்துவிட்டால், தேவிபுரத்து விஸ்தீர்ணமும், செல்வாக்கும், பிரதாபமும் விருத்தியடையுமென்றும் அவருக்குத் தோன்றிற்று.

இவ்வாறு சற்றுநேரம் ஆலோசித்துப் பிறகு தம் மனைவியை நோக்கி, "சரி, யோசிக்கலாம்" என்றார். தனது வார்த்தை பயன் பெற்றுவிட்டதென்று எண்ணினாள் ராஜ பத்தினி.

இந்தச் சம்பாஷணை முடிந்தவுடன் ஹேமலதையும் நரேந்திரனும் அறைக்குள் பிரவேசித்தார்கள். நரேந்திரன் தான் கையில் எடுத்துவந்த சில மல்லிகைப் புஷ்பங்களை நவகுமாரரிடம் கொடுத்து வேண்டாவெறுப்பாய் அவரை நமஸ்கரித்தான். பிறகு ஹேமலதையின் தாயிடம் சென்று தலைவணங்கி, மிகுதியாயிருந்த புஷ்பங்களைத் தன் இருகரங்களால் அவளிடம் கொடுத்து அந்தரங்க நேசத்துடன் அவள் பாதங்களில் ஸாஷ்டாங்கமாய் நமஸ்காரஞ் செய்தான். அம்மாதுசிரோமணி தன் வலக் கரத்தை அவன் சிரத்தில் வைத்து, "நெடுங்காலம் நீ ஹேமலதையுடன் சௌக்கியமாயும் சந்தோஷமாயும் வாழ்ந்திருக்க வேண்டும்" என்று ஆசீர்வதித்தாள். அன்றைத்தினம் அவள் மனம் பூரித்து ஆனந்த சாகரத்தில் மூழ்கினாள். புருஷனுடைய மனத்தைத் திருப்பி அவ்ரைத் தன் அபிப்ராயத்தை அங்கீகரிக்கும்படிச் செய்ததால், ஹேமலதையைப் பெற்றெடுத்த பயன் அப்போதுதான் பூர்த்தியாயிற்று என்று அவள் மனங்களித்தாள்.

Koviloor Digital Library



இவ்விஷயங்களில் தன் கணவன் சம்மதம் மாத்திரமேயன்றி மற்றொருவருடைய சம்மதமும் வேண்டுமென்பதை நவகுமாரருடைய மனைவி மறந்தாள். அந்த மற்றொருவர் ஸாமாந்யமானவரல்லர். காரியம் கைகூடும் நிமித்தம் எதை வேண்டுமானாலும் செய்ய அஞ்சமாட்டார். அவருக்கு முன் நம் ஜமீன்தாரரின் மனைவி எம்மாத்திரம்? கோகுல்தாஸ் அன்றோ நவகுமாரருடைய அமைச்சர்? சூழ்ச்சியில் சுந்தரியா சிறந்தவள்?

Koviloor Digital Library

## நான்காம் அத்தியாயம்

## மாற்ருன் வல்லமை

கோகுல்தாஸ் வீடு மிகவும் ஸாமான்யமானதாயிருந்தது. உண்மையில் அது ஓர் எளிய குடிசைதான். அக்குடிசையிருந்த இடம் நகரத்துக்குள் ஏகாந்தமான பாகம். ஜன நடமாட்டம் அதிகமாய் இராது. ஜமீன்தாருடைய மாளிகைக்கும் அதற்கும் வெகுதூரம். ஒவ்வொரு நாளும் கூடியசீக்கிரம் காலைப் போஜனத்தை முடித்துக்கொண்டு கோகுல்தாஸ் அரண்மனை போய்விடுவார். ராஜாங்க வேலைகளை மேல்பார்ப்பதில் பகலெல்லாம் கழிந்து அஸ்தமனமாகிவிடும். ஸாயங்காலம் அதிக நேரமான பின்பேதான் திரும்பி வருவார். சில தினங்கள் இருட்டிவிட்டாலும் இருட்டிவிடும்; கடைத் தெருக்களிலெல்லாம் விளக்கு ஏற்றிவிடுவார்கள். காலையில் சென்றவிதமாகவேதான் கால் நடையாய் வீட்டுக்குத் திரும்புவார். ஒவ்வொருநாளும் குறைந்த பக்ஷம் பத்துமணி நேரமாவது அரண்மனையில் அவர் ராஜ்ய பரிபாலன விஷயங்களில் ஆழ்ந்திருப்பார். ராஜ்யத்தில் நடக்கும் அற்பவிஷயங்கள்கூட அவருக்குத் தெரிந்திருக்கும். நாட்டிலுள்ள முக்கியமான ஜனங்களுடைய நோக்கங்கள், அபிப்பிராயங்கள், செய்கைகள், போக்குவரவுகள் யாவும் அவருக்குப் பிரதிதினம் ஒற்றர்கள் மூலமாய்த் தெரிந்துகொண்டிருக்கும். நாட்டில் இவ்வளவு உயர்நிலையும், செல்வாக்கும், பொறுப்பும் ஊக்கமுமுடைய அவர், தெருவில் போகும்போது உத்தியோக சின்னங்கள், டம்பம்,

Koviloor Digital Library



வெளிப்பகட்டு யாதொன்றுமின்றி ரொம்பவும் தலை குனிந்து செல்வார். அப்போது அவரைப் பார்ப்பவர்கள் யாவரும் அவரை ஒரு ஸாமான்ய மனிதரென்றே நினைப் பார்கள். ஆனால் அவர் அரண்மனைக்கு வரும்போதும், அரண்மனையினின்று வீடு செல்லும்போதும்; இரகசியமாய் ஆயுதங்கள் தரித்துச் சில மெய்காவலர்கள் உடன் வரு வார்கள். அவர்கள் தெருவில் நடமாடிக்கொண்டிருக்கும் மற்ற மனிதர்களைப்போன்ற தோற்றத்துடனேயே செல் வார்கள். நாடுமுழுவதும் உத்தியோகஸ்தர்களை நியமித்து அவர்களுடைய வேலைகளைக் கண்கொட்டாமல் மேற் பார்வை பார்த்து வருபவரும், ஒற்றர்களிடமிருந்தும் வேவுகாரர்களிடமிருந்தும் அநேக இரகசிய விஷயங்களை அறிந்து சமயோசிதமாய் ராஜகாரியங்களை நடத்துபவரும், வீரநகர தேவிபுர ஜமீன்களின் உண்மைத் தலைவராயிருந்து வருபவருமாகிய கோகுல்தாஸ் வீடு மண்ணாலாகிய ஒரு கூரைக் குடிசையே !

வைக்கோலால் வேயப்பட்டிருக்கும் அவ்வீட்டின் முன் கட்டில் செங்கல்லால் கட்டப்பட்ட ஓர் அறை இருந்தது. அவ்வறையில்தான் கோகுல்தாஸ் தம்மிடம் வந்துபோகிற வர்களிடம் வார்த்தையாடுவது வழக்கம். சில சந்தர்ப்பங் களில் அவ்வறை மந்திராலோசனை மண்டபமாகவும் இருக் கும். அவ்வறைக்குப் பின்புறம் உள்ளிடங்கள்; அதாவது படுக்கையறை, உக்கிராண அறை, சமையலறை—எல்லாம் சிறுசிறு இடங்கள்—அமைந்திருந்தன. இந்தக் கட்டுக்குப் பின்னால் எல்லாம் காலிமனைதான். அவ்விடம் சில பழமரங் களும் பல புல் பூண்டுகளும் முளைத்திருந்தன. வீட்டுக்குக் காற்றுவரும் ஆதாரம் முன்கட்டு முற்றமும் பின்கட்டு முற்றமுந்தான்.

Koviloor Digital Library


கோகுல்தாஸ் தாரம் இழந்தவர்; அவருக்கு ஒரே பிள்ளைதான். அவருடைய நிலைமையிலிருப்பவர் பலர் மீட்டும் விவாஹம் செய்துகொண்டிருப்பார்கள். ஆனால் கோகுல் தாஸுக்கோ இரண்டாவது விவாஹம் என்ற யோசனையே உண்டாகவில்லை. அவருடைய ஊக்கம், புத்தி, யோசனை யெல்லாம் வேறொரு விஷயத்தில் லயித்திருந்தன. ஆதலால் அவர் தம் முதல்மனைவி மரணமடைந்ததுமுதல் தனியாகவே இருந்துவிட்டார். தேவிபுர ராஜ்யத்தையும் ராஜகுடும்பத் தையும் உயர்நிலைக்குக் கொண்டுவர வேண்டுமென்ப தையே தம் நோக்கமாகக் கொண்டார். அதற்காகவே தம் ஆயுள் முழுவதும் மனப்பூர்வமாய் உழைப்பதாக உறுதி கொண்டார்.

இவ்வாறு தேவிபுர நன்மைக்காக உழைப்பது யாதொரு தன்னலத்தையும் கருதியன்று; உழைப்பதால் உண்டாகக் கூடிய மன மகிழ்ச்சி யொன்றைத்தான் அவர் விரும்பி னார்; கடைசியில் அவர் கண்டதும் அதுதான். அவ ருடைய பந்துக்களில் வறுமை நிலையிலிருந்த ஒரு பெண்மணி அவருக்குச் சமையல்செய்து போட்டுக் கொண்டு அவருடைய வீட்டுக்காரியங்களைப் பார்த்து வந்தாள். முன்னர் நாம் கூறிய கல்கட்டு அறை அவருக் குரியது. அவ்வறையில் அவர் ராஜாங்க வியவகாரங்களைக் கவனித்துக்கொண் டிருக்கும்போதும், தம் நண்பர்க ளுடனாவது ஒற்றர்களுடனாவது பேசிக்கொண்டிருக்கும் போதும், அவரிடம் செல்வதற்கு யாரும் அஞ்சுவார்கள். அந்த அறையண்டை நிற்கக்கூட ஒருவரும் துணிய மாட்டார்.

இன்றையதினம் இரவு அவ்வறையில் ஒரு விளக்கெண் ணெய் தீபம் எரிந்துகொண்டிருந்தது. அங்கே இருவர் உட்கார்ந்திருந்தனர். அவ்விளக்கின் மங்கலான ஒளியில்

Koviloor Digital Library


காணப்படும் அவர்களுடைய முகங்கள் சித்திரக்காரர்கள் அவசியம் கவனிக்கத்தக்கன.

நவகுமாரருக்கு வயது ஐம்பதாயிற்று. ஆனால் அவர் தலையில் நரைத்தமயிர் ஒன்றுகூடக் காணப்படவில்லை. அவருடைய விசாலமான வதனத்தில் க்ஷத்திரிய ஜாதிக்குரிய வீரமும், சௌரியமும் இன்னும் பிரகாசித்துக்கொண்டிருந்தன. யௌவன பருவத்துக்குரிய ஊக்கமும் பரபரப்பும் அவரிடத்தில் விளங்கிக்கொண் டிருந்தன. ஊடுருவிப் பாயும் அவருடைய கண்கள் அவருடைய மனோரதத்தை உணர்த்தின. அவருடைய தேகம் தளராமல் திடமாயிருந்தது. ஆத்திரம், கோபம், வைரம் முதலிய சில துர்க்குணங்கள் அவருடைய முகக்குறிகளில் தோன்றின. அரண்மனையில் பந்துமித்திரர்கள் அதிகமாயிருப்பதால், நவகுமாரர் இரகசிய ஆலோசனைக்காகப் பாதி ராத்திரியில் கோகுல்தாஸ் வீட்டிற்கு வந்தார்.

நவகுமாரருடைய முகத்துக்கு நேர்விரோதம் கோகுல்தாஸ் முகம். இருவரும் சமவயதானவர்களாயினும், கோகுல்தாஸ் அதிக விருத்தராகக் காணப்பட்டார். அவரைப் பார்த்தால் அறுபது வயதுடையவர்போல் இருப்பார்; தேகம் அவ்வளவு தளர்வடைந்திருந்தது. கிழமுகந் தட்டி, கிழச்சின்னங்கள் தோன்றிவிட்டன. தோல்சுருங்கிய அவருடைய முகத்தில் அகக்குறிகள் ஒன்றும் விளங்கவில்லை. ஓயாமல் ஒழியாமல் எப்பொழுதும் யோசனைகளையும் சூழ்ச்சிகளையும் உண்டுபண்ணிக்கொண்டிருக்கும் அவருடைய மனத்தின் செயல்கள் சிறிதளவாவது வெளிக்குப் புலப்படவில்லை. அவருடைய முகம் எப்போதும் ஒரேமாதிரியாக இருந்தது; சந்தோஷத்தாலாவது வருத்தத்தாலாவது மாறுதலடைவதில்லை. எக்காலத்தும் அவருடைய முகம் கற்

Koviloor Digital Library


பதுமைபோல் இருந்தது. அவருடைய கண்கள் இடுங்கியிருந்தன. தலை நரைத்திருந்தது.

அவர் தம் எஜமானரிடம் அதிக பயபக்தி மரியாதை உடையவராகக் காணப்பட்டார். நவகுமாரர் எவ்வளவு ஆத்திரமாகப் பேசினாலும், அவர் அமரிக்கையாய் விடை பகர்ந்தார். தீரத் தெளிய ஆலோசித்து அதிக ஜாக்கிரதையுடன் அவர் கூறிய வார்த்தைகள் நவகுமாரர் மனத்தில் பசுமரத்தாணிபோல் பதிந்தன.

'ஆத்திரமும் படபடப்பும் அவசரமுமுள்ள நவகுமாரர் சூத்திரதாரிக் கைப்பொம்மை; அதிகமான பொறுமையுடனும் மரியாதையுடனும் பேசும் கோகுல்தாஸ் ஆட்டுவிக்கும் ஆட்டங்களுக்கெல்லாம் உட்பட்டு அவர் இழுத்துப்போகும் பாதையே செல்கிறவர்; வயது முதிர்ந்து வீரமற்றுச் சௌரியமின்றிக் கிடக்கும் கோகுல்தாஸ்தான் ராஜ்யத்துக்கு உண்மையில் அதிபதி' என்னும் உண்மை விஷயங்கள் சற்று நுட்பமாய்க் கவனித்துப் பார்ப்போர் யாவருக்கும் எளிதில் புலப்படும்.

வெகுநேரம் மௌனம் சாதித்துவிட்டு நவகுமாரர், "நாம் இங்கே ஏகாந்தமாய்த்தானே இருக்கிறோம்? சுற்றுப் பக்கம் ஒருவருமில்லையே?" என்று கேட்டார்.

"என் வீட்டார், வேலையாட்கள், என்னைச் சேர்ந்தவர்கள் யாவரும் வஸந்தோத்ஸவத்திற்குக் கிராமாந்தரத்துக்குச் சென்றிருக்கின்றனர். வெளிவாசற் கதவை நானே தாழ்ப்பாளிட்டுப் பூட்டிவந்திருக்கிறேன். ஆதலால் ஒருவரும் அண்டையயலில் இருக்க ஸாத்தியமில்லை. தாராளமாய்ப் பேசலாம்."

"கோகுல்தாஸ், கொஞ்சகாலமாக நடந்துவரும் சமாசாரங்கள் உமக்குத் தெரியுமா?"

Koviloor Digital Library


" மஹாராஜா, எனக்குத் தெரிந்ததைவிடத் தங்களுக்கு அதிகமாகத் தெரிந்திருக்கலாம். ஏதாவது விசேஷம் இருந்தால் தங்கள் வாக்கிலிருந்து அதைக் கேட்கத் தயாராயிருக்கிறேன்."

" அஞ்சா நெஞ்சராகிய ஆப்கானியர் தென்பாகத்தில் எப்போதும் போலவே தக்க படைகள், ஆயுதங்கள்முதலியவைகளை வைத்துக்கொண்டு போர்புரியத் தயாராயிருக்கின்றனர். அவர்கள் முன்னிலும் அதிக வலிவுற்றிருக்கிறார்கள். அவர்களை அடக்க ராஜா மாநஸிம்ஹர் ஒரு முறை ஜஹரபாத்துக்குச் சென்றனர். அப்போது ஆப்கானியர்கள் அவரை அடித்துத் துரத்திவிட்டனர். அவருடைய புத்திரனைத் திடீரெனத் தாக்கிக் கைதிசெய்தனர்."

" அது நடந்து இரண்டு வருஷகாலமாயிற்றே."

" அதற்குப் பிறகு ஆப்கானியர்கள் மாநஸிம்ஹரின் குமாரனை விடுதலை செய்துவிட்டு யாதொரு தொந்தரவுமின்றி ஒரிஸ்ஸாவை ஆண்டுவருகின்றனர். வங்காளத்தில் மொகலாயர் அரசு புரிவதுபோலவே அவர்கள் ஒரிஸ்ஸாவை ஆட்சிசெய்கிறார்கள். பேருக்கு மாத்திரம் அக்பருக்குக் கீழ்ப் படிந்திருக்கிறார்கள். உண்மையில் அவர்கள்தான் ஒரிஸ்ஸா நாட்டுத் தலைவர்கள்."

" இந்தச் சமாதானமும் உடன்படிக்கையும் எவ்வளவு காலம் நிலைத்திருக்கப் போகின்றன என்று எண்ணுகிறீர்?"

" சமாதானம் நிலைக்காவிட்டால்தான் என்ன? ராஜா மாநஸிம்ஹர் என்ன சாதித்துவிடப் போகிறார்? ஒரிஸ்ஸாவென்றால்தான் அவர் ஓட்டம்பிடிக்கிறாரே! அம்மாகாணத்தில் தலைகாட்டக்கூட அவர் துணியமாட்டார்."

" ராஜா மாநஸிம்ஹர் லேசானவர் அல்லர். அவருடைய வீர தீரம் வேறு ஒருவருக்கும் இல்லை. அவர் புறங்காட்டியோடும் சூரரல்லர்."

Koviloor Digital Library


இதைக் கேட்டு நவகுமாரர் சிறிது புன்னகையுடன் "ஓஹோ! எனக்குத் தோன்றவில்லை. கொஞ்ச காலத்துக்கு முன் அவர் உமக்குப் பரிசுகளும் பட்டங்களும் அளித்ததை நான் மறந்துவிட்டேன். சரி, சரி, நீர் இப்போது அவர் மனுஷ்யராய் விட்டீர். அதனால்தான் இப்படி அவருக்காகப் பரிந்து பேசுகிறீர்" என்று பரிஹாஸமாகச் சொன்னார்.

கோகுல்தாஸ் முகத்தோற்றம் மாறாமல், "இவ்வுலகில் நான் விரும்பும் பட்டங்கள் எல்லாவற்றிலும் மிகச் சிறந்த பட்டம் என்னுடைய முன்னோர்கள் உழைத்தது போல் நானும் தேவிபுரத்து ராஜ குடும்ப க்ஷேமத்துக்காக மனப் பூர்வமாய் உழைத்துவருகிறேன் என்பதுதான்."

"எனது மெய்யன்பரே! உம் விஷயங்கள் எனக்கு நன்றாய்த் தெரியும். அதைப்பற்றி நீர் சொல்லவேண்டியது அவசியமில்லை. இந்த ராஜா மாநஸிம்ஹரைப்பற்றி உமது அபிப்பிராயம் என்ன?"

"ராஜா மாநஸிம்ஹரைவிட உத்தம ஸேனாதிபதி அக்பரிடம் ஒருவரும் கிடையாது. ஆனால் போர்க்களத்தில் மாத்திரமேயன்று அவருடைய ஸாமர்த்தியம். ராஜதந்திரத்தில் அவரினும் மிக்கார் அகப்படுவது அருமை."

"ஆகையினாலே?"

"ஆகையினாலே அவர் ஆப்கானியரிடமிருந்து ஒரிஸாவைக் கைப்பற்றிக்கொள்வார்."

"ஆனால் அவர் முன்னமே ஒரிஸ்ஸாவை ஆப்கானியருக்குக் கொடுத்து அவர்களுடன் உடன்படிக்கை செய்துகொண்டிருக்கிறாரே."

"ஆமாம்; அவர்களை வேருடன் களைய ஏற்பாடுகள் செய்வதற்காகத்தான் அவர்களுடன் உடன்படிக்கை செய்

Koviloor Digital Library



தார் இத்தனை நாட்களாய்த் தாமதம் செய்வது யுத்த ஸந்நாஹத்தின் பொருட்டுத்தான்.''

"க்ஷத்திரியராயிற்றே அவர்; வார்த்தை தவறுவாரா?"

"அந்தச் சிரமத்தை ஆப்கானியர்கள் அவருக்கு வைக்க மாட்டார்கள். அவர்கள் துஷ்டர்கள். சற்று நேரம் சும்மா இருக்கமாட்டார்கள். தெருச் சண்டைகளை விலைக்கு வாங்குவதில் அதிக கெட்டிக்காரர்கள். ராஜாமாநஸிம்ஹரைத் தங்கள் மீது படையெடுத்து வரும்படி அவர்களே அழைப்பார்கள்."

"உமக்கு அவ்விஷயம் எப்படித் தெரியும்? எவ்விடத்திலிருந்து இந்த சமாசாரங்களெல்லாம் உமக்கு வருகின்றன?"

"ராஜா மாநஸிம்ஹர் கச்சேரியிலிருக்கும் நம் ஒற்றன் எழுதிய கடிதத்தால் நான் அறியலானேன். தங்களுடைய சமுகத்துக்கு அக்கடிதத்தின் சமாசாரத்தைத் தெரிவிக்க இதுவரைக்கும் ஏற்ற தருணம் வாய்க்கவில்லை."

ஒரே வெள்ளை பூசப்பட்டுச் சுவருடன் சுவராய்த் தோன்றிய ஒரு கள்ள அறையின் கதவைக் கோகுல்தாஸ் திறந்தார். சுவரின் செங்கல் கட்டடத்தில் பதிக்கப்பட்டிருக்கும் ஓர் இரும்புப் பெட்டியின் கதவைத் திறந்து கோகுல்தாஸ் ஒரு காகிதக்கட்டை எடுத்து நவகுமாரரிடம் கொடுத்தார்.

விளக்கெண்ணெய் விளக்கின் மங்கலான ஒளியில் நவகுமாரர் கடிதங்களைப் பிரித்துத் தலை குனிந்து அவற்றில் எழுதப்பட்டிருக்கும் விஷயங்களைக் கவனமாய்ப் படித்து விட்டுக் கீழே வைத்துவிட்டார்.

"என்ன பிரமாதமாயிருக்கிறதே! ஆப்கானியர்கள் ஜகந்நாதத்திலிருக்கும் ஹிந்து ஆலயத்தை இடித்துப் பொடியாக்கித் துவம்ஸஞ் செய்தனராமே?"

Koviloor Digital Library



"மானஸிம்ஹர் ஹிந்து மதத்தினர்; மேலும் க்ஷத்திரியர். இந்தப் பாதகச் செயலைப் பார்த்துக்கொண்டு அவர் சற்று நேரமாவது பொறுமையுடன் நிதானித்திருப்பாரா?

"ஹிந்து மதத்தினரை இவ்வாறு நிந்தித்து அவர் மனத்தைப் புண்படுத்துவதைக் கண்டு எவர்தான் சகித்திருப்பார். ஆப்கானியரைப் பூண்டறுத்து விட்டுத்தான் அவர் மறுவேலை பார்ப்பார்."

"யாருக்குந் தெரியாமல் ஏராளமான படையுடன் அவர் முன்னமே ஒரிஸ்ஸாவுக்குப் புறப்பட்டுவிட்டார்."

"ஜயாப்ஜயம் எப்படியிருந்தாலும், யுத்தம் மாத்திரம் பெரிய யுத்தமாயிருக்கும்; அதற்குச் சந்தேகமே இல்லை."

"யுத்தமும் பிரமாதமாய்த்தான் இருக்கும். கடைசியில் ஜயமும் ராஜா பக்கந்தான் நிற்கும்."

"அப்படியானால் இம்முறை அவர் ஒரிஸ்ஸாவைப் பிடித்து அக்பரது ராஜ்யத்துடன் சேர்த்து விடுவாரென்று நீர் எண்ணுகிறீரா?"

"ஆமாம், அப்படித்தான் நடக்கும். இப்போருடன் ஆப்கானியர்கள் இருந்தவிடம் தெரியாமல் போய்விடுவார்கள். அவர்களை இனித் தலையெடுக்கவொட்டாமல் அடியோடு துவம்ஸஞ் செய்துவிட்டுத்தான் அவர் வங்காளம் திரும்புவார். ஆதலால் கொஞ்சகாலம் அவர் ஒரிஸ்ஸாவில் தங்கியிருப்பார்."

"அவர் அங்கே சிறிதுகாலம் தங்கிவிட்டால், நமது பிரயத்தனங்களெல்லாம் விழலுக்கு இறைத்த நீராய் விடுமே?"

"அதுதான் தப்பு. அவர் ஒரிஸ்ஸா செல்வது நமது நல்ல காலத்துக்குத்தான். சீக்கிரம் நமது காரியம் சித்தி பெறும்."

Koviloor Digital Library


"நீர் சொல்வது எனக்குப் பொருள்படவில்லை. மறை பொருளாகப் பேசவேண்டாம். அவர் ஒரிஸ்ஸாவில் சிறிது காலம் தங்கியிருப்பது நமக்கு எப்படி நல்ல காலமாகும்? கூடிய சீக்கிரம் தேவிபுரத்தை எனக்குக் கொடுத்தருள வேண்டுமென்று நீர் ராஜா மாநஸிம்ஹருக்கு மனு ஒன்று தயார் செய்துகொண்டிருக்கவில்லையா? ரணவீரராகிய அந்த ராஜபுத்திரர் யுத்தங்களிலும், வெற்றிகளிலும், மொகலாய ராஜ்யத்தின் விஸ்தீர்ணத்தை விருத்தி செய்வதிலும் தமது கவனமெல்லாம் செலுத்தியிருக்கையில் அற்பவிஷயமான இந்த மனுவைப்பற்றி அவர் சிரமப்படுத்திக் கொள்வாரா?"

"ராஜா அவர்கள் வெளியூர்களுக்குச் சென்றிருக்கையில், எல்லாவிதமான அரசாங்க அலுவல்களையும் பார்த்து வர அவருடைய காரியஸ்தர் ஒருவர் இருக்கிறார். அக்காலங்களில் சர்வ அதிகாரமும் காரியஸ்தர் கையில்தான் இருக்கிறது."

"அக்காரியஸ்தர் நமக்கு வேண்டியவராயிருக்க வேண்டுமே. அதற்கென்ன செய்வது?"

"அதைப்பற்றிச் சரியான ஏற்பாடுகள் செய்திருக்கிறேன். நமது கஜானாவிலிருந்து அவருக்கு வேண்டிய மட்டும் திரவியம் கொடுக்கப்பட்டிருக்கிறது."

நவகுமாருடைய அனுமதியின்றிக் கோகுல்தாஸ் சுய அதிகாரத்தைக் கொண்டு செய்யும் எண்ணிறந்த இரகசியமான செயல்களில் இது ஒன்று. இதைக் கேட்க, நவகுமாருக்குக் கோபமும் ஆத்திரமும் அதிகமாகி முகம் சிவந்தது. ஆனால் கோகுல்தாஸ் முகம் மாத்திரம் சிறிதும் மாறுதல் அடையாமல் எப்போதும்போலவே இருந்தது.

"உம்முடைய சூழ்ச்சிகளும், யோசனைகளும் ஆழம் அளவு கண்டுபிடிக்கக் கூடாதனவாய் இருக்கின்றன. எனக்கு அறிவிக்காமல் நீர் இவ்வளவு சூழ்ச்சிகளும் ஏற்பாடுகளும்

Koviloor Digital Library



எவ்வாறு செய்யத் துணிந்தீர்? எவ்வளவு திரவியந்தான் தலைகால் தெரியாமல் பெற்றுக்கொண்டாலுங்கூட, ராஜா தோடர்மல்லரால் செய்யப்பட்டு ராஜா மானஸிம்ஹர் அவர்களால் உறுதியாய் ஸ்தாபிக்கப்பட்ட ஏற்பாட்டை அக்காரியஸ்தர் அவ்வளவு துணிவாய் மாற்றிவிடுவாரா?"

"துணிவும், தைரியமும் ஒன்றும் அவசியம் இல்லை. எல்லாம் இரண்டும் இரண்டும் நாலு என்பதுபோல் சுலபமாய் முடிவுபெறும். ராஜா தோடர்மல்லர் ஏற்பாட்டை மாற்றுவதற்குப் போதுமான காரணங்கள் உண்டாகிவிடும். வீரநகரம் தேவிபுரமாகிய இரண்டு ஜமீன்களிலும் பெருத்த கலகங்கள் கிளம்பும். அந்த ஜமீன்களிலிருந்து சக்கரவர்த்தியவர்களுக்கு வருஷந்தோறும் சேரவேண்டிய வரும்படி பாக்கி நிற்கும். அப்பாக்கியைச் சரிவர வசூல் செய்வதற்கும், இனி வருங்காலத்தில் அவ்விதமாகத் தீர்வைகள் பாக்கி நிற்காமல் இருக்கும்படிக்கும் சில நூதன மாறுதல்கள் செய்யவேண்டிய அவசியம் ஏற்படும்."

"சர்க்கார் தீர்வை காலக்கிரமப்படி வசூலாகும் நிமித்தம் தேவிபுரத்தை எனக்கும், வீரநகரத்தை அதன் இளம் பருவமுள்ள தலைவனுக்கும் அவனுடைய நண்பர்களுக்கும் ஒப்பிக்க வேண்டிவரும்."

"தங்களை உடனே தேவிபுரத்துக்குத் தலைவராக்க வேண்டிய அவசியம் ஏற்படுமே யொழிய, வீரநகரத்தை அவ்வளவு சீக்கிரம் அதனுடைய உரிமையாளனுகிய நரேந்திரனுக்குக் கொடுக்கவேண்டிய அவசியம் ஏற்படாது."

"திருப்பித் திருப்பி அர்த்தமாகாத விதமாகவே பேசுகிறீரே! என்ன சமாசாரம்? விஷயத்தை விட்டுத்தான் சொல்லுமே; அப்படியானல் வீரநகரத்தின் கதி என்னதான் ஆகும்?"

Koviloor Digital Library


"நரேந்திரனுக்குப் பக்குவ் வயசு வரும் வரையில் அவனது ஜமீனைச் சீராய்ப் பாதுகாத்துவரச் சக்கரவர்த்தியவர்கள் புதிய காரியஸ்தர் ஒருவரை நியமிப்பார். அப்படியுக்தகாலம் வந்தபிறகுங்கூடப் பாக்கிகளெல்லாம் தீர்ந்தாலொழிய அந்த ஜமீன் அவன் கைவசமாகாது."

"அதற்கென்ன ? கடன்தொகை முழுவதும் சில வருஷங்களுக்கெல்லாம் கொடுத்தாகி விடுகிறது. வீரநகரந் தான் பணம் பெருத்திருக்கின்றதே."

"அக்காலம் என்றைக்கும் வரப்போகிறதில்லை."

"ஏன் ?"

"நூதனமாய் வரும் காரியஸ்தனிடம் கோகுல்தாஸின் ஸாமர்த்தியமும் செல்வாக்கும் பலிக்காமல் போய்விடுமோ?"

"என்ன செல்வாக்கு ? என்றைக்கும் வீரநகரத்துக் கடனைத் தீர்க்காமல் மேலும் மேலும் ஏற்றிக்கொண்டே இருப்பதற்கா ?"

"ஆம், வீரநகரத்துக் கடன் குறையாமல் நாளுக்கு நாள் பெருகிக்கொண்டே வரும் விஷயமாகத்தான்."

"அப்புறம் ?"

"அப்புறம் என்ன இருக்கிறது ? பாக்கித் தொகை சாதாரணமாய்க் கொடுக்க முடியாத அளவு மிகுதியாகி விட்டால், வீரநகரம் ஏலத்துக்கு வந்துவிடுகிறது. அப்போது வீரநகரத்தை நவகுமாரர் ஏலத்தில் எடுத்தாலும் எடுக்கக் கூடும். இதற்குமுன் இவ்விதமான நிகழ்ச்சிகள் நேர்ந்திருக் கின்றன."

"இவ்வளவு தூரம் நீர் முன்யோசனை செய்திருக்கிறீர் என்று நான் கனவில்கூட நினைக்கவில்லை. கேட்கக் கேட்க எனக்குப் பிரமித்துப்போய்விட்டது. சரி, இருக்கட்டும், இவ்வளவு ஸாமர்த்தியமாய் யோசனை செய்துவிட்டீரே. என் பரிபாலனத்தின்கீழ் இருக்கும்போது உண்டாகும்

Koviloor Digital Library



கலகங்கள், தீர்வை பாக்கி முதலியவற்றிற்கு மாகஸிம்ஹ ருடைய காரியஸ்தர் என்னைப் பொறுப்பாளியாக்கி வீர நகரத்துக்கு மாத்திரமன்றி, தேவிபுரத்துக்குக் கூடச்சேர்ந்து ஒரு புதிய காரியஸ்தரை ஏற்படுத்துவது கூடாதா?"

"அதற்கெல்லாம் தாங்கள் பயப்படவேண்டாம். மாக ஸிம்ஹரின் காரியஸ்தரை நான் சென்ற வாரம் பார்க்கப் போயிருந்தேன். அப்போதே அவர் என் இஷ்டப்படி எல்லா ஏற்பாடுகளும் செய்வதாக ஒப்புக்கொண்டுவிட்டார்."

"என்னுடைய நாட்களில் நானும் எவ்வளவோ துணி வான செயல்கள் புரிந்திருக்கிறேன். ஆனால் உமது தைரிய மும், மன உறுதியும், அஞ்சா நெஞ்சமும் எனக்கே அதிக ஆச்சரியமாக இருக்கின்றன."

"எனது தைரியத்திலும், எனது ஏற்பாட்டிலும் என்ன இருக்கிறது? எல்லாம் என் எஜமானர் தேவிபுரத்துக்கு அதி பதியாகி வீரநகரத்தையும் அதனுடன் சேர்த்துக்கொண்டு இரண்டு ஜமீன்களையும் எல்லா உரிமைகளுடனும் அரசாளு வதைக் கண்ணாரக் கண்டு களிப்பதற்காகத்தானே?"

"ஆனால் இந்த இரண்டு நாட்டு ராஜகுடும்பங்களுக்குள் நெடுநாளாக இருந்துவரும் பகையை அகற்றி, அவைகளை என்றைக்கும் ஒன்றுபடுத்துவதற்காக என் தருமபத்தினி ஓர் யோசனை செய்திருக்கிறாள். அது பெண் புத்தியாய் இருந் தாலும் கடைப்பிடிக்கத் தக்கதென்று எனக்கும் தோன்று கிறது."

"தன்னுடைய காருண்ய மனத்துக்கேற்ப அம்மாது சிரோமணி ஏதோ யோசனை செய்திருக்கிறார். கோழை மனமில்லாத புருஷர்களுடைய நோக்கங்களுக்கும் காரியங் களுக்கும் ஸ்திரீகளுடைய புத்திமதி சற்றும் பொருந்தாது."

வயிற்றிலிருப்பதைக்கூடப் பிறிப்பார்க்கும் இயல்பின ராகிய தம் மந்திரிக்குத் தமது குடும்ப இரகசியங்களெல்

Koviloor Digital Library


லாம் ஆதியோடந்தமாய்த் தெரிந்திருப்பதைக்கண்ட நவகுமாரர் சினம் கொண்டார். என்ன கோபம் வந்து என்ன? எதிரிலிருப்பவர் யார்? இதற்கெல்லாம் அவர் பயந்து விடுவாரா? கோகுல்தாஸ் தம் எஜமானரின் மன நிலைமையை உணர்ந்துகொண்டார்.

"அடியேனிடத்தில் தாங்கள் எவ்வளவு நம்பிக்கை பாராட்டுகிறீர்களோ அதைவிட அதிகமாகவே தங்களுடைய மனைவியாகிய அந்த ஸ்திரீரத்னம் என்னிடத்தில் பாராட்டி வருகிறார். தேவிபுரத்து ராஜகுடும்பத்தினருடைய நன்மையைக் கோரி இந்த நாற்பது வருஷகாலமாக எப்படித் தன்னலம் ஒன்றையும் உத்தேசியாமல் அந்தரங்க சுத்தியுடன் உழைத்து வந்தேனோ, அப்படியே மனப்பூர்த்தியாய் இன்னும் அவர்களுக்காக உழைக்க இந்தத் தேகத்தை அர்ப்பணஞ் செய்துள்ளேன் என்னும் விஷயம் தங்களுடைய தேவியாருக்கு நன்றாய்த் தெரியும்."

"வீரநகர தேவிபுர ராஜகுடும்பங்களை ஒன்று சேர்க்கும் உத்தேசத்துடன் என் மனைவி செய்திருக்கும் ஏற்பாடுதான் உமக்குத் தெரிந்திருக்கிறதுபோலத் தோற்றுகிறதே. அதைப் பற்றி உமது நோக்கமென்ன?"

"ராணியவர்களுடைய தருமசிந்தைக்கேற்ற ஏற்பாடுதான் அது. அதற்குச் சந்தேகம் இல்லை. அவரைப்போல் நியம நிஷ்டை, பக்தி, ஆசாரம் உடைய பெண்மணி இவ்வுலகிலேயே வேறொருவரும் இல்லை. சாக்ஷாத் சீதாதேவியே அவதாரம் எடுத்துவந்ததுபோல் இருக்கிறார் அப்புண்ணியவதியார். அவசியம் நேருமானால் சீதாபிராட்டியாரைப் போலவே நாடு நகரங்கள், வீடுவாசல்கள் யாவற்றையும் துறந்து தம் கணவருடன் அரணியஞ் செல்வதற்குக்கூடப் பின்னடையாத உத்தம குணமுடையவர் அம்மாது சிரோமணி."

Koviloor Digital Library



இவ்வாறு கோகுல்தாஸ் அதிக புத்தி சாதுரியத்துடன் மறைபொருளாகக்கூறிய பரிஹாஸவார்த்தைகளின் உட்கருத்தையும், நோக்கத்தையும் நவகுமாரர் அறிந்துகொண்டார்.

"என்னுடைய புதல்வியை நரேந்திரனுக்கு மணம் புரிவித்தால், நான் என் ராஜ்யத்தை அவனிடம் ஒப்பித்துப் பரதேசியாக வனவாசம் செல்லவேண்டி வரும் என்று நீர் சொல்கிறீர்?"

"தங்களுக்குத் தெரியாததா நான் சொல்லப் போகிறேன்? நான் என்ன, தாங்கள் காலாலிட்ட கட்டளையைத் தலையால் செய்து முடிக்கும் ஓர் ஊழியன். தங்களுடைய பிதுரார்ஜித சொத்துத் தங்கள் வசத்தில் இருக்கிறது. தாங்கள் தான் அதன் அருமை பெருமைகளை உள்ளவாறு அறிந்து தங்கள் முன்னோர்களுடைய பெருமைக்கு ஏற்ப அதனை விருத்திசெய்ய வேண்டியவர்கள். நான் தங்கள் கை ஆயுதம்."

"என் மனைவி சொல்வது பெண்கள் ஏற்பாடுதான்; ஆனாலும் அவள் சொல்வதும் ஒரு விஷயத்துக்குப் பொருத்தமாகத்தான் இருக்கிறது; ஆதலால் அந்த யோசனையின் தகுதியை நாம் ஆராய்ந்து பார்க்கவேண்டியது அவசியம்."

"அகத்தின் அழகைக் கண்டறிவதில் ஸ்திரீகள் மிகவும் கெட்டிக்காரர்களே. தங்கள் மனைவியார் அணுவும் பிறழாமல் தமது நுண்ணறிவினால் இளைஞனை நரேந்திரனது மன நிலைமையையும் மனப்போக்கையும் அறிந்திருக்கிறார். ஆனால் புருஷர்களுக்கு ஆழ்ந்த யோசனைகளும் இரகசியமான பேரவாக்களும் அநேகம் உண்டு. வெளிக்கு எவ்வளவுதான் சிரித்தமுகத்துடன் இருந்தாலும், அவர்கள் கனவிலும் தங்களுடைய அவாக்களையும் நோக்கங்களையும் மறக்கமாட்டார்கள். நரேந்திரன் பிறந்த வம்சம் என்ன? அவன் குலம் என்ன? அவனுடைய மூதாதைகள் புரிந்திருக்கும் பிரதாபச் செயல்களின் சிறப்பென்ன? இவ்வளவு தூரம்

Koviloor Digital Library


யோசிப்பானேன்? மொத்தத்தில் அவனுடைய பாட்டனுருடைய குணநிசயங்கள் நமக்கு நன்ருய்த் தெரிந்திருக்கின்றன. அவருடைய வம்சத்தில் தோன்றியவனன்றோ நரேந்திரன்? விதையொன்று போட்டால் சுரையொன்று முளைக்குமா?"

"நரேந்திரன் ஹேமலதையின் மீது காதல்கொண்டிருப்பதாகவும் நம்முடன் அவன் தேவிபுரத்துக்கு வருவதற்கு எவ்விதமான தடையும் சொல்லமாட்டான் என்பதாகவும் என் மனைவி கூறுகிருள். என் மகளை அடையும் பொருட்டு அவன் தேவிபுரத்து ராஜகுடும்பத்துக்கு ஒரு பிள்ளை போன்று இருப்பான்போல் இருக்கிறது."

"இதற்குமுன் எத்தனையோமுறை நரேந்திரனை விட அதிகமாய்க் காதல் கொண்ட வீரநகரத்து ராஜகுமாரர்கள் பலர் தேவிபுரத்து ராஜகன்னிகைகளை மணம் புரிந்திருக்கிருர்கள். அவர்களில் ஒருவராவது இதுவரைக்கும் தங்களுடைய பிதுரார்ஜித ஜமீன்களை நீத்திருக்கிருர்களா? இதே மாதிரித் தேவிபுரத்து அரசர்கள் பலரும் வீரநகரத்துப் பெண்களை விவாஹஞ் செய்துகொண்டிருக்கிருர்கள். அவர்களாவது தங்களுடைய பிறந்தகத்து நட்பையும் பகைமையையும் மறந்ததாகத் தெரிகிறதா?"

"ஆனால் இம்முறைபோல் இரண்டு வம்சத்துப் பாத்தியஸ்தர்களுள் எம்முறையாவது விவாஹ சம்பந்தம் ஏற்பட்டிருக்கிறதா? இத்தகைய சம்பந்தம் இதுதான் முதல் முதலாகச் செய்வது. ஆதலால் அவர்கள் இருவருடைய வாழ்க்கையும் ஒன்று சேர்வதால், அவர்களுடைய ராஜ்யங்களும் என்றைக்கும் ஒன்றுபட்டு விளங்கும் என்று என் மனைவி உறுதியாய் நம்பியிருக்கிருள்."

"இறைவன் திருவருளால் அம்மாதரசியின் நோக்கம் நிறைவேறி, எல்லாம் அவர் விருப்பத்தின்படி மங்களகரமாய்

Koviloor Digital Library


முடியவேண்டுமென்பதுதான் என்னுடைய மனப்பூர்வமான கோரிக்கை. ஆனல் முந்நூறு ஆண்டுப் பகை ஒரு நாளில், ஒரு பெண்மணியின் யோசனையால் நசித்து விடுவது ஸாத்தியமா? தலைமுறை தலைமுறையாய் ஒருவருடைய உயர்வைக்கண்டு ஒருவர் சகியாது, பொறுமையும் விரோதமும் பாராட்டி வரும் இரண்டு ஜன்மவிரோதிகள் ஒரே நாளில் அவ்வளவு பகையையும் திடீரென மறந்துவிட்டு நண்பர்களாய்க் கைகோத்துக் குலவுவதென்பது என்றைக்காவது நடக்கக்கூடிய காரியமா?"

"ஏன் நடக்கக்கூடாது? சிறிது கஷ்டமாயிருக்கலாம். இதற்குமுன் இவ்வாறு நடந்ததில்லையா?"

"எஜமானரே, ஸ்திரீ வார்த்தையைக் கேட்டு அவசரப்பட்டு நாம் ஒன்றும் செய்துவிடக்கூடாது. பெண்பேச்சைக் கேட்டு இடர்ப்பட்டோர் பலர். உயர்குலத்தில் பிறந்து, அவ்வுயர்குலத்துக் குணங்கள் யாவும் அமையப்பெற்றிருக்கும் தாங்கள் இவ்விஷயத்தைச்சாவகாசமாய் யோசித்துப்பார்க்க வேண்டும். ஸாமான்யனுன நான் இவ்விஷயத்தைப் பற்றித் தங்களுக்குப் புத்திமதிகூறத் தகுதியற்றவன். தங்கள் தேவியார் கூறியதை மறந்துவிட்டுத் தங்களுடைய குடும்பத்தின் அருமை பெருமைகளுக்கு ஏற்றவாறு ஒரு வழியைத் தாங்களே தேடவேண்டும். எவ்வளவுதான் நற்குணம் வாய்ந்தவளாயிருந்தபோதிலும், தங்களுடைய தேவியார் வீரநகரத்து ஸ்திரீதானே? அவ்விஷயத்தை மறந்து விடலாமா? இயல்பாக அம்மாது தம் பிறந்தகத்தின் மீதுதானே அன்பு பாராட்டுவார்? கேவலம் ஒரு ஸ்திரீயைத் திருப்திசெய்வதற்காகத் தங்களுடைய முன்னேர்களுடைய இஷ்டத்துக்கு விரோதமாய் நடப்பது தருமமா? வீரநகரத்து ராஜகுடும்பத்தில் உதித்தவனுன நரேந்திரனுக்குத் தேவிபுரத்தைக் கொடுத்துவிடத் தாங்கள் யோசிப்பது அடுக்குமா? சென்ற

Koviloor Digital Library


முந்நூறு வருஷ காலமாகக் கருடனைக் கண்ட பாம்பைப் போல் நடுங்கிக்கொண்டிருந்த தேவிபுரத்தாருக்குத் தாங்கள் இழ்ப்படிவது சிறப்பா ? தேவிபுரத்து அரசர்கள் செய்யும் காரியமா இது? தங்கள் முன்னோர்கள் உயிருடன் இருந்தால், தங்களை என்னவென்று சொல்வார்கள் ? அவர்கள் தங்களை நம்பிக்கைத் துரோகி யென்று ஏசமாட்டார்களா ? தங்களுக்கே தோன்றவில்லையா, தாங்கள் செய்ய உத்தேசிக்கும் காரியத்தின் பெருமை சிறுமைகள் ?"

"போதும் போதும் ; ஒருகாலும் அத்தகைய இழிவான காரியம் செய்யவேமாட்டேன். என்னுடைய சேனைகளெல்லாம் போர்க்களத்தில் மந்தைமந்தையாய் மடிந்து, கடைசியில் என்னுடன் நூறுவீரர்கள் மாத்திரமே தங்கியிருந்தால்கூட அக்காலத்திலும் ஒருகை பார்த்தேவிடுவேனே யொழிய, இந்த மானக்கேடான ஏற்பாட்டிற்கு உடன்படமாட்டேன். என் பிராணன் போகும்வரைக்கும் தேவிபுரத்துக்காக நான் சண்டை செய்தே தீருவேன்."

"வயசு முதிரமுதிர நரேந்திரனுடைய ஆண்மையும் வீரமும் குன்றுமென்று எண்ணலாமா ? இப்போது அவன் யாது மறியாமல் என்னவோ சிறுபிள்ளைத்தனமாய் ஹேமலதையைக் காதலித்து அவளையே பின்பற்றித் திரிந்து கொண்டிருக்கிறான். இதைக் கண்டு நாம் அவன் பெரியவனான பின்பும் இவ்வாறே அவளுடைய அழகில் கட்டுண்டு தன் வம்சத்தினையும் அதன் நோக்கங்களையும் மறந்து கிடப்பான் என்று கருதிவிடலாமா ? இப்போதே தன் பாட்டனுடைய வீரச்செயல்களைக் கேட்கும்போதெல்லாம் அவன் நெற்றி நெறித்துக் கொள்வதும் அவனுடைய கண்களும் முகமும் சிவப்பதுமாக இருக்கின்றன. வீரநகரத்து ராஜவம்சத்துக் கத்தியைத் தோடர்மல்லரிடமிருந்து பெற்றுக்கொண்ட அவ் விளங் குமரன் ஹேமலதையின் நேசத்துக்காகத் தனது

Koviloor Digital Library



குலம், அக்குலத்தினர் புரிந்திருக்கும் வீரச்செயல்கள், அவர்களுடைய விருப்பு வெறுப்புகள் யாவற்றையும் மறந்து விடுவானா? நரேந்திரன் ஸாமான்யமானவன் என்று நாம் நினைக்கக்கூடாது. தங்கள் மனைவியார் சொல்வதெல்லாம் என்ன? தாம் பிறந்த குடும்பத்தின் செல்வத்தையும் செல்வாக்கையும் விருத்தி செய்யவேண்டும் என்பதுதான் அவருடைய ஏற்பாட்டின் உள்நோக்கம். அவருடைய புத்தி மதியை அநுசரித்து நடத்தலால் உண்டாகும் பலனென்ன? தேவிபுரம் மாற்றான் வசப்பட்டுப் பகைவராகிய வீரநகரத்தாருக்குக் கீழ்ப்படிந்து கடைசியில் அதோகதி அடைவது தான்."

நவகுமாரர் யோசனையில் ஆழ்ந்தார். வெகுநேரம் கழிந்தபின் கண்ணைத் திறந்து பெருமூச்செறிந்துகொண்டே பேச ஆரம்பித்தார்.

"கோகுல்தாஸ், நீர் சொல்வது முழுதும் சரி. உம் வார்த்தைகள் அணுவளவேனும் பொய்க்கா; எல்லாம் நீர் சொன்னபடியேதான் நடக்கும். உம் யோசனைகளும், ஏற்பாடுகளும் சிலவேளை மனச்சாக்ஷிக்கு விரோதமாயிருந்தாலுங்கூட உமது முன் யோசனையும், தூரதிருஷ்டியும் ஒப்புயர்வற்றன வென்பதற்கு ஆக்ஷேபமில்லை. இரண்டு குடும்பத்தினருக்குள் பலதடவை யுத்தம் நடந்திருக்கிறது. மூன்று நூற்றாண்டுகளாகச் சமாதானமென்பதே இல்லாமல் ஒருவரையொருவர் வெட்டிமடிப்பதிலேயே கண்ணாயிருந்து வந்திருக்கின்றனர். என்றைக்கும் இந்தப் பரஸ்பர விரோதமும் சச்சரவும் ஓயா; இவ்வாறேதான் நடந்துகொண்டிருக்கும். அதைத் தவிர்ப்பது அஸாத்தியம். என்னுடைய மனைவியின் புத்திமதிகளைப்பற்றி எனக்கு எக்காலத்தும் சந்தேகம் உண்டு. அவளோ தான் பிறந்த குடும்பத்தைப்பற்றி அதிகச் சிறப்பாகவும் மேன்மையாகவும் நினைத்துக் கொள்பவள்.

Koviloor Digital Library


என்னதான் என் மனைவியாயிருந்தாலும் அவளுடைய பிறந்தகம் வீரநகரந்தானே ? அதன் நினைவு எங்கே போகும் ?"

கோகுல்தாஸ் போட்ட தூண்டில்முள் சரியாய்ப் பிடித்துக்கொண்டது. நவகுமாருடைய மனம் அடியோடு மாறிவிட்டது. புலி, சிங்கம் முதலிய காட்டுமிருகங்களைத் தான் சொல்லும்படியெல்லாம் செய்யப் பழக்கிய வீரனுக்கு உண்டாகும் சந்தோஷத்தைவிடப் பதின்மடங்கு அதிகமான சந்தோஷத்தை அடைந்தார் கோகுல்தாஸ். ஆனால் யானை தன் தலைமேல் தானே மண்ணைப் போட்டுக்கொண்டது போல், காரியம் பூர்த்தியாகும் தருணத்தில் சொற்ப அஜாக்கிரதையால் எல்லாவற்றையும் கெடுத்துக்கொள்பவர் அல்லர் கோகுல்தாஸ். அவர் தம் வெற்றியையும் குதூஹலத்தையும் வெளிக்குக் காட்டிக்கொள்ளாமல் முன்னினும் அதிக விநயமாயும் பணிவாயும் பேசலுற்றார்.

"முன்யோசனையும் ஸாமர்த்தியமும் என்னுடையன எப்படியாகும் ? எல்லாம் தங்களிடத்திலிருந்து நான் கற்றுக்கொண்டவைகளே ; தங்களுடைய யோசனைகளும் ஏற்பாடுகளுமேதான் நான் சற்றுமுன் எடுத்துச் சொல்லியவை. தங்களுக்குத் தெரியாதது ஒன்றும் நான் புதிதாய்ச் சொல்லிவிடவில்லை. இவ்வளவு தூரம் நான் கக்ஷிகட்டிப் பேசியதன் முக்கியக் கருத்து என்ன ? தேவிபுரம் தேவிபுரத்தானுக்கே உரியதாக வேண்டுமேயல்லாமல் ஒருபோதும் வீரநகரத்தான் வசப்படக்கூடாது என்பதைத்தான் திரும்பத் திரும்பப் பல வார்த்தைகளால் சொல்லலானேன். சந்ததியற்றுப் போனால் ஸ்வீகாரம் செய்துகொள்வது தொன்றுதொட்டு வழங்கிவரும் ஆசாரம். அவ்வாறு ஸ்வீகாரம் செய்துகொள்ளப்பட்ட புத்திரன் சொந்தப் புத்திரனைப்போல் வைதிக கருமங்களைச் செய்து சொத்தை அடைகிறான். அவ்வாறே தாங்களும் மனத்திற்கு இசைந்த ஓர் இளங்குமரனை

Koviloor Digital Library


வளர்த்துக்கொள்ளுங்கள். அச்சிறுவன் தங்கள் காலத்துக்குப் பின் தேவிபுரத்தைப் பரிபாலித்து வருவான். ஆனால் கனம் பொருந்திய தங்களுடைய மனைவியாருக்குத் தம்முடைய ஏகபுத்திரியைவிட்டுப் பிரிந்திருக்க விருப்பம் இல்லாவிட்டால், தேவிபுரத்தின் மேன்மையை அறிந்து அதை முன்னுக்குக் கொண்டுவரக்கூடிய உயர்குலத்தில் உதித்த தேவிபுரத்துச் சீமான் ஒருவனுக்கு ஹேமலதையை மணம் புரிவித்துத் தம்பதிகள் இருவரையும் தேவிபுரத்து அதிபதிகளாக்கிவிடலாம்."

"ஏன் நிறுத்துகிறீர்? நீர் சொல்வனவெல்லாம் என் மனத்துக்கு இசைந்தவையாகவும் அநுபவத்துக்கேற்றவையாகவும் இருக்கின்றன. இன்னும் நீர் சொல்லவேண்டியவற்றையெல்லாம் சொல்லும். நான் கேட்கிறேன். நீர் குறித்த குணநிசயங்கள் பொருந்திய சிறுவன் ஒருவனைத் தேடிப்பொறுக்க நாம் அதிகக் கஷ்டப்படவேண்டும்."

"எஜமானரே, வெகுதூரம் தேடித் திரியவேண்டிய அவசியம் இல்லை. நல்ல பொருள் நம் கையிலேயே இருக்கிறது. நம் அரண்மனைக்குள்ளேயே நாம் நாடும் யௌவன புருஷன் ஒருவன் இருக்கிறான். கொஞ்சகாலத்துக்கு முன் தேவிபுரத்திலிருந்து ஸ்ரீசன் என்னும் பெயருடைய தாய் தகப்பனற்ற ஒரு சிறுவன் வைதவ்யமடைந்த தன் சகோதரி சைவலினியுடன் தங்களை அண்டி வந்திருக்கிறான். அவர்கள் இப்போது வறிய நிலையிலிருந்தாலும் நல்ல உயர்குடியில் பிறந்தவர்கள். அவர்களுடைய பெற்றோர்கள் தேவிபுரத்து அரசர் குடியில் தோன்றியவர்கள். நான் ஸ்ரீசனைச் சிறு வயது முதல் அறிவேன். அவன் வயல்புறங்களில் மற்றப் பிள்ளைகளுடன் விளையாடும்போது கவனித்திருக்கிறேன். மிக்க சாந்தகுணம் உடையவன்; அவனுடைய முன்னோர்களுடைய கம்பீரமான தோற்றமும் ராஜ

Koviloor Digital Library


பார்வையும் அவனிடம் குடிகொண்டிருக்கின்றன. தேவி புரத்து ராஜவம்சத்தைச் சேர்ந்தவனாதலால் அவ்வம்சத்தார்களுடைய விரோதிகளுக்குக் கீழ்ப்படியாத சிறந்த ரோஷ குணமும் அவனிடம் பூர்ணமாயிருக்கின்றது. இளமை முதல் நரேந்திரனுடன் விளையாட்டுத் தோழியாய்ப் பழகிவந்த போதிலும் ஹேமலதைக்கு ஸ்ரீசனிடமே அதிக மதிப்பும் கண்ணியமும் உண்டு."

"நண்பரே, நான்கூட ஸ்ரீசனைக் கவனித்திருக்கிறேன். அவன் எடுத்த காரியத்தைப் பொறுமையாய் விடாமுயற்சியுடன் செய்து முடிக்கும் திறனுடையவன். அவனுடைய மனோ தீரமும் உடல் வலிவும் வேறெவனுக்கும் இல்லை. ஒருநாள் அவனுக்கும் நரேந்திரனுக்கும் பகை உண்டாயிற்றாம்; அது முற்றிச் சண்டைக்கு வந்துவிட்டது; ஸ்ரீசன் நரேந்திரனை ஒரே தூக்காய்த் தூக்கிக் கோபத்துடன் மணலின்மீது விட்டெறிந்தானும்; ஹேமலதை என்னிடம் வந்து சொன்னாள்."

"தங்களுடைய மகளைக் கல்யாணம் செய்துகொண்டு தேவிபுரத்து அரசனாகும்போது அவன் இப்போது அடித்தவிதமே வீரநகரத்து அதிபதியை அடியோடு தோல்வியுறச் செய்து நரேந்திரனுடைய பாட்டனார் நமக்கு இழைத்த தீங்குக்குப் பழிக்குப் பழி வாங்குவான்!"

"கோகுல்தாஸ், சிற்று நேரத்துள் சரமாரியாய் அடுக்கி விட்டீரே! நீர் சொல்வதைச் சரியாய் மனத்தில் வாங்கிக் கொள்ள எனக்குச் சாவகாசமில்லாமல் பேசிக்கொண்டு போகிறீர். நீர் சொல்லுவது ஒவ்வொரு விஷயமும் அருமையானது. நீர் உம் ஏற்பாடுகளைச் சரிவரச் செய்து வாரும். நவகுமாரன் தன்னுடைய ஆண்மைக் கேற்றவாறு சில யோசனைகள் செய்திருக்கிறான். ஒன்று மாத்திரம் சத்தியம்;

Koviloor Digital Library

4102

என்றைக்கும் தேவிபுரத்தை வீரநகரத்தான் அடையமாட்டான்."

நவகுமாரர் போய்விட்டார்.

கோகுல்தாஸ் அறையில் விளக்கு மங்கலாய் எரிந்து கொண்டிருந்தது. சூரியோதயமாய் விட்டது. கதவுத் துவாரங்களின் வழியாய்க் கதிரவன் ஒளி அறைக்குள் பிரகாசித்துக்கொண்டிருந்தது. வயது முதிர்ந்து தள்ளாடும் ஸ்திதியில் இருக்கும் அக்கிழவர் இன்னும் தீர்க்காலோசனையில் ஆழ்ந்திருந்தார்.

" அஸ்திவாரம் பலமாய்ப் போட்டாயிற்று. நான் மாத்திரம் இப்போதிருக்கும் கோகுல்தாஸாகவே இன்னும் கொஞ்சகாலம் இருந்தால் கட்டடமும் சீக்கிரம் எழும்பி விடும். நவகுமாரருடைய மனைவி நமக்கு விரோதமாயிருக்கிறுள். அவளை லேசானவள் என்று எண்ணிவிடக் கூடாது. தன்னாலானமட்டும் என் ஏற்பாட்டைக் கலைக்க அவள் பிரயத்தனப்படுவாள். குணத்தில் எவ்வளவு சிரேஷ்டமானவளோ அவ்வளவு செல்வாக்கும் திடசித்தமும் உடையவள் அவள். தன்னுடைய இஷ்டப் பிரகாரம் திடசித்தமற்ற தன் கணவரை இணங்கச் செய்வதில் அவள் மிகவும் ஸாமர்த்திய முடையவள். அவரும் அவளுடைய வார்த்தைக்கு எதிர் வார்த்தை சொல்வது துர்லபம். அவள் கீறும் கோட்டைத் தாண்ட அவர் துணிய மாட்டார். ஆனாலும் அவள் ஸ்திரீதானே ? பெண்புத்தி பேதைமைத்து என்பது நிஜமல்லவா ? அவள் சிறுவர்களின் அழகையும் பொருத்தத்தையும் கண்டு அவற்றையே பெரிதாக எண்ணிவிட்டாள். அந்த ஆனந்தத்தில் அவள் ராஜகுடும்பத்துப் பிரதாபத்தையும் கீர்த்தியையும் அடியோடு மறந்துவிட்டாள். நவகுமாரர் தமக்கும் தமது குடும்பத்துக்கும் துரோகம் செய்யாதிருந்தால், அப்போதுதான்

Koviloor Digital Library


ஆண்மகன் என்னும் பெயருக்கு அவர் அருகராவர். இவ் விஷயத்தில்தான் அவருடைய ஆண்மை தெரியவேண்டும். இரவெல்லாம் நான் அவருக்குச் சரியானபடி போதனை செய்திருக்கிறேன். அவருடைய யோசனைகளையெல்லாம் முழுதும் மாற்றிவிட்டேன். அவருக்குப் புதிய உபதேசம் செய்திருக்கிறேன். அவ் வுபதேசத்தின் மஹிமையால் அவருக்கும், அவருடைய மனைவிக்கும் கொஞ்சம் விவாதம் உண்டாகும். அத்தருணத்தில் நான் அவ்விடம் இருத்தல் யுக்தமன்று. தங்களுடைய காரியம் கைகூடாது போய்விடு மென்று தோன்றினால் ஸ்திரீகள் சில சமயங்களில் கண்ணீர் சொரியத் தொடங்குவார்கள். அதைக் கண்டு மனமிளகிப் பதில் சொல்லத் தெரியாமல் கையைப் பிசைந்துகொண்டு நவகுமாரர் முணுமுணுப்புடன் மறுபடியும் என்னிடம் வரு வார். நவகுமாரரே, நீர்தான் உமது குடும்பத்தை மறந்தாலும் அதைக் கனவிலும் மறவாமல் அதற்காகப் பலவிதங்களில் உழைத்து வருபவன் ஒருவன் இருக்கிறான். அவன் இருக்கு மட்டும் உமது ஜபம் பலிக்காது. கோகுல்தாஸ் தன் கடமையை உள்ளவாறு அறிந்திருக்கிறான். பகலும் இரவும் அவன் அதையே ஸ்மரணை செய்துகொண்டிருக்கிறான். அவன் எடுத்த காரியத்தை எளிதில் கைசோர விடுபவ னல்லன். எவ்விதத்திலாவது அதைச் சாதித்தே முடிப்பான்" என்று கோகுல்தாஸ் தமக்குள் சொல்லிக்கொண்டார்.

Koviloor Digital Library

## ஐந்தாம் அத்தியாயம்

### ஹோளி பண்டிகை

ஏறக்குறைய இப்பரதகண்ட முழுவதும் ஹிந்துக்களில் பெரும்பான்மையோர் விசேஷமான குதூஹலத்துடனும் உத்ஸாஹத்துடனும் அநுசரிக்கும் உத்ஸவங்களில் ஹோளி பண்டிகை அல்லது வஸந்தோத்ஸவம் என்பது முக்கியமானது. மாரிக்காலம் முடிந்துவிட்டது; குளிர் நாட்கள் இனி இல்லை. அரிசி, கோதுமை முதலிய தானியங்கள் அறுவடையாகிவிட்டன. உளுந்து, பயறு, துவரை முதலிய பருப்புவகைகளும், எள், இலுப்பை முதலிய எண்ணெய் விதைகளும் யாவும் கைக்கு வந்துவிட்டன. குடித்தனக்காரர்கள் தங்கள் எஜமானர்களுக்குச் சேரவேண்டிய கடன், வாரம் முதலியவைகளைப் பைசல் செய்து மிகுந்தவற்றை உறையில் கொட்டிப் பத்திரப்படுத்திவிட்டனர். அவர்களுடைய மனைவிகளும், குழந்தைகளும் நெல்லை நேராகவோ அல்லது பணமாக மாற்றியோ கொடுத்துத் தங்களுக்கு வேண்டிய சேலை, ரவிக்கை, வளையல் முதலியவைகளையும், வீட்டுக்கு வேண்டிய பாத்திர சாமான்களையும் வாங்கிக்கொண்டனர். அதிகமாகப் பணமுடையவர்கள் இரண்டொரு வெள்ளிநகைகளும் சில பொன் நகைகளும் செய்துகொண்டார்கள். ஊரூராய்ச் சுற்றித்திரியும் பலசரக்கு வியாபாரிகள் ஒவ்வொரு கிராமத்துக்கும் சென்று தங்கள் கடைகளைப் பரப்பி இரண்டொருநாள் இருந்து வியாபாரஞ் செய்தனர். இந்த வர்த்தகர்கள் ஊருக்குள் வந்தவுடன் ஊரி

Koviloor Digital Library


ளுள்ள சிறியோர் பெரியோர் யாவரும் அவர்களுடைய கடைகளைச் சுற்றிக்கொண்டு எனக்கு உனக்கென்று போட்டி போட்டுச் சாமான்கள் வாங்கினர். புதுப்புது மாதிரியான சேலைகள், காப்புக்கள், கொலுஸுகள் முதலியவற்றை வாங்கிக்கொள்ளக் கையில் ரொக்கமில்லாதவர்கள் கோதுமை நெல் முதலிய தானியங்களைக் கொடுத்து வாங்கிக்கொண்டனர். இவ்வாறு நாட்டிலுள்ள ஜனங்கள் யாவரும் ஆனந்தித்துக்கொண்டிருப்பதற்கு ஏற்ப மாமரங்களும் இளந்தளிர் விட்டுத் தளிர்த்திருந்தன. அவைகள் புஷ்பிக்கத் தொடங்கி விட்டமையால், ஊர்முழுதும் மாம்பூவாசனை நிறைந்திருந்தது. குயில்களும் மனிதர்களைப் போலவே சந்தோஷம் அடைந்தவைகளாய் மரங்களிலும் கிளைகளிலும் ஆனந்தமாய்ப் பாடிக்கொண்டிருந்தன. எங்கே பார்த்தாலும் சந்தோஷமும், ஆனந்தமும், உத்ஸாஹமும், உல்லாஸமுமே குடிகொண்டிருந்தன.

இவ்வஸந்தோத்ஸவம் ஆதிகாலத்தில் மன்மதன் பண்டிகையாக அநுசரிக்கப்பட்டு வந்தது. அக்காலத்தில் காமதேவனாகிய மன்மதனைப் பூஜித்தனர். இதற்குக் காமன் பண்டிகை என்றொரு பெயரும் உண்டு. ஆனால் சுமார் ஆயிர வருஷங்களாக மன்மதனுக்குப் பதிலாக ஜனங்கள் கிருஷ்ணனை உபாஸித்து வருகிறார்கள். ஸ்ரீ கிருஷ்ண பகவானைப் பற்றிய கதைகளும், பாட்டுகளும் நாடெங்கும் கோஷிக்கின்றன. பட்டணங்கள், குக்கிராமங்கள் எல்லாவிடங்களிலும் ஸ்திரீகள் கிருஷ்ணனுடைய லீலைகளையும் அவனுடைய அற்புதச் செயல்களையும் பாட்டாகப் பாடிக் களிக்கின்றனர். புருஷர்களும் தங்களுடைய வேலைகளைக் கொஞ்சகாலம் நிறுத்திவிட்டுத் திருவிழாக் கொண்டாடுகின்றனர்; உத்ஸாஹத்திலும் கேளிக்கைகளிலும் காலங்கழிக்கின்றனர். கடைசித் தினத்தன்று ஸகல ஜனங்களும் கூடி இந்த

Koviloor Digital Library


உத்ஸவத்தை அதிக விமரிசையாயும், கோலாகலமாயும் நடத்துகிறார்கள். அன்றையதினம் இரவு முழுவதும் ஒரே இரைச்சலும் கோஷமுந்தான். இரவு முழுவதும் ஓய்வே கிடையாது. மறுநாள் சூரியோதயம் வரைக்கும் இந்தக் கோஷம் நடக்கும். சூரியோதயமானவுடன் எல்லோரும் ஸ்நானஞ் செய்துவிட்டுப் பழையபடித் தத்தம் வேலைகளுக்குச் செல்கின்றனர்.

இப்பண்டிகை இந்தியா முழுவதும் ஒரேவிதமாய் அநுசரிக்கப்படுவதில்லை. வெவ்வேறு பாகங்களில் வெவ்வேறு விதமான சடங்குகளும், உத்ஸவங்களும் நடைபெறுகின்றன. ஆனால் இன்றுவரைக்கும் இந்தியாவின் பெரும்பாகத்தில் அநுசரிக்கப்படும் வழக்கம் ஒன்றுண்டு. அதாவது கடைவீதிகளிலும், தெருக்களிலும், சந்தைகளிலும், வீடுகளிலும் ஒருவர்மீதொருவர் சிவப்புத்தூள் எறியும் வழக்கம். இப்பண்டிகைக் காலத்தில் இந்தச் செந்தூள் அபிஷேகத்தினின்று எவரும் தப்பமுடியாது. அவன் லக்ஷாதிகாரியாய் இருந்தாலும் சரி, இதற்கொன்றும் தடை சொல்லக்கூடாது. ராஜ்யத்திலிருக்கும் அரசன், மந்திரி, பண்டிதர்கள், பாமரர்கள் யாவருக்கும் ஒரே கதிதான். எல்லோருடைய உடைகளும் அநேகமாய்ச் செந்நிறமடைந்து விடும். தெருவில் ஆடித் திரியும் சிறுவர்களுக்கு ஒருவரும் வித்தியாசம் கிடையாது.

இந்த அபிஷேகம் ஒன்று; இன்னும் ஒன்று காதை அடைக்கும்படியான தெருப்பாட்டுகள்; இவை இரண்டுக்கும் அகப்படக்கூடாதென்று நாணமுள்ள ஸ்திரீகள் வெகுவாய் வீதியிலும் பொதுஜனக்கூட்டமான இடங்களிலும் வருவதில்லை. ஜனங்கள் அனைவரும் பெரியோர், சிறியோர், உயர்குலத்தோர், தாழ்குலத்தோர், பணக்காரன், பிச்சைக்காரன் என்ற வித்தியாசமே தோன்றாமல் கொஞ்சகால

Koviloor Digital Library


மாவது எல்லோரும் சரிசமானமாக ஏசிப் பேசிக்கொண் டிருப்பார்கள். அக்காலத்திலாவது அவர்களுக்கு மனிதர்க ளனைவரும் கடவுள் முன்னிலையில் சம அந்தஸ்துடையவர் கள்; அவருக்கு ஒருவன் உயர்ந்தவன், மற்றொருவன் தாழ்ந்தவன் என்ற பேதமே இல்லை; அவர் பக்ஷபாதமற்ற வர் என்ற தத்துவம் மின்னற்கொடிபோல் உதயமாகி மறைகின்றது. திரவியம் சம்பாதிப்பதும், அதைக்கொண்டு ஆசைதீர உண்டு உடுத்துக்களிப்பதுமே பிரதான நோக்க மாயும் முயற்சியாயுமிருக்கும் இக்காலத்தில் இந்த உத்ஸ வத்தைப்போன்ற சந்தோஷகரமான விசேஷ திருவிழாக்கள் அநுசரிக்கப்பட்டு வருவது மநுஷ்ய கோஷ்டிக்கே ஒரு பேருபகாரமாகும்.

அன்றைத்தினம் வஸந்தோத்ஸவத்தின் பூர்த்தி. மற்றக் கவலைகளையெல்லாம் மறந்து அன்பே தவழும் மலர்ந்த முகவிலாசத்துடன் நவகுமாரர் அரண்மனையினின்றும் பவனி புறப்பட்டார். வ்யோதிகத்தாலும், அதிக வேலையா லும் இளைத்திருக்கும் கோகுல்தாஸனும் மற்றவர்களைப்போல் சந்தோஷ முகத்தினராய் நவகுமாரருடன் வந்தார்.

உத்ஸவத்தின் வைபவங்களைக் காண நாலாபக்கத்து ஊர்களிலிருந்தும் திரளான ஜனங்கள் வீரநகரத்தில் வந்து குவிந்திருந்தனர். நவகுமாரரும் அவர் அமைச்சரும் ராஜவீதிகள், படைவீதிகள் மூலமாய்ச் செல்லும்போது தெருக்களின் இருமருங்கிலுமுள்ள ஜனங்கள் நவகுமாரரைப் போற்றிப்புகழ்ந்தனர். ஸ்திரீகள் கிருஷ்ணனைப்பற்றிய பாடல்களை உபயார்த்தப்படும்படியாய்ப் பாடினார்கள். தங்க ளுடைய தாய்தந்தையர்களே இவ்வாறு உத்ஸாஹமாய்க் குதூஹலிப்பதைக்கண்ட குழந்தைகள் பின்னும் அதிகமாய்க் குதித்து ஆரவாரித்துக்கொண்டு நவகுமாரர்மீது வேண்டு மட்டும் செந்தூள் தெளித்தனர்.

Koviloor Digital Library


கடைத்தெருவைத் தாண்டி வேசிகள் வசிக்கும் ஒரு சிறிய சந்தில் நுழைந்தபோது, அவ்விடத்தில் ஸ்திரீகள் பலர் அழகான உடைகளைத்தரித்து ஒரேகூச்சலாய்ப் பாட்டுப் பாடிக்கொண்டிருந்தனர். அவர்கள் தெருவின் குறுக்கே இடைவெளியின்றி வரிசையாய் நின்றுகொண்டு நவகுமாரரை வரவேற்றனர்.

நவகுமாரர் துரிதமாய்ச் சென்றார். அவரிடம் யாவரும் மரியாதையாகவே இருந்தனர். பின்னால் கோகுல்தாஸ் வந்தார். அவருடைய முகத்தைக் கண்டவுடன் யாவரும் அவர்பேரில் இடைவிடாது செந்நீர் வீசினர். கிழவர்பாடு பிரமித்துப்போய்விட்டது; அவர் திக்குமுக்கவிட்டார். திரும்பி, வந்தவழியே போய்விடலாமென்று பார்த்தார். அவ்வாறு எத்தனிக்கையில் கால் வழுக்கிக் கீழேவிழுந்தார். எல்லோரும் கைகொட்டிச் சிரிக்க ஆரம்பித்தனர். ஒருவருக்காவது அவர்மீது பரிதாபமில்லை. கீழே விழுந்தவர் எழுந்திருக்க முடியாமல் தள்ளாடினர். மறுபடியும் ஒருமுறை செம்மாரி பொழிந்தது. எல்லோரும் கிழவர்படும் அவஸ்தையைக் கண்டு பின்னுமதிகமாய்க் கைகொட்டிச்சிரித்தனர். உடனே கோகுல்தாஸின் வேலையாட்கள் வந்து, அவரை மெள்ளத் தூக்கிக்கொண்டு சென்றனர். எல்லோரும் வயிறு வெடிக்கச் சிரித்தனர். அப்போது அந்த ஸ்திரீகள் கிருஷ்ணனைப்பற்றிய பாட்டொன்றைப் பாடிக்கொண்டு மனம் போனபடியெல்லாம் கூச்சலிட்டுக்கொண்டு சென்றனர்.

இவ்வளவு கோலங்களுமான பிறகு அந்தச் சந்தைவிட்டு நவகுமாரரும் அவருடைய பரிவாரமும் கடைத்தெருவுக்குச் சென்றனர். அவ்விடத்தில் வடமேற்குப் பிரதேசத்திலிருந்து வந்த வர்த்தகர்கள் வியாபாரஞ் செய்துவந்தனர். அந்தக் கடைத்தெருவுக்குக் 'கொத்த பஜார்' என்று பெயர். இக்காலத்தைப்போலவே மொகலாய சக்கரவர்த்திகள்

Koviloor Digital Library


அரசுபுரிந்த நாட்களிலும் வடஇந்தியா இராஜபுதனம் இந்த மாகாண வாசிகளே இந்தியாவில் மிகவும் பிரபலமான ஸாவுகார்கள். அவர்களுடைய வியாபார ஸ்தலங்கள் இந்தியா முழுவதும் வியாபித்திருந்தன. இந்தியாவில் எந்தப் பாகத்திலும் அவர்களுடைய கடைகளைப்பார்க்கலாம். அவர்களுடைய ஹூண்டிகள் எவ்விடத்தும் செல்லும். கஷ்ட காலங்களில் இந்திய மிராசுதாரர்கள், ஜமீன்தாரர்கள், மஹாராஜாக்கள் பலர் அவர்களிடமிருந்து ஏராளமான பணம் கடன்வாங்கித் தங்கள் கஷ்டத்தை நிவர்த்தித்துக் கொண்டிருக்கிறார்கள். இந்த மார்வாடி வர்த்தகர்கள் அநேகர் விரநகரத்தில்வந்து கொடுக்கல் வாங்கல் செய்து வந்தனர். ராஜா தோடர்மல்லர், ராஜா மாநஸிம்ஹர் இவர்கள் வங்காளத்துக்கு அதிபதிகளாய் வந்தபோது, இவர்களுடன் அநேக மார்வாடிகள் வங்காளம் வந்து நானுவிடங்களிலும் பணம் லேவாதேவி செய்யத்தொடங்கினர்.

நவகுமாரர் கொத்த பஜாருக்கு விஜயம்செய்தபோது இந்த வியாபாரிகள் அவரை மரியாதையாய் உபசரித்து வரவேற்றுச் செந்தூள் நிறைந்த ஒரு வெள்ளித்தட்டை அவருக்குக் கொடுத்தனர். நமது நாட்டுச் சம்பிரதாயப்படி நவகுமாரர் தாம் அவ்வெகுமதியை அங்கீகரித்ததற்கு அடையாளமாக அந்தத் தட்டைக் கைகளால் தொட்டு அதில் ஒரு தங்கநாணயத்தை வைத்தனர். தமது திரவியத்தைக் கொண்டு விரநகரத்தைப்போல் பத்து வீரநகரங்களை ஒருங்கே வாங்கக்கூடியவளவு திரவியவந்தர்களாகிய அந்த லக்ஷாதிகாரிகள் நவகுமாரர் அளித்த பரிசை வந்தனத்துடன் பெற்றுக்கொண்டார்கள்.

ஆனால் அந்த வியாபாரிகளின் குமாரர்களோ தங்கள் தந்தைகளைப்போல் மனிதர்களுடைய பெருமை சிறுமைகளைக் கவனிப்பவர்கள் அல்லர். அவர்கள் சிறு வய-

Koviloor Digital Library



துடைய விளையாட்டுப்பிள்ளைகள். அரசனுயிருந்தாலென்ன? ஆண்டியாய் இருந்தாலென்ன? தங்களுடைய விளையாட்டுக்கு அவர்களுக்கு எல்லோரும் ஒன்றுதான். நவகுமாரரும் அவருடைய பரிவாரங்களும் வீதிவழியே சென்ற போது அச்சிறுவர்கள் செந்தூள் நிறைந்த சிறுசிறு காகிதப் பந்துகளை அவர்கள்மீது எறிந்தனர். ஸாவுகார்கள் அதட்டிப் பார்த்தார்கள். ஒன்றும் பலனில்லை. அவர்கள் எறிந்த வண்ணமே இருந்தனர். நவகுமாரருடைய தலைப்பாகையின் மீதும் இரண்டொரு பந்துகள் விழுந்தன. அவர் புன்னகை செய்துகொண்டே முகத்தைத் துடைத்துக்கொண்டார்.

சிறிது தூரம் சென்றவுடன் கங்கையில் ஸ்நானஞ் செய்துவரும் ஸாவுகார்களின் மனைவிகள் எதிர்ப்பட்டனர். அவர்கள் அதிக நாணமுடைய உயர்குல மாதர்கள். அவர்கள் அதிகமாய் வீட்டை விட்டு வெளியே வரமாட்டார்கள். உத்ஸவ காலமாதலால் அவர்கள் இப்போது வெளியே சென்று, கங்காநதியில் ஸ்நானஞ்செய்து வந்துகொண்டிருந்தனர். அருகில் வந்தவுடன் அவர்கள் தம் சுயபாஷையில் கிருஷ்ணனைப்பற்றிய பாடலொன்றை இனிய குரலில் பாடி நவகுமாரரை வரவேற்றனர்.

கடைசிச் சரணத்தை அவர்கள் பிரலாப த்வனியாய்ப் பாடுவதைக்கண்டு நவகுமாரர் அதை நின்று நிதானித்துக் கேட்டார். ஆனால் இவ்விதக் கோழை மனதொன்றும் இராதவராகிய கோகுல்தாஸ் ஒரு புன்னகை செய்து, "வாருங்கள் போவோம். இதைக் கேட்டு ஏன் மயங்குகிறீர்கள்? நாளைக்கு நரேந்திரன் வரும்போதும், இவர்கள் இதே பாடத்தைத்தான் அவனிடமும் படிக்கப்போகிறார்கள்" என்று மெல்லச் சொன்னார்.

"கோகுல்தாஸ், உமக்குச் சற்றேனும் இளகிய மனம் என்பதே இல்லை. நமது நன்மையைக் கோருபவர்களைப்பற்றி

Koviloor Digital Library



நாம் இவ்வாறு கடுமையாய்ப் பேசலாமா? நீர் சிறிதும் ஈவு இரக்கமற்றவர். உம்மைப்போல் நான் கல்மன முடையவனல்லேன். நல்ல குணசீலர்களான இந்த ஸ்திரீ களுடைய அன்பான வார்த்தைகளும், ஆசீர்வசனங்களும், தாத்காலிகமாயினவாயினும், அவைகள் எனக்கு அதிகத் திருப்தியைக் கொடுக்கின்றன."

"எஜமானரே, வெளித்தோற்றத்தையே கண்டு நாம் மகிழ்ச்சியடைந்து விடலாமோ? வெளுப்பாயிருப்பதெல் லாம் பாலாய்விடுமா? வீரநகரத்தில் இத்தகைய உத்ஸவ தினங்களில் நரேந்திரனுடைய பாட்டனார் நகர்வலம் வந்த தைப்பார்த்து களித்தபேர்கள் சிலர் இன்னும் இருக்கிறார்கள். இப்போது அவர்கள் மனம் எவ்வாறு இருக்கும்? அவர் களிற் சிலரை வழியில் சந்தித்தாலும் சந்திக்கலாம். செல் வோம், வாருங்கள்."

முன் காலத்தில் பருத்தி வஸ்திரம், பட்டுவஸ்திரம், இவைகள் வங்காளத்தில் அபரிமிதமாய் நெய்யப்பட்டுவந் தன. வங்காளிகளுடைய முக்கியமான கைத்தொழில் அக் காலத்தில் நெசவுதான். இந்த மஸ்லின் வஸ்திரங்கள், பட்டு வஸ்திரங்கள், இவைகளை வாங்கிக்கொண்டு போக ஐரோப் பிய வியாபாரிகள் அடிக்கடி வருவார்கள். அவர்கள் வங் காளத்தில் வியாபாரஸ்தலங்கள் கட்டிக்கொண்டிருந்தனர். மஹாப்பிரசித்திபெற்ற அல்பூகர்க் என்னும் கவர்னர் காலத் தில் போர்த்துக்கேசியர்கள் கீழ்க்கடல்களில் ஏகாதிபத்தியஞ் செலுத்திக்கொண்டிருந்தனர். தென் ஆபிரிகா தொடங்கிச் சீனதேசம் வரைக்குமுள்ள துறைமுகங்கள் எல்லாவற்றிலும் அவர்களுடைய வியாபாரஸ்தலங்கள் அமைந்திருந்தன. போர்த்துக்கேசியர்கள் பலர் வங்காள ஸ்திரீகளை மணந்து வங்காளத்திலேயே நிலை பெற்று விட்டனர். இப் போது இந்தியாவிலிருக்கும் யூரேஷ்யர்களில் பெரும்

Koviloor Digital Library


பான்மையோர் அவர்களுடைய சந்ததியார்தாம். வியாபார விஷயங்களிலும் கப்பல் பிரயாணங்களிலும் அதிக ஊக்க மும் விடாமுயற்சியுமுடைய டச்சுக்காரர்கள் இந்தியா வுக்குக் கப்பல்கள் அனுப்பிக்கொண்டிருந்தனர். எலிஸபெத் மஹாராணியார் காலத்தில் பிரிட்டிஷ்காரர்களும் அதிக ஊதியம் கிடைக்கும் இந்திய வியாபாரத்தைத் தொடங்கினர். வங்காளத்தில் லக்ஷக்கணக்கான ஸ்திரீகளும் புருஷர்களும் நெசவுத்தொழில் செய்து ஜீவித்தனர். வங்காளத்துத் தறிகளி லிருந்து அளவற்ற சரக்குகள் வட இந்தியாவுக்கும் ஐரோப்பாவிற்கும் சென்றுகொண்டிருந்தன.

வீரநகரமிருந்த மால்டா ஜில்லாவில்தான் அதிக நாக ரிகமான பட்டு வஸ்திரங்கள் நெய்யப்பட்டுவந்தன. அவ் வளவு உயர்ந்த பட்டுவஸ்திரங்கள் வங்காளமெங்கும் சுற்றித் திரிந்தாலும் அகப்படா. கிராமாந்தரங்களிலுள்ள சேணி யர்கள் பட்டுப்பூச்சிகளை வளர்த்து, அவைகளினின்றும் பட்டை எடுத்துத் தங்களுடைய எளிய குடிசைகளில் அவை களை வஸ்திரமாக நெய்து வீரநகரத்தில் சேலிப்பேட்டை அதாவது பட்டுப்பேட்டை என்று சொல்லப்படும் தெருக் களுக்குக் கொண்டுவந்து வியாபாரிகளுக்கு விற்றனர். இரண்டு மாடி மூன்று மாடிகளுள்ள நெருக்கமான அந்தச் செலிப்பேட்டைக்கு ஊர்வலம் வந்தபோது பட்டுவியாபாரி கள் நவகுமாரருக்கு வந்தனஞ்செய்து அவரை உபசரித்து அவருடைய தலைப்பாகையின்மீது சென்தூள் தெளித்தனர். நல்ல வாசனையுள்ள பன்னீர் நிறைந்த பன்னீர்ச் செம்பு ஒன்றையும் வெற்றிலைபாக்கையும் ஒரு வெள்ளித்தட்டில் வைத்து நவகுமாரரிடம் கொடுக்க, அவர் பன்னீரைத் தொட்டு வெற்றிலைபாக்கைக் கையில் எடுத்துக்கொண்டு ஒரு பொன் நாணயத்தை அத்தட்டில் நழுவவிட்டுச் சென்ற னர்.

Koviloor Digital Library



வீரநகரத்திலிருந்த பித்தளைப் பாத்திர வியாபாரிகள், கருமார், தச்சர், தட்டார், நகைவியாபாரிகள் முதலிய வர்த்தக சபையார் ஒவ்வொருவரும் நவகுமாரரை ஏற்ற வாறு வரவழைத்து உபசரித்தனர். வீரநகரத்திலிருந்த முஸ்லிம் வர்த்தகர்கள்கூடத் தங்கள் மசூதி வாயிலில் நின்று நவகுமாரரை உபசரித்து இந்த ஹிந்துப் பண்டிகை தினத்தன்று அவருக்கு ஒரு பட்டுவஸ்திரமும் வெள்ளித் தட்டும் கொடுத்தனர். நவகுமாரர் அவைகளைத் திருப்தி யுடன் பெற்றுக்கொண்டு பிரதானமுல்லாவினிடம் ஒரு தங்க நாணயம் கொடுத்தார். இந்தியாவில் எல்லா நகரங்களிலும் ஹிந்துக்களும் முஹம்மதியர்களும் சகோதரர்களைப்போல் நேசமாய் வாழ்ந்திருந்தனர். பெருந்தகை அக்பர் சக்கரவர்த்தி யவர்கள் அவர்களை ஒன்று சேர்ப்பதற்கான ஏற்பாடுகள் பல செய்தனர். ராஜா மாநஸிம்ஹர் வீரநகரத்து முஹம் மதியர்களுக்கு மசூதி கட்டுவதற்காகத் திரவிய சகாயஞ் செய்தனர்.

நவகுமாரரும் அவருடன் வந்தவர்களும் வீடு செல்வதற்குள் நல்ல வெயிலாய்விட்டது. ஜமீன்தாரி வீட்டுச் சிங்கவாயிலுக்கு அருகில், உடம்பெல்லாம் செந் தூள் மயமாயிருந்த இரண்டு சிறுவர்கள் ஒரு மரத்தடியில் கம்ஸனுடைய கொடுங்கோன்மையையும், அவனை ஸம் ஹாரஞ் செய்வதற்காகக் கிருஷ்ணன் அவதரித்ததையும் பாட்டாகப் பாடிக் குதித்துக் கொண்டிருந்தனர். அவர்க ளுடைய ஆடல்பாடல்களைக் கேட்ட நவகுமாரர் மனதில் சில எண்ணங்களுண்டாயின. காலை முதற்கொண்டு பட்ட ணத்தைச் சுற்றியதால் உண்டான இளைப்பைக்கூடக் கவனி யாமல் அவர் அங்கேயே நின்று அவர்களுடைய பாட்டை முழுதும் கேட்கலானார்.

Koviloor Digital Library



அரண்மனையில் உச்சி வேளை மணி அடித்தது. சுற்றுப்பக்கத்துக் கிராமங்களிலிருந்து வீரநகரத்துக்கு ஜனங்கள் திரள்திரளாய் வந்துகொண்டிருந்தனர். நவகுமாரர் சற்று நேரம் என்னவோ யோசித்த வண்ணமாய் நின்றார். கடைசியில் கோகுல்தாஸைப் பார்த்து, "கோகுல்தாஸ், இப்பாட்டின் கருத்து என்ன?" என்று கேட்டார்.

"கருத்து என்ன, தெரிந்ததுதானே! வீரநகரத்துப் பழைய ஊழியர்கள் இன்னும் தங்களுடைய பூர்வ ஞாபகங்களை மறந்துவிடவில்லை. இதைப்பற்றித் தாங்கள் கிலேசப் படவேண்டிய அவசியம் இல்லை. பத்து வருஷமாக அவர்களும் என்ன என்ன பிரயத்தனங்களோ செய்து வருகிறார்கள். நம்மை ஒழிக்கப் பல ஏற்பாடுகள் செய்தனர். ஆனால் கோகுல்தாஸ் அவர்களை அதிகக் கவனமாய்ப் பார்த்து வருகிறான். எப்போதும் அவர்கள்மீது ஒரு கண் வைத்திருக்கிறான். அவர்களுடைய விஷயம் யாவும் அவனுக்கு நன்றாய்த் தெரியும். அவன் இருக்குமட்டும் தாங்கள் ஒன்றுக்கும் பயப்பட வேண்டியதில்லை."

"இருந்தாலும் இந்தப் பையன்கள் யார்? என் அரண்மனைக்குச் சமீபத்திலேயே என்னை இவ்வாறு தூஷிக்க இவர்களை ஏவினவர்கள் யார்? அவ்விஷயம் எனக்குத் தெரிய வேண்டும். எனக்குக் கவலையாக இருக்கிறது. அவர்களை நீர் சீக்கிரம் கண்டுபிடிக்கவேண்டும்."

நாலாபக்கங்களிலிருந்தும் கூட்டங் கூட்டமாய் வந்துகொண்டிருக்கும் ஜனங்களுடன் அச்சிறுவர்கள் கலந்துவிட்டார்கள். அவர்களைப்பற்றி ஒரு தகவலும் தெரியவில்லை. நவகுமாரர் யோசனையில் ஆழ்ந்தார். அவர் முகம் வேறுபாடடைந்தது. அன்றிரவு நடந்த பாணவேடிக்கை முதலிய கொண்டாட்டங்களுக்கு அவர் விஜயம் செய்யவில்லை.

Koviloor Digital Library

## ஆறம் அத்தியாயம்

### துருவ நக்ஷத்திரம்

கோடைக்காலம் கழிந்துவிட்டது. ஆடி, ஆவணி மாதங்களில் பெய்த மழையால் ஆறுகளில் பிரவாகம் வரத் தொடங்கியது. ஏரிகளும் குளங்களும் நிரம்பிவிட்டன. வங்காளத்து நன்செய் நிலங்களுக்கெல்லாம் போதுமான எருவும் நீரும் வந்துவிட்டன.

ஹேமலதைக்கு வயது பதின்மூன்றாயிற்று. யௌவனப் பருவத்திற்குரிய சின்னங்கள் ஒன்றன்பின் ஒன்றாய் அவள் முகத்தில் தோன்றலாயின. உஷ்ணப் பிரதேசங்களில் பால்யத்திலேயே பக்குவ காலம் வந்துவிடுகிறது. ஹேமலதைக்கு விவாஹம் நடத்தவேண்டிய காலம் வந்துவிட்டது. நமது ஆசாரப்படி இந்த வயதுக்குமேல் பெண்களுக்குக் கல்யாணம் செய்யாமல் நிறுத்திவைப்பதில்லை. ஆனால் நவகுமாரரோ தேவிபுரத்தைத் திரும்பப் பெறுமுன் தம் செல்வப் புதல்வியின் விவாஹத்தைப்பற்றி யோசிப்பதில்லையென்று தீர்மானித்திருந்தார். அவருடைய இஷ்டத்துக்கு விரோதமாகச் சொல்ல எவரும் முன்வரவில்லை.

கல்யாணமாகாவிட்டாலும் ஹேமலதை இப்போது இரண்டொரு வருஷங்களுக்குமுன் மணலில் கவலையற்று விளையாடிக்கொண்டிருந்த பெண்ணாயில்லை. நம் குடும்ப ஸம்பிரதாயப்படிப் பெண்கள் யௌவனப் பருவத்தின் ஆரம்பம் முதற்கொண்டே அடிக்கடி வெளியேவராமலும் அநேகமாய் வீட்டிற்குள்ளேயேயிருந்தும் வீட்டுவேலைகளைப் பார்த்-

Koviloor Digital Library



துக்கொண்டும், அந்நியர்களுடன் அதிகமாய் வார்த்தை யாடாமலும் இருக்கவேண்டியிருக்கிறது. அதனால் அவர்களுக்குக் குடும்ப விஷயங்களிலும், வீட்டு வேலைகளிலும் பால்யத்திலேயே ஒருவிதப் பயிற்சி ஏற்படுகிறது. அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு முதலிய குணங்களும் படிவதற்குச் சந்தர்ப்ப முண்டாகிறது. ஹேமலதை, வரவர அழகிலும், வடிவிலும், நாணம் முதலிய ஸ்திரீகளுக் குரிய நற் குணங்களிலும் சிறந்து விளங்கலானாள். முன்போல அடிக்கடி அரண்மனையை விட்டு அவள் வெளிவருவதில்லை. அவள் தன் தாயாருடன் தினந்தோறும் கங்காநதியில் ஸ்நானஞ் செய்துவிட்டுக் கோயிலுக்குச் சென்று ஸ்வாமியைத் தரிசித்து வருவாள். மற்ற வேளைகளில் வீட்டைவிட்டு வெளியே வருவதில்லை.

அரண்மனையில் இருந்தாலும் ஸ்ரீசன் அந்தப்புரப் பக்கம் அதிகமாய்ச் செல்வதில்லை. அத்தி பூத்ததுபோல் ஆடிக் கொருதரம் அமாவாசைக் கொருதரந்தான் அவன் அவ்விடம் போவான். அக்காலங்களில்தான் ஹேமலதையும் அவனும் சந்திப்பார்கள். ஹேமலதையினிடம் தான் வைத்திருக்கும் பழைய நாள் அன்பின் பெருக்கத்தால் ஸ்ரீசன் அவள் பக்கத்தில் உட்கார்ந்து யோகக்ஷேமங்களை விசாரித்து விளையாட்டு நாள் கதைகளையெல்லாம் அவளுடன் பேசிக்கொண்டிருப்பான். அவனுடைய பொறுமை, சாந்தம், அமைதி, அன்பு முதலிய சிறந்த குணங்களைப்பற்றி ஹேமலதை அடிக்கடி கேள்விப்பட்டிருக்கிறாள். அவனுடைய ஆண்மையையும் அடக்கத்தையும் கண்டு அவள் மெச்சினாள். வரவர அவளுக்கு அவனிடத்தில் ஒரு மதிப்பும் மரியாதையும் உண்டாயின. அவன் சொல்லாவிட்டாலும் அவனுடைய உயர் குலத்தைப்பற்றி ஹேமலதை மற்றவர்களிடமிருந்து அறிந்திருந்தாள். அவன் தன்னுடைய ஜாதி, குலம், பிறப்பு,

Koviloor Digital Library


குணம் முதலியவற்றிற்குத் தகுந்த உன்னத ஸ்திதிக்கு வரவேண்டுமென்று அவள் மனப்பூர்த்தியாய் விரும்பலானாள். நரேந்திரனோ ஸ்ரீசனைப் போலன்றி அடிக்கடி ஹேமலதையைப் பார்க்க வருவான். அவன் வரும்போது ஹேமலதையின் உணர்ச்சிகள் சகஜமாக இருப்பதில்லை. அவனைக் கண்டவுடன் அவளுக்கு ஒருவித நூதன உணர்ச்சி உண்டாய்விடும். முன்பின் சம்பந்தமிராத அவனுடைய மொழிகளைக் கேட்கும்போதெல்லாம் அவளுடைய முகம் சிறிது சிவக்கும். பால்யத்தில் பலமுறை ஆற்றுமணலில் அவனுடன் கூடி விளையாடிய ஹேமலதை இப்போது அவன் எதிரில் நிற்பதற்குச் சற்று லஜ்ஜைப்பட்டாள். சிலவேளைகளில் அவள் தன் முகத்தைக்கூடப் பாதிமூடிக்கொள்வாள். ஆயினும் அவனுடன் வார்த்தையாடுவதில் அவள் அதிகப் பிரியமுடையவளா யிருந்தாள். நரேந்திரனுடைய பெரிய யோசனைகளும், மனோராஜ்யங்களும் அவளுக்குப் பொருள் படுவதில்லை. ஆயினும் அவற்றுக்கெல்லாம் மிகுந்த ஆவலுடன் அவள் செவிசாய்த்துக் கேட்டுக்கொண்டிருப்பாள்.

விஜயலக்ஷ்மி தாண்டவமாடும் அவனுடைய விழிகளையும் மலர்ந்த முகத்தையும் கண்டு ஹேமலதை, தனக்கே தெரியாதவண்ணமாய் அவனிடம் ஓர் ஆர்வமும் ஆசையும் கொள்ளலானாள்.

நரேந்திரனுடைய வாலிபப் பருவத்து ஆசாபாசங்களின் அபிவிருத்தியையும் போக்கையும் ஹேமலதையின் தாய் நன்கு உணர்ந்தாள். நாளுக்குநாள் தீவிரமாய் வளர்ந்துவரும் அவனுடைய காதலையும் அவள் கவனித்து வந்தாள். ஆனால் இவ்விஷயத்தை அவள் தன் கணவனிடம் பிரஸ்தாபித்தது முதற்கொண்டு, இதுவரைக்கும் அதைப்பற்றி மறுபடியும் ஒரு சம்பாஷணையும் ஏற்படவில்லை. நவகுமாரர் அவள் சொன்னதற்கெல்

Koviloor Digital Library


லாம் "சரி, யோசிப்போம்" என்று கூறி வந்தாரே யொழிய, அதைப்பற்றித் தாம் நேர்விரோதமான அபிப்பிராயம் கொண்டிருப்பதை அவளுக்குச் சொல்லவில்லை; விவாஹ விஷயமாய் அவள் பேசத்தொடங்கிய போதெல்லாம், "தேவிபுரம் கிடைத்த பின்னர்த்தான் எதுவும்" என்று சொல்லிவிட்டு வேறு விஷயங்களைப்பற்றிப் பேச ஆரம்பித்துவிடுவார். ஆயினும் அவள் ஸ்திரீஜாதி யல்லவா? அவளிடமிருந்து எத்தனைநாள்தான் தம்அபிப்பிராயத்தை நவகுமாரர் இரகசியமாய் வைத்துக்கொண்டிருக்க முடியும்? அவர் அடிக்கடி விவாஹத்தைப்பற்றி அலக்ஷியமாய்ப் பேசுவதனாலேயே அவள் மனத்தில் சந்தேகம் உண்டாயிற்று. மேலும், இரண்டொரு தடவைகளில் ஞாபக மறதியாய் அவர் பேசிய சில வார்த்தைகளால் அவளுடைய சந்தேகம் ஸ்திரப்படலாயிற்று. இஷ்ட மின்மையினாலோ, தைரியமின்மையினாலோ தன்னிடம் சொல்லாமலிருந்த சில மாறுபட்ட யோசனைகள் அவர் செய்திருப்பதாக அவள் புத்திக்குப் பட்டது.

ஸ்திரீகளுக்கு மாத்திரம் எவ்விஷயத்தைப் பற்றியாவது சந்தேகம் பிறந்துவிட்டால் அவ்விஷயத்தைப்பற்றிய உண்மையை அவர்கள் எப்படியாவது கிரகித்துக்கொண்டு விடுவார்கள். உண்மை உதயமாகுமட்டும் அவர்களுக்குத் தூக்கம் பிடிக்காது. மனிதர்களுக்குப் புலப்படாத பல குறிகள் அவர்களுக்குக் கரதலாமலகம்போல் புலப்படுகின்றன; அவன் காதில் விழாத பல வார்த்தைகள் அவர்கள் செவியில் விழுகின்றன. அவனுடைய மந்த புத்திக்கு எளிதில் அர்த்தமாகாத பல விஷயங்கள் அவர்களுடைய கூரிய அறிவுக்கு வெகு சுலபமாய்ப் பொருள் படுகின்றன. இவ்வாறு பல மார்க்கங்களால் அவர்கள் உண்மையைச் சீக்கிரத்தில் அறிந்துகொள்கிறார்கள். தன் தோழி

Koviloor Digital Library


களாலும், தன் கணவன் அப்போதைக்கப்போது சொல்லி வந்த சில வார்த்தைகளாலும் நவகுமாருடைய மனைவி தன் புருஷருடைய கருத்தை உணர்ந்தாள். இவ்வாறு தனக்குத் தெரியாமல் தன் கணவர் தன் இஷ்டத்துக்கு மாறாக அபிப்ராயப்பட்டு, அதற்கேற்ற ஏற்பாடுகள் செய்துவருவதைக் கண்டு அடங்காக்கோபம் கொண்டாளெனினும், அம்மாது காலதேச வர்த்தமானங்களை உத்தேசித்து அப்போது தன் கோபத்தை வெளிக்காட்டிக்கொள்வது அநுசிதமென்று தெளிந்து பொறுமையுடன் காத்திருந்தாள். எவ்வளவோ பிரபலமான பரம்பரையில் உதித்துச் செல்வத்திலும் ஐசுவரியத்திலும் புரண்டு வளர்ந்துவரும் தன் ஏக புத்திரி, இக் கற்று நாதனற்றுப் பராதீனனாயிருக்கும் ஓர் ஏழைச் சிறுவனுக்கு மாலையிடுவதென்பது அவளுக்குக் கர்ணகடூரமாயிருந்தது. மேலும் தன் செல்வப்புதல்வியின் விவாஹ விஷயத்தைப்பற்றி அச்சதியாலோசனைக்காரனாகிய கோகுல்தாஸ் தனக்கும் தன் கணவருக்கும் யோசனைகூறுவதானது அவளுக்கு எரிகிற கட்டையை ஏறத்தள்ளினது போலிருந்தது. ஆனால் கோகுல்தாஸ் அவளுக்குப் புதிய மனிதரல்லர். அவரைப்பற்றி அவளுக்கு வெகுநாளாய்த் தெரியும். இரண்டு ஜமீன்களுடைய ராஜ்யபாரத்தையும் அரசனிருக்க, துராக்ருதமாய் உண்மையில் அவற்றைத் தன் வசமாக்கிக்கொண்டதுமல்லாமல், அத்துராத்மா இப்போது தன் குடும்ப விஷயத்திலும் சில்விஷம் செய்யப் பிரயத்தனப் படுவதைக்கண்டு அவளால் சகிக்கக்கூடவில்லை. இனிச் சும்மாவிருப்பது தகுதியன்றெனஅறிந்து நவகுமாருடைய மனைவி கோகுல்தாஸின் ஏற்பாடுகளையெல்லாம் தோல்வியுறச் செய்யக் கங்கணம் கட்டிக்கொண்டாள்.

நவகுமாரர் இருதலைக்கொள்ளி எறும்பு போலானார். கோகுல்தாஸுக்குப் பதில் சொல்வதா, அல்லது அவர் தம்

Koviloor Digital Library


மனைவிக்குப் பதில் சொல்வதா? அவருக்கு ஒன்றும் தோற்ற வில்லை. கல்யாண விஷயமாக அவளுடன் பலமுறை பேச முயன்றார். ஆனால் அவள் இடங்கொடுக்கவில்லை. வரவர ஒருவருடன் ஒருவர் முகங்கொடுத்துப் பேசுவதே துர்லப மாய்விட்டது. தாம் இதுவரைக்கும் அதிக இரகசியமாய் அடக்கி வைத்திருந்த அந்தரங்கங்கள் யாவும் தம் மனைவிக் குத் தெரிந்துவிட்டனவென்று நவகுமாரர் உணர்ந்தார்.

தம்பதிகளுக்குள் வரவர மனஸ்தாபம் முற்றிற்று. ஒருவரை யொருவர் நேரில் கண்ணெடுத்துப் பார்த் துப் பேசுவதே நின்று விட்டது. எப்போதும் கோப வார்த்தைகளே யொழிய சகஜமென்பதே அடியோடு போய் விட்டது. இந்த யுத்தத்தில் நாளடைவில் நவகுமாரர் கக்ஷி இளைத்தது. செல்வத்திலே பிறந்து, செல்வத்திலே வளர்ந்துவந்த உயர்குலச் சீமாட்டியாகிய ஹேமலதையைக் கேவலம் முன்பின் குலம் கோத்திரமறியாத ஒரு சிறுவ னுக்கு மணமுடிப்பதால் உண்டாகக்கூடிய மானக் கேட்டையும் அவமரியாதையையும் பன்னிப் பன்னிப் பலமுறை எடுத்துரைத்தாள் நவகுமாரர் மனைவி. வரவர நவகுமாரர் மனம் கலையத் தொடங்கிற்று. தம் மனைவி சொல்வது மனத்துக்கிசைந்ததென்றும், தாழ்குலத்தில் பிறந் தவனாகிய கோகுல்தாஸ் தம் வம்சத்தைச் சேற்றில் ஆழ்த்த முயல்கிறானென்றும் நவகுமாரர் நினைக்கத்தலைப்பட்டார். அவர் ஒன்றையும் வாய்திறந்து சொல்லவில்லை. தம் மனைவியின் நிகரற்ற புத்திமதியை அநுசரித்து அச்சிறந்த ராஜதந்திரத்தின்படி தேவிபுர வீரநகரங்களை ஒன்றுசேர்த்த லால், இதுவரைக்கும் எத்தனையோ ஆபத்துக்கள் அபஜயங் கள், யுத்தங்கள் முதலியவற்றால் இடர்ப்பட்ட தமது வாழ் நாட்களை அந்தியகாலத்திலாவது யாதொரு கவலையுமின்றிச் சமாதானமாய்க் கழிக்கக்கூடும் என்னும் எண்ணம் அவர்

மனத்தில் திரும்பத் திரும்பத் தோன்றியது. அவர் இரவெல்லாம் நித்திரையின்றி இந்த விஷயமாய்ச் சிந்தாக்கிராந்தராயினார்.

ஸம்ஸார வியவகாரங்களில் இதுசெய்வதா அதுசெய்வதா என்று தயங்குகிறவன் ஆண்மையற்றவன். பயங்குவதனால் அவன் வெகுசீக்கிரத்தில் பிறர் இஷ்டப்படி நடக்கவேண்டி வருவது சர்வசாதாரணம். நவகுமாரருக்கு ஒருவழியும் தோன்றவில்லை. அவர் சஞ்சலப்படுவதை யறிந்தும் அறியாதவள் போலிருந்தாள் அவருடைய மனைவி. இனி ஜயம் தன்பக்கந்தான் என்று அவள் எண்ணினாள். ஆனால் அதை வெளிக்குக் காண்பித்துக்கொள்ளவில்லை. அவசியம் ஏற்படும் பக்ஷத்தில் கோகுல்தாஸைப் புழுப்போல் நசுக்கியாவது தன் மனோரதத்தைப் பூர்த்திசெய்வதே சரியென்று அவள் சபதஞ் செய்துகொண்டாள். ஒருநாள் ஸாயங்காலம் அதிகநேரம் வாதாடிய பின்னர் அவள் தன் கணவரைப் பார்த்து, "நாதா! புருஷருக்கேற்றபடி தாங்கள் தங்கள் ஜமீன் வியவகாரங்களை நடத்திவாருங்கள். குடும்பவிஷயங்களை நான் கவனித்துக்கொள்கிறேன். குடும்பத்தை நடத்துவது ஸ்திரீகளின் தருமம். அதைப்பற்றி நீங்கள் கவலைப்படவேண்டாம்" என்று கூறினாள்.

நவகுமாரர் ஒன்றும் பதில் சொல்லாமல் சிந்தையில் ஆழ்ந்தவராய்ச் சென்றுவிட்டார். அவர் மனைவி தானே வெற்றிபெற்றதாகக் கருதினாள்.

கோகுல்தாஸ் செய்துள்ளனவும் செய்ய உத்தேசித்திருப்பனவுமான ஏற்பாடுகளில் ஒன்றும் அவளுக்குத் தெளிவாய்ப் புலப்படவில்லை. முன்னர் நரேந்திரன் இருப்பிடத்திற்கு ஸ்ரீசனைத் தேவிபுரத்திலிருந்து அழைத்து வந்தவரும் கோகுல்தாஸ்தான்; இப்போது கொஞ்சகாலமாகச் சைவலினியை ஹேமலதையுடன் இருக்கும்படிச்

Koviloor Digital Library


செய்தவரும் கோகுல்தாஸ்தான். பால்யத்திலேயே கணவனை யிழந்து வைதவ்ய மடைந்தவளாகிய சைவலினி மஹா சாந்த குணமுடையவள். நமது நாட்டிலுள்ள மற்றக் கைம்பெண் களைப்போலவே சைவலினியும் தன்னையும் தன் சுகதுக்கங்களை யும் சிறிதும் கவனியாது, தன்னைச் சுற்றியிருப்பவர்களுடைய சுகங்களையும் சௌகரியங்களையுமே முழுதும் கவனித்து அவர்களுக்கு உதவிபுரிவதிலேயே தன் ஜீவியகால முழு வதையும் அர்ப்பணம் செய்திருந்தாள். அடக்க ஒடுக்க மும், சகோதர வாஞ்சையும், சிறந்த தெய்வபக்தியும் பொருந்தி உலக வியவகாரங்களில் அதிகமாய்த் தலையிட்டுக் கொள்ளாது தியானத்திலேயே ஆழ்ந்திருந்தவளாகிய சைவலினியைத் தம் கை ஆயுதமாகக் கொண்டு தம் எதிரி யின் எண்ணங்களை யெல்லாம் தோல்வியுறச்செய்து வந்தார் கோகுல்தாஸ்.

ஸ்ரீசனுக்காவது சைவலினிக்காவது முதலில் கோகுல் தாஸின் நோக்கம் யாதொன்றும் விளங்கவில்லை. ஆனால் அவருடன் பழகுவதனால் அவர்களுக்கு நாளடைவில் சில புதிய அவாக்களும் ஆசைகளும் உண்டாயின. அப்போதைக் கப்போது மறைமுகமான வார்த்தைகளால் அவர் தமது கருத்தை அவர்களுக்குச் சிறிது சிறிதாக விளக்கிவந்தார். நவகுமாருடைய முன்னோர்களால் துராக்ருதமாய் ராஜ் யத்தினின்று துரத்தப்படாமல் இருந்தால் இப்போது தேவி புரத்து அதிபதிகளாய் அரசு செலுத்திக்கொண்டிருக்கக் கூடிய ஸ்ரீசனின் வம்சத்தினருடைய புஜபல பராக்கிரமங் களையும் அவர்களுடைய வீரதீரச் செயல்களையும் கோகுல் தாஸ் அடிக்கடி ஸ்ரீசன், சைவலினி இவர்களுக்குக் கதையாக எடுத்துச் சொல்வார். இன்னும் சில வேளைகளில் நாட்டை யிழந்து நகரத்தையிழந்து நாடோடிகளாய்ச் சிறிது காலம் திரிந்துகொண்டிருந்து கடைசியில் ராஜகுமாரிகளை மணம்

Koviloor Digital Library


புரிந்து நல்ல உன்னத ஸ்திதிக்கு வந்த அதிர்ஷ்டவான்களுடைய சரித்திரங்களை யெல்லாம் அவர்களுக்கு ஆதியோடந்தமாய் எடுத்துக் கூறுவார். ஆனால் இவ்வளவுக்கும் அவர் நவகுமாரரைப்பற்றி ஒரு வார்த்தைகூடச் சொன்னதில்லை. ஆனால் நவகுமாரரோ வரவரப் பலவீனராய்க் கொண்டிருந்தார். அவர் புரிந்த கடும்போர்களும், அநுபவித்த கஷ்டங்களும் மனோவேதனைகளும் அவருடைய தேகத்தின் வலிவைக் குன்றச்செய்தன. அவருக்கோ புத்திர சந்ததியில்லை. அவர் அதிக காலம் இருக்கமாட்டார்போலத் தோன்றியது. கூடிய சீக்கிரம் அவர் ஸ்தானத்துக்கு ஒருவரை நியமித்தாக வேண்டும். தேவிபுரத்தின் மேன்மையையும் சிறப்பையும் உணர்ந்து அதன் அரசர்களுடைய பிரதாபங்களையும் வைரிகளையும் பூர்ணமாய் ஞாபகத்தில் வைத்துக்கொண்டு அவைகளுக்கு ஏற்றபடி அரசுபுரியக்கூடிய தேவிபுரத்துச் சீமான் ஒருவன் பகவதநுக்கிரஹத்தால் கிடைத்து ராஜ்யம் சீரும் சிறப்புமடைந்து விளங்கவேண்டுமென்று கோகுல்தாஸ் அடிக்கடி சொல்லிவருவது ஸ்ரீசனின் மனத்தில் நன்றாய்ப் பதிந்து வேரூன்றிற்று.

அப்பதவியை அடையப் போகிறவன் தான்தானென்றும் அவன் எண்ணினான். அந்த ஸ்தானத்துக்கு வேண்டிய யோக்கியதையும் குணநிசயங்களும் நாளடைவில் அவனுக்கு உண்டாயின. அதுமுதற்கொண்டு ஹேமலதையின் அறைக்குச் செல்லும்போதெல்லாம் அவனுடைய முகம் அதிகப் பிரகாசமாய் விளங்கிற்று.

சைவலிநிக்கும் கோகுல்தாஸின் நோக்கம் தெரிந்துவிட்டது. அதற்காகத் தன்னால் ஆகவேண்டிய உதவியைச் செய்ய அவள் சித்தமாயிருந்தாள். சாதாரணமாய் இவ்விஷயங்களில் சகோதரிகள்தாம் அதிகமாய் உதவி செய்யக் கூடியவர்கள். குடும்பங்களின் வாழ்வும் தாழ்வும் ஸ்திரீ

Koviloor Digital Library



களைப் பொறுத்தது. ஸ்ரீசனைப் போன்று எல்லாவிதத்திலும் சிறந்து விளங்கும் சிறுவனைக் காண்பதரிது. மனோதீரமும் காரியத்தில் கண்ணுமுடைய ஸ்ரீசன்முன், நரேந்திரன் ஒரு குழந்தைக்குச் சமானம். இதற்குமுன் பலமுறை தேவிபுரத்து ராஜவம்சம் சந்ததியற்றுப் போகுங்காலத்தில் தங்களுடைய ஸாமர்த்தியத்தால் அதைக் காப்பாற்றிய ஸ்திரீ ரத்னங்களைப்போல் இம்முறையும் சைவலினியானவள் தன் உடன்பிறந்தானுக்காக உழைத்துத் தேவிபுரம் அந்நியர் கைவசப்படாதிருக்கும்படிக் காப்பாற்றுவதாக வாக்களித்தாள்.

ஸ்ரீசனிடம் சைவலினிக்கு அத்தியந்தப் பிரியம் உண்டு. பின்னர் உண்டாகக்கூடிய ஊதியங்களை உத்தேசித்துச் சைவலினியானவள் எவ்விதத்திலாவது ஹேமலதையைத் தன் தம்பிக்கு மணம் புரிவிக்கவேண்டுமென்று தீர்மானித்தாள். பிரதிதினமும் ஸாயங்கால வேளையில் குளக் கரையிலாவது கோவிலண்டையாவது உட்கார்ந்து, ஹேமலதையுடன் தேவிபுரம், அதன் அரசர்கள், தன் தம்பி, அவன் குணநிசயங்கள் இவற்றைப்பற்றி ஓயாமல் பேசிக் கொண்டிருப்பாள். அவற்றையெல்லாம் ஹேமலதை ஒரு வார்த்தைவிடாமல் கவனமாய்க் கேட்பாள். ஏற்கெனவே ஸ்ரீசனைப்பற்றி அதிக மதிப்பாய் எண்ணியிருந்த ஹேமலதை இனி அவன் வருங்காலத்தில் தேவிபுரத்து அதிபதியாய் விளங்கக்கூடும் என்பதைப்பற்றிச் சந்தோஷமுற்று அதே ஞாபகமாயிருந்தாள். அரண்மனையில் நடக்கும் விஷயங்கள் பிரதிதினமும் தன் காதுக்கு எட்டிக்கொண்டிருந்ததனால், கோகுல்தாஸ் இனித் தாம் ஒருவருக்கும் பயப்பட வேண்டியதில்லை, தாம் எண்ணினது நிறைவேறிவிடும் என்று மனங்களித்தார்.

Koviloor Digital Library



இவையெல்லாம் சதுரங்க ஆட்டம்போல் இருந்தது. அரசனே வலியற்றவன். அவனுக்கு முன்னும் பின்னும் காவல் வேண்டும். இராணியோ அதிக வலிவுடையவளாய்த் தலைமை வகித்திருந்தாள். ஆனால் மற்ற ஆட்களும் அவரவர்களுக்குரிய சக்தியுடையவர்களா யிருந்தனர்.

ஒருநாள் ஸாயங்காலம் வழக்கப் பிரகாரம் ஹேமலதையும் சைவலினியும் நந்தவனத்தில் தடாகக் கரையில் உட்கார்ந்து பேசிக்கொண்டிருந்தார்கள். அப்போது திடீரென நரேந்திரன் அவ்விடம் வந்தான். ஹேமலதை அச்சத்தால் மௌனமாயிருக்கச் சைவலினி நரேந்திரனை உட்காரும்படி உபசரித்தாள்.

சற்றுநேரம் வரைக்கும் மூவரும் யாதொரு வார்த்தையுமின்றிச் சும்மாவிருந்தனர். கடைசியில் சைவலினி அன்பார்ந்த இனிய குரலில், "நரேந்திரா, சமீபத்தில் உனது ஜமீன் உன்வசவமாகப் போவதாக ஊரெல்லாம் பிரஸ்தாபம். இந்தச் சுபசமாசாரத்தைக் கேட்க எனக்கு அதிகச் சந்தோஷமாயிற்று. ஜனங்களெல்லாம் உன்னைத் தங்கள் தெய்வமாகப் போற்றுகிறார்கள். உன் பாட்டனார் தம் காலத்தில் இருந்தபடி நீயும் ஜனங்களைச் சகல விதத்திலும் ரக்ஷித்து என்றைக்கும் அவர்களுடைய நண்பனாயிருப்பாயென்று நம்புகிறேன்" என்றாள்.

"அப்படிக்கு ஒரு பிரஸ்தாபமும் என் காதில் விழவில்லை. ஊராருக்கென்ன? பொழுதுபோக்கு நிமித்தமாய்க் கண்டபடியெல்லாம் பேசிக்கொள்கிறார்கள். சகோதரீ, எனது ஜமீன் எப்போது என்வசப்படுமோ நான் அறியேன். ஆனால் அவ்வாறு என் ஜமீன் எனக்குக் கிடைப்பதன் காரணமாய், நீங்கள் தேவீபுரம் செல்லும்படிக்கு ஏற்படுமானால், வெகுகாலம்வரைக்கும் நான் என் ஜமீனுக்கு

Koviloor Digital Library



4102

ஆசைப்படமாட்டேன். ஒரு வேளை பகவத் கடாக்ஷத்தால் தேவிபுர வீரநகர விஷயங்கள் வேறுவிதமாய்..."

நரேந்திரன் அதனுடன் நின்றுவிட்டான். சைவலினிக்கோ அவனுடைய கருத்து விளங்கிவிட்டது. உடனே அவள், "தேவிபுரத்துக்கும் வீரநகரத்துக்கும் நடுவில் அதிக தூரம் இல்லை. சமீபந்தான். சகோதரா, நாம் ஒருவரையொருவர் அடிக்கடிச் சந்தித்துக் கொண்டிருக்கலாம். ஆனால் தேவிபுரத்தார் தேவிபுரத்துக்குத் திரும்பிப் போய்த்தான் தீரவேண்டும். மூந்நூறு வருஷமுமாயின, அதற்கு அதிகமாயும் ஆயின, இவ்விரு குடும்பத்தினரும் ஒருவரை விட்டொருவர் பிரிந்து" என்று கூறினாள்.

"சைவலினீ, இன்னும் நாம் பிரிந்திருக்க வேண்டுமா?"

"சகோதரா, நானோ ஸ்திரீஜாதி; புருஷர்களுடைய யோசனைகளும் அவர்களுடைய ஏற்பாடுகளும் சிறிதும் எனக்குத் தெரியா. ஆனால் ஒன்று மாத்திரம் நான் பல முறை கேள்விப்பட்டிருக்கிறேன். தேவிபுரத்தார் பூர்வத்தில் அதிகப் பிரபல்யமுற்றிருந்தார்களென்றும், அக்காலத்தில் அவர்கள் புரிந்துள்ள வீரதீரச் செயல்களையும் அவர்களுடைய சிநேக விரோதங்களையும் என்றைக்கும் தேவிபுரத்தார் கருத்தாய்ப் பாராட்டுகிறார்களென்றும் பலர் சொல்லுகின்றனர். மீன் இனம் நிலத்தின்மீதும், பறப்பன நீரிலும் எவ்வளவு காலந்தான் உயிருடன் இருக்கும்?"

இப்படிப் பேசிக்கொண்டிருக்கும்போது சைவலினியை வீட்டிலிருந்து யாரோ ஒருவர் கூப்பிடவே, அவள் எழுந்து ஸாயங்காலம் வீட்டைத் திருத்திக் கோலமிட்டு விளக்கேற்றும் வேலையைப் பார்க்கப் போய்விட்டாள். நரேந்திரனும் ஹேமலதையும் மாத்திரம் தனித்திருந்தார்கள். சைவலினி

Koviloor Digital Library


கூறிய மொழிகளைக்கேட்டு நரேந்திரனுடைய முகவிலாசம் மாறுதலடைந்தது. அவன் சிந்தையில் ஆழ்ந்தான்.

ஆகாயத்தில் பூர்ண சந்திரன் பிரகாசித்துக் கொண்டிருந்தான். வெண் நிலவு காற்றால் சிறுசிறு அலைகளாகத் தத்தளிக்கும் தடாகநீரில் அசைவுற்றுப் பிரதிபலிப்பது, பார்ப்பதற்கு மிகவும் ரமணீயமாயிருந்தது. மந்த மாருதம் வீசுவதால் மரங்களிலிருந்து ஒருவிதமான ஒலி வனமுழுவதும் சப்தித்துக்கொண்டிருந்தது. அதே இடத்தில் பால்யத்தில் நரேந்திரன் அடிக்கடி விநோதமான கதைகள் அநேகம் சொல்லிவந்த வழக்கம் தன் ஞாபகத்துக்குவர ஹேமலதை அப்போது தலைநிமிர்ந்து நரேந்திரனுடைய முகத்தைப் பார்க்கலானாள். நரேந்திரனுடைய அழகிய முகம் சந்திரகாந்தியின் மஹிமையால் பதின்மடங்கு அதிக அழகுடையதாய் விளங்கிற்று. அத்தருணம் அவன் துருவநக்ஷத்திரத்தை உற்றுநோக்க, அதையொட்டிய கதையொன்று அவன் நினைவுக்கு வந்தது.

"ஹேமலதே, நீ குழந்தையாயிருக்கும்போது ஸாயங்கால வேளைகளில் எத்தனை கதைகள் நான் இவ்விடத்தில் உனக்குச் சொல்லியிருக்கிறேன், உனக்கு ஞாபகமிருக்கிறதா?"

"ஆம், அதைப்பற்றித்தான் நானும் சற்று முன் நினைத்துக் கொண்டிருந்தேன்."

"நீ இப்போது பெரிய மனுஷி யாய்விட்டாய்; என் கதைகளைக் கேட்பதில் உனக்கு இப்போது ஸ்வாரஸ்யம் போய்விட்டது."

"ஸ்வாரஸ்யம் இராமல் என்ன?" என்று மெதுவாய்ச் சொன்னாள்."

"அப்படியானால் கேள்: அதோ இருக்கின்றதே அந்த நக்ஷத்திரம் உனக்குத் தெரிகின்றதா?"

Koviloor Digital Library


"அந்த மரத்துக்கு நேரே?"

"ஆமாம், அதன் பெயர்தான் துருவ நக்ஷத்திரம்."

"சாசுவதமும் சத்தியமுமானது என்பது அதன் பொருள்."

"ஏன் அதற்குச் சாசுவதமும் சத்தியமுமானது என்று பொருள்?"

"ஹேமலதே, அந்த நக்ஷத்திரத்தை ஒட்டிய கதையொன்று வழங்கிவருகிறது."

ஹேமலதை குழந்தைப் பருவத்துக்குரிய ஆர்வத்துடன் நரேந்திரனை, "அக்கதை யென்ன? எனக்குச் சொல்" என்று கேட்டாள்.

"ஒரு காலத்தில் ஓர் ஊரில் அரசன் ஒருவன் இருந்தான். அவனுக்கு இரண்டு மனைவிகள் இருந்தனர். ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு பிள்ளையுண்டு. அரசனுக்கோ ஆசையெல்லாம் மூத்த பத்தினியிடத்திலும் அவளுடைய பிள்ளையினிடத்திலுந்தான். இளைய மனைவியையாவது அவள் வயிற்றிற் பிறந்த பிள்ளையையாவது அரசன் சற்றுகிலும் கவனிப்பதில்லை. அவள் தன்மீது தன் கணவர் பாராமுகமாக இருப்பதைப்பற்றி எண்ணி எண்ணி அடிக்கடித் தன் பிள்ளையுடன் ஒரு குடிசைக்குச் சென்று அழுதுகொண்டிருப்பாள். சிறுவனுக்கோ தன் தாய் அழுவதன் காரணம் புலப்படவில்லை.

"ஆனால் அவனுக்குச் சரியான வயது வந்தவுடன், ஒருநாள் அவன் தாய் அவனை அழைத்து, "அப்பா, குழந்தாய், நான் அரசனுடைய மனைவியாயும், நீ அரசனுடைய மகனாயும் இருந்தபோதிலும், நம்மைப்போல் இவ்வுலகில் கஷ்டத்தை அனுபவிப்பவர்கள் வேறெவரும் இல்லை" என்று தன் குறையை எடுத்து அவனிடம் சொன்னாள். இதைக் கேட்டவுடன் அச்சிறுவன் வருத்தமுற்றவனாய் அப்புறம் அகன்றான். சிறிது நேரஞ் சென்ற

Koviloor Digital Library



பின்னர் திரும்பிவந்து, 'அம்மா, இவ்வுலகில் முடிசூடும் மன்னர்கள் அடையும் பிரதாபத்தைக் காட்டிலும் விசேஷமான பிரதாபமும் கீர்த்தியும் பெறுகின்றேன் பார். இன்று முதல் நான் இவ்வுலகில் சந்நியாசிக் கோலம் தரித்துப் பகவானைத் தியானம் செய்யப்போகிறேன்' என்றான்.

"அச்சிறுவன் பெயர்தான் துருவன். சாசுவதமும் சத்தியமும் உடையவன். அவன் அரணியஞ் சென்று அரசர்களுக்கெல்லாம் அரசாய் விளங்கிக் கொண்டிருக்கின்ற அந்த ஒன்றான பரம்பொருளைக் குறித்து ஓயாமல் தியானஞ் செய்து, கடைசியில் யாவராலும் போற்றப்படும் முனிவனாயினான். நாட்டிலுள்ள சக்கரவர்த்திகள், மஹாராஜாக்கள், ராஜாக்கள் அனைவரும் அவருடைய பாத கமலங்களில் விழுந்து அவருடைய ஆசீர்வாதத்தை எதிர்பார்த்தவராயினர். அவர் தேக வியோகமான பின்பு நக்ஷத்திரங்களில் ஒன்றாய் விளங்கினர். என்றைக்கும் சாசுவதமாயும் சத்தியத்துக்கோர் அறிகுறியாயும் அவர் எப்பொழுதும் ஆகாயத்தில் பிரகாசித்துக்கொண்டிருக்கின்றனர்."

"நரேந்திரா, மிகவும் இனிமையான கதை; கேட்கக் கேட்க ஸ்வாரஸ்யமாயிருக்கிறது. தேவிபுரத்துக்குச் சென்று வசித்திருக்கும்போது அந்நக்ஷத்திரத்தைக் கண்ணுறும் போதெல்லாம் எனக்கு இக்கதை ஞாபகம் வரும்."

"ஹேமலதே, கதையும் இனிமையானதுதான்! அக்கதையினால் விளங்கும் நீதியும் அதைவிட இனிமையானது. ஒவ்வோர் இரவும் அந்நக்ஷத்திரத்தைத் தவறாமல் தரிசனஞ் செய்துவா. என்றைக்கும் சாசுவதமாயும் ஒரே நிலையாயும் சத்தியம் தவறாமலும் இருந்துவா. நீ தேவிபுரம் செல்ல வேண்டிய அவசியமிராது."

Koviloor Digital Library

## ஏழாம் அத்தியாயம்

## துர்க்காபூஜை - படகுப் பந்தயம்

மழை ஓய்ந்துவிட்டது. ஆகாயமேல்லாம் மப்புமந்தார மின்றி நீலவர்ணமாயிருந்தது. முன்பெய்த மழையால் செடி கொடிகள் யாவும் புத்துயிர்கொண்டு, பார்க்குமிட மெங்கும் ஒரே பச்சை நிறமாய்க் கண்களைக் குளிரச் செய்தன. சில தினங்களுக்கு முன் இருகரையும் புரள ஓடிய வெள்ளமெல்லாம் தணிந்துவிட்டது. ஆற்றுக் கால்வாய் களில் ஜலம் நிதானமாய் ஓடிக்கொண்டிருந்தது. அங்கங்கே கொடிநீரும் அறுநீருந்தான் கசிந்துகொண்டிருந்தன. கிரா மாந்தரங்களிலெங்கும் புரட்டாசி, ஐப்பசி மாத அறுவடை ஆரம்பமாகிவிட்டது.

இக்காலத்தில் இந்தியாவின் பல பாகங்களில் ஸிம்ஹ வாஹனருடையான உமாதேவியை யாவரும் பூசிப்பது வழக்கம். சூரியன் ஸிம்ஹ ராசியிலிருந்து கன்னிக்குச் செல்கிறான் என்னும் வானசாஸ்திர உண்மையைத் தழுவி இவ்வுத்ஸவம் அநுசரிக்கப்பட்டு வருகின்றது. ஆனால் இந்தச் சாஸ்திர உண்மை ஜனங்களுக்குத் தெரியாது. அவர்கள் ஏராளமாய் நவதானியங்களைக் கொடுத்து ரக்ஷிக்கும் தேவியென உமாதேவியை உபாஸனை செய்கிறார்கள். ராஜபுத் திரர், மஹாராஷ்டிரர் முதலிய க்ஷத்திரிய ஜாதியார்கள் தங்கள் கத்தி கேடயம் முதலிய ஆயுதங்களை வணங்குவதும், வரும் மாரிக்காலத்து நடத்த வேண்டிய ஏற்பாடுகளைச் செய்வதும் இக்காலத்தில்தான். இந்தியா முழுவதும்

Koviloor Digital Library



வாத்தியம், கோஷம் முதலியவற்றுடன் இப்பண்டிகையை அதிக உல்லாஸமாய் அநுஷ்டிப்பார்கள்.

இப்பண்டிகையின் கடைசித்தினம் வந்தது. வீரநகர முழுவதும் சூரியன் ஒளியால் பிரகாசித்துக்கொண்டிருந்தது. ஜமீன்தாருக்கு வந்தனமளிக்க அவருடைய மாளிகைக்கு முதன்முதலில் வந்தவர் கோகுல்தாஸ்.

ஜமீன்தார் தம் மந்திரி செய்த வந்தனங்களை அங்கீகரித்து, "கோகுல்தாஸ் நீர் வெகுகாலமாக நம்பிக்கைத் துரோகம் இன்றி மனோவாக்குக் காயசுத்தியுடன் நமக்காக இரவுபகல் என்ற வித்தியாசமே யில்லாமல் உழைத்து வருகிறீர். ஆயினும், உமது காரியம் மாத்திரம் இன்னும் கைகூடக்காணோம்" என்று விடை பகர்ந்தார்.

"என்னுடைய முன்னோர்கள் நடந்த வழியே நானும் நடந்து வருகின்றேன். அவர்கள் உழைத்துவந்த வண்ணமே நானும் இன்று வரைக்கும் உழைத்துவந்து கொண்டிருக்கிறேன். நான் கோரிய காரியம் அதிக சீக்கிரம் சித்திபெறும். இது திண்ணம்."

"இதே வார்த்தைதான் இந்த ஆறுமாதமாய்ச் சொல்லி வருகிறீர். ராஜா மாநஸிம்ஹர் ஒரிஸ்ஸாவில் ஆப்கானியர்களுடன் மல்லிட்டுக் கொண்டிருக்கிறார். அவருடைய காரியதரிசியோ நமது விஷயத்தை மூலையில் கட்டாகக் கட்டிப் போட்டுவிட்டுத் தூங்குகிறார்."

"ராஜா மாநஸிம்ஹர் ஒரிஸ்ஸாவைக் கைப்பற்றி அக்பரது ராஜ்யத்துடன் சேர்த்துவிட்டார். தம்முடைய காரியதரிசி செய்துள்ள ஏற்பாட்டையும், அவர் பிறப்பித்திருக்கும் கட்டளையையும் ராஜா மாநஸிம்ஹர் ராஜமஹல் வந்தவுடன் உறுதிப்படுத்துவார்."

"ஆனால் ஏற்பாடு ஆகிவிட்டதா ?"

Koviloor Digital Library



"ஏற்பாடு ஆகிவிட்டது. ஆனால் இன்னும் அமலுக்கு வரவில்லை. இப்பண்டிகைகளெல்லாம் முடிவு பெற்றவுடன் நாம் தேவிபுரம் போய்ச் சேர்வோம்."

"என் ஆப்த மித்திரரே, மிகவும் சந்தோஷம். ராஜா மானஸிம்ஹர் ஏற்பாட்டை உறுதி செய்வது நிஜந்தானா? அவர் ஒன்றும் தடை சொல்லமாட்டாரா? நரேந்திரனுடைய பாட்டனாரைப் பற்றி அவர் கொண்டிருக்கும் அபிப்பிராயத்தையும், வீரநகரத்து ராஜகுடும்பத்தாரிடம் அவர் காட்டும் அன்பையும் நினைக்குங்கால் என் மனத்தில் சிறிது சமுசயம் உண்டாகிறது. அவ்விதமான பயத்துக்கு ஹேது ஒன்றுமில்லையே?"

"ராஜாவுக்குத்தான் தலைக்குமேல் வேலையிருக்கின்றதே. இந்த நரேந்திரனைப்பற்றிய பெரிய சமாசாரத்தைத்தான் அவர் உட்கார்ந்து கவனித்துக்கொண்டிருக்கப்போகிறாரோ? ராஜமஹலை வங்காளத்துத் தலைநகராக்கிவிட்டார். இனி ராஜபுதனத்தில் தம் இருப்பிடமாகிய ஆம்பர் நகரைப்போல் ராஜமஹலையும் கோட்டை கொத்தளங்கள் கட்டிப் பந்தோபஸ்து செய்யும் வேலையை அவர் சீக்கிரம் செய்து முடிக்க வேண்டும். இல்லாவிட்டால் ஆப்கானியர்கள் மற்றொரு முறை ஒருகை பார்க்கப் பிரயத்தனஞ் செய்வார்கள்.

"அவருடைய வீரத்துக்குச் சிறிதும் இளைத்ததாகக் காணோம் அவருடைய புத்திசாதுரியம். இம்மாகாணத்தை விட்டு நீங்குமுன் அவர் நமது வங்காளத்தில் மொகலாய அரசாட்சியை வலிவாய் ஸ்தாபித்து விடுவார். இனி ஆப்கானியர்கள் பூண்டே அடியோடு நசித்துவிட்டது போலத் தான். எக்காரியத்தை எடுத்தாலும் அதைப் பூர்த்தியாய்க் கடைசிவரைக்கும் செய்துமுடித்த பின்னர்த்தான் மறு வேலையைப்பற்றி அவர் யோசிப்பார். காரியங்களை அரை குறையாய்ச் செய்துபோட்டுவைப்பது அவருடைய சுபாவ·

Koviloor Digital Library



மன்று. தம்முடைய செல்வாக்கைப் பின்னும் பலப்படுத்திக் கொள்ளவேண்டுமென்று அவர் வங்காளத்தில் நல்ல உயர் குலக் கன்னிகை யொருத்தியை நாடுகின்றனரென்று ஊரெல்லாம் சொல்லிக்கொள்கிறார்கள்."

"அவருடைய வீர தீர புத்திரனாகிய ஜகத்ஸிம்ஹனுக்கா?

"இல்லை, அவருக்கேதான்."

"என்ன, அதிசயமாயிருக்கிறதே! ராஜபுத்திர யுத்த வீரரொருவர் வங்காளத்துப் பெண்ணை மணம்புரிய உத் தேசிப்பது!"

"என்ன அதிசயம்? இதற்குமுன் எத்தனையோ முறை இவ்விதமான சம்பந்தங்கள் ஏற்பட்டிருக்கின்றன. யுத்த வீரராயிருந்தாலென்ன? அவர்களுக்குப் பெண்ணாசை என்பது கிடையாதோ? ஸ்திரீகள் வலையில் சிக்காதார் யார்? உலகத்தையெல்லாம் நடுங்கச்செய்து ஜயபேரிகை முழக்கிய ராஜாதி ராஜர்கள்கூட ஸ்திரீகளைக் கண்டு தமது கர்வமடங்கி அவர்கள்முன் குழந்தைகளைப்போல் சாதுக்க ளாய் விட்டிருக்கிறார்கள்."

கோகுல்தாஸ் இவ்வாறு உலகத்துக்குப் பொதுவாய்க் கூறிய மொழிகளின் உட்கருத்து நவகுமாரருக்கு நன்றாய் விளங்கிற்று.

"கூச்பிஹார் மஹாராஜா அவர்களுடைய புத்திரியை விவாஹம் புரிந்துகொள்வதால் அவர் உத்தர வங்காளத்தில் தம் செல்வாக்கை அதிகரித்து அக்பரது ராஜ்யத்தைக் கிழக்கில் பலமாக அஸ்திவாரமிட்டு நிலைநிறுத்துவது ஸாத்திய மாகும். ஆப்கானியர்கள் பயம் அடங்கிவிட்டதென்றாலும் இன்னும் அவர்கள் அடியோடு தொலைந்தபாடில்லை. அதுவு மன்றித் தெற்கிலிருந்து சமுத்திர மார்க்கமாய்ப் புதிய சத்து ருக்களாகிய ஒரு தேசத்தார் கப்பல்களில் வந்து வங்காளத் தைக் தாக்குகின்றனர்."

Koviloor Digital Library


"ஆமாம், கடற்கொள்ளைக்காரக் கூட்டங்கள் வந்து நம் துறைமுகங்களையும், வாய்க்கால்களையும், கப்பல்களையும் துவம்ஸம் செய்வதாகவும், அக்கூட்டத்தார் நம் ஊரார் களைப்போல் கறுத்த மேனியுடையவர்கள் அல்லரென்றும் அடிக்கடி நமக்குச் செய்தி வருகின்றதே. அவர்களைப் பற்றிய யதார்த்தமான தகவல்கள் ஏதாவது உமக்குத் தெரியுமா?"

"அவர்கள் ஒரு பயங்கரமான கடலோடி ஜாதியார்கள். அவர்களுடைய ஜன்மபூமி போர்த்துகல் என்னும் ஓர் ஐரோப்பிய நாடு. அக்கொள்ளைக் கூட்டத்தார்களின் தலைவர்களுள் ஒருவனாகிய ஸபாஸ்தியன் கௌஸேல்ஸ் என்பவன் கங்காநதியின் முகத்துவாரத்துக்கு அருகிலிருக்கும் ஒரு பெரிய தீவைப் பிடித்துக்கொண்டனன். சிலர் ஹூக்ளியையும் பிடித்துக்கொண்டு சுற்றுப்பக்கத்துக் கிராமவாசிகளைக் கிறிஸ்தவராகும்படி நிர்ப்பந்தித்து வருகின்றார்கள்."

"இது என்ன! எல்லாம் அனர்த்தமாயிருக்கிறதே. ஆப்கானியர்கள் ஒழிந்தார்களென்றால் இன்னும் புதிய விரோதிகள் கிளம்பியிருக்கின்றார்களே."

"தரைமீது சத்துருக்கள் ஆப்கானியர்கள் ஒருவர் தாம். ஆனால் சமுத்திர மார்க்கமாய் வந்து எதிர்க்கக் கூடிய பகைவர்கள் பலர் உளர். இந்தப் போர்த்துகல் தேசத்தினர் உள்நாட்டில் பிரவேசித்து ஹிந்து முஹம்மதிய ஸ்திரீகளைக் கவர்ந்து செல்கின்றனர்; புருஷர்களைப் பலவிதமாக ஹிம்ஸை செய்கிறார்கள். ஆனால் இப்போர்த்துக்கேசியர்களுக்கே சத்துருக்கள் சிலர் நூதனமாய் ஏற்பட்டிருக்கின்றனர். இங்கிலாந்து, ஹாலந்து இந்த ஐரோப்பிய நாட்டினர்கள் சாகராதிபத்தியத்தைப் போர்த்துக்கேசியர்களிடமிருந்து கைப்பற்ற அதிக ஊக்கமாய் முயற்சிசெய்து

Koviloor Digital Library



வருகின்றார்கள். இருதிறத்தாருக்கும் இதுவரையில் பல போர்கள் நடந்திருக்கின்றன."

"கோகுல்தாஸ், உலகம் நாம் எண்ணியிருந்ததை விடப் பெரியதாக இருப்பதாகத் தெரிகின்றதே! அதனில் நாம் கேட்டறியாத பல தேசங்களும், பல ஜாதி ஜனங்களும் வசிப்பதாகவும் இப்போது நாம் அறிகிறோம். ஏன் இந்த வெளிநாட்டினர்கள் நமது தேசத்தை நாடி வருதல் வேண்டும்?"

"பனியால் உறைந்து கிடக்கும் வடதேசங்களிலிருந்து பிரதி வருஷமும் குளிர்காலங்களில் எப்படிப் பக்ஷி ஜாதிகள் கூட்டங்கூட்டமாய்த் தென்திசை நோக்கி இரை தேடி இந்தியாவுக்கு வருகின்றனவோ, அப்படியே ஒன்றும் உற்பத்தியாகாத மேலைப்பிரதேசங்களிலிருந்து நம் செல்வ பூமியின் ஐசுவரியத்தையும், வியாபாரத்தையும், சிறந்த வேலைப் பாடமைந்த நமது நாட்டு கைத்தொழில் சாமான்களையும், நமது தேசத்தில் பயிராகும் ஏலக்காய், மிளகு, லவங்கம், ஜாதிக்காய் முதலியவைகளையும் மேல்நாட்டினர்கள் நாடி வருகின்றனர்.

"இவர்கள் வருவது கேவலம் வியாபாரத்தையும் செல்வத்தையுமே கருதியா? அவற்றைவிட அதிகமான எண்ணங்கள் அவர்கள் கொண்டிருக்கிறார்கள். அவர்கள் நமது நாட்டில் நாடு நகரங்கள் சம்பாதித்து ராஜ்யாதிகாரம் பெற்று ஸாம்ராஜ்யம் செய்ய உத்தேசமும் கொண்டிருக்கிறார்கள்."

"மொகலராயரால் ஜயிக்கப்பட்டு அக்பரது அரிய புத்தி சாதுரியத்தால் ஓர் ஒழுங்குபடுத்தப்பட்டு ராஜாமானஸிம்ஹர் முதலிய சுத்த வீரர்களால் கண்ணுய்க் காக்கப்பட்டுவரும் இந்த அகண்ட ராஜ்யத்தின்மீது அந்த நாடோடிகள் வைத்திருக்கும் எண்ணம் நிறைவேறுமென்பது கேவலம் பகல் கனவாய் முடியும்."

Koviloor Digital Library



"ராஜகுடும்பங்கள் ஏற்படுவதும், தழைத்தோங்குவதும், இளைப்பதும், க்ஷீணகதியடைவதும், கடைசியாய் நசிப்பதும் சகஜந்தான். அவருடைய புத்திர பௌத்திரர்களும் அக்பரைப்போலவே அவ்வளவு ஸமர்த்தர்களாய் இருப்பார்களென்பது என்ன நிச்சயம்? அக்பரும் அவரைச்சேர்ந்த மொகலாயர்களும் ஆப்கானியர்களை விரட்டியவிதமே ஐரோப்பிய ஜாதியார்களும் இந்த மொகலாயர்களை அடித்து ஓட்டினாலும் ஓட்டலாம்.

"கோகுல்தாஸுக்குத் தத்ஸமயம் இருக்கும் கவலைகளே தலைக்குமேல் இருக்கின்றன. வெள்ளையர்கள் வந்து இந்தியாவில் அரசுபுரியும் காலத்துக்குள் கோகுல்தாஸ் பரலோகம் சென்று விட்டிருப்பான். அதைப்பற்றி அவன் ஏன் இப்போது மனக்கவலையுறவேண்டும்? அதோ, அந்த நிலங்களில் அசைந்தாடும் நெற்கதிர்கள் முற்றுவதற்குமுன் தன்னுடைய எஜமானர் தேவிபுரமாளிகைகளில் வாசஞ்செய்வதைக் கோகுல்தாஸ் கண்குளிரக்கண்டு களிப்பான் என்பது திண்ணம்."

சுக்கிலபக்ஷத்துத் தசமி. சந்திரன் உருக்கிய வெள்ளியைப்போல் பிரகாசிக்கத் தொடங்கிய பத்தாம் நாள். அன்றைத் தினந்தான் பண்டிகையின் முடிவுநாள். வீடுகள் தோறும், ஆலயங்கள் தோறும் தேவதார்ச்சனைகள் நடந்துகொண்டிருந்தன. நல்ல ஆடைகளைத் தரித்துக் கிராமவாசிகள் அனைவரும் கூட்டங்கூட்டமாய் நகரத்துக்கு வந்து கொண்டிருந்தார்கள். சூரியோதய காலத்தில் கணக்கு வழக்கின்றி ஸ்திரீகள் கும்பல் கும்பலாய்க் கங்கா நதியில் ஸ்நானஞ்செய்துகொண்டிருந்தனர். ஆயிரக்கணக்கான குழந்தைகள் தெருக்களில் பிரமாதமான கோஷம் செய்து ஆரவாரித்துக் கொண்டிருந்தார்கள். நகரமுழுவதும் யாவரும் சந்தோஷமாயிருந்தனர்.

Koviloor Digital Library


நகரத்தில் வந்து குவிந்திருக்கும் எண்ணிறந்த ஜனங்களின் பொழுதுபோக்கிற்காக நவகுமாரர் அன்றைத்தினம் பகல் ஒரு பந்தயம் ஏற்பாடு செய்திருந்தார். மாரிக்கால முடிவில் வங்காளத்து ஆறுகளும் ஓடைகளும் பூர்ணமாயிருக்கும் போது குடித்தனக்காரர்கள் படகுப் பந்தயங்களில் அதிக ஊக்கமாய்க் காலங்கழிப்பார்கள். வேகமாய்ச் செல்வதற்காகக் கட்டப்பட்ட நீண்டு நெருங்கிய படகு ஒவ்வொன்றும் பதினாறு அல்லது இருபது படகோட்டிகளுடன் நம்பவொண்ணாத வேகத்துடன் கங்கையாற்றில் ஓடும். நீராவிக்கப்பல்கள் ஏற்படுமுன் இந்தப் படகுகள் வேகத்தில் இணையற்றனவாயிருந்தன. இப் பந்தயங்கள் கிராமாந்தரம், நகர்ப்புறம் எல்லாவிடங்களிலும் நடைபெறும். இத்தகைய பந்தயங்களில் அப்படகோட்டிகளுக்கிருக்கும் ஆத்திரமும், சுறுசுறுப்பும், உத்ஸாஹமும், அக்காட்சியைக் காண்போர்களுக்கு உண்டாகும் ஆனந்தமும் சொல்லத்தரமன்று.

பல ஆண்டுகளாக அநுசரிக்கப்பட்டுவரும் வழக்கப்படி வருஷந்தோறும் இப்பண்டிகையின் கடைசித்தினத்தன்று வீரநகரத்தில் இப்பந்தயங்கள் வெகு விமரிசையாய் நடைபெறும். நவகுமாரர் வீரநகரத்தில் தங்கியிருப்பது இதுதான் கடைசியாண்டு; ஆதலால், அவர் இவ்வருஷத்துப் பந்தயங்களை எப்போதும் காணப்பட்டிராத ஆடம்பரத்துடன் நடத்துவதற்கு ஏற்பாடுகள் செய்திருந்தார்.

கங்காநதியின் கீழ்க்கரையில் சுமார் இருபதினாயிரம் ஜனங்களுக்குமேல் கூடியிருந்தனர். குறித்த நேரத்துக்கு முன்னரே ஜனங்கள் அபரிமிதமாய்ச் சேர்ந்துவிட்டனர். வீரநகரத்து உயர்குலச் சீமான்களுக்காக ஒரு பந்தலும், வீரநகரத்து ராஜ குடும்பத்தைச் சேர்ந்த ஸ்திரீகளுக்காகப் பிரத்தியேகமாக ஒரு பந்தலும் போடப்பட்டிருந்தன.

Koviloor Digital Library


வீரநகர தேவிபுரங்களில் அதிக ஸமர்த்தரான படகோட்டிகள் பதினாறு கிராமத்தார்கள் பதினாறு படகுகளில் ஆவலுடன் காத்திருந்தனர். உருவத்திலும் நீளத்திலும் ஒரு படகுக்கொரு படகு தாரதம்மியம் இல்லை. ஒவ்வொரு படகிலும் இருபது படகுக்காரர்களும் ஒரு சுக்கான் பிடிப்போனும் இருந்தார்கள். நவகுமாரர்தாம் மத்தியஸ்தர். தமக்கு உதவிபுரிய அவர் வீரநகரத்துப் பிரதான உத்தியோகஸ்தர்கள் இருவரை ஏற்படுத்திக்கொண்டனர்.

வீட்டிலிருந்து புறப்படுமுன் நவகுமாரர் தம் மனைவியைப் பார்த்துப் பந்தய ஸ்தானத்தில் ஸ்திரீகளுக்காகச் செய்யப்பட்டிருக்கும் பிரத்தியேக ஏற்பாட்டை அவளிடம் தெரிவித்தார். அதற்கு அவருடைய பத்தினி, "எங்களுக்காகத் தாங்கள் இவ்வளவு சிரமம் எடுத்துக்கொண்டதைப்பற்றிக் கேட்க எனக்கு மிகவும் சந்தோஷமாயிருக்கிறது. நம் ஹேமலதைக்கு இத்தகைய பந்தயங்களைக் காண்பதில் அதிகப் பிரியம். சிறு பெண்ணாயிருக்கும்போது நரேந்திரன் அவளைப் பலமுறை கங்கையாற்றில் படகில் அழைத்துப் போயிருக்கிறான்" என்றாள்.

"நீ மஹா கெட்டிக்காரி. நீ பிடித்த பிடி உடும்புப் பிடிதான். அதை எவராலும் அசைக்க முடியாது. நம் பிரயத்தனங்களெல்லாம் பூர்த்தியாய்விட்டன; பலன் சித்தித்துவிட்டது. இந்த உத்ஸவாதிகள் முடிந்தவுடன் நாம் எல்லோரும் தேவிபுரம் போவோம். வீரநகரத்தைப் பரிபாலிக்கச் சக்கரவர்த்தியவர்களுடைய அதிகாரி ஒருவர் வருகிறார்."

"நரேந்திரனுக்கு ஏற்ற பிராயம் வரும்வரையில் அவன் நம்மோடுதானே தேவிபுரத்தில் வசித்திருப்பான்?"

"நரேந்திரன் சுயாதிகாரி; அவனுக்கு எஜமானன் அவனேதான். ஆனால் அவன் ஒருவேளை தேவிபுரத்துக்கு

Koviloor Digital Library



வர இஷ்டப்பட்டால் நம்மைத் தேடி வந்தவனை நாம் ஒரு விருந்தாளியாய் ஆதரிக்கத் தடை கிடையாது."

"அது போதும். இனி ஆகவேண்டிய காரியத்துக்கு நான் பார்த்துக் கொள்ளுகிறேன்" என்று தனக்குள் சொல்லிக்கொண்டாள் நவகுமாருடைய மனைவி.

"இவளோ அதிக ஸமர்த்தை; இவளை வெல்வது அஸாத்தியம்; மேலும் இவள் சொல்வது, மொத்தத்தில் என் மனத்துக்கு யுக்தமென்றுதான் படுகிறது. கோகுல்தாஸ் நம்பிக்கையானவர்தாம். இதுவரைக்கும் அவர் நமக்கு நல்லதையே செய்துவந்திருக்கிறார். அவருடைய சூழ்ச்சிகளும் அந்தரங்க ஏற்பாடுகளும் பிரம்மதேவனாலும் கண்டறியக் கூடாதவை. ஆனால் ஆந்தைக்குப் பகல் வெளிச்சத்தின் குணம் எவ்வளவு தெரியுமோ அவ்வளவுதான் தெரியும் அவருக்குக் குலம் கோத்திரம் இவற்றின் பெருமை சிறுமைகளும், குடும்ப வியவகாரங்களும். ராஜா மாநஸிம்ஹர் கூச்பீஹார் இளவரசியை மணம்புரிவதாக அவர் சொன்னார். மாநஸிம்ஹர் தாம் செய்யும் காரியத்தின் பலனை நன்கறிவார். வங்காள மாகாணத்தைப்போலவே நம் சிறு ஜமீன்களையும் தக்க சம்பந்தங்களால் ஒன்று சேர்த்துப் பலப்படுத்திக் கொள்ளலாம்" என்று நவகுமாரர் தமக்குள் யோசிக்கலானார்.

சூரியாஸ்தமன சமயத்துக்கு இன்னும் ஒருமணி நேரம் தான் இருந்தது. பந்தயத்துக்கு எல்லாம் சித்தமாய்விட்டது. ஸ்திரீகள் தங்களுக்கென்று ஏற்படுத்தப்பட்ட பந்தலில் வந்து உட்கார்ந்தனர். நவகுமாரரைச் சுற்றிலும் பெரிய உத்தியோகஸ்தர்களும் உயர்ந்த பட்டாடை தரித்த வியாபாரிகளும் அமர்ந்திருந்தார்கள். மஹா ஸமர்த்தர்களான படகோட்டிகள் ஆவலுடன் நின்றிருந்தனர். இருகரைகளிலின்றும் இருபது முப்பதினாயிர ஜனங்கள் கண்கொட்டாமல்

Koviloor Digital Library


பந்தயப்படகுகளைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். அம் மாலுமிகளின் பரந்த மார்புகளும் திரண்டு உருண்டு இருந்த புஜங்களும் அவர்கள் அதிக பலவான்கள் என்பதையும் எவ்வித அபாயத்தையும் எதிர்க்கக்கூடிய அஞ்சாநெஞ்சர்க ளென்பதையும் உணர்த்தின. அவர்களுடைய கைகால்களின் முண்டாக்கள் இரும்பை நிகர்த்தன.

முதலில் ஒரு பந்தயம் வைத்து அதில் வீரகராத்துப் படகுகளில் அதிக துரிதமாய்ச் செல்வதை நரேந்திரனும், தேவிபுரப் படகுகளில் முதல் செல்வதை ஸ்ரீசனும் தேர்ந் தெடுக்க வேண்டுமென்றும், அப்புறம் அவ்வாறு பொறுக்கி யெடுக்கப்பட்ட படகுகள் தமக்குள் பந்தயம் வைக்கவேண்டு மென்றும், அப்பந்தயத்துக்குத் தாம் மத்தியஸ்தராயிருக்கும் படியும் நவகுமாரர் ஏற்பாடு செய்தார். இந்த ஏற்பாட்டை ஜனங்களெல்லோரும் குதூஹலமாய் அங்கீகரித்தனர். ஸ்ரீசன் தன் சுபாவப்படி நவகுமாரர் ஏற்பாட்டை அதிக ஆர்வத்துடன் ஸாவதானமாய் ஒப்புக்கொண்டான். நரேந் திரனோ சந்தோஷத்தால் தலைகால் தெரியாமல் பூரிப்படைந் தான்.

தேவிபுரத்துப் படகுகள் முதலில் புறப்பட்டன. போகவேண்டிய தூரம் சுமார் ஒருமைல். படகுகள் கீழ்த் திசை நோக்கி நவகுமாரருக்கு எதிராக நாட்டியிருந்த ஜயஸ்தம்பத்தையடைய நீரோட்டத்தின் உதவி வேண்டும். ஸ்ரீசன் நரேந்திரன் இருவரும் நவகுமாரர் பக்கத்தில் உட் கார்ந்திருந்தனர். பந்தயம் ஆரம்பித்தவுடன் நரேந்திரனுக்குத் தன் தேகமே தெரியாதபடி அவ்வளவு உத்ஸாஹம் உண்டாய்விட்டது. அவன் அடிக்கடி ஆனந்தக் கூச்சலிடு வதும் கைகொட்டுவதுமா யிருந்தான். ஸ்ரீசன் அவனது ஆர்ப்பரிப்பை அடக்கமுயன்றும் பிரயோசனப்படவில்லை.

Koviloor Digital Library


தேவிபுரத்துப் படகுகள் வந்தவிதம் பார்ப்பதற்கு மிகவும் அழகாயிருந்தது. ஒருமைல் தூரத்துக்கப்பால் இருந்ததால் முதலில் அவைகள் கண்ணுக்குப் புலப்படவில்லை; சற்றுநேரத்துக்கெல்லாம் அவைகள் கரும்புள்ளிகள் போலத் தோன்றின; வரவர அப்புள்ளிகள் பரிமாணத்தில் பெரியனவாகிக் கொண்டிருந்தன; துடுப்புக்களின் சப்தமும், படகோட்டிகளின் பாட்டும் கங்காநதியின் ஜலம்பாயும் ஒலியோடு கலந்து ஒலித்துக்கொண்டிருந்தன; வரவரப் படகுகள் அருகே வந்தன; அவைகள் கால்களை விரித்துக் கொண்டு ஜலத்தின்மேல் நீந்தும் நூதனமான கறுப்புப் பிராணிகளாகத் தோன்றின; கடைசியாகக் கொடிச் சீலைகள் கண்ணுக்குத் தென்பட்டன; எட்டுப் படகுகள் துடுப்புகளின் சப்தத்துடனும், படகுக்காரர்களுடைய பாட்டுகளுடனும் கோஷித்துக்கொண்டு குறிப்பிட்ட இடத்திற்கு வெகுசமீபத்தில் வந்துவிட்டன. கரையிலிருந்தவர்கள் எல்லோரும் ஒரே ஆரவாரஞ் செய்தனர். எல்லாப் படகுகளும் அருகே வரவர, முதல் படகு மின்னலையொத்த வேகத்துடன் வெற்றி ஸ்தம்பத்தை அணுகியபோது ஜனங்கள் ஓயாமல் காது செவிடாகும்படி கூப்பாடு போட்டுக் கை கொட்டி ஆர்ப்பரித்தனர். நவகுமாரர் எழுந்து அப் படகின் மாலுமிகளுக்கு அன்புமொழி கூறி அவர்களை வரவேற்றார். ஸ்திரீகளும் தாழ்ந்த குரலில் தங்களுடைய சந்தோஷத்தை உணர்த்தினர்.

அப்படகைச் செலுத்துவோன் நவகுமாரரிடமும் அவருடைய வம்சத்தவர்களிடமும் அத்தியந்தப் பிரீதியும் ராஜ விசுவாசமுமுடைய பழைய நாளைய மாலுமி. இவ்விஷயம் நவகுமாரருடைய சந்தோஷத்தை அதிகரித்தது. அவர் அம்மாலுமியைப் பார்த்துப் புன்சிரிப்புடன், "எனது நம்பிக்கையுள்ள சேவகா! நான் தேவிபுரத்தை விட்டு வந்து வெகு

Koviloor Digital Library



நாளாயிற்று. நான் அவ்விடம் இருந்தபொழுது உனக்கிருந்த பலமும் பராக்கிரமும் இன்றையவரைக்கும் சிறிதும் குன்றாமல் இருப்பதைக் காண எனக்கு அதிகமான திருப்தியாயிருக்கிறது" என்றார்.

இதைக் கேட்டு அடங்காப் பூரிப்படைந்த அம்மாலுமியானவன் நவகுமாரரை நமஸ்கரித்துப் பயபக்தி மரியாதையுடன், "ஸ்வாமி, பழைய தலைவரைக் காண்பதே வெற்றியைத் தருகின்றது" என்று வணக்கமாய்ப் பதிலுரைத்தான்.

"ஆமாம், என்றைக்கும் நீயே ஜயமடைவாய். இணையற்ற மாலுமியாகி நீ தேவிபுரத்தில் இருக்குமட்டும் வேறெவரும் வெற்றியடையார். இன்றிரவு வீரநகரத்தவர்கள் தோல்வி யடைவார்கள் என்பது நிச்சயம். நம் நண்பன் ஸ்ரீசனிடம் செல்; முதல்வந்த படகை அவன் தெரிந்தெடுப்பான்" என்றார் நவகுமாரர்.

ஸ்ரீசன் பந்தயப் படகைத் தெரிந்தெடுக்கச் சென்றான்; நரேந்திரனுடைய வதனம் சற்றுக் களங்கமடைந்தது. நவகுமாரர் மத்தியஸ்தர் அல்லவா? அவர் தேவிபுரத்தார் சார்பாய் அவ்வளவு தீரமாய்ப் பேசுவது நியாயமா? வீரநகரத்தார் தோல்வியடைவது நிச்சயம் என்று அவர் சொல்வது தகுமா? "வீரநகரத்துப் படகுகள் புறப்பட்டுவிட்டன" என்று யாவரும் கூவினார்கள். மிதமிஞ்சிய சந்தோஷமும் ஆத்திரமுமடைந்த நரேந்திரன் ஆற்றங்கரைக்கு ஓடினான்.

படகுகள் நெருங்க நெருங்கத் துடுப்புகள் ஜலத்தைத் தள்ளிக்கொண்டுவரும் சப்தமும், படகுக்காரர்கள் உல்லாசமாய்ப் பாடிக்கொண்டுவரும் பாட்டுக்களின் ஒலியும் கேட்கலாயின. அகன்ற அம்மஹாநதியின் நீர்ப்பரப்பின்மீது அருகே நெருங்க நெருங்க உருவத்தில் பெரியவைகளாகத் தென்பட்டுக்கொண்டே அதிவேகத்

Koviloor Digital Library



முடன் அப்படகுகள் வந்து கொண்டிருந்தன. ஆனால் படகுகள் வெற்றி ஸ்தம்பத்தை அணுகவணுக முன் பந்தயத்துக்கும் இப்பந்தயத்துக்கும் ஒரு வித்தியாசம் ஏற்பட்டது. தேவிபுரத்து முதல் மூன்று படகுகள் வெற்றி ஸ்தானத்தை ஏறக்குறைய ஏககாலத்திலேயே அடைந்தன வென்று சொல்லும்படியாக ஒன்றுங்கொன்று அவ்வளவு சமீபத்தில் வந்துகொண்டிருந்தன; அவைகளுக்குள் இடைவெளி ஒரு படகு நீளந்தான். ஆனால் வீரநகரப் படகுகளில் ஒரு படகு மாத்திரம் எல்லாவற்றிற்கும் முன்னால் வந்தது. அதற்கும் இரண்டாவது படகுக்கும் மத்தியில் அதிக தூரம் இருந்தது. அவ்வாறு அதிக வேகமாய் வருவது தனதருமைப் படகு என்றுணர்ந்த நரேந்திரன் ஆனந்தக் கூச்சலிட்டான். இதுவரைக்கும் வாய்பொத்தி மௌனமாய்க் கண்ணுற்றுக்கொண்டிருந்த வீரநகரத்துப் பிரதானிகளும், வீரநகரத்து மேன்மையைக் கோருபவர்களும், அப்படகைக் கண்டவுடன் செய்த ஆரவாரத்தைக் கண்டு நவகுமாரரே சற்று மனங்கலங்கினர். தேவிபுரத்தார் அதை விட அதிக ஆரவாரஞ் செய்தனர். அப்போதிருந்த சந்தர்ப்பம், இருதிறத்தாரும் கைகலந்து விடுவார்கள் எனத் தோன்றிற்று. உடனே கோகுல்தாஸ் தமது ஆசனத்தை விட்டு எழுந்திருக்கக் கூச்சலெல்லாம் திடீரென அடங்கி விட்டது.

ஆற்றங்கரையில் கூடியிருந்த ஜனங்கள் அனைவரும் அன்று பிற்பகல் பந்தயத்துக்கு வந்திருந்த படகுகளில் எதுவும் வீரநகரத்து முதல்படகுக்கு நிகராகாதென்று ஒரு வாய்ப்பட்டதுபோல் கூறினார்கள். வீரநகரம் ஜயம்பெறுவதைக் காண ஆத்திரத்துடன் காத்திருந்த நரேந்திரனுடைய பார்வை அதிக கம்பீரமாயிருந்தது. ஒரு நாழிகைக்கு முன் புன்னகை தவழ்ந்துகொண்டிருந்த நவகுமார

Koviloor Digital Library



ருடைய வதனம் சற்றே இருளடைந்தது. ஆனால் கோகுல் தாஸோ எதற்கும் கவலைப்படாமல் தமக்கு இயற்கையான மனோதைரியத்துடன் பேசத்தொடங்கினார்.

"வீரநகர வம்சத்துப் பாத்தியஸ்தர் தம் தகப்பனார் ராஜ்யத்திலுள்ள அதி துரிதமான படகைத் தெரிந்தெடுக்கலாம். ஆனால் நமது பந்தய விதிகளின்படி அப்படகிலுள்ளோர் அனைவரும் வீரநகரத்தினராகவே இருத்தல் அவசியம்."

கொட்டகை முழுவதும் நிச்சப்தமாயிருந்தது. கோகுல்தாஸ் கூறிய இரண்டாவது வாக்கியத்தின் கருத்து எவருக்கும் புலப்படவில்லை. மனக்கலக்கமுற்று நரேந்திரன் படபடப்புடன், "கோகுல்தாஸ், நீர் சொல்வது அதிசயமாயிருக்கிறதே! உமது கருத்தென்ன?" எனக் கேட்டான்.

நரேந்திரனுக்கு எவ்வளவு ஆத்திரம் உண்டான போதிலும் கோகுல்தாஸ் சிறிதும் கலங்காமல் சாவதானமாய், "நானோ வயோதிகன்; என் கண்கள் பார்வை மங்கியிருக்கக் கூடும். ஆயினும் எனக்குத் தெரிந்த மட்டும் வீரநகரத்து முதல்படகிலுள்ளவர்கள் அனைவரும் வீரநகரத்தார் தான் என்று சொல்வதற்கு இடமிருப்பதாகத் தோன்றவில்லையே" என்றார்.

"சுத்தப் பொய்" என்று ஆரம்பித்த நரேந்திரன் தன் தோழன் ஸ்ரீசன் கோகுல்தாஸ் பக்கம் நின்றிருத்தலைக் கண்டு சற்றுக் கோபாவேசத்தைத் தணித்துக்கொண்டு "ஸ்ரீசா, உனக்கு வயதாகவில்லையே. நீ பால்யன்தானே? உன் கண்கள் உன்னை ஏமாற்றிவிடுமென்ற ஐயமில்லையே. நீதான் சொல், பார்ப்போம். முதல் படகிலுள்ளவர்கள் அனைவரிடத்திலும் எனக்கும் உனக்கும் பால்யம் முதற்கொண்டு பரிசயமுண்டல்லவா? அவர்கள் யாவரும் வீர

Koviloor Digital Library



நகரத்தார்தாம் என்று சொல்வதற்கு ஏதாவது தடையுண்டோ?" எனக் கேட்டான்.

ஸ்ரீசன் சாந்தமாய், "வீரநகரத்து ராஜகுமாரன் சொல்வது வாஸ்தவமே. முதல் படகிலுள்ள துடுப்புக்காரர்கள் எல்லோரும் வீரநகரத்தாரே என்பதற்கு ஐயமே இல்லை. ஆனால் சுக்கான் திருப்புவோன் இன்னுனென்று எனக்கு நிச்சயமாய்த் தெரியாது" என்றான்.

மறுபடியும் எங்கே பார்த்தாலும் மௌனமே குடி கொண்டிருந்தது. இங்குமங்கும் பிரதான மனிதர்களை விசாரித்ததில், சுக்கான் பிடிப்பவனுடைய தந்தை ராஜமஹாலைச் சேர்ந்தவனென்றும், குமாரன் அவ்விடத்தில் தான் பிறந்தவனென்றும், ஆனால் அக்குமாரன் அடிக்கடி வீரநகரம் வந்து அவ்விடத்திலேயே உழைத்து ஜீவித்து வருபவனென்றும், அவன் நரேந்திரனுக்கு மிகவும் வேண்டியவனென்றும் சமாசாரம் வெளியாயிற்று.

நரேந்திரன் கோபாக்கிராந்தனாய் நவகுமாருடைய வயதுக்கும் அந்தஸ்துக்குமுரிய மட்டுமரியாதை யாவற்றையும் மறந்து அவரைப் பார்த்து, "மத்தியஸ்தர் நீர். அம்மனிதன் வீரநகரத்தானா அல்லவா என்பதைத் தெரிவிக்க வேண்டும்" என்று நின்ற இடத்திலிருந்தே உரத்துக் கூவினான்.

நவகுமாரர் தமக்குண்டான கோபத்தை யெல்லாம் அடக்கிக்கொண்டு, "அவன் வீரநகரத்தானல்லன். ராஜமஹாலைச் சேர்ந்தவன். அவன் செலுத்தும் படகு பந்தயத்துக்கு வரக்கூடாது" என்றார்.

நரேந்திரனுடைய முகம் கோவைப்பழம்போல் சிவக்க, அவனுடைய உதடுகளும் கண்களும் படபடவென்று துடித்தன. வீரநகரத்துப் பிரபுக்கள், பிரதானிகள், போர்வீரர்கள் முதலியோர் யாவரும் முணுமுணுத்தனர். அவர்க

Koviloor Digital Library



ளுடைய முகங்களைப் பார்த்தால் பலத்த கலகம் ஏற்படும் போலிருந்தது. இதைக்கண்ட ஸ்ரீசன் பரபரவென்று நரேந்திரனிடம் சென்று அவனுடைய செவிகளில் இரகசியமாய், "நரேந்திரா, கலகம் உண்டுபண்ணிவிடாதே. இவ்விடத்திலோ உன்னைச் சேர்ந்தவர்கள் மிகவும் கொஞ்சம் பேர். எதிரிகளோ கணக்கற்றிருக்கின்றனர். ஏதாவது மனஸ்தாபம் நேர்ந்தால் நீ தோல்வியடைவது நிச்சயம். அந்தப் பந்தலினின்று பார்த்துக்கொண்டிருக்கும் ஹேமலதையையும் என்னையும் பார்த்தாவது உனது கோபாவேசத்தை அடக்கிக்கொண்டு ஆண்மகனைப்போல் மேல் நடக்கவேண்டியதைப் பார். காலதேச வர்த்தமானங்கள் சரியாயில்லை" என்றான்.

தன்னை மீறியெழுந்த சினத்தை அதிகப் பிரயாசைப்பட்டு ஒருவாறு அடக்கிக்கொண்டு, நரேந்திரன், நெறித்து நிற்கும் தன் புருவங்களைத் துடைத்துவிட்டுச் சற்று நேரம் மௌனமாய் நின்று கொண்டிருந்தான். திடீரென அவனுக்கொரு புதிய யோசனை உதயமாயிற்று. சரேலென்று படகில் குதித்து, "நான் வீரநகரத்தான் தானே? அதற்குச் சந்தேகம் கிடையாதே? இப்படகின் சுக்கானை நானே பிடிக்கிறேன். தேவிபுரத்து அதிபதி வீரநகர தேவிபுரப் பந்தயத்தில் இப்போது தீர்ப்புச் சொல்லட்டும்" என்று நரேந்திரன் சுக்கானைப் பிடித்துக் கொண்டான். அவனது ஆச்சரியகரமான செய்கையைக் கண்டு யாவரும் அதிசயித்தனர். வீரநகரத்து இளஞ் ஜமீன்தார் சுக்கானைப் பிடிப்பதைத் தேவிபுரத்தார் அங்கீகரிக்கவில்லை. நவகுமாரர் அதைத் தடுக்கப் புகுந்தருணத்தில்,—காதவழிக்கு அப்பால் இருக்கும் ஆற்றைக் கடக்கக் காதத்துக்கு முன்னரே வஸ்திரத்தை இழுத்துக் கட்டும் இயல்பினராகிய—கோகுல்தாஸ், "நமது பந்தய

Koviloor Digital Library


விதிகளின்படி ஜமீன்தார் சுக்கான் பிடிப்பது சரியாகாது. ஆனால் வீரநகரத்துப் பாத்தியஸ்தர் விருப்பத்துக்கு மாறு சொல்லக்கூடாமல் என் எஜமானர் அவர் விஷயத்தில் இந்த விதியை அநுஷ்டிக்கவேண்டுமென்ற நிபந்தனையை நீக்குகிறார். எப்படியிருந்தபோதிலும் வீரநகரத்து ராஜவம்சத்தில் தோன்றியவர் தேவிபுரத்துப் பட்டிக்காட்டானுடன் போட்டி போடுவது அவருடைய ஸ்தானத்துக்கும் கம்பீரத்துக்கும் ஏற்றதாயில்லை. ஆதலால் தேவிபுரத்துப் படகை என் எஜமானரே செலுத்துவார். அவருடைய தருமபத்தினியும் செல்வப்புதல்வியும் மத்தியஸ்தர்களாயிருப்பார்கள்" என்று கூறி நவகுமாரர் செய்த யோசனையை மாற்றிவிட்டார்.

இந்த நூதனப் பிரேரபணை முடிந்தவுடன் முன்போல் யாவரும் வாய்மூடிச் சப்தமற்றிருந்தனர். இவ்வாறு தன்னைக் கட்டளையிட்டதுபோல் கோகுல்தாஸ் கூறிய ஏற்பாடு நவகுமாரர் மனத்துக்கே பிடிக்கவில்லை. தன் எஜமானர் முகஞ் சுளித்ததைக் கண்ட கோகுல்தாஸ், "எஜமானரே, நான் சொல்வதைக் கேளுங்கள். தேவிபுரம் ஜயமடைவது நிச்சயம்; வேண்டுமானால் எழுதித் தருகிறேன்" என்று இரகசியமாய் நவகுமாரர் காதில் உபதேசஞ் செய்தனர்.

வீரநகரத்துப் பெரியோர்கள் இந்த ஏற்பாட்டை அங்கீகரிக்காமல் தலையசைத்தனர். ஆனால் நரேந்திரனே கோகுல்தாஸ் ஏற்பாட்டைக் குதூஹலத்துடன் ஒப்புக்கொண்டபோது அவர்களுடைய யோசனைகளெல்லாம் பயனற்றுப் போயின. 'தான் சுக்கான் பிடித்துப் படகைச் செலுத்துவது, ஹேமலதை ஜயாபஜயத் தீர்மானஞ் செய்வது, இன்னும் என்ன வேண்டும்?' நரேந்திரனுடைய வாழ்க்கையே ஸாபல்யம் அடைந்தது. நரேந்திரன் ஆனந்த ஸாகரத்தில் ஆழ்ந்தான். சற்றுமுன் அவன்முகத்தில் வீசிக்கொண்டிருந்த

Koviloor Digital Library



கோபமெல்லாம் மாயமாய் மறைந்துவிட்டது. கோகுல் தாஸுக்குத் தான் என்றென்றைக்கும் கடமைப்பட்டதாக, அவன் அவருக்குப் பலமுறை வந்தனஞ் செய்தான். நவகுமாரரைப் பக்தி மரியாதையுடன் தேவிபுரப் படகுக்கு அழைத்துச் சென்றான். ஸ்திரீகள் இருந்த பக்கம் ஒரு முறை திரும்பிப் பார்த்தான். அவனுடைய மனம் பூரித்தது. கோகுல்தாஸ் போட்ட தூண்டுமுள் நன்றாய்ப் பதிந்து கொண்டது.

"நரேந்திரா, ஆத்திரப்படாதே, பத்திரம், அவசரம் வேண்டாம்; ஆழம் அதிகம்; நீரோட்டத்தின் வலிவும் அதிக மாயிருக்கிறது. ஜாக்கிரதை. இரண்டு வம்சங்களின் ஸௌபாக்கிய தௌர்பாக்கியங்களும் இரண்டு படகுகளையும் பற்றியிருக்கின்றன; படபடப்பு அடைந்தனையோ மோசம் போனாய்; கவனமாய்ப் பார்த்துக்கொள்" என்று ஸ்ரீசன் கூறிய புத்திமதி, செவிடன் காதில் சங்கு ஒலித்ததுபோல் இருந்தது. நரேந்திரனுடைய எண்ணம், நோக்கம், பார்வை எல்லாம் வேறிடம் சென்றிருந்தன. ஸ்ரீசன் செய்த எச்சரிக்கையை அவன் சிறிதும் கவனிக்கவில்லை. முன்னமே சூரியாஸ்தமன சமயமென்று சொன்னோம். இரண்டு படகுகளும் புறப்படும் ஸ்தானத்துக்கு வருவதற்குள் சூரியன் நன்றாய் அஸ்தமனமாகி இரவு தொடங்கிவிட்டது. கங்கா நதியின் புனித தீர்த்தத்தின்மீது குளிர்ந்த சந்திரிகையின் கிரணங்கள் அலைகளுடன் கூடி நடனஞ்செய்துகொண்டிருந்தன. இரண்டு படகுகளிலும் தொங்கவிடப் பட்டிருந்த கொடிச் சீலைகளும் புஷ்பத்தோரணங்களும் வெண்மையான ஜலத்தில் பிரதிபலிப்பது காண்போர் மனத்தைக் கவர்ந்தன. இரண்டு புராதன ராஜவம்சங்களுக்குள் நடக்கும் இந்தப் பிரபல படகுப் பந்தயம் எவ்விதமாக முடியுமோ என்ற ஆவல் அதிகரித்துள்ள ஜனங்கள் அனைவரும் தத்தம் கழுத்தை

Koviloor Digital Library



உயர உயரத் தூக்கிக் கண்களை நெறித்துப் பார்த்து நின்றனர்.

படகுகள் புறப்பட்டன; ஒரு வெடி தீர்க்கப்பட்டது. வெகு சீக்கிரத்தில் துடுப்புகள் கிரமமாய்ப் பிரயோகிக்கப்படுவதன் ஒலியும், படகோட்டிகள் உல்லாஸமாய்ப் பாடும் ஒலியும் கலந்துகேட்கலாயின. இரண்டு படகுகளும் கண்ணுக்கெட்டிய தூரத்தில் வருகையில் ஒன்றுக்கொன்று சற்றும் பின்வாங்கவில்லை; இரண்டும் சமவேகத்துடன் வந்துகொண்டிருந்தன. தத்தம் தலைவர்கள் படகில் உட்கார்ந்திருப்பதை உணர்ந்த படகோட்டிகள் அளவற்ற உத்ஸாஹம் உடையவர்களாய் ஒருவருக்கொருவர் பின்வாங்காமலும் சலிக்காமலும் அதிக ஊக்கத்துடன் வெற்றி ஸ்தம்பத்தை அடைய முயன்றனர். வாயுவேக மனோவேகத்துடன் வந்துகொண்டிருக்கும் படகுகளின் கொடிச்சீலைகள் காற்றில் படபடவென்று அதிக மும்முரமாய் அடித்துக்கொண்டிருந்தன. படகுகள் பந்தய எல்லையை அணுக அணுக இருகரையிலும் கூடியிருக்கும் திரளான ஜனங்கள் ஏகமாய்க் கைதட்டிக் கோஷஞ் செய்தனர்.

நதி மேலண்டைப் பக்கம் சற்றுத் திருப்பமாயிருந்தது. வீரநகரத்துப் படகு மேல்கையில் இருந்ததால் அந்தத் திருப்பம் அதற்கு உதவியாயிருந்தது. மேலும் தேவிபுரத்தாரைவிட வீரநகரத்தார் அதிக திடகாத்திரர்களாதலால், அவர்களுடைய படகு எளிதில் முன்னர் வந்தது. தன் படகு சற்று முன்வந்ததைக் கண்டு நரேந்திரனுக்குச் சந்தோஷம் தலைகால் தெரியவில்லை.

ஆனால் நவகுமாரர் முகம் சுளித்திருப்பதைக் கண்ட அவருடைய ஆட்கள் அவர் முணுமுணுப்பைக் கேட்டு, அவருடைய நோக்கத்தையறிந்து, அதை நிறைவேற்ற முயன்றனர். பலமாய்த் துடுப்புப் போட்டு அவர்கள் தங்கள்

Koviloor Digital Library



படகை வீரநகரத்துப் படகண்டை கொண்டு வந்து விட்டார்கள்.

நவகுமாரர் கோபத்துடன் கூறிய மொழிகள் இரண்டொன்று வீரநகரத்தார் காதுகளில் விழுந்தன. அவர்கள் திரும்பிப் பார்த்தனர்; நவகுமாரருடைய கண்களில் கோபாக்னி ஜ்வலித்தது. வீரநகரத்தார் சிறிது தளர்வடைந்தனர்; அவர்களுடைய படகு பின் தங்கியது; நவகுமாரர் தேஷிபுரப் படகில் வீற்றிருக்கையில் வீரநகரத்தார் தமது படகை முன்செலுத்தத் துணியமாட்டார்களென்று கரையிலுள்ளவர்கள் இரகசியமாய் ஒருவருக்கொருவர் சொல்லிக் கொள்ளலாயினர். கோகுல்தாஸ் எதிர்பார்த்தது இது தான். இந்தத் தருமசங்கடத்தை உத்தேசித்துத்தான் அவர் தமது எஜமானருக்குச் சுக்கான் பிடிக்கும் உத்தியோகம் வழங்கினர்.

மாற்றான் படகு தன்னை அணுகுவதைக் கண்டு நரேந்திரன் பற்களை நெறித்தான்; தன் படகுக்காரர்களைத் தன்னாலான மட்டும் கோபித்துப் பார்த்தான்; இரண்டு படகுகளுக்கும் இடையில் இன்னும் ஒரு படகு நீள தூரம் இருந்தது. ஆனல் அவ்விடத்தில் ஆறு கீழண்டை திரும்புவதால், கீழ்ப் பக்கமாயிருந்த தேஷிபுரப் படகு முன் சென்றது. நரேந்திரன் முன்செல்லக் கருதித் தன் படகை வீரநகரப் படகின் ஓரமாய்ச் செலுத்தினன்.

"ஜாக்கிரதை! ஜாக்கிரதை! ஒன்றுடன் ஒன்று மோதிக் கொள்ளப் போகிறது" என்று கரையிலுள்ளவர்கள் கூவினர். அந்தோ! சமயம் மிஞ்சிவிட்டது. இரண்டு படகுகளும் ஒன்றுடன் ஒன்று பலமாய் மோதி நதியில் மூழ்கி விட்டன; இந்தச் சம்பவம் நேர்ந்தது ஜயஸ்தம்பத்துக்கு வெகு அருகில். அவ்விடமிருந்த ஜனங்களெல்லோரும் ஓவென்று அலறினர்கள். ஸ்திரீகள் பயந்து கூக்-

Koviloor Digital Library


குரலிட்டனர். நூற்றுக்கணக்காக ஜனங்கள் நீர்நிலைக் கருகே விரைந்தோடி வந்தனர். எல்லாம் அல்லோல கல்லோலமாயிற்று.

படகோட்டிகள் நீந்தி எளிதில் கரையை அடைந்தனர். நல்ல நீச்சுக்காரனாகிய நரேந்திரனும் கரை சேர்ந்தான்; அவன் ஜலத்திலிருந்து வெளிவந்தவுடன் நவகுமாருடைய மெய் காப்பாளர்கள் அவனைச் சூழ்ந்துகொண்டனர். நரேந்திரனைச் சேர்ந்தவர்கள் எல்லாம் சில மனிதர்கள்தாம். அவர்கள் தங்களாலான மட்டும் நரேந்திரனை விடுவிக்க முயன்றனர். அவர்களால் ஒன்றும் ஸாத்தியப்படவில்லை; சீக்கிரத்தில் நிராயுதபாணிகளாயினர். நரேந்திரன் தேகமெல்லாம் ஜலம் சொட்டச் சொட்டக் குளிரால் கைகால் உதற, தாழ்வடைந்து அவமானப்பட்டுக் கைதியாய்ப் பரிதபிக்கத்தக்க நிலையில் நின்றான்.

தான் செய்த தவறு அவனுடைய கூர்மையான புத்திக்கு உடனே புலப்பட்டது. தன்னுடைய பைத்தியக்காரத்தனமான படபடப்பாலும் அஜாக்கிரதையாலும் ஆத்திரத்தாலும் தேவிபுரத்து ஜமீன்தாரரை மூழ்கடித்துவிட்டதாக அவன் எண்ணினான். இக்காரியத்தால் தன் ஆப்தமித்திரர்களையும் தனக்கிருந்த இரண்டொரு போர்வீரர்களையும் அவன் இழந்தான். அவன் குற்றவாளியாய்விட்டதால் வீரநகர ஜமீனும் அவனை விட்டு அகன்றுவிட்டது. ஸ்திரீகளிருக்கும் ஸ்தலத்தை ஒருமுறை பார்த்தான். உலகத்தில் தான் மிகவும் அருமை பாராட்டி நேசித்துவந்த தன் உயிர்க்குச் சமானமான பொருளுக்கும் தனக்கும் சம்பந்தம் அடியோடு அற்றுவிட்டதென்று அவன் கருதினான். ஈவு இரக்க மென்பதே கிஞ்சித்துமில்லாத வன்னெஞ்சர்களான பகைவர்கள் செய்யக்கூடிய துன்பங்கள், ஹிம்ஸைகளை விடப் பதின்மடங்கு அதிகமான துன்பங்கள், ஹிம்ஸைகள்

Koviloor Digital Library


அவனுடைய மனத்தைப் புண்படுத்தின. இதுவரைக்கும் எவருங் கண்டிராத நீர்த்துளிகள் அவன் கண்களினின்று தாரைதாரையாய்ப் பெருகியது பார்க்கப் பரிதாபகரமாயிருந்தது. ஆனால் சீக்கிரத்தில் அவனுடைய பிரமாதமான பயம் தொலைந்தது. இவ்வளவு அமர்க்களத்தி னிடையிலும் ஸ்ரீசன்மாத்திரம் தன் மனோதைரியத்தை இழக்கவில்லை. நவகுமாருடைய படகு கவிழ்ந்த இடத்தையும் அவர் தண்ணீரில் தத்தளிப்பதையும் அவன் கண்டான். வீரநகரத்துக்குள் கைதேர்ந்த நீச்சுக்காரனாகிய ஸ்ரீசன் உடனே ஜலத்தில் குதித்து, தனது பருத்த புஜங்களின் உதவியால் நீரோட்டத்திற்கு எதிராகச் சென்று, கடைசி முறையாய்த் தண்ணீரில் முழுகிக்கொண்டிருக்கும் ஜமீன்தாரரை அரைக்கச்சையைப் பிடித்து ஒரு கையால் ஜலத்தின்மேல் தூக்கி, மற்றொரு கையால் நீந்திக்கொண்டே பத்திரமாய்க் கரைக்குக் கொண்டுவந்து சேர்த்தான்.

நவகுமாரர் பந்தலுக்குள் நுழைந்தபோது நிர்ப்பாக்கியசாலியாகிய நரேந்திரன் வாடிய முகத்துடன் உட்கார்ந்திருப்பதையும், சினந் தலைக்கேறிய தம் மெய்காப்பாளர்களும் யுத்தவீரர்களும் அவனைச் சூழ்ந்துகொண்டு பலவிதத்தில் அவனைப் பயமுறுத்திக்கொண்டிருத்தலையும் கண்டார்.

"விலகி நில்லுங்கள்" என்று நவகுமாரர் உரத்துப் பேச, யுத்தவீரர்கள் யாவரும் பந்தலை விட்டு வெளியே போய்விட்டனர்.

ஆற்றில் இவ்வளவுநேரம் முழுகி முழுகி எழுந்து தத்தளித்துக்கொண்டிருந்ததனால் உண்டாகிய இளைப்பும் களைப்பும் ஒருபுறம் இருந்தபோதிலும், அவற்றைப் பொருட்படுத்தாமல், நவகுமாரர் மிதமிஞ்சிய கோபத்தால் வாய் தடுமாறிக்கொண்டே, "அடே, நரேந்திரா, பால்யம்முதல் உன்னை எடுத்து வளர்த்து, உன் பாட்டனாருடைய ஜமீனையும்

Koviloor Digital Library


உனக்காகச் சரிவரப் பரிபாலித்துவரும் உன் ரக்ஷகனும் உன் நண்பனும், என்றைக்கும் உனது நன்மையைக் கோரினவனுமாகிய என்னையே 'வளர்த்த கடா மார்பில் பாய்ந்ததாம்' என்றவாறு கொல்ல முயன்றனையே! அடே, கொலைபாதகா, துரோகி, நன்றிகெட்ட பதரே, உனக்கு என்னகதி கிடைக்கும்!" என்று கர்ஜித்தார்.

யாதுமறியா அப்பாலகன், தான் செய்ததை நினைத்து மனம்நொந்து மிகவும் பச்சாத்தாபப்பட்டு, "நவகுமாரரே, நான் செய்த மகாபாதகத்துக்கு நிகர் வேறெதுவும் இல்லை. என்னை இவ்விடத்திலே இரண்டு துண்டாய் வெட்டிப் போடும். இனி இவ்வுலகில் உயிர்த்திருக்க நான் சற்றும் அருகனல்லன்" என்றான்.

பந்தல் முழுவதும் யாவரும் வாயை மூடிக்கொண்டு கைகால்களைக்கூட அசைக்காமல் பதுமைகள்போல் நின்றுகொண்டிருந்தனர்.

ஸ்ரீசன் மாத்திரம் தாழ்ந்த குரலில், "அடியேன் கூறும் மொழிகளைச் சற்றுப் பெரிய மனம் செய்து கேட்கவேண்டும். என்னவ்வளவு நரேந்திரனுடன் பழகியவனும் அவனிடம் பரிசயமுடையவனும் வேறெவனும் இல்லை; அவன் முன்பின் யோசனையற்றவன்; ஆத்திரக்காரன்; படபடப்புடையவன்; ஏதாவது கோபமோ உத்ஸாகமோ உண்டாய்விட்டால் பைத்தியக்காரன்போல் அவனுக்குத் தன் தேகம் தனக்குத் தெரிவதில்லை. அவன் கள்வெறி கொண்டவன்போலாகிறான். மகாகனம் பொருந்திய தங்களுக்கு மயிரிழைகூடத் தீங்கு புரியவேண்டுமென்ற எண்ணமே அவனுக்குக் கனவிலும் இல்லை. இன்றிரவு நடந்த சம்பவம் அவனுடைய படபடப்பால் உண்டானது. அதற்காக நீங்கள் அவனைச் சினந்து பேசியது நியாயந்தான். 'உங்களுக்குத் தீங்கிழைக்க

Koviloor Digital Library



வேண்டும்; உங்களைக் கொல்லவேண்டும்' என்ற எண்ணம் லவலேசமும் அவனுக்கு இல்லை. நான் உறுதியாய்ச் சொல்வேன்" என்றான்.

சற்றுநேரம் எவரும் பேசவில்லை. கடைசியாக நவ குமாரர் தமது வாயினின்று புறப்படும் பிரதி வார்த்தையினுடையவும் பொருளையும் பலாபலத்தையும் அதிகமாய்க் கவனித்தவராய், "நரேந்திரன் என்னைக் கொல்லவேண்டுமென்ற துர்யோசனையுடன்தான் இக்காரியத்தைச் செய்தானே, அல்லது அவனுடைய ஆத்திரமும் படபடப்புந்தான் இந்தச் சம்பவத்துக்குக் காரணமோ, இவ்விஷயத்தை இன்னும் சில தினத்துக்குள் வங்காளத்துக் கவர்னர் விசாரித்துத் தீர்மானிப்பார். அதுவரைக்கும் அவனைத் தகுந்த பந்தோபஸ்துடன் பத்திரமாய்க் காத்துவருவது எனது கடமையாகும்" எனக் கூறிவிட்டுச் சற்றுத் தாழ்ந்த குரலாய், "ஸ்ரீசா, வா போவோம். வயோதிகன் நான். அதிகநேரம் ஈர வஸ்திரத்துடனிருப்பது உடம்புக்கு ஒத்துக் கொள்ளாது. இவ்வயோதிகரைப் பத்திரமாய்ப் பார்த்துக் கொள். நீ புரிந்த உபகாரத்துக்கு இவர் பிரதியுபகாரம் புரிவார். புரிவது நிச்சயம். இன்றிரவு நரேந்திரன் என்னைக் கொல்ல எத்தனித்தான். உன்னால் நான் உயிர் பிழைத்தேன்" என்றார்.

Koviloor Digital Library

## எட்டாம் அத்தியாயம்

### மாதவி கங்கணம்

ஒரு மாத காலமாயிற்று. நரேந்திரன் இன்னும் காவலில் இருந்தான். சரியானபடி நாலுபக்கமும் பந்தோபஸ்து செய்யப்பட்ட பிரத்தியேகமான ஒரு வீட்டில் அவன் வைக்கப் பட்டிருந்தான். அவனுடைய அந்தஸ்துக்குரிய சகல சௌகரியங்களும் அங்கே அமைக்கப்பட்டிருந்தன; ஆனால் அவனுடன் பேச எவரும் உள்ளே விடப்படவில்லை. தங்களுடைய பால்ய அதிபதியை மீட்க வீரநகரத்தார் ஏதாவது கலகம் செய்ய எத்தனிப்பார்கள் என்ற பயத்தால் காராக்கிருஹத்தைச் சுற்றிலும் தலைமுதல் கால்வரைக்கும் ஆயுதம் பூண்ட நல்ல திடகாத்திரர்களான போர்வீரர்கள் பலர் அல்லும் பகலும் இடைவிடாது காவலிருந்தனர். அப்படியும் நரேந்திரனை மீட்பதன் நிமித்தம் இரண்டொரு பிரயத்தனங்கள் நடந்தன; சிறைவீட்டைச் சுற்றிச் சிறுசிறு சண்டைகள் நேர்ந்தன; அச்சண்டைகளில் சிலர் மரிக்க நேரிட்டது. ஒன்றும் பிரயோசனப் படவில்லை. வேலை யொன்றுமின்றி இரவும் பகலும் இருந்த இடத்திலேயே இருந்துகொண்டு நரேந்திரன் துயரக்கடலில் ஆழ்ந்து, துணை யொருவருமில்லாமல் திரும்பத் திரும்பப் பலவிதத்திலும் மனத்தைப் புண்படுத்திக்கொண்டு சிந்தாக்கிராந்தனாயினன். கவலையால் தேகம்இளைத்து, முகம்வெளுத்துப் பார்ப்பதற்குப் பரிதபிக்கத்தக்க ஸ்திதியிலிருந்த நரேந்திரன் அடிக்கடி சாளரங்களின் வழியாய் நந்தவனங்களையும் அரண்மனைத் தோட்

Koviloor Digital Library


டங்களையும் பார்த்துக் கொண்டிருப்பான். அப்போது அவ் வனங்களில் வாலிபப் பருவத்தில் தான் உல்லாஸமாய்க் கழித்த நாட்கள் அவனுக்கு ஞாபகம் வரும். கண்களினின்று நீர் ஆருய்ப் பெருகி கண்கள் உலர்ந்து மப்படையும்வரை யில் அவன் அவ்விடத்திலேயே உட்கார்ந்திருப்பான். சற் றுத் தொலைவில் காணப்பட்ட குறுக்குக் கம்பிகளிட்ட சித்திரமான சாளரமொன்றில் பிரகாசித்துக்கொண்டிருக் கும் விளக்கு அவிந்து இரவின் இருளைவிடப் பன்மடங்கு அதிகமான அந்தகாரத்தால் மனம் சோர்வுறுமட்டும் நரேந்திரன் படுக்கப்போகமாட்டான்.

ராஜா மாநஸிம்ஹர் ராஜமஹலுக்கு வந்துவிட்டதாக வும், கூடிய சீக்கிரத்தில் வீரநகரத்துக்கு விஜயம் செய்வா ரென்றும் நவகுமாரருக்குச் செய்தி எட்டியது. அவரைத் தகுந்தபடி வரவேற்றுபசரிக்கப் பிரயத்தனங்கள் பலமாய் நடந்துகொண்டிருந்தன. நகர முழுவதும் வீதிகள் சுத்தம் செய்யப்பட்டு ஜலம் ஊற்றப்பட்டிருந்தன. வீதிகளில் ஆங் காங்கு வரவேற்புப் பந்தல்கள் பிறைமுகப் பந்தல்கள் போடப்பட்டிருந்தன; இருமருங்கும் மாவிலைத் தோரணங் களும், அசோக இலைத் தோரணங்களும், புஷ்பத் தோர ணங்களும் காற்றில் ஆடிக்கொண்டிருந்தன. பிரதிவீட்டு வாசலிலும் வாழைமரங்கள் கட்டியிருந்தார்கள். அத் தேச ஆசாரத்தின்படி பூர்ணகும்பங்கள் மரங்களடியில் வைக்கப்பட்டிருந்தன. வங்கதேசத்து ராஜப்பிரதிநிதி யைக் கண்டுகளிக்கக் கிராமாந்தரங்களிலிருந்து ஜனங் கள் ஆயிரக்கணக்காய் வந்திருந்தார்கள். மொகலாய வீரர் களும் ராஜபுத்திர வீரர்களும் புடைசூழ ஓர் உன்னதமான யானையின் மீதேறி ராஜா மாநஸிம்ஹர் நகரத்துக்குள் பிர வேசித்ததும், யாவரும் மங்கல வாத்தியத்துடன் அவரை வரவேற்றுக் கரகோஷஞ் செய்தனர். குழந்தைகளும் ஸ்திரீ

Koviloor Digital Library



களும் மாடிகளினின்று இனிய கீதங்கள் பாடிப் புஷ்பமாரி சொரிந்தனர். குண்டுகள் படபடவென்று வெடி தீர்த்துக் கொண்டிருக்கவும், ஜனங்கள் நல்வரவு கூறிக்கொண்டிருக்க வும் நூறு யுத்தங்களில் வாகைமாலை சூடியவரும், அக்பர் பெரு மானது இணையற்ற சேவகருமாகிய ராஜா மானஸிம்ஹர் பிரபு மண்டபத்துள் பிரவேசமாயினர். மெல்லிய துணிகளால் மறைக்கப்பட்டிருந்த சாளரங்களிலிருந்து சுந்தர ஸ்திரீ களும் பெண்மணிகளும் ராஜா மானஸிம்ஹரையும் அவருட னிருக்கும் வீரசிகாமணிகளையும் தங்களுடைய கரிய விழி களால் பார்த்தவண்ணமா யிருந்தனர்.

சில நாட்கள் களிப்பிலும் கேளிக்கையிலும் கழிந் தன; ராஜா மானஸிம்ஹர் அந்த நாலைந்து தினங்களில் ராஜ்ய விவகாரங்கள் ஒன்றும் பார்க்கவில்லை. ராஜபுத்திரர் கள் விராநகரத்துக் கடைத்தெருக்களையும் காட்சிகளையும் கண்டு மகிழ்ந்தனர். நீண்ட தாடிகளுள்ள மொகலாய வீரர் கள் சிலர், வங்காளத்து உத்தரீயங்களையும் பட்டுகளையும் வாங் கித் தரித்துக்கொண்டு ஊரெல்லாம் சுற்றித் திரிந்தனர். வேறு சிலர் தூரதேசத்தில் விட்டு வந்திருக்கும் தங்களுடைய ஆசை மனைவிகளுக்காக டக்கா மஸ்லின்கள் வாங்கினர்.

மாட்சிமைதங்கிய சக்கரவர்த்தியவர்களுடைய உத்தர வைப் பிரசுரப்படுத்தும் தினம் வந்தது. ஆகாயம் மப்பு மந் தாரமின்றி யிருந்தது. குளிர்ந்த காற்றுமெதுவாய் அடித்துக் கொண்டிருக்க, நீலவர்ணமான வானத்திலின்று கதிரவன் விராநகரம், அதன் கடைகள், கடைவீதிகள், வீடுகள், அங்கே கூடியிருந்த பல்லாயிர ஜனங்கள் யாவற்றின்மீதும் தனது பொன்னிறமான கிரணங்களை வீசினான். அரமனை வாயி லில் ஜனங்கள் ஜகஜகவென்று கூடியிருந்தனர். மேற்பரப் பில்லாத ஒரு மேடையின்மீது அலங்கரிக்கப்பட்டிருந்த ஸிம்ஹாஸனத்தில் அதி கம்பீரமாய் வீற்றிருந்தனர் ராஜா

Koviloor Digital Library



மாநஸிம்ஹர் பிரபு. அவரைச் சுற்றிலும் சக்கரவர்த்தியவர்களுடைய பிரதான உத்தியோகஸ்தர்கள் சிலர் அமர்ந்திருந்தனர். நவகுமாரரும் கோகுல்தாஸும் ஸிம்ஹாஸனத்துக்குப் பின்னால் கைகட்டிப் பணிவாய் நின்றுகொண்டிருந்தார்கள்.

ராஜப்பிரதிநிதியவர்கள் முன்பாக ஸைன்யங்கள் அணியணியாய்ச் சென்றன. இந்தியா முழுவதும் போர்க்களம் போர்க்களமாய் ஜயபவனி சென்றுவந்த மாநஸிம்ஹர் அவர்களுடைய ராஜபுத்திர, மொகலாய வீரர்கள் தங்கள் எஜமானர் முன்னிலையில் அதிவிமரிசையாய் அணிவகுத்துச் சென்றனர்.. அப்புறம் நடைபெற்ற குத்துச்சண்டைப் பந்தயங்களும், தேகவலிமையைப் பொறுத்த இதர அற்புதப் பந்தயங்களும், போலிச் சண்டைகளும் ஜனங்களை மகிழ்வித்தன.

பந்தயங்களெல்லாம் முடிவெய்தியவுடன் மாநஸிம்ஹர் "போர்வீரர்கள் இனி தங்கள் ஜாகைக்குச் செல்லலாம்; காலமாகிறது; ராஜாங்க அலுவல்கள் இருக்கின்றன" என்றார்.

நவகுமாரர் எதிர்வந்து வணங்கி, "மஹா ப்ரபூ! அப்படியே தங்களுடைய கட்டளைப்படி செய்யச் சித்தமாயிருக்கிறேன். ஒரு வேண்டுகோள். எமது எளிய நாடாகிய வங்காளத்தில் அதிகமாய்ப் பாராட்டப்படும் ஒரு வித்தையை, இங்கு விஜயஞ்செய்திருக்கும் பிரபுக்கள், மந்திரிகள்முன்னர் அரங்கேற்றி அவர்களைக் களிப்பிக்கவேண்டுமென்று அடியேன் கோருகிறேன். வங்காளம் காவியத்துக்கும், ஸங்கீதத்துக்கும் பெயர் வாய்ந்தது. அநுமதி அளித்தால் ஓர் எளிய கவி, தனது ஸங்கீதத்தால் சபையோரை மகிழ்விப்பார்" என்று விண்ணப்பித்தார்.

Koviloor Digital Library



"நவகுமாரரே! மாட்சிமைதங்கிய சக்ரவர்த்தியவர்களுடைய நம்பிக்கையான ஊழியர்களில் நீர் சிறந்தவர். உமது ராஜ விசுவாசத்தைக்கண்டு அக்பர் வள்ளல் மகிழ்வுற்றிருக்கிறார். தோடர்மல்லர் உமக்கிட்ட கடமையை நீர் யதார்த்தமாய் நிறைவேற்றியிருக்கிறீர். ஆதலால் உமது இஷ்டத்துக்கு மாறாக நாம் ஒன்றும் சொல்லமாட்டோம். உமது நாட்டு மதுரபாஷை எங்களுக்குத் தெரியாது. ஆயினும் கூடியமட்டும் அவற்றின் இனிமையை நாங்கள் அறியக்கூடும். உமது கவிச்சிரேஷ்டர் எங்கே? அவருடைய இனிய கீதங்களைக் கேட்கலாம்."

"அவ்வளவு உன்னத பட்டத்துக்கு அவர் அருகரல்லர். தனது ஜனன பூமியாகிய வர்த்தமானத்தை (பர்த்வானை) விட்டு வந்து பங்கூரா அரண்யத்தில் வசிப்பவர் அவர். சண்டி தேவியின் பிரஸாதம் பெற்றவர். அவருடைய பாடல்களெல்லாம் எமது காருண்ய தேவியாகிய ஸ்ரீசண்டி தேவியைப் பற்றிய ஸ்தோத்திரங்களாகும்" என்று விநயமாய் விடை பகர்ந்தார் நவகுமாரர்.

தேவிப்பிரசாதம் பெற்றுள்ள அக்கவிஞன் சண்டி தேவியைப்பற்றியும் நீரிலாகிலும் நிலத்திலாகிலும் ஆபத்து நேர்ந்த வேளைகளில் அந்தத் தேவியானவள் பல மனிதர்களுக்கு உதவி புரிந்த விருத்தாந்தங்களைப்பற்றியும் மெய்ம் மறந்து பாடத்தொடங்கினான். வங்காளத்தினின்று ஏராளமான சரக்குகளை யேற்றிக் கொண்டு போகும்போது வழியில் கப்பலுடைந்து இலங்கைத்தீவில் கைதியாக வருந்திய ஒரு வியாபாரியினுடைய மகன் தான் யௌவனப் பருவமடைந்தவுடன், தான் அறியாத் தனது தகப்பனாரைப்பற்றித் தன் தாயார் மூலமாய்க் கேள்விப்பட்டுத், தன் தந்தையை சிறை மீட்கவேண்டுமென்ற அவா மேலிட்டவனாய், சமுத்திரப் பிரயாணஞ் செய்து, கடைசியில் சண்டிதேவியின்

Koviloor Digital Library


பேருதவியாலும் கிருபையாலும் தன் தகப்பனரைச் சந்தித்து, அவரை சிறைமீட்டு முடிவில் தகப்பனும் பிள்ளையுமாய்த் தம் ஜன்மபூமி திரும்பிவந்த வரலாற்றைப் பாட்டாகப் பாடிமுடித்தான். ராஜா மாநஸிம்ஹர் அவனது அத்யந்த பக்திரஸத்தைக் கண்டு வியந்து அவனுக்குச் சரியான ஸன்மானஞ் செய்தார். அதி உன்னத பதவியிலிருக்கும் சிறந்த உத்தியோகஸ்தர்களும் அப்பாடலைக் கேட்டு மகிழ்ச்சியடைந்து புன்னகை செய்தனர். எவ்வளவோ ஸமர்த்தர்களான அக்பர் அவர்களது ராஜதந்திரிகளுடைய நாமதேயங்கள் மறந்துபோய் வெகு காலமாய் விட்டது. ஆனால் முகுந்த ராமரது பிரதாபமும் அவரியற்றிய காவியங்களும் நமது நாட்டு ஸாஹித்ய ரத்னங்களில் சிறந்த ரத்னங்களாய் இன்றைக்கும் விளங்காநிற்கின்றன.

மாநஸிம்ஹர் அளித்த வெகுமதியைப் பெற்றுக்கொண்டு அப்புறம் போய்விட்டார் கவீசுவரர். நரேந்திரன் வங்க தேசாதிபதி சமுகத்துக்குக் கொண்டுவரப்பட்டான். எல்லோரும் அவனுடன் மௌனமாயிருந்தனர். மிகவும் புராதனமானதொரு பிரபலமான பரம்பரையிலுதித்துக் கடைசியில் சொல்வார் வார்த்தையைக் கேட்டுக் கெட்டுப்போன மஹா தௌர்ப்பாக்கியசாலியாகிய அந்த சுந்தரச் சிறுவனை மாநஸிம்ஹர் அதிகப் பரிதாபத்துடன் பார்க்கலானர். "நரேந்திரநாத் ராய், ராஜா தோடர்மல்லர் அவர்களால் உனது பாட்டனார் மரியாதை செய்யப்பட்டதும், உனது குலத்து வீரக் கத்தியை அவர் உனது தொட்டிலில் வைத்ததுமாகிய இதே இடத்தில், இப்பொழுது நீ இந்தக் கோலத்துடன் நிற்பதைக் காண என் மனம் வருந்துகின்றது. மோசக்காரர்கள் வார்த்தையைக் காதுகொடுத்துக் கேட்டுப் பதைபதைத்து உனது இரக்ஷகரையே தீங்குக்குட்படுத்தினாய்; மேலும் உன்னைச் சேர்ந்தவர்கள் நியாய பரிபாலன சம்பந்த

Koviloor Digital Library


மாக உழைத்துக்கொண்டிருந்த வீரர்களுடன் சண்டையிட்டனர். உயிர்ச்சேதமும் நேர்ந்தது. ஆயினும் உனது பாட்டனார் குணத்தையும் அவருடைய கீர்த்தியையும் நான் கவனிக்கவேண்டியிருக்கிறது.

"உனது இரக்ஷகராகிய நவகுமாரர், நீ அவரைக் கொல்ல வேண்டுமென்ற உத்தேசம் வைத்திருந்ததாகக் கூறவில்லை. அவரை மரணத்தினின்றும் தப்புவித்த தயாளுவாகிய ஸ்ரீசனும், நீ அவ்வித துர்எண்ணம் கொண்டிருக்கக் கூடியவனல்லன் என்று சத்தியமாய்ச் சொல்லுகிறான். அவர்கள் சொல்வதை நான் ஒத்துக்கொள்கிறேன். நரேந்திரநாத்ராய், கேவலம் பத்துவயதுக் குழந்தைக்கூடச் செய்யப்பின்னடையும்படியான அவ்வளவு மதியீனமான காரியத்தை - நரேந்திரன் தன் படகை நவகுமாரர் படகை நோக்கிச் செலுத்தியது - நீ செய்ததன் காரணம், அந்த க்ஷணத்தில் உன்னையும் மிஞ்சிப்போன உனது ஆத்திரம்தான் என்பதை நான் நம்புகிறேன். ஆதலால் உன்மீது கொண்டுவரக்கூடிய அதமாதமமான குற்றத்தை நீ வேண்டுமென்று செய்தவனல்லன். உன்னை விடுதலைசெய்தோம்" என்றுரைத்தார் காருண்யவள்ளலாகிய மாநஸிம்ஹர் அவர்கள்.

தனது சத்துருக்கள் பலமாய்ச் செய்த ஏற்பாட்டைக் கண்டு தன்னுடைய கதி அதோகதி என்றெண்ணி இரத்தம் சுண்டி முகம் வெளுத்த நரேந்திரனுக்கு வங்க ராஜ்யாதிபதி கூறிய மொழிகள் எதிர்பார்க்காதபடி அவ்வளவு ஆறுதலாயிருந்தன. மாநஸிம்ஹரவர்களுடைய உதார குணத்தைக்கண்டு அவன் சந்தோஷமடைந்தான். அவர் கூறிய மொழிகள் அவன் மனத்தில் நன்ருய்ப் பதிந்தன. அவன் தன் நன்றியைக்காட்ட முயன்றான்; நா எழவில்லை; உதடுகள் மாத்திரம் அசைந்தன. கடைசியாய் அவன் கண்

Koviloor Digital Library



களினின்று பெருகிய இரண்டு பெரிய நீர்த்துளிகள் அவனுடைய நன்றியறிதலை உணர்த்தின.

"உனது ஜமீன் விஷயங்கள் எல்லாம் சீர்குலைந்து தாறுமாருய்க் கிடக்கின்றன. அடிக்கடிக் கலகங்கள் ஏற்படுகின்றன. ஒரு வருஷத்துக்கு முன்னரே வசூலாகவேண்டிய ராஜாங்கத் தீர்வை இன்னும் செலுத்தப்படவில்லை. உனக்கு இன்னும் பக்குவ வயது வரவில்லை; நவகுமாரர் தமது ஜமீனுக்குச் செல்லவேண்டியிருக்கிறது. ஆதலால் தோடர்மல்லர் செய்த ஏற்பாட்டை இப்போது மாற்றவேண்டுமென்று சக்கரவர்த்தியவர்கள் அபிப்பிராயப்படுகிருர்கள். நவகுமாரர் இன்றையதினம் தமது ஜமீனைத் திரும்பப்பெறுவார். நீயும் யுக்த வயதடைந்து, உனது ஜமீனிலிருந்து இப்போது நிற்கும் பாக்கித்தொகையும் பூர்த்தியாய்ப் பைசல் ஆகும் வரை, உனது ஜமீன் விவகாரங்களை இன்று நான் ஏற்படுத்தியிருக்கும் ராஜாங்கக் காரியஸ்தர் ஒருவர் பார்த்துவருவார்" என்ருர் மாநஸிம்ஹர்.

இந்த ஏற்பாடும் நரேந்திரனுக்குத் திருப்தியாய்த்தான் இருந்தது. 'நவகுமாரருடைய கொடுங்கோல் ஆதீனத்தினின்றும் தனது ஜமீன் விடுபடும்; தன்னுடைய பாட்டனர் ஸ்தானத்தை வஹிக்கத் தனக்கு யோக்கியதை வருமட்டும் வீரநகரத்தைச் சக்கரவர்த்தியவர்களுடைய காரியஸ்தர் ஒழுங்காய்ப் பாதுகாத்து அபிவிருத்தி செய்வார்; தான் அதற்குள் அந்த ஸ்தானத்துக்குரிய யோக்கியதையையும், போர்வீரருக்குரிய யுத்தப் பயிற்சிகளையும், உலக விவகாரங்களையும் அவற்றைச் சரிவர நடத்தும் முறைகளையும் கற்றுக்கொண்டு விடலாம்' எனக் கருதினன் நரேந்திரன்.

ராஜா மாநஸிம்ஹர் மறுபடியும் பேசலானர்: "ஆத்திரக்காரச் சிறுவனே, இனி நீ வீரநகரத்தில் தங்கி

Koviloor Digital Library


யிருப்பது யுக்தமன்று. உன் சிநேகிதர்கள் சிலர் உனக்கு வேண்டியமட்டும் துர்ப்போதனை செய்திருக்கிறார்கள். நீ இவ்விடமிருந்தால் அவர்கள் நிரிஷநேரம் சும்மா இருக்க மாட்டார்கள். அடிக்கடி ஏதாவது கலகங்கள் கிளப்பிக் கொண்டே யிருப்பார்கள்; அதனால் நமது காரியஸ்தருடைய வேலை தடைபடும். ஆயினும் உன்னை வேற்றார் அனுப்புவதற்கு எனக்கு இஷ்டமில்லை. எம்முடன் ராஜமஹால் வருவாயானால், அவ்விடமிருக்கும் உனது பாட்டனாரை அறிந்த ராஜபுத்திர உத்தியோகஸ்தர்கள் உம்மிடம் ஆதரவாயிருப்பார்கள். ராஜகுமாரனுக்கு வேண்டிய கலைகள் யாவற்றிலும் அவர்கள் உம்மைத் தேர்ச்சிபெறச் செய்வார்கள். மறுபடியும் நீ உனது பாட்டனார் ஜமீனைத் திரும்பப் பெறும்போது, சகலப் பிரஜைகளும் தமது தந்தையென அன்பு வைத்து நேசிக்கும் அக்பர் சக்கரவர்த்தியவர்களுடைய நம்பிக்கையுள்ள ஊழியனாயிருப்பாய்."

மானஸிம்ஹர் அவர்கள் இவ்வாறு பேசியபோது நரேந்திரனது முகத்தில் ஆனந்தக் குறிகள் காணப்பட்டன. ராஜா அவர்களிடத்தில் மிகவும் நன்றியுடையவனாகி அவன் ஆனந்த பாஷ்பம் சொரிந்தான்.

"மகா வல்லமைபொருந்திய ராஜசிகாமணியே, உமது வரம்புகடந்த தயாளத்துவம் என்னை நாவெழவொட்டாமற் செய்துவிட்டது. நான் ஆத்திரப்பட்டேன்; செய்ந்நன்றி கொன்ற பாதகனானேன். நான் அதிகக் கொடுமையான தண்டனை யடையவேண்டியிருக்க, நீர் என்மீது கருணைகூர்ந்து என் குற்றத்தை க்ஷமித்து எனக்கு ஸம்மானஞ் செய்தீர். கிருபாஸாகரமே! இனி நான் என் வம்சத்தின் மேன்மையை யுணர்ந்தவனாய் உமது அன்பிற்கும் தயவுக்கும் பாத்திரனாயிருக்க முயல்வேன். எந்தப் பிரதேசத்திலாயினும் சரி, நான் சக்கரவர்த்தியவர்களுடைய மனதுக்குத் திருப்தி

Koviloor Digital Library



யாய், நம்பிக்கையாய் உழைப்பேன்" என்று நரேந்திரன் வணக்கமாய்க் கூறினான். இவ்வார்த்தைகளைக் கேட்டு ராஜா மாநஸிம்ஹர் அதிகச் சந்தோஷப்பட்டார். அக்பர் அகண்ட ராஜ்யத்தைப் பலப்படுத்து நிமித்தம் ஒரு புராதன ராஜ வம்சத்தாரின் முதிர்ந்த ராஜபக்தியைப் பெறுவது மாநஸிம்ஹர் அவர்களுக்கு அத்யந்த ஆனந்தத்தை உண்டு பண்ணிற்று.

அன்றிரவு வீரநகர முழுவதும் எங்கே கண்டாலும் வரிசை வரிசையாய் விளக்குகள் எரிந்துகொண்டிருந்தன. ஊரெல்லாம் பேரிகைகளொலியும், சங்கநாதமுமே கேட்டுக் கொண்டிருந்தன. ராஜபக்தி யென்பது நமது மதக் கோட்பாடுகளில் எவ்வளவு முக்கியமானதொரு அம்சமோ, அவ்வாறே அது நமது நாட்டு ஜனங்களுடைய பிரதான குணநிசயங்களிலுமொன்றாகும்? வீரநகரத்து வாலிப அதிபதியினிடம் ராஜா மாநஸிம்ஹர் காண்பித்த உதார குணத்தைக் கண்டு ஜனங்களெல்லாம் திருப்தியடைந்து அவரைப் பெரிதும் விசுவாசித்தனர். பரம தரித்திரர்கள் வீட்டு வாயிலிலும் ஒரு மண் தீபமாவது எரிந்துகொண்டிருந்தது. ஜனங்கள் மாடிகளின்மீது உட்கார்ந்து சந்தோஷமாய்ப் பாடிக்கொண்டிருந்தார்கள். ஆக்ராவில் தனியரசு புரியும் பாக்ஷா அவர்களைப்பற்றியும், காருண்யவள்ளலாகிய வங்க தேசாதிபதியைப்பற்றியும், விடுதலைபெற்ற வீரநகரத் தலைவரைப்பற்றியுமே கடைத்தெருக்களிலும், இன்னும், ஜனக் கூட்டமான இதர இடங்களிலும் பேச்சாயிருந்தது. அச் சிறு நகரம் இரைச்சலடங்கி நிச்சப்தமாவதற்கு மணி பன்னிரண்டுக்கு மேலாயிற்று.

மறுநாள் காலை ஹேமலதை மலர்கொய்ய நந்தவனம் சென்றபோது அங்கே நரேந்திரன் வாடிய முகத்துடன் நிற்பதைக் கண்டாள். கண்டவுடன் ஒரு க்ஷணநேரம்

Koviloor Digital Library



திடுக்கிட்டு நின்றாள். ஆனால் முதல்நாள் நடந்த சங்கதிகளெல்லாவற்றையும் அவள் அறிவாளாதலால், நரேந்திரன் அந்நாழிகையில் அவ்விடம் வந்தது, தன்னிடம் விடைபெற்றுச் செல்வதற்கென்று அவள் தெரிந்துகொண்டாள். நாணமுற்றும் பின்னடைவதற்குச் சமயம் அதுவன்றென உணர்ந்து ஹேமலதை சாந்தமாயும் தைரியமாயும் அவன் முன் நின்றாள். சற்றைக்கெல்லாம் தன் பால்யச் சிநேகிதனருகே வந்து மௌனமாய் அவள் தன்னிரு கரங்களாலும் அவன் கைகளைப் பிடித்துக்கொண்டாள். ஒருவருடன் ஒருவர் பேசாவிட்டாலும், இருவரும் தமது பரஸ்பர எண்ணங்களை நன்றாய் உணர்ந்தனர். இருவருடைய கண்களிலும் நீர் ததும்பிற்று.

“நரேந்திரா, நீ வீரநகரத்தை விட்டகன்று, வெகு காலம் வரைக்கும் இந்தப் பக்கம் எட்டிப்பாராமல் போர் வீரனாகக் காலங்கழிக்கப்போகிறாய் என்பது உண்மைதானா? இதுவரைக்கும் நாம் அத்யந்த நண்பர்களா யிருந்தோம். இனி வருங்காலத்தும் அந்த நட்புக்கு யாதொரு ஹானியும் வராதென்று நம்புகிறேன்.”

“ஹேமலதே, என்னிடம் இவ்வளவு பரிவாய்ப் பேசியதற்காகக் கடவுள் உன்னை ஆசிர்வதிப்பாராக. ஆம், நாம் நண்பர்களாயிருந்தது வாஸ்தவந்தான். ஹேமலதே, என் உயிருள்ளமட்டும் நான் என்றைக்கும் உன் ஞாபகமாகவே இருப்பேன்.”

“நீ என்னை எக்காலமும் மறக்கமாட்டாய் என்பதை நான் அறிவேன். நீ என்மீது வைத்திருக்கும் அன்பும் ஆர்வமும் எனக்கு நன்றாய்த் தெரியும். உனது உத்தம குணம், சிறந்த கம்பீர மனது, பெருந்தகை எண்ணங்கள் யாவும் நான் நன்கறிவேன். எல்லோரும் உன்மீது பழி கூறுங்காலத்தும், உனது பெருந்தன்மையான மனத்தில்

Koviloor Digital Library


அவ்வித துராலோசனைகள் எவையும் குடிகொண்டிராவென நான் பூரணமாய் நம்பினேன். நரேந்திரா, ஒன்றுமாத்திரம் நான் கேட்கிறேன். சில சந்தர்ப்பங்களில் உன்னையும் அறியாமல் கோபமும் ஆத்திரமும் உன் மனத்தைக் கவர்வதேன்?"

"எனதருமை ஹேமலதே, நான் ஆத்திரக்காரன் மட்டுந்தானா? நான் அதிகப் பதட்டமுடையவன்; சுத்த பைத்தியக்காரன்; முழுமூடன்; சிறுபிள்ளைத்தனமாய் ஓர் அசட்டுக் கர்வமுற்று நான் உன் தகப்பனாரை ஆபத்துக்குள்ளாக்கினேன். ஆனால் ஈசுவரன் அருள் சிறிது என் பக்கம் இருந்தது. உன் தகப்பனார் பிழைத்தெழுந்தார். அச் சமயம் நான் உனக்கும் உன் தாயாருக்கும் உண்டு பண்ணிய மனோவேதனைக்காக என்னை நீ மன்னிக்கவேண்டும்."

"நரேந்திரா, என் தாயார் அப்போதே உன்னை மன்னித்துவிட்டு, உனக்காக என் தகப்பனாருடன் எவ்வளவோ பரிந்து பேசினாள். நீ நிரபராதி என்றறிந்த நான் உன்னை மன்னிக்க வேண்டிய அவசியம் ஏதுமில்லை; உனது பௌருஷத்துக்கும் பெருந்தன்மைக்கும் தகுந்தவாறு நீ, அமைதியாயும் பொறுமையாயுமிருக்கக் கற்கவேண்டும். வங்காள முழுவதும், வீரநகரத்து ராஜகுடும்பத்துக்கு நிகரான ராஜகுடும்பம் எதுவுங்கிடையாது. நரேந்திரா, நீ நீடூழி காலம் வாழ்ந்திருந்து வீரநகரத்து அதிபதியாகி உனது பாட்டனார் பெயரை முன்னுக்குக் கொண்டுவரவேண்டும்."

"நீ என்னை மன்னித்துவிட்டனை என்பதைக் கேட்டவுடன் என் மனத்தைவிட்டு ஒரு பெரிய பாரம் ஒழிந்தது. நான் பூர்வத்தில் எவ்வளவோ கஷ்டங்கள் அநுபவித்திருக்கிறேன். இனி வருங்காலத்திலும் எத்தனையோ துன்பங்கள் அநுபவிக்கவேண்டும். ஆனால் ஒன்று, இனி எவ்விதக் கஷ்டகாலம் வந்தாலும் அவஸரத்துக்கும் படபடப்புக்கும்

Koviloor Digital Library


ஆளாகி அவதிப்படாமல் ஆண்மையுடன் அவற்றை அநுபவிப்பேன் என்பது நிச்சயம். இப்போது பட்டபாடு போதும்; புத்தி வந்தது. இந்தச் சம்பவத்தால் நான் என்றென்றைக்கும் மறக்கக்கூடாத நீதியைக் கற்றுக் கொண்டேன்.

"ஆனால் கொஞ்ச காலத்துக்குப் பின்னர் நீ உனது ஜமீனைத் திரும்ப அடையமாட்டாயோ? என் தகப்பனார் உன் விஷயத்தில் மனச்சாக்ஷிக்கு விரோதமில்லாமல் தனக்கிட்ட வேலையைச் செய்து முடித்தார். நரேந்திரா, என் தாயாரும் என்னை வளர்த்ததுபோலவே உன்னையும் செல்வமாய் வளர்த்துவந்தாள்".

"ஹேமலதே, உன் தாயாரைப்போலும் தாயார் இவ்வுலகில் கிடைப்பது ஸாத்தியமா? அவள் மஹா புண்ணியவதி. என்னுடைய சொந்தத் தாயார்கூட என்னிடம் அவ்வளவு அன்பு பாராட்டியிருக்கமாட்டாள். உன் தகப்பனாரைப் பற்றியும் நான் சிறிதும் இழிவாய்க் கூறமாட்டேன்; நான் அவர் செய்த நன்றியை மறந்தது உண்மையே. அப்படியிருந்தும் அவர் என்னை க்ஷமித்தருளினார். இப்போது நாம் பிரிகிறோம். இனி எப்போது சந்திப்போமோ, அல்லது சந்திக்க மாட்டோமோ. ஆகையால் இதுபரியந்தம் என் மனத்தில் அடக்கிவைத்திருந்ததை உன்னிடம் வாய்விட்டுச் சொல்லிவிடுகிறேன். ஹேமலதே, நீயே என் வாழ்க்கைக்கு ஆதாரம். உன்னிடம் எவ்வளவோ ஆசை எனக்கு. இதுவரைக்கும் உன்னையே நம்பியிருந்தேன். நான் உன்னை எவ்வளவோ ஆர்வத்துடன் காதலித்திருந்தேன்; என் கண்ணே!"

ஹேமலதை முகத்தைத் திருப்பிக்கொண்டு மௌனமாய் நின்றனள். அவளோ இளங்குழந்தை; காதல் என்னும் பதத்தின் பொருளையே கிரகிக்கக் கூடாதவள்.

Koviloor Digital Library



ஆயினும் அம்மொழியைக் கேட்டவுடன் அவளை யறியாமலே அவளுடைய மனம் படபடவென்று அடித்துக் கொண்டது.

"ஹேமலதே இதுவரைக்கும் உன் விஷயமாய் நான் எண்ணியிருந்த எண்ணத்தை ஒருபோதும் வெளியிட்டதில்லை. ஆனால் அதை முதல்தரமும் கடைசித்தரமுமாய் வெளியிட வேண்டிய சமயம் இப்போது வந்திருக்கிறது. நமது வாழ் நாட்களில் நமது அந்தரங்க எண்ணங்களைத் தைரியமாய் வெளியிடக்கூடிய சமயம் ஒருமுறை ஏற்படுகிறது. உனது அன்பார்ந்த தாயாரும், குற்றங்களை க்ஷமிக்கும் இயல்புள்ள உனது தகப்பனாரும் உன்னை எனக்கு மணம்புரிவிப்பார்களென்றும், நாம் பால்யத்தில் கூடியிருந்ததுபோலவே என்றென்றைக்கும் சுக தம்பதிகளாய் இருப்போமென்றும் நான் மனோராஜ்யம் செய்துகொண்டிருந்தேன். ஹேமலதே, முகத்தை அப்புறம் திருப்பிக்கொள்ளாதே. நாம் பிரிய வேண்டிய காலம் நெருங்கிவிட்டது; இன்னும் நான் சொல்ல வேண்டிய வார்த்தைகள் இரண்டொன்றே இருக்கின்றன. பிரதி இரவும் வானத்திலுள்ள நக்ஷத்திரங்களைப் பார்த்துக் கொண்டே இந்தப் பூங்காவனத்தில் பால்யத்தில் உத்ஸாகமாய் நாம் ஒன்றுகூடி விளையாடிக்கொண்டிருந்ததுபோலவே என்றைக்கும் அவைகளைப் பார்த்துக்கொண்டே சந்தோஷமாய் நாம் கூடியிருப்போம் என்று மனப்பூர்த்தியாய் நம்பியிருந்தேன். ஆற்றங்கரையிலோ, வயல்புறங்களிலோ தனித்து உலவும்போதெல்லாம், ஹேமலதே! நீ என் கருத்துக்கிசைந்த கண்மணியாகவும் வீரநகரத்து மஹிஷியாகவும் விளங்குவாய் என்று நான் மனப்பால் குடித்துக்கொண்டிருந்தேன்" என்றான் நரேந்திரன்.

இம்மொழிகளைக் கேட்கக் கேட்க ஹேமலதையின் முகம் இரத்த ஓட்டத்தால் சிவந்து, கண்களினின்று நீர்

Koviloor Digital Library



பெருகிற்று. ஆனால் அவள் அக்குறிகளை நரேந்திரனுக்குக் கண்களுக்குத் தென்படாதவண்ணம் மறைத்துக்கொண்டாள். அவளுடைய மனத்தில் இதுவரைக்கும் தோன்றாததொரு புத்துணர்ச்சி உண்டாயிற்று. அதையும் வாய்விட்டுச் சொல்லாமல் மௌனமாய் நின்றாள்.

"ஹேமலதே, நான் சொல்வதைச் சற்றுச் செவிகொடுத்துக் கேள். இவ்விஷயங்களைப்பற்றி நான் பன்னிப்பன்னிச் சொல்வது சரியில்லாமலிருக்கலாம்; ஆனால் அவற்றை இனி எப்போது நான் உன்னிடம் சொல்லப்போகிறேன்? எனது எண்ணங்களெல்லாம் வியர்த்தமாய்விட்டன; கேவலம் மனோராஜ்யமாகவே சூனியமாய் முடிந்தன. நானோ இப்போது நாட்டினின்றும் பகிஷ்காரப் படுத்தப்பட்டவன். இன்றையதினம் ராஜமஹாலுக்குப் புறப்படுகிறேன். ராஜா மானஸிம்ஹர் என்னிடம் அதிக அன்பு பாராட்டுகிறார். அவர் என் விஷயமாய் அதிகக் கவலை எடுத்துக்கொண்டிருக்கிறார். அவ்விடத்தில் எனது பாட்டனாருடைய நண்பர்கள் உளர். அவர்கள் எனக்கு யுத்தத்துக்கு வேண்டிய கலைகளெல்லாம் கற்பிப்பார்கள். ராஜா அவர்களுடன் நான் ஊரூராய்த் தேசந்தேசமாய்ச் சுற்றித்திரிவேன். ஆனால் என் மனம் மாத்திரம் என்றால் எக்காலத்தும் மறக்கக்கூடாத ஒன்றுபிலில் லயித்து விரநகரத்தில் தங்கியிருக்கும். நான் தூர தேசங்களுக்குச் சென்றபின், ஹேமலதே! நீ என்னை மறக்காமல் இருப்பாயோ?" என ஏங்கினான் நரேந்திரன்.

இவ்வளவு பரிதாபமாகக்கூறும் மொழிகளைச் செவியிற்கொண்டு ஹேமலதை, இனி ஒரு நிமிஷங்கூடத் தன் கண்ணீரைத் தடுக்க ஆற்றலில்லாதவளாய்க் கண்களினின்று நீர் பிரவகித்தவண்ணமாய்,

"நரேந்திரா, உன்னை மறந்து நான் பிழைத்திருப்பேனோ?" என்று வாய்குழறச் சொன்னாள்.

Koviloor Digital Library


"வேண்டாம், அழாதே. நாம் பிரியவேண்டிய இந்தச் சமயத்தில் நீ இவ்வாறு புலம்புவது ஆகாது. சூரியோதய காலம் சமீபித்துவிட்டது; நான் இனி வெகுநேரம் தாமதிக்கலாகாது. ஆனால் உன்னைவிட்டுப் பிரிவதற்குமுன் என் அடையாளம் ஒன்று உன்னிடம் கொடுத்துச் செல்ல வேண்டுமென்பது எனது கடைசிக் கோரிக்கை. இதோ, பால்யத்தில் நாம் இந்த மல்லிகைச் செடியை வைத்துப் பிரதி தினமும் ஜலம் வார்த்து வளர்த்தோம். இப்போது இது செழிப்பாய் வளர்ந்து புஷ்பித்திருக்கிறது. இதன் மூலமாய் என் ஞாபகம் உனக்கிருக்கும்படிச் செய்யவேண்டுமென்று நான் இஷ்டப்படுகிறேன்" என்று கூறி நரேந்திரன் அந்த மல்லிகைப் புதரினின்றும் புஷ்பம் நிறைந்த ஒரு கொடியைப் பறித்து அதை ஒரு வளையலாகச் செய்து ஹேமலதையின் கரத்தைப்பற்றி மெதுவாய் அந்த மாதவீ கங்கணத்தை, மல்லிகை வளையலை அவள் கையில் இட்டான்.

"புஷ்பங்கள் இரண்டொரு தினங்களில் வாடி உலர்ந்து போகும்; ஆனால் கொடி மாத்திரம் வெகுகாலம் இருக்கும்; ஹேமலதே, நீ என் ஞாபகம் மறவாமல் என்னைப்பற்றி அன்பாய் நினைத்துக்கொண்டிருக்கும் வரையில் இந்த மாதவீ கங்கணத்தை என் ஞாபகார்த்தமாகத் தரித்திரு. என்றைய தினம் நீ என்னை மறக்கின்றனையோ அன்றே இந்தக் கங்கணத்தைப் பிரயோஜனமற்றதொரு உலர்ந்துபோன கொம்பெனக் கழற்றி எறிந்துவிடு" என்று நரேந்திரன் கூறி முடித்தான்.

கதிரவனது கிரணங்கள் ஆகாயமெங்கும் பரவிப் பூமியின்மீது பாயத் தொடங்கின. துணையற்று ஏகாந்தமாய்ச் செல்லும் ஒரு நாடோடி ராஜமஹலுக்குச் செல்லும்

Koviloor Digital Library


மார்க்கத்தில், அகன்ற கங்காநதியை ஒரு சிறிய படகில் கடந்துகொண்டிருந்தான். அதே சமயம் வீரநகரத்து அரண்மனை ஆலயத்தின் வாசற்படியில், சிறிது காலத்துக்கு முன்னர்தான் யௌவன பருவத்தையடைந்த ஒரு பெண் மணி உட்கார்ந்துகொண்டு, அப்பருவத்தில் முதல் முதலாய் ஏற்பட்ட வருத்தத்தால் கண்ணீர் சொரிந்துகொண் டிருந்தாள்.



Koviloor Digital Library

# முதல் அத்தியாயம்

## அடிமைப் பெண்

நரேந்திரன் ஊரைவிட்டு நாட்டைவிட்டு வந்து ஒன்பது வருஷகாலமாயிற்று. இந்த ஒன்பது வருஷமும் அவன் ஜயாபஜயங்கள் பெற்றுப் போர்க்களம் போர்க்களமாய்க் காலங்கழித்து வந்தான். இப்போது அவனுக்கு வயது இருபத்தைந்து. அக்பரது சேனையில் உயர்ந்த உத்தியோகம் வகித்திருந்தான். ஆனல் அவனுடைய ஜமீன் மாத்திரம் இன்னும் காரியஸ்தர் பார்வையில்தான் இருந்தது. வீரநகரத்திலிருந்தாவது தேவிபுரத்திலிருந்தாவது அவனுக்கு ஒரு சமாசாரமும் எட்டவில்லை. ஓயாமல் ஊரூராய்ச் சேனையுடன் திரிந்துகொண்டிருந்தபடியால் தன் வீடு வாசல், பந்து மித்திரர்களைப் பற்றி நினைக்கக்கூட நரேந்திரனுக்கு அவகாசமில்லாமல் போயிற்று.

மனிதனுக்கு யௌவன பருவத்தின் ஆரம்பத்தில் தோன்றும் அவாக்கள், உணர்ச்சிகள், தூண்டுதல்கள் யாவும் காலத்தால் தளர்வடைந்து பலங் குன்றிவிடுகின்றன; பிரிவாலுண்டாகும் துக்கமும் மனவருத்தங்களுங்கூட காலக்கிரமத்தில் மறைந்துவிடுகின்றன. ஆண்டுகள் கடக்கக் கடக்க யௌவன பருவத்திய ஆசைக்கேடுகளும், காரிய விக்கினங்களும் சகஜமாய் விடுகின்றன. இருந்தபோதிலும், பால்யகால ஞாபகங்களும், சம்பவங்களும், வீரநகரத்தின் அரண்மனை உத்தியானவனமும், குளக்கரைக் கோயிலும் சிற்சில சமயங்களில் நரேந்திரனது மனத்தில் தோன்றிக்

Koviloor Digital Library



கொண்டிருந்தன. நிலையான வீடுவாயிலின்றிக் கூடாரமே வாசஸ்தலமாகப் பெற்று, வேளை அன்னம் வேளையிலகப் படாமல் மழையிலும் கானலிலும் கஷ்டப்பட்டு, யுத்த கோலம்பூண்டு, காலங்கழிக்கும் நரேந்திரன், அன்பும் பரிசுத்தமுமே உருக்கி வார்க்கப்பட்ட தனது மனதுக்கினிய விக்கிரகம் தனது ஞாபகத்துக்குவர, சகலவித கஷ்ட நிஷ்டூரங்களையும் மறந்து அடிக்கடிப் பெருமூச்செறிவான்.

ஆனால் தற்சமயம் பேச்சுமூச்சற்றுப் பிரஞ்ஞைதப்பிப் படுத்த படுக்கையாய்க் கிடக்கும் நரேந்திரனுக்கு அந்நிகாளைய ஞாபகங்களெல்லாம் சற்று மப்படைந்திருந்தது. அவன் அநேக தினங்களாகக் கடும் ஜ்வரத்தால் ஸ்மரணையற்றுக் கிடந்தான்; முகமறியாத நாட்டில், முன்பின் பரிசயமில்லாத ஸ்திரீகள் அவனுக்குச் சிகிச்சை செய்துகொண்டிருந்தனர்; நிம்மதியற்றுப் படுக்கையில் புரண்டவண்ணமாயிருக்கும் வியாதியஸ்தன் கை நாடியைப் பார்த்துப் பிரபல வைத்தியர்களெல்லாம் கைவிட்டனர். அவனுடைய திடகாத்திரமும், இளம் இரத்தமும், அவ்விடத்தில் அவனுக்கு ஏற்பட்ட ஓய்வும், தேவதா சுசுரூஷையுமே கடைசியில் அவனை மரணத்தினின்றும் தப்புவித்தன.

ஒருநாள் நல்ல நிசி; அவன் கண்விழித்துக் கொண்டான். அவன் படுத்திருந்த அறையில் வெள்ளிச் சங்கிலிகளால் தொங்க விடப்பட்டிருக்கும் பெரிய பெரிய விளக்குகள் சாந்தமான ஒளியுடன் பிரகாசித்துக்கொண்டிருந்தன. சுவர்களெல்லாம் மணற்கற்களால் கட்டப்பட்டு ஆங்காங்கு வெள்ளை, கறுப்பு சலவைக் கற்கள் பதிக்கப்பெற்றிருந்தன. கொடிகளைப்போலும், புஷ்பங்களைப்போலும், விலையுயர்ந்த கற்களால் இழைக்கப்பட்டிருந்த கல் ஸ்தம்பங்கள் மிகவும் கம்பீரமாய் நின்றுகொண்டிருந்தன. மேலிருந்து பட்டுப் படுதாக்கள் தொங்கிக்கொண்டிருந்தன. தரை தெரியாதபடி

Koviloor Digital Library 4102


சிறந்த இரத்தின கம்பளங்கள் போடப்பட்டிருந்தன. அலறயின் நடுமத்தியிலுள்ள ஒரு குழாயிலிருந்து ஜலம் அதி வேகத்துடன் மேல்கிளம்பி மழைச்சாரல்போல் அவ்விட மிருந்த ஒரு சலவைக்கல் தொட்டியில் பூப்பூவாய் விளக் கொளியில் ஜ்வாலித்துக் கொண்டு விழுந்தன. அந்தத் தொட்டியின் உட்புறத்தில் பல நிறமான கற்கள் பதிக்கப் பட்டிருந்தன. ஜலம் நிறைந்து வழிந்துகொண்டிருக்கும் அந்தத் தொட்டியைப் பார்த்தவர்களெல்லாம் அதில் வெவ் வேறு விதமான மீன்கள் மின்னிக்கொண்டிருக்கின்றன என்றெண்ணினார்கள். அறை முழுவதும் சந்தடியற்றிருந்தது. குருட்டுப் பிரகாசமாயிருந்த அவ்வறையில் ஒரு நல்ல வாசனை வீசிக்கொண்டிருந்தது. நரேந்திரன் திக்பிரமை யாய் மதிமயங்கி நாலுபக்கமும் பார்த்தான். எல்லாம் அவனுக்குக் கனவுபோலிருந்தது. அது கனவோ, நினைவோ வென யோசிப்போம் என்றால் அவனுக்குச் சக்தியில்லை. பழையப் பிரகாரம் படுக்கையின்பேரில் தலைசாய்த்துத் தூங்கிவிட்டான்.

காலையில் சூரியனது செவ்விய கிரணங்கள் பட்டுப் படுதாக்கள் வழியாய் உட்பிரவேசித்துக் கொண்டிருந்தன. நரேந்திரன் மறுபடியும் கண்ணைத்திறந்தான். விளக்குகளி லுள்ள சுகந்தம் வீசும் எண்ணெய் குறைந்துவிடவே தீபங் களும் அணையும் ஸ்திதியிலிருந்தன. நிசியிற் போலவே அதே அறைதான். அதே பட்டுப் பீதாம்ர ரத்னக் கம்பளங் கள் தான். ஆனால் இரவில்போலன்றி இப்போது அவ்வறை யில் அவனைத் தவிர இதர மனுஷ்யசஞ்சாரமுமிருந்தது. முகத் தோற்றத்தையும் உடைகளையும் கண்டு ராஜபுத்திர ஸ்திரீ யெனச் சொல்லக்கூடிய ஒரு வயதுமுதிர்ந்த ஸ்திரீ அவ்வி டம் தரையின்மீது இன்னும் நித்திராவஸ்தையில் இருந்தாள். வியாதியஸ்தனுக்கு ஆகாராதிகள் தயார் செய்ய அமர்த்தப்

Koviloor Digital Library


பட்டிருந்த ஒரு பிராம்மணச் சிறுவன் அறையை யடுத்த ரேழியில் நின்றுகொண்டிருந்தான். சூரிய வெப்பத்தாலும் அதிக வேலையாலும் சிறிது கறுத்திருந்த போதிலும் காண்பவர் கண்களைக் கவரும் ரூபலாவண்யமுடைய வதனமும், ஊடுருவிப்பாயும் இருண்ட கண்களும், கறுத்த புருவங்களுமுடைய ஒரு யௌவன மாதுசிரோமணி கோயாளியை அதிக ஊக்கத்துடன் கவனித்துக்கொண்டு மௌனமாய்ப் படுக்கையண்டை நின்றிருந்தாள். அவள் தலையில் ஒரு கறுப்புக் குல்லாய் தரித்திருந்தாள். தலையிலிருந்து சுருள் சுருளாய்த் தொங்கிகொண்டிருந்த கேசங்கள் அவளது பிரகாசமான இதர அங்கங்களைப் பின்னும் சோபிக்கச் செய்தன. பொன் ஜரிகைவேலை செய்திருந்த உயர்ந்த பட்டாடை தரித்திருந்தாள். நாளானபடியால் அந்த ஆடை மாசுபடிந்து மங்கலாயிருந்தது. அழகிற் சிறந்த அவளது நீண்ட கைகள் அதிக வலியுடையனவா யிருந்தன. வெளிப்புறத்தில் பொறித்திருந்த பொன்னிற எழுத்துக்களெல்லாம் கலைந்துபோயிருந்த அவள் அரைக்கச்சையினின்று ஈட்டியொன்று தொங்கிக்கொண்டிருந்தது. ஒரு காலத்தில் நல்ல பச்சை நிறமாயிருந்து, இப்போது சாயம்போய்விட்ட ஒரு சல்லா வஸ்திரம் மேலே தரித்திருந்தாள். அவள் கட்டியிருந்த பாவாடை, சற்றுக் குட்டையாயிருந்தபடியால், கணுக்காலின்பேரில் இழுத்துக் கட்டப்பட்டிருந்த தளர்வாயிருந்த மஸ்லின் கால்சட்டை நன்றாய்த் தெரிந்து கொண்டிருந்தது. அவளுடைய பாதங்களில் செருப்புகள் ஒன்றுமில்லை. ஒற்றைநாடிச் சரீரமும், நல்ல உயரமும் வாய்ந்த அந்தத் தருணிமணியின் ஊடுருவிப்பாயும் இருண்ட கண்கள் எத்தகைய தீரபுருஷர்களையும் எளிதில் அரைநொடியில் வசியப்படுத்தும் ஆற்றலுடையன. தன் கண்களைச் சரியாய்த் திறந்து பார்க்கக்கூட முடியாத நிலைமையிலிருக்கும் நரேந்

Koviloor Digital Library



திரன் இவ்விஷயங்கள் ஒன்றையும் கவனிக்கவில்லை. அவன் வாய்திறந்து பேசியதெல்லாம், "தாகமாயிருக்கிறது, தண்ணீர் கொடு" என்பதுதான். அப்பெண் உடனே மின்னற் கொடிபோல் மறைந்துவிட்டாள்.

அவன் மறுபடியும் 'தாகமாயிருக்கிறது, தண்ணீர் கொடு' என்று கேட்டான். வாயிலில் நின்றுகொண்டிருந்த பிராம்மணச் சிறுவன் படுக்கையண்டை வந்து சிறிது கஷாயம் பருகக்கொடுத்தான். அதைக் குடித்துவிட்டு நரேந்திரன் திரும்பவும் சற்று நேரத்துக்கெல்லாம் தூங்கி விட்டான்.

இவ்விதமாய்ப் பல தினங்கள் கழிந்தன. நரேந்திரன் இன்னும் படுத்த படுக்கையாய்த்தா னிருந்தான். அவனுக்கு உபசரணை செய்து கொண்டிருந்தவர்கள் ஒருவரும் அவனு டன் பேசவில்லை. எப்போதும் மயக்கமும் உறக்கமு மாகவே இருந்தபடியால் அவனும் அவர்கள் எவரையும் கவனிக்கவில்லை. இரவில் சிலவேளை, முன்னர் தான்கண்ட இளங்கொடி போன்ற கட்டழகி தன்னருகே நின்று மௌனமாய்த் தன்னை உற்று நோக்குவதாக அவன் கனவு கண்டான். ஒடிந்து விழுவது போலிருக்கும் அவ்வுரு வத்தினை அவன் சில தினங்கள் நேரிலும் கண்டான். ஒரு நாளோ, இரண்டு நாளோ காலையில் விழித்தெழும்போது கம்பளத்தின்மீது மெதுவாய்ச் சப்தமின்றிச் செல்லும் காலடியோசை அவன் காதிற்பட்டது; இரண்டொரு தடவை ஒரு நிழல் உருவம் தன் படுக்கைப் பக்கமாய் வேகமாய்ச் செல்வதையுங் கண்டான்.

வந்த ஆபத்துத் தொலைந்து; கவலைக்கிடமான காலம் கழிந்துவிட்டது; இனி நரேந்திரனுக்குப் பிராண பயம் இல்லையென நிச்சயமாய்த் தெரிந்தது. படிப்படியாய் நாளாவர்த்தியில் சொஸ்தமடைந்து வந்தான். பழைய நாள் ஞாபகங்கள் ஒன்றன்பின் ஒன்றாய் அவன் மனத்துக்கு

Koviloor Digital Library


வர்தன. ராஜா மானஸிம்ஹர் அவர்கள்கீழ்ப் பல யுத்தங்களில் பொருது அவன் வாகைமாலே சூடினான். பல நகரங்கள் பிடிபட்டன; எத்தனையோ காட்டுப் பிரதேசங்கள் அங்ஙனமே ஆளுகையின்கீழ்க் கொண்டுவரப் பட்டன. ஆப்கானியர்கள் அடியோடு நாசமுற்றனர்; போர்த்துகல் தேசத்தாரது கொட்டம் அடங்கிற்று. வங்காள முழுதும் ராஜா அவர்களுடைய ஆளுகையில் சமாதான மடைந்து க்ஷேமமாயிருந்தது.

ஆனால் மானஸிம்ஹர் 1598-ம் ஆண்டில் வங்காளத்தை விட்டகன்றார். அன்றே விஜயலக்ஷ்மியும் மொகலாயரை விட்டுப் பிரிந்தனள். அவருடைய மகன் ஜகத்ஸிம்ஹன் என்பவன் நல்ல தைரியசாலி. மஹா வல்லமையுடைய யுத்தவீரன். இருந்தென்ன? அவன் ராஜ்ய விஷயங்களைக் கவனிப்பதே கிடையாது. மந்திராலோசனை மண்டபத்தில் அவனைக் காண்பது அபூர்வம். எப்போது பார்த்தாலும் கேளிக்கை நண்பர்களுடன் கூடிக் குடிப்பதே தொழிலாயிருந்தான். ஆப்கானியர்கள் மொகலாயரை எதிர்த்து ஓரிஸ்ஸாவைக் கைப்பற்றிக்கொண்டனர். 1600-ஆம் வருஷத்தில் பத்ராக் செருக்களத்தில், மொகலாய ராஜபுத்திர வீரர்கள் சரியான தளகர்த்தரின்றி ஆப்கானியர்முன் புறங்காட்டி யோடினர். வீராவேசங்கொண்ட உஸ்மான் கான் என்னும் ஆப்கானியப் படைத்தலைவன் சக்கரவர்த்தியவர்களுடைய படையைத் தாக்கி அவர்களுடைய அணிவகுப்பைக் கலைத்துச் சிதறவடித்தான்; ஆண்மையற்று அவசரமாய் வந்த வழியைப் பார்த்துக்கொண்டு போகும் மொகலாய வீரர்களை அவன் சின்னாபின்னமாக்கினான். இந்த யுத்தத்தில்தான் நரேந்திரன் குண்டால் அடிபட்டுப் படைத்தலைவனாகிய கஜபதிஸிம்ஹனருகில் பிரஞ்ஞையற்று விழுந்து கிடந்தான்.

Koviloor Digital Library



சக்கரவர்த்தியவர்களுடைய சேனை பத்ராக் படுகளத்தி லிருந்து ராஜமஹல் நோக்கி தோல்வியுற்றுத் திரும்பி வந்த மானக்கேடு நரேந்திரனுக்கு நினைவுவந்தது. காயம் பட்ட இதர ராணுவ உத்தியோகஸ்தர்களைப் போல் நரேந்திரனும் யுத்தகளத்திலிருந்து கஜபதிஸிம்ஹரவர்களுடைய தயவால் ரண சிகிச்சைக்காகக் கொண்டுவரப்பட்டான். சாவகாசமாய்த் தங்கிக் காயத்தை ஆற்றிக்கொள்வதற்கு நேரமில்லை. ஏனெனில் வங்க சேனாதிபதி இன்னொரு முறை ஒரு பலத்த சேனையைச் சேர்த்துக்கொண்டு ஆப்கானியரைத் தாக்க அநுமதி வேண்டுமென்று அக்பரவர்களுக்குச் செய்தி அனுப்பினான். அந்த வேண்டுகோளைச் சக்கரவர்த்தியவர்களுக்கு அறிவிப்பதற்குக் கஜபதிஸிம்ஹன்தான் தூதனாக அனுப்பப்பட்டான். அத்தருணம் போர்முனைக்கு உதவாத ஸ்திதியிலிருந்த நரேந்திரனும் கங்கா நதியில் பிரயாணம் செய்வதால் போதுமான ஓய்வும், தேகபலமும் உண்டாகக் கூடுமெனக் கருதித் தன் எஜமானருடன் புறப்பட்டான். அந்தப் பிரயாணத்தால் அவன் சுகமடையவில்லை; முன்னிலும் அதிக தூர்ப்பலமடைந்தான். காயம் ஆறவில்லை; வட இந்தியாவில் இராக்காலங்களில் அடிக்கும் குளிர்காற்றால் அவனுக்கு ஜ்வரம் கண்டது. இதுவரைக்கும்தான் நரேந்திரனுக்கு ஞாபகமிருந்தது; அது முதல் அவனுக்கொன்றும் நினைவில்லை. ஸ்மரணை அற்றிருந்தான். மறுபடியும் இந்த நூதனமான அறையில், தனவந்தர்கள் வீட்டில் அவன் கண்விழித்துக் கொண்டான். அன்று முதல் இன்று வரைக்கும் நடந்த சமாசாரங்கள் ஒன்றும் அவனுக்குத் தெரியாது.

நரேந்திரனுக்குத் தன் ஞாபகம் வந்து தன் சரீர ஸ்திதியைத் தெரிந்துகொள்ளப் போதுமான சக்தி வந்தவுடன், ராஜபுத்திர ஸ்திரீ அவனை விட்டகன்றாள். அதுமுதல்

Koviloor Digital Library


அவள் அவ்வறைக்கு வருவதை நிறுத்திவிட்டாள். அந்தப் பிராம்மணச் சிறுவனுக்கு, நரேந்திரன் பேசும் பாஷை தெரியாது. நரேந்திரனுக்கோ கவலையும், எண்ணங்களும் அதிகரித்தன. தான் இருப்பது எவ்விடம்? தான் அங்கே எவ்விதம் கொண்டுவரப்பட்டான், சாளரங்களும், கதவுகளும் பலமாய் மூடப்பட்டிருந்த அச் 'சிறை வீட்டிலிருந்து' வெளியேறும் வகை யாது, என்பவை எதுவும் அவனுக்குப் புலப்படவில்லை.

ஒரிரவு இவ்வாறெல்லாம் எண்ணமிட்டுக் கொண்டிருக்கையில் அவன் படுக்கையண்டைக் காலடி சப்தம் கேட்க, நரேந்திரன் திரும்பிப்பார்த்தான். தான் கனவிலும், நேரிலும் பலமுறை கண்டுள்ள இளங்கொடியன்ன உருவம் அவன்முன் நின்றது. அவளது ஊடுருவிப்பாயும் கம்பீரமான நேத்திரங்களைக்கண்டு நரேந்திரன் திடுக்கிட்டான். இந்திய ஸ்திரீகளுடைய வதனங்களைக் காட்டிலும் அவளுடைய வதனம் அதிகப் பிரகாசமாயிருந்தது. சிங்கக் குட்டியைப் போல் சுறுசுறுப்பும் நெளியுந் தன்மையுமுள்ள அந்நாரீமணி சந்தடி செய்யாமல் மெதுவாய் அடிமேலடிவைத்து வருவதைக் கண்ட நரேந்திரனுக்கு, காடுகளில் தான் பலமுறை கண்ணுற்றிருக்கும், இரைதேடிப் பதுங்கிச் செல்லும் வன விலங்குகளின் ஞாபகம் வந்தது.

சித்தப்பிரமை தெளிந்தவுடன் நரேந்திரன் அந்தப் பெண்மணியைப் பார்த்து, 'அழகிற் சிறந்த யௌவன சுந்தரீ, நான் எத்தனையோ தினங்கள் உன்னைச் சொப்பனத்தில் கண்டிருக்கிறேன்; அல்லது ஒருவேளை நான் நினைவு தப்பியிருந்தபோது நீ என் தேகஸ்திதியைக் கவனித்துக்கொண்டு என் படுக்கைப் பக்கம் நின்றிருந்தனையோ அறியேன். என்மீது சிறிது தயை கூர்ந்து நான் தற்காலம் இருக்குமிடம் யாதெனத் தெரிவிக்கவேண்டும். வாய்திறந்து ஒரு

Koviloor Digital Library


வார்த்தை பேசி என் மனக்கவலையை நீக்கு" எனக் கேட்டான்.

அப்பெண் வாய்நிறவாமல் தன் கைவிரலை உதட்டின் மீது வைத்து மௌனமாயிருக்கும்படி எச்சரிக்கை செய்தாள். எவ்வளவுதான் அவள் மேலும் மேலும் எச்சரித்த போதிலும் நரேந்திரன் ஓய்ந்தபாடில்லை.

"ஏ! ரமணிமணி, என் கேள்விக்குப் பதில் இல்லையா? நீதானு இந்த மாளிகையின் அரசி? குண்டுகாயப்பட்டு வருந்தும் ஓர் எளிய போர்வீரனுக்குத் தங்குமிடம் அளித்து அவனை ரக்ஷித்த புண்ணியவதி நீதானோ? என் காயத்தைச் சொஸ்தப்படுத்தி எனக்கு உயிர்ப்பிச்சை தந்த தெய்வம் நீதான் என்று நான் பூர்ணமாய் நம்புகிறேன். நாதனற்று, நேசனற்று முன்பின் பரிசயமில்லாத நாட்டில் வருந்திய அகதிக்கு நீதான் நாதனும் நேசனுமாகி நின்றனை" என்று நரேந்திரன் கூறினன்.

இன்னும் அம்மாது வாய்திறந்து பேசாமல் பளிங்கு போல் ஜ்வலித்துக் கொண்டிருக்கும் பயங்கரமான கண்களுடன், தன் அழகிய திருமேனி பதின் மடங்கு அதிகமாய்ப் பிரகாசிக்க உதட்டின்மேல் வைத்த விரலுடன், அவன் முகத்தை உற்றுநோக்கிய வண்ணமாக மௌனமாய்ச் சிலைபோல் நின்றுகொண்டிருந்தனள்.

தான் என்ன சொல்லியும் அவள் வாய்திறவாமல் நிற்பதைக்கொண்டு சிறிது ஆத்திரமுற்றவனாய் நரேந்திரன், "நீ யார்? ராஜாதிதானு? அல்லது மனிதரது துரதிஷ்டங்களையும் கஷ்டங்களையும் கண்டு ஏளனம்புரியும் வேற்றுலக வாசிகளைச் சேர்ந்தவளா? உன் உடைகளைப் பார்த்தால் நீ உயர்குல முஹம்மதிய ஸ்திரீயெனத் தோற்றுகிறது. மனிதரது மக்களுள் உன்னைப்போன்ற கட்டழகி வேறொருத்தியைக் காண்பதரிது" என்றான்.

Koviloor Digital Library


அவள் தேவதையோ, மண்ணுலகப் பெண்தானோ, அல்லது பிசாசு ஜாதியைச் சேர்ந்தவளோ எவ்விதமாயிருந்தாலும் சரி, நமக்கு அவசியமில்லை; இந்த முகஸ்துதி வார்த்தைகளைக் கேட்டவுடன் இதர ஸ்திரீகளைப்போல் அவள் மனம் இளகிவிட்டனள். அவள் சற்று எளனமாய்ப் புன்னகை செய்தாள்; ஆனால் வாயை மாத்திரம் திறக்கவில்லை. நரேந்திரனுக்குச் சிறிது தைரிய முண்டாயிற்று. தும்பைப் புஷ்பம்போன்ற அவளுடைய மிருதுவான கரங்களைப் பற்றி இனிய குரலாய் 'ஸ்திரீகள் நாயகமே, உத்தம ஸ்திரீகளைப்போல் நீ இளகிய மனதுடையவள். அதற்கேற்றவாறு என்னிடம் அன்பு பாராட்டி என் மனக்கவலையைத் தீர்ப்பதற்குத் தடையென்ன?' என்று கேட்டான்.

சந்தோஷத்தால் கண்கள் சிறந்து விளங்க, பனிக்கட்டியை யொத்த வெண்மையான பற்கள் வரிசை சிறிதே வெளித் தெரியும்படி நகைபுரிந்து, "இத்தனை நாழிகையாயிற்று என்னை ஸ்திரீயென்று கண்டுபிடிக்க? இப்போதாவது நிச்சயப்பட்டதா நான் மனுஷ்ய ஜன்மந்தானென்று? என் கைகளும் உன்னுடையன போல் இரத்தம் சதைகளாலாக்கப் பட்டவைதானா?" எனக் கேட்டாள் அம்மாது.

"அது மாத்திரமா? சூடான இரத்த ஓட்டத்தால் உனது கை நாடிகள் படபடவென்று அடித்துக்கொள்வது கூட எனக்கு நன்றாய்த் தெரிகிறது."

"படுத்த படுக்கையாயிருந்தும் நல்ல யௌவன யுத்தவீரனாகிய நீ என்னை ஸ்திரீயென்று கண்டுபிடித்தது நிரம்ப ஆச்சரியம்தான்."

"உன் முகம் அயல்நாட்டு முகமாயிருந்தாலும் அதில் அன்பு குடிகொண்டிருக்கின்ற தென்பதையும் நான் உணர்ந்தேன்."

Koviloor Digital Library


"நாமோ முன்பின் பரிசயமில்லாதவர்கள். என்னுடைய அயல் நாட்டைப்பற்றி உனக்கென்ன தெரியும்? என்னுடைய தயாள குணத்தைப்பற்றி அவசரப்பட்டு ஒன்றும் தீர்மானித்துவிடாதே. எல்லாம் போகப் போகத் தெரியும். எனது நட்பையும் அன்பையுங் குறித்து இவ்வளவு சீக்கிரம் நிச்சயம் செய்துகொண்டு விடாதே. உனக்கு எவ்வளவு யோக்கியதையோ அவ்வளவுதான் உனக்குக் கிடைக்கும்."

"என் யோக்கியதையளவு கிடைத்தால் போதும்; அதிகமாய் வேண்டாம். என் யோக்கியதையை நீ ஏற்றக் குறைச்சலின்றி மதிப்பிடுவாய் என்பது நிச்சயம்."

"ஏது, நீ ஸாமான்யமானவனாகக் காணோம். பேச்சில் கைதேர்ந்தவனாயிருக்கின்றனையே? உன்னுடைய நயமொழிகளும், மாதுரிய வசனங்களும் எந்த நாட்டுப் பெண்ணாயிருந்தாலும் சரி, அவளை மயக்கிவிடும். இந்த நயமொழிகள் ஒன்றும் பிரயோசனமில்லை. பயனற்ற இவ்வார்த்தைகளை விட எவ்வளவோ கடினமான வேலைகள் இன்னும் சில தினங்களுக்குள் நீ செய்யவேண்டியிருக்கிறது."

"என்னால் உனக்கு ஆகவேண்டியதென்ன சொல்."

"சுத்தவீரன் எனப்படுபவனுக்கு அவசியம் இருக்க வேண்டிய வீரதீரமும், எவ்வித ஆபத்துக்கும் பின்னடையாத துணிவும், அஞ்சா நெஞ்சமும்தான் உன்னிடமிருந்து நான் எதிர்பார்ப்பது."

"நீ கூறும் லக்ஷணங்கள் எவற்றிலும் நான் இளைத்தவனல்லன். தோற்றால் உனது ஆஞ்ஞைக்கு உட்படுகிறேன்."

"வாய்ப்பேச்சு அதிகம் வேண்டாம். பேச்சு உன்னதமாயிருக்குமிடத்தில் காரியம் சூந்யமாயிருக்கும். வீரமாய்ப் பேசிவிடுவதில் பலனில்லை; காரியத்தில் நடத்திக் காண்பிக்க

Koviloor Digital Library


வேண்டும். ஆனால் உன்னைப்பற்றி நான் எவ்வளவோ கேள்விப்பட்டிருக்கிறேன்; கொஞ்ச காலமாக நேரிலும் உன் முகக்குறிகளைக் கவனித்துவருகிறேன். நான் கொண்ட அபிப்பிராயம் ஒருபோதும் பொய்க்காது; நான் இத்தனை நாட்களாகத் தேடித்திரிந்த வீரபுருஷன் நீதான் போலும்."

"ஹே கன்னிகாரத்னமே! மறைபொருளாய்ப் பேசாதே. எவ்வளவு இரகசியமாயிருந்தாலும் தாராளமாய் என்னிடம் சொல்லலாம். ஓர் எழுத்துக்கூட நான் வெளிவிடமாட்டேன். அதைப் பற்றிக் கிஞ்சித்தும் ஸம்சயம் வேண்டாம்."

அம்மங்கை சற்று மௌனமாயிருந்தாள். சிறிது நேரங்கழித்து முக்கியார்த்தமான குரலில் கொச கொச வென்று நிதானமாய்ப் பேசத் தொடங்கினாள்:—"என் றென்றைக்கும் மித்திரனை மறக்காதவளும், சத்துருவை மன்னிக்காதவளுமாகிய தார்த்தாரி தேசத்துப் பெண் நான். என் சொந்த மனுஷ்யர்கள் எனக்கு இஸ்லாம் மதத்தைப் பற்றி யொன்றும் போதிக்கவில்லை; பல்வேறு மதங்கள் செழித்தோங்கும் இந்நாட்டிற்கு வந்தும் நான் இஸ்லாம் மதத்தைப்பற்றி ஒன்றும் கற்கவில்லை. ஆனால் மரணகாலத்தில் எனதருமைத் தாயார், மித்திரர்களுக்கென்று ஒரு மந்திரோபதேசமும், சத்துருக்களுக்கென்று ஒரு கட்டாரியும் எனக்கு அநுக்கிரஹித்துச் சென்றாள்" எனச் சிறிதே வனவிலங்கு சீறுவதைப்போலப் பேசி முடித்தாள்.

நரேந்திரனும் அவள் பேசிய முக்கியார்த்த த்வனியாகவே, "திக்கற்று நாதனற்றுப் படுகிடையாய்க் கிடந்த போது அல்லும் பகலும் அக்கறையாய்க் கவனித்துத் தேவதா சுசுரூஷை செய்து என்னை நமன் கைகளினின்றும் மீட்டின புண்ணியவதியான உனக்கு நான் என்றைக்கும் கடமைப்பட்டவனானேன். என்னை உன் மித்திரனாகக்

Koviloor Digital Library


கொள். நான் எப்போது அந்த சிநேகத்துக்குத் துரோகம் நினைக்கிறேனே அத்தருணமே தடையின்றி நீ உன் கட்டாரியை என்மீது பிரயோகிக்கலாம்" என்று வாக்குறுதி கூறினான்.

"சுத்தவீரனே, நீ கூறும் வார்த்தைகள் பொய்க்கும் என்று எண்ண எவ்வித ஹேதுவும் கிடையாது. உன் வதனத்தைக் கண்ணுறுவோர் யாவரும் உன்னை சத்திய அரிச்சந்திரன் என்று தடையின்றிக் கூறுவார்கள். நான் உன்னிடம் முழுநம்பிக்கை வைத்தேன்; ஜாக்கிரதை, மித்திரத் துரோகம் என்பதைக் கனவிலும் நினைக்கவேண்டாம். என்னிலும் அந்தஸ்தில் பல்லாயிர மடங்கு சிறந்தவளும் மித்திரபரிபாலன, சத்துரு நிக்ரக விஷயங்களில் ஸர்வாதிகார முடையவளுமாகிய ஓர் உயர்குலச் சீமாட்டி உன்னை நம்பி அந்தரங்க ஏவல்கள் சில உனக்கிடப்போகிறாள்."

"அழகே அலங்காரமாகத் திரண்டு உருவெடுத்து வந்துள்ள பெண்மணியே! நீ விஷயங்களை இன்னும் விட்டுச் சொல்லாமலே இருக்கின்றனையே?"

"அன்னிய புருஷர்கள் அடியெடுத்து வைத்தறியாத ஒரு நவமணி மண்டபத்துட் செல்லும் பாக்கியம் உனக்குக் கிடைக்கும். நாட்டிலெங்கும் இணையற்ற ரூபலாவண்ய முடைய ஒரு மாதரசி உனக்குச் சில கட்டளைகளிடுவாள்; வீரஸிம்ஹங்களென்று பெயரெடுத்த ரணசூரர்களே நடுங்கிப் பின்வாங்கும்படியான ஆபத்துக்கு நீ அவ்விடத்தில் ஆளாகவேண்டும். இன்றிரவு இதற்குமேல் ஒன்றும் சொல்லமுடியாது. இன்னும் ஒரு வாரம் பொறு. அதற்குள் உன் மனத்தையும் சரீரத்தையும் திடப்படுத்திக்கொள். அருணோதயமாகிறது, நான் செல்லுதல்வேண்டும்."

படபடவென்று அதிவேகமாய் மார்பு அடித்துக் கொள்ள நரேந்திரன், "நீ இன்னாள் என்பதை எனக்குத்

Koviloor Digital Library



தெரிவித்துவிட்டுத்தான் போகவேண்டும்; அதைச் சொல்லு முன் உன்னை விடமாட்டேன். உன் அந்தரங்க சமாசாரத்தை இன்னும் விவரமாய் நான் அறியவேண்டும்" என்று அவளுடைய மெல்லிய கரங்களைப் பற்றி இழுத்தான்.

நாகரத்னம்போல் நேத்திரங்கள் ஜ்வலிக்க அப்பெண் மணி ஓர் ஏளனப் புன்னகைசெய்து, "உன்னை நம்பக் கூடாது. நீ இலேசான பேர்வழியல்ல. காதற்றொழில் என்பது உனக்குப் புதிதன்று. இரகசியத்தை இன்னொருநாள் பூர்த்தியாய்த் தெரிவிக்கிறேன். என் பெயர் 'ஜேலேகா'" என்று சொல்லி அவள் நிஷ்க்ரமித்தாள்.

Koviloor Digital Library

## இரண்டாம் அத்தியாயம்

## அவள் சகோதரி

ஒரு வாரமாயிற்று. நரேந்திரனுக்குத் தேகஸௌக்கியமும் ஊக்கமும் நன்றாய் விருத்தியாயின. ஆனால் வியாதி அநுகூலமாகித் தன் ஞாபகம் தெரியத் தெரிய, அவனுக்கு மனக் கவலை அதிகரித்தது. தான் இருப்பது எவ்விடம், தான் அவ்விடம் வந்த விதம் யாது, தன்னைச் சந்தித்த அந்த நாரீமணியின் வரலாறென்ன, தன்னை அவள் அழைத்த காரணம் யாது, அவள் தன்னை எவருடைய அரண்மனைக்கு அந்தரங்கமாய்க் கூப்பிட்டாள், இந்த விஷயங்களெல்லாம் அவனுக்குச் சூநியப்பிரதேசமா யிருந்தது. அந்தச் சூநியப் பிரதேசத்தின் இரகசியங்களைக் கண்டறியத் தன்னாலான மட்டும் முயன்றான். தான் செய்யப்புகும் வீர தீரச் செயல் களைப்பற்றி நினைக்கும்போதெல்லாம் அவன் அளவில்லா மகிழ்ச்சி எய்தினான். ஆனால் அந்தத் தார்த்தரி தேசத்துப் பெண் கூறிய மொழிகளைக் கவனிக்கத் தான் தலையிட்டுக் கொள்ளவிருக்கும் சாகசத்தில் அபாயங்கள் அதிகமாயிருக்கு மென்று அவனுடைய மனத்தில் ஒரு பயம் ஜனித்தது. போர்க்களங்களில் எத்தனையோ அபாயங்களை யெல்லாம் எதிர்த்து எவ்வளவோ துணிவான அற்புத வீரச்செயல்க ளெல்லாம் புரிந்திருக்கிறான். ஆனால் கத்தியின் உதவியை விடக் கட்டாரியின் உதவியே அதிகமாய் வேண்டிய அந்தப் புர அந்தரங்க சாகசங்களுக்கு அவனுக்கு ஸாமர்த்தியம் போதாதுதான். இதுகாறும் கண்டுங் கேட்டுமறியாததொரு

Koviloor Digital Library



அரண்மனைக்குள், ஸ்திரீகளால் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கும் நள்ளிருள் சூழ்ச்சிகள் அவனுடைய மனத்தில் ஆதியந்த மற்ற சந்தேகத்தையும் நடுக்கத்தையும் உண்டுபண்ணின. அறை முழுவதும் சுற்றிப் பார்த்தான்; ஒன்றும் விளங்க வில்லை. அவன் வசிக்கும் அவ்வழகிய சிறைக்கூடத்தின் சலவைக்கல் வேலைப்பாடுகளும் சித்திரங்களும், பூவேலை செய்யப்பட்டிருக்கும் கம்பளங்கள், படுதாக்கள் முதலியவை களும் அவனுடைய சந்தேகத்தை நிவர்த்தித்து அவன் மனத்துக்குச் சமாதானம் அளிக்கும் ஆற்றலற்றனவாய் இருந்தன. கம்பிகளிடப்பட்ட அந்த அறையைச் சுற்றி நின்றிருந்த காவலாளிகளும் வாயடைத்திருந்தனர்.

அவ்வறைக்கு நேர்மேலேயிருக்கும் மாடிக்கு ஒரு சுழல்படிக்கட்டு மார்க்கமாய்ப் போய்வர நரேந்திரனுக்கு அநுமதியுண்டு. அவ்விடம் சென்று சுத்தவெளியான ஆகாயத்தின் நிர்மலமான காற்றை உட்கொண்டு வெகுநேரம் வரையில் உலவிக்கொண்டிருப்பான். கீழே இறங்கி வரும் போது சில தினங்கள் இருட்டிவிட்டாலும் இருட்டிவிடும். தனக்கு எதிரேயிருக்கும் முற்றத்தில் சேவகர்களும் போர் வீரர்களும் நின்றிருப்பதை அவன் பலமுறை கண்ணுற்றான். ஒரு பெரிய கற்சுவரால் மறைபட்டிருக்கும் கட்டடங்களின் சலவைக்கல் ஸ்தூபிகளும் அவனுடைய கண்களுக்குப் புலப்பட்டுக்கொண்டிருந்தன. அத்தகைய சிகரங்களையும் ஸ்தூபிகளையும் அவன் ராஜமஹாலில்கூடக் கண்ணுற்றதில்லை. ராஜா மாநஸிம்ஹரைவிடச் செல்வம், சீர், சிறப்பு எவற்றிலும் மேன்மையுற்ற அதிபதிகளுக்காகவா, அல்லது வங்கநாட்டு ராஜ ஸ்திரீகளைவிடச் சிறந்த ஸ்திரீரத்நங்களுக்காகவா, அழகிலும் அமைப்பிலும் நிகரற்றிருக்கும் இந்த மாடமாளிகைகள் கட்டப்பெற்றன? அவைகள் மஹாராணிகளும், மண்டலாதிபத்திய வீரர்களின் மனைவிமார்

Koviloor Digital Library



களும் வாசஞ் செய்யும் பவனங்களாய்த்தான் இருத்தல் வேண்டும். ஏனெனில் அக்கட்டடங்களைச் சுற்றியிருந்த செம்மணற் கற்சுவரில் நரேந்திரன் பார்த்தமட்டும் ஒரு சாளரமாவது ஒரு வாயிலாவது கிடையாது.

ஓரிரவு நன்றாய் இருட்டியவுடன், நரேந்திரன் மனோ வேதனையால்பீடிக்கப்பட்டு, வலியிழந்து களைத்தவனாய் மாடியினின்றும் இழிந்துவந்து சொற்ப ஆகாரம் உட்கொண்டு, அதிசீக்கிரமாய்ப் படுக்கையிற் கிடந்து மருந்து மயக்கங் கொண்டவன்போல் உடனே அயர்ந்த நித்திரையில் ஆழ்ந்து விட்டான்.

இரவின் முதல் ஜாமம் கழிந்துவிட்டது. நக்கார் கானாவிலிருந்து பறையொலி அப்பொழுதுதான் ஓய்ந்தது. ஜெலேகா, மங்கலான அவ்வறைக்குட் பிரவேசித்தாள். அவள் சுற்றுப் பக்கம் பார்த்துக்கொண்டு அதிக ஜாக்கிரதை யாய்ச் சந்தடி செய்யாமல் உள்ளே நுழைந்தாள். அவ ளுடைய கண்கள் ஒரு நூதன ஒளியுடன் ஜ்வலித்துக் கொண்டிருந்தன. கைகள் வெளிக்குத் தெரிந்துகொண் டிருந்தன. அவள் தன் வலது கரத்தில் கட்டாரி பிடித் திருந்தாள். சந்தடியின்றிப் படுக்கையருகே வந்துநின்றாள்.

தூங்கும் வீரனைச் சில நிமிஷ நேரம் அவள் கண் கொட்டாமல் பார்த்து நின்றாள். கனவுகள் ஒன்றுமின்றி அயர்ந்து உறங்கும் அவ்வீரனுடைய சுவாஸத்தைக் கவன மாய் உற்றுக்கேட்டாள். அவனுடைய மார்பின்மீது கை வைத்துப் பார்த்தாள்; அவனை நல்ல திடகாத்திரனெனத் தீர்மானித்தாள். அவளுடைய முகம் மலர்ச்சியடைந்தது; அவளுடைய மெல்லிய அதரங்களில் புன்னகை தவழ்ந்தது. அவள் ஏதோ சில மொழிகள் உச்சரித்துக்கொண்டு தன் கட்டாரியை உயரத் தூக்கி நரேந்திரனது தலைக்கு நேராக அதை அசைத்தாள்.

Koviloor Digital Library


உச்சாரணம் முடிந்தவுடன் ஜெலேகா தன் கட்டாரியின் முனையை நரேந்திரனுடைய வயிற்றின்மீது வைத்தாள். அவனுடைய வயிற்றினின்று ஒரு துளி ரத்தம் வெளி வந்தது; நரேந்திரன் ஆழ்ந்த நித்திரையினின்று விழித்தெழுந்தான். அவன் கண்ணைத் திறந்து மதி மயங்கினவன் போல் நாலாபக்கமும் திரும்பிப் பார்த்தான். கட்டாரியை உறையிலிட்டுவிட்டுப் புன்சிரிப்புச் செய்துகொண்டு நின்ற அந்த விசித்திரப் பெண்ணின்மீது சென்றன அவனுடைய கண்கள்.

"வீரசிகாமணி, என்ன வெகுநேரம் தூங்கிக்கொண்டிருக்கிறாய்? எழுந்திரு, உனக்கிட்ட பணியை நிறைவேற்ற வேண்டிய சமயம் வந்துவிட்டது."

"ஒரு நிமிஷம் பொறு, இதோ நான் போர்க்கோலம் பூண்டு போர்வீரன் உடைதரித்துவருகிறேன். ஆலசியம் ஏதுமில்லை."

"நீ இன்றிரவு செய்யவேண்டியது போர்வீரன் தொழிலன்று. ஆதலால் நீ போர்வீரன் உடைதரிக்கவேண்டாம். உனக்கென்று நான் வேறு ஆடைகள் கொண்டுவந்திருக்கிறேன். அவற்றைத் தரித்துக்கொள்ளவேண்டும்."

நரேந்திரன் அவ்வாடைகளைப் பார்த்துவிட்டு அவற்றைக் கீழே வீசியெறிந்தான்.

"ஸ்திரீகளாடையாயிற்றே இவை!"

"ஆமாம், ஸ்திரீகள் உடுக்கும் உடுப்புகள்தாம்."

"இவற்றை ஆண்மகன் எவ்வாறு தரித்துக்கொள்வான்? அதிலும் நான் சுத்தவீரனாயிற்றே. எனக்கு ஏற்குமா இவ்வுடைகள்?"

ஏளனஞ் செய்வதுபோலிருந்த உதடுகளில் புன்சிரிப்புத் தவழக் குரூரமாய்க் கண்களைக் கொட்டினவண்ணமாய், ஜெலேகா, "உனது உதவியைக் கோரிய பெண்ணுக்காக

Koviloor Digital Library


வாழ்விலும் சாவிலும் நம்பிக்கையாய் உழைப்பதாக வாக்களித்து வீரம் பேசினவன் நீதான் அன்றோ!" என்றாள்.

"ஆமாம், ஆண்மகன் செய்யக்கூடிய காரியமெல்லாம் செய்வதற்கு எப்போதும் சித்தமாயிருக்கிறேன்" என்று சாவதானமாய் விடையளித்தான் நரேந்திரன்.

மறுபடியும் புன்னகை செய்தாள் ஜெலேகா. தத்க்ஷணமே அப்புன்னகை மறைந்துவிட்டது. அவள் அவனுடைய காதண்டை வந்து இரகசியமாய், "நரேந்திரா, உனது பிராணனும், எனது பிராணனும், ஓர் உயர்குலச் சிமாட்டியின் மானமும் யாவும் உன் சம்மதத்தைப்பற்றி நிற்கின்றன. நாழிகையாகிறது. தாமதித்தால் காரியம் கெட்டுவிடும். சுத்த வீரா, யோசிக்கவேண்டாம். உனது கடமையை நிறைவேற்றுவதைப் பார்" என்றாள்.

சுத்தவீரன் கீழ்ப்படிந்தான். அவன் தரித்திருந்த அரைக்கச்சை, கத்தி இவைகளின்மீது ஒரு பெரிய பாவாடையொன்று கட்டப்பட்டது. தன்னாலானமட்டும் முயன்றும் பயன்படாமல் கடைசியில் ஜெலேகாவின் உதவியுடன் நரேந்திரன் ரவிக்கையைச் சரியாய்ப் போட்டுக் கொண்டான். தலையில் பொய்மயிர் வைத்து வாரிப் பின்னவிட்டுக்கொண்டான். முகத்தில் பாதிமட்டும் மறைக்கும் ஒரு மூடி போட்டுக்கொண்டான். மேலாடை யொன்று தோள்புறத்திலிருந்து முழங்கால் வரைக்கும் அழகாய்த் தொங்கிக்கொண்டிருந்தது. கழுத்தில் ஒரு பவழமாலையும், சதையற்றிருக்கும் கைகளில் பொன் வளையல்களும் தரித்துக் கொண்டான். அவன் நடந்து செல்லுங்கால் அவனுடைய கால்களில் வெள்ளிச் சிலம்புகள் கிண்கிணென்று சப்தித்துக் கொண்டிருந்தன.

நரேந்திரனது ஸ்திரீ வேஷத்தைக் கண்டு, "பாக்கு மரம்போல் உயர்ந்து வளர்ந்திருக்கும் இக்கட்டழகி நமக்கு

Koviloor Digital Library


ஒரு முத்தமிடாளா என்று அரண்மனையிலுள்ள யௌவன புருஷர்கள் யாவரும் ஏங்கி நிற்பார்கள்" என்று ஜெலேகா சிரித்துக்கொண்டே சொன்னாள். தான் தரித்திருக்கும் உடைகளைக் கண்டு அதிருப்தி யடைந்து முகம் மாறி யிருக்கும் நரேந்திரன் பதில் மொழி யாதும் கூறவில்லை.

பட்டப்பகல் வெளிச்சத்தில் கண்கொட்டாமல் தேடினாலுங்கூடப் புலப்படாது; அவ்வாறு சுவரோடு சுவராய் அமைந்திருக்கும் ஒரு கள்ளக் கதவைத் திறந்தாள் ஜெலேகா. இந்தக் கதவின் வழியாகத்தான் ஜெலேகா அடிக்கடி தன் அறைக்குள் வந்து மாயமாய் மறைந்து சென்றுகொண்டிருந்தனள் என்று நரேந்திரன் உணர்ந் தான். இருவரும் உள்ளே பிரவேசித்துக் கள்ளக்கதவை மூடித் தாளிட்டவுடன் அவ்விடம் இருள் மயமாய்விட் டது. நரேந்திரன் கையால் தடவித் தடவி வழியைக் கண்டுகொண்டு செல்லவேண்டியதாயிற்று.

"ஷீபா, இவ்விடம் படிக்கட்டுகளும், நெருக்கமான திருப்பங்களும் அதிகமாயிருக்கின்றன. பத்திரம்" என்று ஜெலேகா உள்ளுக்குள் சிரித்துக்கொண்டு, "இதுமுதல் நீ வடக்குப் பிரதேசத்திலிருந்து வந்த எனது சகோதரி, ஞாபகமிருக்கட்டும். இதை மறந்தால் நம்மிருவர் உயிரும் பலிதான்" எனக் கூறினாள்.

தான் அப்போதிருந்த அபாயகரமான நிலைமையையும், இனி விளையக்கூடிய தானறியா ஆபத்துக்களையும் அறவே மறந்தவனாய், நரேந்திரன் தான் தரித்திருக்கும் வேஷத்தை யும், தனது புதிய நாமதேயத்தையும் கண்டு சந்தோ ஷித்து வேடிக்கையாய்ப் பேசத் தொடங்கினான். அவன் வயிறு வெடிக்கச் சிரித்துச் சில படிக்கட்டுகளின்மீது கால் இடறி விழுந்தான்.

Koviloor Digital Library



"ஷீபா, நீ என்ன இவ்வளவு அசடாயிருக்கிறாய்? ஆனால் நீ நமது ஜன்மபூமியாகிய வடப்பிரதேச வனாந்தரங்களினின்று வந்து அதிக நாளாகவில்லை. இந்தியக் கொல்லர்கள் கட்டும் இந்தக் கள்ளறைகளும், திருட்டு வழிகளும், உனக்கு எப்படி இதற்குள் தெரியும்? என் கையைப் பிடித்துக்கொள். நீ என்னுடனிருக்குமட்டும் உனக்கு ஏதாவது தீங்கு நேர்ந்தால், வடக்கே இருக்கிறாளே, நமது தாயார், அவளுக்கு நான் அல்லவோ பதில் சொல்லவேண்டி வரும்! இந்த அந்தகாரமான வழியில் இடர்கள் பல இருக்கின்றன. ஜாக்கிரதையாய்ச் செல்லவேண்டும்."

கரும்பு தின்னக் கூலி வேண்டுமா? நரேந்திரன் அவளுடைய மிருதுவான கரங்களைக் கெட்டியாய்ப் பற்றிக் கொண்டான்.

"சகோதரீ, ஏன் இவ்வளவு முரட்டுத்தனமாய்ப் பிடிக்கிறாய். என் கைகளைப் பிடிப்பதைப் பார்த்தால் உன்னைப் புருஷனென்று சொல்ல வேண்டியிருக்கிறது. புருஷருக்குரிய இந்த முரட்டுத்தனம் உனக்கு எங்கே படிந்தது? பெண்ணென்பவளுக்கு இதைவிடச் சாந்தமான நடவடிக்கைகள் படியவேண்டும். ஏனெனில் அச்சம், நாணம், மடம், பயிர்ப்பு முதலிய குணங்கள் இருந்தால் தான் ஸ்திரீகள் தமது காதலருடைய மனத்தைக் கவரலாம்."

"அதிக நாணயமும் நாகரிகமுமான சகோதரீ, சில வேளைகளில் புருஷர்கள் சற்று அத்துமீறி நடப்பதைச் சிற்சில சந்தர்ப்பங்களில் சிறு பெண்கள் சிறிது விரும்புகிறார்கள் அல்லவா? கன்னிப் பெண்களாகிய நாங்கள் பௌருஷமற்ற மனிதனைப்பற்றி அதிகமாய் மதிப்பதில்லை. சில சந்தர்ப்பங்களில் புருஷர்களுக்குரிய சிறிது முரட்டுத்தனத்தை நாங்கள் ஒரு பொருட்டாக எண்ணுவதில்லை."

Koviloor Digital Library


"இருக்கலாம் சகோதரி, இவ்வாறு பௌருஷத்தன்மையை அங்கீகரிக்கும் ஸ்திரீகள் இருக்கலாம். ஆனால் என் மட்டும், இந்த அதிகப்பிரசங்கத்தைக்கண்டு மயங்குமுன் எனது கட்டாரிக்கு ரோஷம் பிறந்துவிடுமே" என்று அழுந்தந்திருத்தமாய்ச் சொன்னாள் ஜெலேகா.

இவ்வாறு அவமானப்பட்ட ஜெலேகாவின் தோழியானவள், "எனதருமைச் சகோதரி, உனது பரிசுத்த குணத்தைக்கண்டு நான் மெச்சினேன். நீ எனக்குப் புரிந்துள்ள பேருபகாரத்தை என்றைக்கும் நான் மறவேன்" என்றாள்.

"இதுதான் உடன்பிறந்தாளுக்கேற்ற பேச்சு. பெண் பாலருக்குள் நாகரிகத்திற் சிறந்தவளைப்போல் நீ இப்போது பேசினாய். ஷீபா, உன்னை மணம்புரிய உத்தேசித்துவந்த எந்த சுந்தர புருஷனுடைய ஆண்மையைக் கண்டாவது நீ மயங்கினாயோ?"

"ஜெலேகா, நீ சொல்லியது உண்மை. நான் படுகிடையாய்க் கிடந்தபோது, உயரமும் ஒற்றைநாடி சரீரமுமான ஒரு சுந்தர புருஷன் எனக்கு வெகுகாலம் சுசுரூஷை செய்தான். கடைசியில் அவன் என் மனத்தைக் கொள்ளைகொண்டான். அவனுடைய நீண்ட கைகளின் அழகே அழகு. அவனுக்கிருக்கும் கண்களும் நெற்றிப்புருவமும் வேறெவருக்குங் கிடையாது. என் மனம் அவனையே பற்றிச் செல்கின்றது. ஆனால் சிலவேளைகளில் அவன் ஒரு பரிகாசமான புன்னகை செய்து புருவங்களை நெறித்துக்கொள்வான். அப்போது நான் சிறிது அச்சமுறுவேன். கடைசியில் ஒரு வேளை அவன் என்னைப் பரிகசித்து ஏளனஞ்செய்யும் மோசக்காரனுய்த்தான் இருப்பானோ நான் அறியேன்."

"யாதுமறியாத பேதை நீ, அம்மனிதனை நம்பி மோசம் போகாதே. அவனிடம் காதல் கொள்ளவேண்டாம்.

Koviloor Digital Library



காதல் கொண்டால் என்றைக்கும் அவனுக்கு அடிமை யாய்விடவேண்டும்."

"ஜெலேகா, உன் எச்சரிக்கைக்குச் சமயம் தவறிப் போய்விட்டது; நான் முன்னமே அவனுக்கு அடிமையாய் விட்டேன். அவன் என்னைக் காந்தம்போல் இழுத்துச்செல் கிறுன். அந்தச் சக்தியை எதிர்க்க எனக்கு ஆற்றல் காணேம். சகோதரீ, உனக்கு எப்போதாயினும் இத்தகைய அநுபவம் உண்டாயிருக்கிறதா?"

"இல்லை ஷரீபா, நான் பிறர் வழிபட்டுச் செல்பவளல் லள். பிறருக்கு அடிமைப்படுவதென்பது நான் அறியேன். நான் எப்போதாயினும் ஒரு காதலனைத் வேண்டுவே ளுனல் அடிமைச்சந்தை சென்று நான் இட்ட கட்டளைகளைச் செய்துகொண்டு என் காலின்கீழ் விழுந்துகிடக்கும்படியான அடக்கமுள்ள ஒரு புருஷனை விலைக்கு வாங்கிவருவேன். நான் சிறு பெண்ணுயிருக்கும்போதே என் தாயார் எனக்குக் கட்டாரியின் மகிமையை உபதேசித்திருக்கிறுள். அதைக் கொண்டு நாம் புருஷர்களை நமக்கு அடிமைகளாக்கலாம்.

"சகோதரீ, உன்னைக் கண்டு ஏங்கிக்கிடக்கும் அடிமை கள் எவர்மீதாவது - நீ மரணத்தினின்றும் காப்பாற்றிய நாடோடிப் போர்வீரன் உள்பட - அந்த மந்திரத்தை இது வரைக்கும் பிரயோகித்ததுண்டா?"

"என்ன ஆவல் உனக்கு? என்ன அவசரம்? உன்னிடம் நிரம்பக் குறும்புத்தனம் இருக்கிறது."

"நான் உன்சகோதரிதானே. என் ஆவலை மன்னிக்கக் கூடாதா? என் மனவமைதியை அபகரித்த, நயமான சரீர மும் மிருதுவான அங்கங்களும் கரிய வசீகர விழிகளு முடைய ஒரு சுந்தர புருஷரைப்பற்றி நான் உன்னிடம் சொல்லவில்லையா? நீ உன் கட்டாரியின் மந்திரத்தையோ அல்லது அதைவிட அதிக வசிய சக்தியுடைய சௌந்தரிய

Koviloor Digital Library


மான உனது விழிகளின் மகிமையையோ பிரயோகித்திருக்கக்கூடிய - துணையற்று நாதனற்று நாடோடியாய் வீட்டைவிட்டு இத்தேசம் வந்த - புருஷன் எவனும் உனக்கு ஞாபகமில்லையா?"

"ஷீபா, நீ மஹா தந்திரக்காரி. உன் பார்வை சாதுத்தன்மையாயும் உனது கண்கள் சாந்தமாயுமிருந்த போதிலும் நீ ஒரு நாணமற்ற சிறுமி. நீ ஸாமான்யப் பேர் வழியல்ல. நீ சொல்வது நிஜந்தான்; அழகும் தைரியமும் பொருந்திய ஒரு யௌவன புருஷன்மீது ஒரு காலத்தில் நான் என் மந்திரத்தைப் பிரயோகித்ததுண்டு. ஆனால் அவன் எவ்வளவு ரூபசௌந்தரிய முடையவனோ, அவ்வளவுக்கவ்வளவு நம்பிக்கைத் துரோகிபோ லிருக்கிறது. இந்நாட்டுச் சிறுவர்கள் ஸ்திரீகளை ஏமாற்றுபவர்களா யிருக்கலாம். நான் தெரிந்தெடுத்த அடிமை என்னை வாய்ப்பேச்சுப் பேசி ஏமாற்றிக் கொண்டிருக்கையில், அவனுடைய மனத்தை வேறொரு சுந்தரி சிறை கொண்டிருந்தாலும் இருத்தல் கூடும்."

நரேந்திரன் திடுக்கிட்டான். இது என்ன, குருட்டடியாய்ப் பேசின வார்த்தையோ? அல்லது அந்த விசித்திரப் பெண்மணிக்கு அவனுடைய பூர்வசரித்திரம் தெரிந்திருக்குமோ? சற்று நேரம் இருவரும் ஒருவருடனொருவர் பேசாமல் நடந்தார்கள். அந்தகார வழி முடிவுபெற்றது.

ஜெலேகா ஒரு சிறிய கதவைத் திறந்தாள். செம்மணற்கற்கள் பரப்பப்பட்ட ஒரு முற்றம் அவர்களுக்குத் தென்பட்டது. நக்ஷத்திரங்களின் ஒளி ஜெலேகாவின் முகத்தில் விழுந்தது. அவள் முகம் வெளுத்திருந்தது; சந்தோஷக் குறிகளெல்லாம் அகன்றுவிட்டன. அவள் அம்முற்றத்தை மூலைமூலையாய்த் தன் நுட்பமான கண்களால் பரிசோதித்தாள். காவலாளிகளின் காலடியோசையையும் இராப்பக்ஷி

Koviloor Digital Library


களின் ஒலியையும் கவனமாய் உற்றுக் கேட்டாள். வரம்பு கடந்த அச்சத்தால் அவளுடைய புருவங்கள் இருண்டன. எறும்பு ஊறும் த்வனியைவிடத் தாழ்ந்த த்வனியாய்க் காதோடு காதுவைத்துப் பேசத்தொடங்கினாள்.

"யௌவன விரசிகாமணியே, நான் சொல்வதைக் கவனமாய்க் கேள். எல்லாவற்றையும் விட்டுச் சொல்லி விடுகிறேன். உனக்கு எல்லா விஷயமும் தெரியவேண்டும். இவ்விடம் நேரிடக்கூடிய சர்வ அபாயங்களையும் நீயே எதிர்த்துப் பார்த்துக்கொள்ள வேண்டும். இதோ ஆகாயத்தை அளாவிநிற்கும் மதிற்சுவர்களால் சூழப்பெற்றிருக்கும் கோட்டை ஆக்ராநகரத்துக் கோட்டை. உனக்கே தெரியலாம். இதைப்போன்ற கோட்டை இப்பூமண்டல முழுவதும் கிடையாது."

"அப்போதே தெரிந்துகொண்டேன். மேலே விஷயங்களைச் சொல்லிக்கொண்டு போ, நிறுத்தவேண்டாம்."

"நீ உன் அறையின் கூரையினின்று கண்ணுறுவது கோட்டையின் வெளிப்பிராகாரம். சபா மண்டபங்களும், நாட்டிலுள்ள உயர்குலச் சீமான்களுடைய வாசஸ்தலங்களும் அவ்விடம் அமைந்திருக்கின்றன. சக்கரவர்த்தியவர்களுடைய ஆட்கள் இரவும் பகலும் ஓயாமல் உருவின கத்தி உருவின பிரகாரம் அவ்விடம் காவல் புரிகிறார்கள். நமது சக்கரவர்த்தியவர்களின் இராணிமார்களுள் ஒருவராகிய அம்பர் ராஜகுமாரியின் விருந்து மண்டபமும் அவ்விடந்தான் இருக்கிறது. அவ்விடந்தான் இராணியாருடைய ஜோதிஷ சாஸ்திரிகளும், நிபுண வைத்தியர்களும் வசிக்குமிடம். ராஜா மானஸிம்ஹர் இராணியாருடைய மருமகன். உன்னை யாவரும் கைவிட்ட பிறகு மானஸிம்ஹர் அவர்களுடைய வேண்டுகோளின்பேரில் நீ விருந்து மண்டபத்துக்குக்

Koviloor Digital Library


கொண்டுவரப்பட்டனை. இராஜியாருடைய பிரபல வைத்தியர்கள் உன்னை இரவும் பகலும் கண்கொட்டாமல் கவனித்து உன் வியாதியைச் சொஸ்தப்படுத்தினர்."

"மஹா பெருந்தன்மையுள்ள ராஜா அவர்கள் என் வம்சத்தாரிடமும் என்னிடமும் அதிகப் பக்ஷம் பாராட்டி எங்களுக்கு எவ்வளவோ நன்மைகள் புரிந்துவருகிறார். நான் தண்டனைக்குப் பாத்திரனாயிருந்தபோது அவர் என்னை க்ஷமித்தருளினார்; நான் மரணாவஸ்தையில் இருந்தபோது எனக்கு உயிர்ப்பிச்சை கொடுத்து இரக்ஷித்தார்."

"அவருடைய அன்பும், பெருந்தன்மையும், பெருமையும், செல்வாக்கும் உலகம் அறிந்தது. சக்கரவர்த்தியவர்களுடைய மூத்த மகனும் அவருக்குப் பின்னர் பட்டத்துக்கு வரவேண்டியவருமாகிய ஸலீம் ராஜகுமாரர் அவருடைய சகோதரியை மணம் புரிந்திருக்கும் விஷயம் உனக்குத் தெரிந்திருந்தாலும் இருக்கலாம்."

"ஆமாம், கேள்விப்பட்டிருக்கிறேன்."

"இன்றிரவு நீ அந்த ராஜகுமாரரைப் பார்ப்பாய்."

"ஸலீம் இளவரசையா?"

"ஸலீம் இளவரசையும், அவருடைய தாயாரையும், இளவரசர் மனத்தைக் கவர்ந்திருக்கும் நாரீமணி யொருத்தியையும் ஆக மூவரையும் நீ இன்றிரவு பார்க்கும் பாக்கியம் பெறுவாய்."

"ஜெலேகா, நீ சொல்வது விசித்திரமாயிருக்கின்றதே! ராஜவம்சத்தைச் சேர்ந்தவர்களைத்தவிர மற்ற மனிதர்கள் ஜனானா ஸ்திரீகளைப் பார்ப்பது எப்போதாவது சாத்யமா?"

"ராஜவம்சத்தைச் சேர்ந்தவர்கள் தவிர, வேறெந்தப் புருஷரும் அவர்களைக் கண்ணுற்றதில்லையென்பது வாஸ்த

Koviloor Digital Library


வமே. ஆனால் நீ இன்றிரவு ஒரு ஸ்திரீயாயிருக்கின்றனை என்பதை மறந்துவிட்டனேயோ சகோதரீ ?"

நரேந்திரனோ மஹா வீரதீரன்; அஞ்சா நெஞ்சம் படைத்த இணையற்ற ரணசூரன். ஆயினும் ஜெலேகாவின் சூழ்ச்சிகளைக் கேட்டு அவன் முகம் இரத்தம் சுண்டி வெளுத்தது. நூற்றுக்கணக்கான வீரர்கள் இடைவிடாது காவல்புரியும் ஜனனாவினுள், ஸ்திரீ வேஷம் தரித்து நுழைவது யமன் பட்டணத்துக்குச் செல்வதேயாகும். ஆனால் இவ்விதமெல்லாம் எண்ணமிட ஜெலேகா அவனுக்கு அவகாசம் கொடுக்கவில்லை.

"இந்த முற்றத்துக்கப்பால் ஓர் உன்னதமான கற்சுவர் எழுப்பியிருக்கிறது பார். அச்சுவருக்குப் பின்புறந்தான் ஆக்ரா இராணிகளும் பட்ட மஹிஷிகளும் வாசம் செய்யுமிடம். இதுவரைக்கும் அதைக் கடந்துசென்ற எம்மனிதனும் உயிருடன் திரும்பிவாராத அம்மதிற் சுவரை நீ இன்றைய தினம் தாண்டிச்செல்வாய். அன்னிய புருஷர்கள் இதுவரைக்கும் கண்டிராத வதனங்களைக் கண்ணுறும் பாக்கியம் நீ பெறுவாய்."

"எல்லாம் இருக்கட்டும், மதியீனமான இந்தச் சாகஸமேன் ?"

"உனக்குத் தைரியம் இல்லையா ? திரும்பிவிடலாம்."

"எனது கடமையென எனக்குத் தோன்றும் எந்தக் காரியத்தினின்றும் என் மனம் பின்வாங்காது. நமது மாபெரும் காருண்ய சக்கரவர்த்தியவர்களுடைய அந்தப்புரத்தின் நிபந்தனைகளை நிராகரித்து ஸ்திரீவேஷம் பூண்டு ராஜபத்தினிகள் வசிக்கும் மாட்சிமை தக்கிய சக்கரவர்த்தி பெருமானுடைய ஜனனா எல்லைக்குள் நான். கள்ளத்தன

Koviloor Digital Library



மாய்ச் செல்வது எனது கடமைகளிலொன்று என்று எனக்குத் தோற்றுகிறது. நான் பின்வாங்குவதில்லை."

"ராஜஸ்திரீகள் அனைவரினும் சிறந்து பேர்பெற்றுச் சீர்பெற்று விளங்கப்போகிற மாதுசிரோமணி உன்னை அழைத்துவரும்படி ஆஞ்ஞாபித்திருக்கிறாள். நேரில் அவள் வாயிலிருந்தே நீ சில கட்டளைகளைப் பெறுவாய்."

சரி, நடந்துசெல், நான் பின்தொடர்ந்து வருகிறேன்.

Koviloor Digital Library

## மூன்றும் அத்தியாயம்

## இராஜபுத்திர இராணியார்

ஆகாயத்தில் சந்திரப் பிரகாசம் கிடையாது. நக்ஷத்திர வெளிச்சந்தான் தெரிந்துகொண்டிருந்தது. அவ்வெளியில் இருவரும் முற்றத்தைக் கடந்து சென்றனர்.

ஜனனு காவலைச் சேர்ந்த ஒரு நபும்ஸகன் உட் பிராகார வாயிலண்டை நின்றுகொண்டிருந்தான். அவன் தன்னுடைய உத்தியோகத்தின் மகிமையால் சக்கரவர்த்தியவர்களுடன் அதிக பரிசயம் ஏற்படும் அதிர்ஷ்டம் பெற்றவன். மஹாராஜாக்களும், சிற்றசர்களும், பிரபுக்களும், பிரதானிகளும், ஓம்ராக்களும், மன்ஸப்தாரர்களும் அவனுக்கு ஏராளமாய்ப் பொன்னும் பரிசுமாய்க் கொடுத்து அவனது தயையை எதிர்பார்த்து இருந்தனர். அவனது நாமதேயத்தைக் கேட்டு நடுங்காத சேவக ஸ்திரீகளும், அடிமைப் பெண்களும் அரண்மனையில் கிடையாது. அவர்கள் ஒவ்வொருவருடைய பேர், ஊர் முதலிய எல்லா விவரங்களும் அவனுக்கு நன்ருய்த் தெரியும். அவன் மாத்திரம் காலாகாலங்களில் பெரியமனது செய்து காப்பாற்ருமலிருந்தால் அவர்களுள் பலர் இதற்குள் இப்பூவுலகை விட்டு அகன்றிருப்பார்கள்.

"அவன்தான் முஸ்ரூர்" என்று சொல்லி ஜெமேலகா உடல் நடுங்கினுள்.

"யார் அது முஸ்ரூர் என்பது?"

"உஸ், மெள்ளப் பேசு" என்று உதட்டின்மீது கை வைத்து எச்சரித்தாள்.

Koviloor Digital Library


ஜெலேனாவும் அவளுடைய தோழியும் வாசற்படியண்டை வந்தனர். மூன்ஷூர் பெருஞ்சிரிப்பு சிரித்துக் கொண்டே அவர்களைப் பார்த்து, "ஹா! என்னப் பிரதினமும் நீ புதியாகிறது? நாளுக்கொரு சிநேகம் புதிதாய்ப் பிடித்து வருகிறாய் போலிருக்கிறது. யார் அந்த அழகிய ஸ்திரீ, அரண்மனைக்குள் அழைத்துச் செல்கிறாய்? இது வரைக்கும் நான் பார்த்திருப்பதாகக் காணோமே?" என்றான்.

"மூன்ஷூர், உமது தயைக்கு என்றைக்கும் காத்திருக்கிறேன். இப்பெண் எனது உடன்பிறந்தாள். ஹிந்துஸ்தானம் வந்து கொஞ்சகாலம் தான் ஆயிற்று. நமது ஜனானாவில் வேலை தேடி வந்திருக்கிறாள். அவள் அதிர்ஷ்டம் ஏதாவது வேலை அகப்படுமாயின், உனக்கு அவள் சீக்கிரத்தில் சிநேகமாவாள்."

"அவளுக்கு வேலை அகப்படலாம். இக்காலங்களில் நல்ல கட்டாரிப் பழக்கமுள்ள தார்த்தரிப் பெண்கள்தாம் அதிகமாய்த் தேவை. உனது சகோதரி விசிறி வீசுவதிற்காட்டிலும் கட்டாரி பிடிப்பதில் கைதேர்ந்தவளாகத் தோற்றுகிறது. இந்த அரண்மனைக்குள் வெளியுலகம் அறியாத செயல்கள் எத்தனையோ சர்வசாதாரணமாய் நடைபெறுகின்றன - அல்லா நம்மை மன்னிப்பாராக - உன் சகோதரியின் நடையுடை பாவனைகள் எனது மனத்தில் சிறிது சந்தேகத்தை உண்டுபண்ணுகின்றன. ஆதலால் உள்ளே நுழைவதற்கு முன் அவளுடன் இரகசியமாய் இரண்டொரு வார்த்தைகள் பேசவேண்டும்.

"மூன்ஷூர், அவளுடன் இன்றிரவு வார்த்தையாடுவது அசாத்தியமெனத் தோற்றுகிறது. ஏனெனில் அவளுக்கு இன்னும் இந்த இந்துஸ்தானத்தில் வழங்கும் பாஷை தெரியாது. ஆனால் அவள் சிறிது சுடியானவள். சீக்கிரத்தில்

Koviloor Digital Library


கற்றுக்கொண்டு விடுவாள். அப்புறம் அவளே உன்னிடம் பேசவருவாள். ஆகையால், மன்னிக்கவேண்டும், நாங்கள் செல்கிறோம், அநுமதி அளியும்" என்று சொல்லும்போதே ஜெலேகாவின் முகம் பயமிகுதியால் வெளுத்தது.

"என் காதற் கண்மணி! நீ சொல்வதற்கு மாறாகச் சொல்லமாட்டேன். ஆனால் உன் சகோதரி இவ்விடம் வருவது இதுதான் முதல் தடவை. ஆதலால் அவள் உள்ளே செல்லுமுன் நான் அவளுடைய முகத்தையாவது பார்த்தாக வேண்டும்."

ஜெலேகாவுக்கு ஆத்திரம் அதிகரித்தது; அவளுடைய நெற்றி கோவைப்பழமாய்ச் சிவந்தது; வேதனையாலும் சங்கடத்தாலும் உதட்டைக் கடித்துக்கொண்டாள்; நாக் குழற அவள் பேசிய மொழிகளில் அவளுடைய பயமும், மனோவேதனையும் சிறிது வெளியாயின. "நான் ஜோத்பாய் இராணியின் அடிமை என்பது நீ அறிந்த விஷயம். இராணியாரது கட்டளையின் பேரில் எனது சகோதரி என்னுடன் வருகிறாள். முஸ்ரூர், இதோ பார் இராணியாருடைய முத்திரை மோதிரம். எனது உடன்பிறந்தாள் விஷயமாய் நீ ஏதாவது தடைசெய்தால் இராணியாருக்குப் பதில் சொல்லியாக வேண்டும்."

ஏற்கெனவே கறுத்த மேனியனாகிய அம்முஸ்ரூரின் முகம் பின்னும் இருண்டது. தன்னிடம் இவ்வளவு அலக்ஷியமாய்ப் பேசியதைக் கேட்டு அவனுடைய கண்கள் சிவந்தன; கோபாக்கிராந்தனானான். மோதிரத்தைப் பார்த்து விட்டுத் தலைவணங்கி அந்த நபும்ஸகன் மேல்வார்த்தை பேசாமல் ஜெலேகாவையும் அவளுடைய தோழியையும் உள்ளே செல்லவிட்டான்.

"ஜெலேகா, அவன் அகம்பாவத்தை அரை நொடியில் அடக்கி வைத்தனையே! இனி உன்னிடம் அவன் வாலாட்ட

Koviloor Digital Library


மாட்டான். உன்னோடு பேசும்போது சற்று முன்பின் யோசித்துத்தான் பேசுவான்."

"அவன் சமாசாரம் உனக்குத் தெரியாது; அவன் மஹா பொல்லாதவன்; நிஷ்கண்டகன். பழிக்குப்பழி தீர்ப்பதில் நிபுணன். இன்றிரவு அப்படுபாவியை நான் பகைத்துக் கொண்டேன். அவன் ஆண்பாலாயிருந்தால் மறப்பான்; பெண்பாலாயின் மன்னிப்பான்; ஆனால் ஆணும் அற்றுப் பெண்ணுமற்ற இந்த அலி, குற்றங்களை மறப்பதுமில்லை, மன்னிப்பதுமில்லை."

ஜெலேகா மௌனமுத்திரையிட்டு முன்னே சென்றாள்; நரேந்திரனும் உடன் சென்றான். சலவைக்கல் முதலிய விலையுயர்ந்த கற்களால் கட்டப்பட்டு நக்ஷத்திர ஒளியில் பிரகாசித்துக் கொண்டிருக்கும் ஸ்தூபிகளையும் சிகரங்களையுமுடைய இரமணீயமான பல மாளிகைகளைக் கடந்து சென்றனர். வழியெல்லாம், கத்தி கேடயங்கள் சகிதம் விளங்கும் பல ஸ்திரீகள் காவல்புரிந்து நின்றனர். அரண்மனையிலுள்ள எண்ணிறந்த விளக்குகளின் ஒளியில் அவ்விரவு மாரிக்கால இரவாகவே தோற்றவில்லை. கீழே பிரவஹித்துக் கொண்டிருக்கும் யமுனாநதியின் நீரோட்டச் சப்தம் வெகுதூரத்தினின்று கேட்டுக்கொண்டிருந்தது. எத்தனையோ சுற்றுவழிகளெல்லாம் கடந்து இருவரும் வீணை முதலிய சங்கீத த்வநிகள் இனிமையாய் ஒலித்துக் கொண்டிருக்கும் ஜோதிமயமான ஒரு சிறந்த கிருஹத்தை அடைந்தனர். ஜெலேகா மெதுவாய் ஒரு கதவைத் திறக்க, அவர்களிருவரும் ஒரு பெரிய மண்டபத்துள் பிரவேசித்தனர்.

அக்பரது திவ்விய புத்திரரும், அக்காலத்தில் இணையற்று விளங்கிய அகண்ட ராஜ்யத்து இளவரசுமாகிய ஸலீம் ராஜகுமாரர் நல்ல காசிப்பட்டு பீதாம்பரங்கள், சந்தன களப கஸ்தூரி முதலிய வாசனைத் திரவியங்கள் அணிந்து

Koviloor Digital Library



உயர்ந்ததொரு ஸ்தானத்தில் கம்பீரமாய் வீற்றிருந்தனர். நறுமணம் கமழும் தைலங்கள் விட்டுக் கொளுத்தப்பட்டிருந்த வெள்ளி விளக்குகளும், காபூல் பிராந்தியத்தில் உற்பத்தியாகும் இனிய பழவர்க்கங்கள் நிறைந்த தட்டுத் தாம்பாளங்களும் அவர்முன் விளங்கிக்கொண்டிருந்தன. இளவரசருக்கு அதிகப் பிரியமான திராக்ஷ பானம் முதலிய மதுவர்க்கங்கள் அழகிய கண்ணாடிக் கோப்பை, பளிங்குக் கோப்பைகளில் விளக்கொளியில் ஜ்வலித்துக் கொண்டிருந்தன. அக்பரது ராஜபுத்திர பத்தினியாகிய ஜோத்பாய் இராணியார் தமது திருமகனுக்கு விருந்து அளித்துக் கொண்டிருந்தனர். மண்டப முழுவதும் பட்டப்பகல்போல் வெளிச்சமாயிருந்தது. காஞ்சனிகள் அல்லது ஸ்வர்ண விக்கிரகங்கள் எனப் பெயர்பெற்ற ஆக்ரா நகரத்து நடன மாதர்கள் இளவரசு முன்னர் பிறைவடிவ வரிசையாக நின்று கர்ணாமிருதமான பாட்டுகள் பாடிக்கொண்டிருந்தனர்.

அவர்களுடைய வாய்ப்பாட்டுக் கிசைய கிண்கிணென்று ஒலிக்கும் அவர்களுடைய கால்களும் நடனம் புரிந்தன. சக்கரவர்த்தியவர்களுடைய புதல்வரை ஆலிங்கனம் செய்துகொள்ளப் போவதுபோல் அவர்கள் தமது வெண்மையான கரங்களை நீட்டும்போது, அவர்களுடைய ஆடைகளில் விளங்கும் பொன் ஜரிகைகள் விளக்கொளியில் மின்மினென்று பிரகாசித்தன. கடைசியில் பாட்டுகளும் வாத்தியங்களும் ஓய்ந்தன. நாட்டியமாடும் அந்த ஸ்வர்ண விக்கிரகப் பெண்கள் விம்மும் தமது மார்புகளின்மீது கரங்களை வைத்துத் தலைவணங்கி இளவரசரை நமஸ்கரித்து நின்றனர்.

ஸலீம் ராஜகுமாரர் ஆனந்த பரவசமானார். குடி மிகுதியால் முகஞ் சிவந்திருந்தது. தம் முன்னர் தோன்றும்

Koviloor Digital Library



அபூர்வக் காட்சியைக்கண்டு அவர் புளகாங்கிதமாயினர். நாடகக் கலிகைகளுக்கு இருமருங்கிலும் அரண்மனை சேவக ஸ்திரீகள் வணக்கத்துடன் தலை குனிந்து மிகவும் கம்பீரமாய் அணிவகுத்து நின்றனர். அவர்களுக்கிடையில் ஜெலேகாவும் அவளது தோழியும் ஒரு சலவைக் கல் ஸ்தம்பத்து மறைவில் நின்றிருந்தார்கள்.

இவற்றையெல்லாம் கண்டு உத்ஸாகமுற்ற இளவரசர் "எனதருமை அன்னையே ? உனக்குப் பணிவிடை செய்பவர்கள் அனைவரும் நல்ல சுந்தர ஸ்திரீகள். அவர்களுடைய குரலும் காதுக்கினிமையா யிருக்கிறது. நான் யுத்தத்தை முன்னிட்டுச் செல்லுமுன்னர் என்னைப் பரிவுடன் அழைத்து இவ்வளவு விமரிசையாய் விருந்தளித்ததை நான் எவ்வளவு தூரதேசஞ் சென்றாலும் பிரதிதினமும் நினைத்துக் கொண் டிருப்பேன்" என்றார்.

மகன் பிரிவாற்றாத அன்னையாரும் தமது செல்வப் புதல்வனை நோக்கி, "இளவரசே, வீரஸிம்ஹமே, நான் உன்னை என் கண்ணின் கருமணியாகக் கருதி வளர்த்து வந்தேன். உன்னைச் சதா கண்குளிரப் பார்த்துக்கொண் டிருப்பதே எனக்கு ஆனந்தம். நீ போரை முன்னிட்டுச் செல்லுமுன் உன்னைச் சந்தித்து உனக்கு விருந் தளிப்பது எனக்கு எவ்வளவோ பெருமையாயிருக்கிறது. உனது தந்தையாரைப் போன்ற வீரதீர புருஷரையும், தரும பரிபாலன சீலரையும் இப்பூவுலகில் காண்ப தரிது. அவரைப் போலவே நீ நடந்துகொள்ள வேண்டும். உனது ஜயவிஜய காலங்களில் உன் ராஜபுத்திரத் தாயாரை ஞாபகம் வைத்து ஹிந்துப் பிரஜைகளை ஹிம்ஸிக்காது அவர்களிடம் ஆதரவாயிருப்பா யென்று எண்ணுகிறேன்" என்றாள்.

Koviloor Digital Library


மது மயக்கங் கொண்டு உழலும் இளவரசருக்கு இவ்வளவு பரிவுமொழிகளும் செவிடன் காதில் ஊதிய சங்கு போலிருந்தன. அம்மொழிகளில் ஓர் அக்ஷரமாவது அவர் செவியில் விழவில்லை. பால்யம் முதற்கொண்டு, சீரும் செல்வமுமாய்ப் பயமறியாத இளங்கன்றாய் வளர்ந்து விட்ட அரசகுமாரருக்குத் தகப்பனாரது நற்குணங்களில் ஒன்றாவது படியவில்லை. அவர் கேளிக்கைக் குழந்தை யாகவே யௌவன பருவத்தை யடைந்துவிட்டார். ராஜ்ய ஸ்தாபக, ராஜ்ய நிர்மாண கர்த்தாவாகிய அக்பர் பெருமான் மாண்ட பின்னர் ராஜ்யத்தின் கதி என்னாகுமோ என்று ஏங்கினர் மொகலாய ராஜ்யத்து மதியூகிகள். இன்றிரவு ஸலீம் தமது தாயாரைத் தரிசிக்க வந்தது அவள் பரிவுடன் அளிக்கும் விருந்தை உத்தேசித்தன்று. தனது ஆவியைக் கொள்ளைகொண்டு மோகவலையிலாழ்த்திய கருவிழியாள் ஒருத்தியைக் கருதி வந்தவர் அவர். "நிசியாய் விட்டது. அகாலமாகிறது. இப்பெண்மணிகளெல்லாம் அதிகச் சிரமப் பட்டிருக்கின்றனர்; முகமலர்களெல்லாம் வாடிவிட்டன; இவர்களுடைய கண்கள் நித்திரையை நாடுகின்றன. இந்தா, இந்தப் பொற்கிழியைக் கொடுத்து அவர்களை அனுப்பிவிடு."

யாவரும் போய்விட்டனர். தாயாரும் பிள்ளையும் நம்பிக்கையான சில ஊழியக்காரிகளுமே அவ்விடம் தங்கி யிருந்தனர். அவ்வாறு தங்கியிருக்கும்படிக் கட்டளையிடப் பட்டவர்களுள் ஜெலேகா ஒருத்தி, அவளது தோழி இன்னொருத்தி.

"எனதாசை மகனே, உன்னைக் காண்பது அத்தி பூத்தது போலாய்விட்டது. நீ ஆக்ராவில் தங்கியிருப்பதே அபூர்வமாய்விட்டது. ஓயாது இரவும் பகலும் போர்

Koviloor Digital Library


முனையில் உழைப்பதால் உன் உடம்பு இளைத்துப் போய் விட்டது."

"ஆக்ராவிலிருக்க எனக்கு இப்போது பிடிக்கவில்லை. இனி ஆக்ராவிலிருந்து பயனென்ன? போர்த்தொழிலால் மட்டுமே உடம்பு இளைக்காது. காரிய விக்னமும் மனோ வேதனையுமே என் உடம்பை உருக்கிவிட்டன."

"நீ மணம்புரிய எண்ணியிருந்த அந்தப் பாரஸீகப் பெண் மணியைப் பற்றியா பேசுகிறாய்? அந்த விஷயத்தில் உனது தகப்பனார் செய்த ஏற்பாடு சர்வோத்தமமானது. நமது ராஜ்யத்துப்பணிவான ஊழியர்களிலொருவரை மிஹ்ருந்நிஸா விவாஹம் செய்துகொண்டு நிம்மதியாயிருக்கிறாள். என் செல்வக் குமாரனே, உன் மனத்தில் எழும் துர்யோசனை களை யெல்லாம் ஒழித்துவிடு. நீ உனது உன்னத பதவிக் கேற்ப கம்பீரமாய் நடந்துகொள்ளவேண்டும்."

ஸலீம் இளவரசர் பதில்மொழியொன்றும் புகலவில்லை.

"நால் உதித்த கம்பீர குலத்தில் தோன்றிய ராஜ கன் னிகைகள் பலரை ஏற்கனவே நீ மணம் புரிந்திருக்கின்றனே. அவர்களிடம் உனக்கு நவமணிகளான பிள்ளைகள் பிறந்திருக் கின்றனர். ராஜா மானஸிம்ஹர் அவர்களுடைய சகோதரி உன் மூத்தப்பிள்ளையின் அன்னையாவாள்; குஸ்ரு அழகிலும் தைரியத்திலும் நிகரற்றவன்; காஜாஹஸன் புத்திரிதான் பார்விஷ் தாயார்; குழந்தையாயிருந்தும் எவரிடமும் காணப்படாத திடசித்தமும், கூரிய புத்தியும், முகப்பிரகாச மும் பொருந்திய குர்ராம் ராஜகுமாரனைப் பெற்றெடுத்த உதய ஸிம்ஹரின் புத்திரியே உனது மூன்றுவது மனைவி; திபேத்து ராஜ்பாதிபதியும் தன் மகளை உனக்கு அளித்திருக்கிறார்; ராஜஸ்தான முழுவதுக்கும் நடுநாயகமாய் விளங்கும் ஜகத் ஸிம்ஹரின் புதல்வியைக் கடைசி பத்னியாகக் கொண்ட பாக்கியம் பெற்றுள்ளாய். நீ கைதொட்டுத் தருமமாய்

Koviloor Digital Library



மணக்த மனைவிமார்களிடம் உன் பூர்ணக் காதலையும் வைத்து அவர்களை நேசிப்பதுதான் உசிதம். இப்போது ஷேர் ஆப்கனின் பெண்டாயிருப்பவளின் காதலுக்கு ஆசைப் படாதே; அது தருமமாகாது. அக்பரவர்கள் மகனுக்கு அத்தகைய காதல் ஏற்றதன்று."

"தாய் சொல் மிக்க மந்திரமுண்டோ? நீ சொல்லி விட்டால் அதற்குமேல் என்ன ஆக்ஷேபம்? தந்தையார் செய்த ஏற்பாட்டை நிராகரிப்பது ஸாத்தியமா? நிசிவேளை கூடத் தப்பிவிட்டது. எவ்வளவு நேரம் கண் விழித்திருப் பாய்? உன் உடம்புக்கு ஆகாது. இன்னொரு விருந்துக்கு நான் செல்லவேண்டும். எனது பெரியன்னை ரக்யா பேகம் சுல்தானு என் வரவை எதிர்பார்த்திருப்பாள்."

"எனது ஆருயிர்ச் செல்வமே! நீ நெறிதப்பி நெறி செல் கிறாய். நீ பார்க்கப்போவது எனது சக்களத்தியையன்று. இந்த அவவேளையில் உன் வரவை எதிர்பார்ப்பவள் வேறொருத்தி. சரி போய்வா. அந்தப் பாரஸிகப் பெண்ணைக் கடைசிமுறையாய்ப் போய்ப் பார்த்து வந்துவிடு. ஆனால் இதுமாத்திரம் ஞாபக மிருக்கட்டும். அவள் இப்போது ஷேர் ஆப்கன் மனைவி. அவளிடம் மரியாதையாய் நடந்து கொள். அவள் கன்னிகை அல்ல. எனது அடிமை ஜெலேகா உன்னை எனது ராஜசகோதரி பவனத் துக்கு அழைத்துச் செல்வள்."

ராஜகுமாரர் இன்னொருமுறை குடித்துவிட்டுத் தாயா ருக்கு வந்தனஞ்செய்து மண்டபத்தை விட்டு அகன்றார். ஜெலேகாவும் அவளுடைய தோழியும் அவரை அரண் மனையின் பிறிதொரு பாகத்துக்கு அழைத்துச் சென்றனர்.

தூதனமான ஆக்ரா கோட்டையின் மதிற்சுவர்களின் மீதும், அவ்விடம் அமைக்கப்பட்டிருந்த கொத்தளங்களின் மீதும் மோதிக்கொண்டிருந்தன யமுனாநதியின் அலைகள்.

Koviloor Digital Library


மந்தமாய் வீசிக்கொண்டிருக்கும் காற்றுடன் உத்யான வனத்தில் புஷ்பித்திருக்கும் மலர்களின் நறுமணம் கலந்திருந்தது. அந்த நடு நிசியில் எல்லாம் நிச்சப்தமாயிருந்தது.

ஆனால் ஸலீம் இளவரசோ அவற்றை யொன்றையும் கவனிக்கவில்லை. நக்ஷத்திர ஒளி பிரதிபலிக்கும் யமுனா நதியின் அழகும், காற்றின் நறுமணமும், சப்தமற்று நித்திரையி லாழ்ந்திருக்கும் ஆக்ரா நகரத்துக் காட்சியும், அக்கோட்டைக்குள் ஆங்காங்கு எழுப்பப்பட்டிருக்கும் வீடுகள், உலாவிடங்கள் ஒன்றும், குடிமயக்கத்தால் வருந்தும் ஸலீமுக்குத் தெரியவில்லை. மிதமிஞ்சி மதுபானம் செய்ததால் முகம் சிவந்து கண்கள் இரத்தவர்ணமாகிக் கால் தள்ளாடத் தள்ளாட அவர் ரக்யா பேகம் இல்லஞ் சென்றார்.

போகும்போது ஓரிடத்தில் சற்றே குடிமயக்கம் தெளிய, அவர் ஜெலேகாவைப் பார்த்து "தார்த்தாரிப் பெண்ணே, உன்னை நான் இதற்கு முன் பார்த்திருக்கிறேன் போலிருக்கிறதே. உனது ஊடுருவிப் பாயும் இருண்ட கண்களை எளிதில் மறக்கமுடியாது" என்றார். ஜெலேகா வணக்கமாய் "மஹாராஜா, நான் உமது பணிவான அடிமைகளில் ஒருத்தி. உமது தாயாருக்குச் சேவகம் புரிபவள்" என்றாள்.

"இந்தப் பெண் உனது சகோதரியல்லவா? தார்த்தாரிப் பெண்கள் நல்ல உயரமுடையவர்கள் போலிருக்கிறதே. உன் சகோதரி உன்னைவிட ஒரு பிடி உயரமாயிருக்கிறாள். உன் முகத்தைப்போல் அவ்வளவு மனதுக்கினியதா யிராவிட்டாலும்—அவள் முகத்தில் சிறிது ஆண்மைத்தனம் விளங்குகிறது—அவள் முகமும் ஒருவிதத்தில் நன்றாய்த்தானிருக்கிறது."

Koviloor Digital Library


அச்சக்குறிச் சிறிதேனுமின்றி ஜெலேகா விடை பகர்ந்தாள்: "ராஜகுமாரரே, நாங்கள் காட்டில் வசிக்கும் ஒரு முரட்டு ஜாதியார். எங்கள் ஜாதிப் புருஷர்களுக்கு சதா சர்வகாலமும் போர்த்தொழில்தான் காரியம். எங்கள் பெண்கள் ஏகாந்தமான மலைப் பிராந்தங்களில் ஆடுமாடுகள் மேய்ப்பது வழக்கமாதலால் அவர்களுக்கும் கட்டாரிப் பிரயோகம் நன்றாய்த் தெரியும்."

"உனது உடன் பிறந்தாளுக்கு ஹிந்துஸ்தானிப் பாஷை தெரியுமா? நான் ஒரு முத்தங் கொடு என்று கேட்டால் அவள் தெரிந்துகொள்வாளா?"

"எனது சகோதரிக்கு எங்கள் பாஷையைத் தவிர வேறெந்த பாஷையும் தெரியாது. எங்கள் நாட்டில் முத்த மிடுவதென்பது அவமதிப்பான காரியம். அதை ஒரு வசையான காரியமென்று எங்கள் பெரியோர்கள் சொல் வார்கள். யாராவது முத்தமிட்டால் எங்கள் ஜாதிச் சிறுமி களுக்கு அடங்காக் கோபம் உண்டாய்விடும். முத்தமிட்ட வர்களைக் கட்டாரியால் ஒரே குத்தாய்க் குத்திப் போடு வார்கள்."

"காட்டு தேசத்துக்கேற்ற காட்டுப் பூனைகளாகத்தான் இருக்கிறீர்கள் நீங்கள்! சீறினாலும் பூறினாலும் பாதகமில்லை. இவளுக்கு நான் முத்தமிடுவேன். இவளது அதரங்களில் உயர்தரப் பானத்துக்கொப்பான இனிய ரஸமிருக்கிற தென்று எனக்குத் தோன்றுகிறது. எனது விருப்பத்துக் கிசைந்தால்தான் என் அரண்மனையில் அவளுக்கு வேலை கிடைக்கும். முஸல்மான் ஸ்திரீகள் சிறிது பிகுவுடையவர் கள்; ராஜபுத்திர மாதர்களோ லஜ்ஜைப்படுகிறவர்கள்; இந்த முரட்டு ஜாதித் தார்த்தாரிப் பெண்கள்தான் போர் வீரர்களுக்கு ஏற்றவர்கள்."

Koviloor Digital Library



நரேந்திரனுக்குக் கோபமும் ஆத்திரமும் உண்டாக உதட்டைக் கடித்தான்; அவனை யறியாமலே அவனுடைய கை அரைக்கச்சையை நாடியது. ஆனால் அத்தருணம் பதட்டம் சிறிதாவது தோன்றுமாயின் அந்தரங்கம் வெளியாய்விடும்; ஜெலேகாவும் அவனும் பிராணன் இழக்கவேண்டி வரும்; இந்தத் தரும சங்கடத்தினின்றும் உபத்திரவத்தினின்றும் தப்பியோடவோ அல்லது பிராணனை விட்டுவிடவோ எத்தனிப்பவன்போல் நரேந்திரன் கீழே பாயும் யமுனா நதியை உற்று நோக்கினான். ஆனால் ஜெலேகாவோ இந்த அரண்மனை அந்தரங்கங்கள், ஜனானச் சூழ்ச்சிகள், கள்ள ஏற்பாடுகள் எல்லாவற்றிலும் கைதேர்ந்த பேர்வழி. அவளுக்குச் சமயத்துக்கேற்ற யோசனை மின்னலைப்போல் சடுதியில் தோன்றும். அவள் அதிக அமைதியும் சாந்தமும் உடையவள்; அவளுடைய நிதானபுத்தி நிகரற்றது. தனது திடமான கரங்களால் ராஜகுமாரனை இரும்புபோல் பிடித்துக் கொண்டு ஜெலேகா, தன் அதரங்களில் இனிய புன்னகை தவழ "உமது தயைக்குப் பாத்திரமாகி என் சகோதரி தங்களுடைய திருமாளிகையில் வேலையிலமர்ந்தால் அவளும், எனது தகப்பனார் குலமும் கௌரவமடைவார்கள். ஆனால் எக்காலத்தும் மறக்கவொண்ணாத மன்மத வடிவினராகிய ராஜகுமாரரைக் கண்குளிரக் கண்டு, அவரிடம் விடை பெற்றுச் செல்லவேண்டும் என்ற ஆவல் மேலிட்டவளாய்த் தெய்வலோக ரம்பை பொருத்தி இன்றிரவு உமது வரவைக் கண்கொட்டாது எதிர்ப்பார்த்து நிற்கிறாள். அந்தக் காதற் கட்டழகியைத் தாங்கள் இந்நேரம் காக்கவைப்பது நியாயமன்று" என்றாள்.

"ஓம், நீ சொல்வது வாஸ்தவந்தான்; என் பெண்ணே, அக்கட்டழகியை நான் காக்க வைப்பது தருமமன்று.

Koviloor Digital Library


அந்தப் பாரஸிகத்து மடமானை ஒருதரம் தரிசனம் செய்வதற்கு ஈடாகுமா, இந்தத் தார்த்தாரி தேசத்துப் பெண்களும் ஹிந்து தேசத்துப் பெண்களும் எல்லாம் சேர்ந்து?"

மூவரும் துரிதமாய் நடந்தனர்; சீக்கிரம் போய்ச் சேர்ந்துவிட்டனர். பலவகையான புஷ்பச் செடிகளும், நறுமணம் கமழும் மலர்க்கொடிகளும், அந்நிய தேசத்துச் சுகந்த புஷ்பங்களும் நிரம்பிக் கிடக்கும் பூங்காவனத்தால் சூழப்பெற்ற அழகியதோர் அரண்மனை அவர்கள்முன் கம்பீரமாய்த் தோன்றிற்று. யமுனை நதியிலிருந்து ஜலம் அரண்மனையைச் சுற்றிப் பாய்ந்துகொண்டிருந்தது. பூந்தோட்டத்திற்கு மனிதர் எவரும் பாய்ச்சாமலே, ஜலம் நிறையப் பாய்ந்துகொண் டிருந்தது. சாளரங்களுக்குப் பதிலாகக் கட்டப்பட்டிருந்த சலவைக்கல் வளைவுகளின் மூலமாய் உள்ளே எரிந்துகொண்டிருந்த தீபங்கள் தெரிந்தன.

ஜெலேகாவும் அவளுடைய தோழியும் வெளியில் நின்றுவிட்டனர்; ஸலீம் இளவரசர் மாத்திரம் உள்ளே சென்றார். வெல்வெட் பட்டாடைகளும், பொன் ஆபரணங்களும், நவரத்தின கசிதமான நகைகளும், முத்தாஹாரங்களும் அணிந்து, நயமான பட்டுமறையாடை தரித்து, நல்ல ரூபலாவண்யமுள்ள தோழிமார்கள் புடை சூழ ஒரு ஸ்திரீ ரத்னம் அவ்விடம் வீற்றிருந்தாள். அவள்தான் சக்கரவர்த்தியார் திருமகனின் மனத்தை மயக்கிய மிஹ்ருந்நிஸா.

Koviloor Digital Library

# நான்காம் அத்தியாயம்

## பாரஸிகப் பெண்மணி

ஹிந்து தேச சரித்திர முழுவதிலும் மிஹ்ருந்நிஸாவின் சரித்திரமே அதிக ஸ்வாரஸ்யமானது. அச்சரிதத்தைப் படிப்பவர்கள் அதனைக் கற்பனைக் கதையோ வென்று சந்தேகிப்பார்கள். அவளுடைய தந்தை, பாரஸிக தேசத்து உயர்குலச் சீமான்களுள் ஒருவர். ஆனால் காலவித்தியாசத்தால் வீடு வாசல், நிலம் புலம் யாவையும் விற்கவேண்டி வந்தது; பரம தரித்திரராயினர். இனித்தமின் உள்ளூரில் வாழ்ந்திருப்பது மரியாதைஅன்றெனக் கருதியும்,மொகலாய அரசர்களின்கீழ் நல்ல உத்தியோகம் பெற்று, கூடியவரை நல்ல ஸ்திதியிலேயே காலக்ஷேபஞ் செய்யலாமென உத்தேசித்தும் அவர் இந்தியாவுக்கு வந்தார். வரும் மார்க்கத்தில் காந்தஹார் (காந்தாரம்) என்னுமிடத்தில் அவருக்கொரு பெண்மகவு பிறந்தது. குழந்தை பிறந்த வேளையோ பெற்றோர்களுக்கு ஆற்றொணு வறுமை ; கால் வயிறென்றால் கால்வயிறுக் கஞ்சி, சொந்தத்துக்குத் தேடிக்கொள்வதே பகிரதப் பிரயத்தனமா யிருந்ததென்றால், குழந்தையை ஆதரிக்க அவர்களுக்குச் சக்தி ஏது? வறுமைப் பிணியின் கொடுமை, பத்து மாதம் சுமந்துபெற்ற இரதிதேவியன்ன ஸ்வர்ண விக்கிரகத்தைச் சாலையோரத்தில் அநாதையாய்க் கண்ணீரும் கம்பலையுமாக விட்டுச் சென்றனர். என்னே வாழ்க்கை! என்னே வறுமை! பரிவாய்ப் பெற்றெடுத்த குழந்தையுமன்றோ ஒரு காலத்தில் பாரமாய்த் தோன்றி

Koviloor Digital Library


விடுகிறது. கொடிக்குத் தன் சாய் பளுவாகுமோ என்பது, கூடப் பொய்த்து விடுகிறது. 'வானம் போட்டுப் பூமி ஏந்திய' இக்குழந்தையை, அவ்வழியே சென்ற ஒரு வர்த்தகன் எடுத்துத் தன் புத்திரியாகப் பாவித்து அதிகச் செல்வமாய் வளர்த்துவந்தான். குழந்தையின் தாயாரைத் தேடிப் பிடித்துத் அவளைத் தாதியாக அமர்த்தினான்.

இருபத்தைந்து வருஷங்களுக்குப் பின்னர் நூர்ஜஹான் அல்லது 'ஜகஜ்ஜோதி' என்னும் பொருள்படும் திவ்விய நாமதேயத்துடன் ஏகசத்ராதிபதியாய்த் தான் ஆட்சிபுரிய விருக்கும் நாட்டில் மிஹ்ருந்நிஸா இப்போது இவ்வளவு சீரும் சிறப்பும் செல்வமும் சம்பத்துமாய் ஜனனமானாள்.

மிஹ்ருந்நிஸாவைத் தன் அபிமான புத்திரியாய் வளர்த்துக்கொண்ட வர்த்தகர் அவளுடைய பிதாவுக்கு அக்பர் ஸமஸ்தானத்தில் ஓர் உயர்ந்த உத்தியோகம் செய்துவைத்தார். அவ்வுத்தியோகத்திலிருந்து அவர் அதிசீக்கிரத்தில் நல்ல பேரும் பதவியும் பெறலானார். அவருடைய மனைவிக்கும் நாளடைவில் ராஜஸ்திரீகளின் பரிசயம்ஏற்பட்டது. அவ்வாறு ராஜஸ்திரீகளுடன் தனக்கு ஏற்பட்ட நட்பையும், பரிசயத்தையும் அஸ்திவாரமாகக் கொண்டு அதன்மேல் கட்டடம்கட்ட ஆரம்பித்தாள். தான் அரண்மனை செல்லும்போதெல்லாம் தன் மகளையும் உடனழைத்துச் செல்வாள். அரண்மனைக்குள் சென்றதும் பிரகாசமான நேத்திரங்களுடைய மிஹ்ருந்நிஸாவைப் புன்னகை தவழப் பூர்ண மனத்துடன் அழைக்காத அரசிளங்குமரிகளும் இராணிமார்களும் பேகங்களுமே கிடையாது. ஆனால் மிஹ்ருந்நிஸா பக்குவகாலமடைந்து ஒப்புயர்வற்ற சுந்தராங்கியாய் விளங்கத் தொடங்கிய காலந்தொட்டு, அரண்மனையில் வேறு சிலருடைய நோக்கத்துக்கும் கருத்துக்கும்கூட அவள் இலக்கானாள்.

Koviloor Digital Library


தமது தந்தையாருடைய அரண்மனைக்கு அடிக்கடி வந்து போகும் பாரஸிகக் கட்டழகியினிடம் மையல்கொண்டார் ஸலீம் இளவரசர். காதல் அதிகரிக்க அதிகரிக்க, வருங்காலத்துப் பாரத ஸாம்ராஜ்யாதிபதி பாரஸீக நாட்டு நாடோடியின் பெண்ணை மணம்புரிய மனங்கொண்டார். ஆனால் அக்பர் பெருமான் அவ்விதச் சம்பந்தத்துக்கு ஒப்பவில்லை. அவர் மிஹ்ருந்நிஸாவை வீரஸிம்ஹமாகிய ஷேர் ஆப்கனுக்கு விவாஹம் செய்துவைத்தார். மணமகனுக்கு வங்காள ஆதிபத்தியமும், ஏராளமான பூஸ்திதிகளும் அளிக்கப்பட்டன. ஸலீம் இளவரசருக்கு எட்டாதபடி மிஹ்ருந்நிஸா தன் கணவருடன் வங்காளம் செல்லும்படி ஏற்பாடாயிற்று.

அவ்வாறு வங்காளத்துக்குப் பிரயாணப்படுவதன் முன் அக்பரது பிரதம பத்தினியாகிய ரக்யா பேகம் அவளைத் தன் அரண்மனைக்கு விருந்துக்கழைத்தாள். அத்தருணம் ஸலீம் இளவரசரைக் கடைசிமுறையாய்ச் சந்தித்து அவரிடம் விடைபெற்றுச் செல்ல மிஹ்ருந்நிஸா சம்மதித்தாள்.

தாதிமார்களெல்லாம் அறையை விட்டகன்றனர். மிஹ்ருந்நிஸா மாத்திரம் ஏகாந்தமாயிருந்தாள்; இளவரசர் தன்மீது கொண்டிருக்கும் காதலை ஒருவாறு திருப்திசெய்ய வேண்டுமென்ற நோக்கங்கொண்டல்ல அவள் தனிமையாயிருந்தது. ஸம்ஸ்தானத்தில் நல்ல உன்னத பதவியிலிருக்கும் உத்தியோகஸ்தருடைய மனைவி இருக்கவேண்டிய மரியாதையை அவள் நன்கறிந்தவள். இளவரசரை வரவேற்கப் படுதாவுக்கு வெளிப்புறத்தில் இருந்தாளெனினும் அவள் உச்சந்தலை முதல் உள்ளங்கால் வரைக்கும் கோஷா உடை தரித்திருந்தாள். இளவரசருடன் பேச இசைந்தாளாயினும், அவள் நின்று நிதானித்துக் கம்பீரமாய்ப் பேசிய அவளது வாய்மொழிகளிலிருந்தும் அவருக்கு ஒருவித ஆறுதலும் தைரியமும் உண்டாகவில்லை.

Koviloor Digital Library


தம்மை ஆதரவாய் அழைத்துத் தம் மனத்துக்குத் திருப்தி உண்டாகும்படி பேசாததைக்கண்டு அவமானப் பட்ட அவ்வரசிளங்குமரர் தாம் எண்ணிய எண்ணம் நிறைவேறப் பெறுதவராய் அந்த சுந்தரவதன ஸ்த்ரீரத்னத் தைப் பார்த்து, "ஏ நாரீமணி, இதுதானு நாம் கடைசியாய்ச் சந்திப்பது" எனக் கேட்டார்.

"ராஜகுமாரரே, முதன் முதலில் நாம் இம்முறைகூடச் சந்தித்திருக்கக்கூடாது. நானே விவாஹமானவள். இவ் வுலகத்தையே கட்டியாளும் சீமானுயிருந்தாலும் சரி, அவன் கூட என்னைப் பார்க்கமுடியாது. ஆனுல் பால்யம் முதல் கொண்டு ரக்யா பேகம் மஹாராணியாரவர்கள் என் விஷ யத்தில் தாயைக்காட்டிலும் அதிக அன்பும் ஆதரவுமாயிருக் கிருள். நானும் அவளிடத்தில் எவ்வளவோ அன்பாயும் பய பக்தியாயுமிருந்து வருகிறேன். ஆதலால் அவளது விருப் பத்தை நான் கட்டளையாகக்கொண்டு இப்போது உம்மிடம் வார்த்தையாடுவதற்கு இசைந்தேன்" என்று பொறுமை யாய்க் கூறிவிட்டு மிஹ்ருந்நிஸா சிறு குரலாய் "அது மாத் திரமே காரணமன்று. நமது பழைய நாளைய நட்பும் ஒரு காரணமாகும்" என்று முடித்தாள்.

"மிஹ்ருந்நிஸா, சிறிதும் இரக்கமில்லையா? இவ்வளவு கடூரமாய்ப் பேசுகிருயே, இம்மொழிகள் நீ ஸ்வதாவாய்ச் சொன்னவையல்ல; மாதர், நயமொழி மாதர், காதல் நிறைந்த மாதர், பேசிய வார்த்தைகளல்ல. நீ 'மனைவி' என்னும் பதவியினின்று உலகத்தார் ஒப்ப அதற்கெவ்வாறு வெளிக் குப் பேசவேண்டுமோ அவ்வாறே பேசினுய் என்று நான் கருதுகிறேன்."

"அரச குமாரரே. விவாஹமானவள் பதிவிரதா தருமத்துக்குப் பங்கம் வராதபடி பேசுவதைவிட வேறு எவ்விதம் பேசக்கூடும்?"

Koviloor Digital Library


"என்ன, ஆக்ரா நகரத்துப் பிரதம காஜியைப்போல் பேசுகின்றனையே? மிஹ்ருந்நிஸா, இன்றிரவு நான் உன்னிடம் குர்ஆன் படிக்கவரவில்லை."

"வல்லமை பொருந்திய வீரஸிம்ஹமே, ஒரு புருஷனை விவாஹம் செய்துகொண்டு அவரிடம் என்றைக்கும் பய பக்தியுடன் உண்மையான பதிவிரதையாய் நடந்துகொள்ள வேண்டுமென்ற உறுதியைக் கொண்ட மனைவியைப்போல் நான் பேசுகிறேன். குர்ஆனும் பதிவிரதா தருமத்தின் லக்ஷணங்களைத்தான் நமக்குப் போதிக்கின்றது."

சற்று நேரம் இருவரும் பேசாமலிருந்தனர். ராஜகுமாரர் அவளுடைய மனத்தை எப்படியாவது கலைக்க வேண்டுமென்ற தீர்மானத்துடன் வந்தார். அவள் சற்றும் இடங்கொடுத்துப் பேசாததைக் கண்டு அவர் வருத்தமடைந்தார். அவர் மனது பெரிதும் சஞ்சலப்பட்டது. சிந்தாக்கிராந்தராய்ப் புத்தி ஒருவிடத்தும் செல்லாமல் தவித்தார். போனால் போகிறது, தன் அளவற்ற காதலை வாய்விட்டுச் சொல்லிப் பார்க்கலாம் என்றாலோ, அப்படி வெளிப்படையாகச் சொல்லும் பக்ஷத்தில் ஒருவேளை அவள் மனம் நோவாள் என்ற ஒரு பயம் அவர் மனத்தில் பூர்ணமாய்க் குடிகொண்டிருந்தது. இவ்வாறு அரசிளங்குமாரர் தாமரை இலையில் நீர்த்துளிபோல் சஞ்சலப்பட்டு வருந்திக் கொண்டிருந்தார்.

"மிஹ்ருந்நிஸா, என்மேல் கோபிக்காதே, நான் சொல்வதைக் கொஞ்சம் நிதானித்துச் செவிகொடுத்துக் கேள். என்னமோ சொல்கிறேன் என்றிராதே. அன்ன ஆகாரமின்றித் தாபஜ்வரத்தால் நெடுநாளாக வருந்தும் வியாதிஸ்தன் ஏதாவது தின்பண்டங்களைக் கண்டு நைப்பாசைப் பட்டு வைத்தியனுடைய சொல்லை மீறி நடப்பதில்லையா? அதேமாதிரி காதல் பிணியால் பீடிக்கப்

Koviloor Digital Library


பட்டவர்கள் மதக்கிரந்தங்கள் கூறும் கோட்பாடுகளாகிய வெட்டுச் சுரைக்காயைக்கண்டு, தாம் தம் பிராணனைவிடப் பதின்மடங்கு அதிகமாய்ப் பாராட்டும் நாரீமணிகளின்மீது ஆசையை ஒழித்துவிடுவார்களா ? குர்ஆன் புஸ்தகம் இருக்கவே இருக்கிறது; எங்கே போகிறது அது? அது ஒரு பெரிய ஆக்ஷேபனையாய் விடுமா ? நான் உன்னிடம் கொண்டிருக்கும் அடங்காக் காதலின் தன்மையை நீ நன்கறிவாய். என் உயிருடனே நேசிக்கும் சுபாவமுடைய என் ஆசையை நீயும் ஒருவாறு ஆமோதித்தனையென்று நான் எண்ணுகிறேன். மதக் கிரந்தங்களைப்பற்றிப் பிரமாதமாய்ச் சொல்லுகிறாயே! அது மாத்திரம் என்ன சொல்கிறது? ஸ்திரீ புருஷர்கள் இருவர் ஒருவர்மீதொருவர் பரஸ்பர உண்மைக் காதல்கொண்டுவிட்டால் அவைகள் விவாஹத்துக்கே வழி காட்டுகின்றன அல்லவா ?"

"ஸ்வாமீ, நீர் சொல்வது எனக்கு அர்த்தமாகவில்லை. நானோ ஏற்கனவே விதிப்படி ஒரு புருஷரை மணம்புரிந்திருக்கிறேன். இப்போது நான் அவருடைய பத்னி; அப்படியிருக்க நீர் கூறும் வார்த்தை எவ்வாறு பொருந்தும் ?"

"விவாஹமாயிருந்தாலென்ன ? நான் ஒரு வார்த்தை சொன்னால் முல்லாக்கள் அடுத்தக்ஷணமே அவ்விவாஹத்தை ரத்து செய்துவிடுகிறார்கள். அது ஒரு பெருங்கஷ்டமா ? நாம் என்ன ஹிந்துக்களா ? ஒருவனைக் கட்டிக்கொண்டுவிட்டால் இஷ்டப்பட்டாலும் சரி, படாவிட்டாலும் சரி, ஆயுள் பரியந்தம் அவனையே கட்டிக்கொண்டு அழவேண்டுமென்பதற்கு ? இந்த விஷயத்தில் நமது மதம் வேண்டுமட்டும் இடங்கொடுத்திருக்கிறது! ஹிந்துக்களைப் போல் நாம் என்ன உடன்கட்டை ஏறவேண்டுமா ? அந்த ஜாதிதான் அவ்வாறெல்லாம் குட்ரயுக்தி பண்ணிக்கொண்டு

Koviloor Digital Library


திரிகிறது. நமது மதம் இவ்விஷயங்களில் எவ்வளவோ நமக்கு அநுகூலமாயிருக்க, இன்னும் ஆலசியமேன்?"

"ராஜ குமாரரே, உடன்கட்டை ஏறுதல் முதலிய கோர சம்பிரதாயம் நமக்குள் இல்லை. வாஸ்தவந்தான்; ஆனாலும் மனைவியெனப்படுபவள் உயிருள்ளமட்டும் கணவனிடம் பக்தியாயிருத்தல் வேண்டாமா? அவருக்குத் துரோகம் நினைப்பது நியாயமா?"

"மிஹ்றுந்நிஸா, நீ சம்மதிக்காவிட்டால் எனக்கு அது உடன்கட்டையைப் போலத்தான். நான் இப்பொழுது அநுபவிக்கும் ஹிம்ஸையில் பாதிகூட உடன்கட்டை ஏறும் ஹிந்து விதவை அநுபவித்திருக்கமாட்டாள். ஒரு கிழப் பிணம் ஏதோ உத்தரவிட்டதாம்; அதற்காக நான் என் வாழ்க்கைச் சுகத்தைப் போக்கடித்துக்கொண்டு உள்ள நாள் உள்ளமட்டும், இவ்வுலக வாழ்வில் ஊக்கமின்றி நடைபிணம்போல நாட்களைக் கணக்கிட்டுக்கொண்டு காலங் கழிப்பதாம்? என்ன மூடத்தனம்!"

"அரசே, உமது தகப்பனாரைப் பற்றி இவ்வளவு அவமரியாதையாய்ப் பேசுவது நியாயமல்ல. உமக்காக அவர் ஒரு பெரிய ராஜ்யத்தைச் சம்பாதித்து வைத்திருக்கிறார். அவர் காலத்துக்குப் பின்னால் நீர் அந்த அகண்ட நாட்டிற்கு அதிபதியாகப் போகிறீர். நீர் இவ்வாறு பேசுவது தகுதியன்று."

"உன்னை அடையும் பாக்கியம் இராமல் எனக்கு என்னத்துக்கு இராஜ்யமும், ஸிம்ஹாஸனமும்? கொஞ்சங் கூடத் தாக்ஷிண்யம் என்பது இராமல் உன்னை என்னிடமிருந்து பிரித்து என்னை என்றைக்கும் துக்கசாகரத்தில் ஆழ்த்தியவராகிய அவரிடம் நான் ஏன் நன்றி பாராட்ட வேண்டும்? ஸலீம் இப்பேர்ப்பட்டவனென்று அவருக்குத் தெரியாது போலும்; ஸலீமா இவ்வித உத்தரவுகளுக்குக்

Koviloor Digital Library



கீழ்ப்படிந்து நடப்பவன்? எனக்குக் கோபாவேசம் வருமானால், நான் என்னதான் செய்யமாட்டேன்? அவர் என்னமோ, 'நமது பிள்ளை; நாம் எதைச் சொன்னாலும் கேட்டுக்கொண்டிருப்பான்' என்று எண்ணி யிருக்கிறார். என் சமாசாரம் அவருக்குத் தெரியாது; பட்டால்தான் தெரியும். ஆகட்டும் என் கையாலானதைப் பார்த்துக்கொள்ளுகிறேன்."

"உச், உச், இப்படிக்கெல்லாம் பேசாதீர். ஜனனு வில் சுவர்களுக்கும் சாளரங்களுக்கும் கூடச் செவிகள் உண்டு. மஹா புத்திசாலியும், வைதிகச் சிஷ்டரும், தரும சொரூபியுமாகிய உமது தந்தையார் சொல்வது உமது நன்மைக்கே. அவருக்குக் கீழ்ப்படியாதிருப்பது மதியீனம். அவர் சொல்படி நடப்பதே சர்வோத்தமமானது."

"வைதிகச் சிஷ்டரா! மிஹ்ருந்நிஸா, அவரை முஸல் மான் என்று இனிச் சொல்லலாமா? பிரதிதினமும் ஆதித்ய பூஜை செய்துவருகிறார். அவருடன் ஒருவர் இருக்கிறாரே, மஹா பெரியவர் அந்த அபுல் பஸல், இரண்டு பிராஜ்ஞர்களு மாகச் சேர்ந்து ஒரு நூதன மதம் ஸ்தாபிப்பதாக வேஷம் போட்டுக்கொண்டு நம்மை இந்தக் கேடுகெட்ட ஹிந்துக்க ளுடன் ஒன்று சேர்க்கப் பிரயத்தனப்படுகிறார்களே. அவரா மதாபிமானி, வைதிக சிஷ்டர்!"

மிஹ்ருந்நிஸா அடங்காக் கோபத்வனியுடன் "இள வரசே, என்ன சொன்னீர் நீர்! போதும் இனி இவ்வித வார்த்தைகள் என் செவியில் விழவேண்டாம். எனது புருஷருக்கு ஊரும் பேரும் புகழுமளித்து சம்மானித்த நமது காருண்ய அதிபதியைப்பற்றிய அவமரியாதையான பேச்சுகள் ஒன்றும் இனி என் முன்னிலையில் பேச வேண்டாம். 'கேடுகெட்ட ஹிந்துக்கள்' என்று சொல்லு கிறீரே. உமது தாயார் யார்? பேரும் பிரதாபமும் பெற்ற

Koviloor Digital Library



தொரு க்ஷத்திரிய வம்சத்தில் பிறந்த ஹிந்து ஸ்திரீயன்றோ உம்மைப் பெற்றெடுத்த பிமாட்டி. பேசுவ தென்றால் பேச்சுக்கு ஒரு அத்து இல்லையோ? வாயில் வந்தபடிக்கெல்லாம் பேசிவிடுவதா ?"

இளவரசருக்கு மிகவும் அவமானமாய்ப் போய் விட்டது. மிஹ்ருந்நிஸா இவ்வளவு தூரம் தன்னை எதிர்த்துப் பேசுவாள் என்று அவர் எண்ணவேயில்லை. "நான் ஏதோ தெரியாத்தனமாய்ச் சொல்லிவிட்டேன்; மன்னித்துவிடு. அவர் எனக்குத் துரோகம் செய்த போதிலும், எனது உத்தம தகப்பனாரைப் பற்றியாவது அல்லது சிலமுள்ள என்னுடைய தாயாரைப் பற்றியாவது அவமரியாதையாய்ப் பேசவேண்டுமென்று எண்ணி நான் இங்கு வரவில்லை. அவர் செய்த பிழையைத் திருத்திக் கொள்ளலாமென்று உன்னிடம் வந்தேன். நான் சகல ஏற்பாடும் தயாராய்ச் செய்து வைத்திருக்கிறேன். நீ ஒரு வார்த்தை சொல்லவேண்டியதுதான் தடை; என் ஜன்மம் ஸாபல்யமடைந்துவிடும்; என் கண்ணே!"

"இளவரசே, நீர் மறைபொருளாய்ப் பேசுவது எனக்குப் புரியவில்லை. சொல்ல வேண்டியதை நன்றாய் வெளிப்படையாய்ச் சொல்லும்."

"நீ இவ்விடம் விட்டகன்று சிறிதுகாலம் அஞ்ஞாத வாஸம் செய்ய வேண்டும். இரண்டொரு மாதங்களில் எல்லாம் சரியாய்விடும். என் தகப்பனார் கொடுத்ததைவிட எண்மடங்கு அதிகமான செல்வமும் ஏராளமான ராஜ்யமும் கொடுக்கிறேன் என்றால் ஷேர் ஆப்கன் உன்னை எனக்குக் கொடுத்துவிடுவான். அதற்குச் சந்தேகமில்லை. முல்லாக்கள் தான் என்ன, நான் சொன்னால் தடை சொல்லப் போகிறார்களா? ஏற்கெனவே மதவிஷயமாய் அவர்களுக்கும் எனது தகப்பனாருக்கும் சிறிது போதாது. என் தகப்பனார் காலத்

Koviloor Digital Library


துக்குள்ளேயே நாம் சதிபதிகளாய்ச் சுகமாக வாழத் தொடங்கலாம்."

மிஹ்ருந்நிஸா பரிஹாஸ நகைசெய்து, "உமது ஏற்பாடு நிரம்பவும் ஸாமர்த்தியமாய்த் தானிருக்கிறது. ஆனால் இரண்டொரு முக்கியமான விஷயங்களைப்பற்றி மாத்திரம் நீர் யோசனை செய்யவில்லை. ஷேர் ஆப்கன் இரணசூரர்; அதி தைரியசாலி. உமது ராஜ்யம் மாத்திரமன்று? உமது ராஜ்யத்தைப்போல் பத்து ராஜ்யங்களை ஒருங்கே கொடுத்தாலும் சரி, அவர் தம் ஆசை மனையாளை இன்னொருவர் கையாளச் சம்மதிக்கமாட்டார். உயிர் உள்ளமட்டும் ஒரு கை பார்த்துத்தான் விடுவார். உங்களுடைய பணத்துக்கும் மிரட்டிற்கும் அவர் கீழ்ப்படியமாட்டார். இன்னும் இரண்டொரு மாதத்துக்குள் நான் உமது தகப்பனர் ஏற்பாட்டின் படிக்கு வங்காளம் சென்று அவ்விடத்தில் என் தலைவருடன் வசித்துக்கொண்டிருப்பேன்."

"எல்லாவற்றிற்கும் ஏற்பாடு செய்யாமலா நான் இங்கு வந்திருப்பேன். மிஹ்ருந்நிஸா, நான் என்ன கடும் போர்கள் புரிந்து கைதேர்ந்த போர்வீரனல்லவா? அறையின் வெளிப்புறத்தில் கட்டாரி பிடித்திருக்கும் இரண்டு தார்த் தாரிப் பெண்கள் காத்திருக்கிறார்கள். உச்சி முதல் உள்ளங் கால் வரை ஆயுததாரிகளான பேடிகள் இருபது பேர் அந்தண்டைக் கூடத்தில் ஒளிந்திருக்கிறார்கள்."

"இந்தக் கோட்டையின் மதில்கள் ஸாமான்யமானவையல்ல. மேலும் எண்ணிறந்த போர்வீரர்கள் காவல் புரிந்து கொண்டிருக்கின்றனரே இவ்விடம்?"

"நதிமுக வாயில் என் உத்தரவில் இருக்கிறது. வேண்டும்போது அதைத் திறந்து கொள்ள எனக்கு ஸ்வாதீனமுண்டு. ஆற்றில் ஒரு படகு தயாராய் நின்

Koviloor Digital Library


திருக்கிறது. ஆற்றங்கரையில் வாயுவேகமுடைய ஐந்நூறு குதிரையாட்கள் மறைந்திருக்கின்றனர்."

"சக்கரவர்த்தியவர்கள் அவ்வளவு ஏமாந்தவரல்லர். நீர் இவ்வுலகில் எங்கே எவ்வளவு தூரம் சென்றாலும் சரி, உம்மைப் பிடித்துவர அவருக்கு ஸாமர்த்தியமுண்டு."

"இரண்டொரு தினங்களுக்குள் நான் என் ராணுவ ஸ்தலம் சென்றுவிடுவேன். அவ்விடம் என்கீழ் இருபதினாயிரம் வீரர்கள் யுத்த ஸந்நத்தராய் இருக்கின்றனர். என் ஸைந்யமென்றால் சக்கரவர்த்தியவர்களுக்குச் சிறிது யோசனைதான்."

"இளவரசே, உமது தந்தையாருடைய சேனை உமது சேனையைவிடச் சிறந்த சேனைகளுடனெல்லாம் போர் புரிந்திருக்கிறது. உமது வீரர்களைத் தோற்கடித்து உம்மைச் சிறைப்படுத்துவது அவருக்கு ஒரு சிரமமா? மாநஸிம்ஹர் இருக்குமட்டும் அவருக்கு என்ன குறை? புறங்காட்டி யோடுதலே இன்னதென்று அறியாத வீரஸிம்ஹம் அவர். அவர்முன் நீர் எம்மாத்திரம்?"

"நிஜந்தான். மாநஸிம்ஹர் இணையற்ற படைத்தலைவர் தான். ஹல்திகாட் என்னும் கணவாயில் நானும் அவருந் தான் மேவார் ராணாவைத் தோற்கடித்து அவருடைய சேனையைத் துரத்தியடித்தோம். ஆதலால் மாநஸிம்ஹருடைய வீர சௌரியத்தை நான் நன்கு அறிவேன்; ஆனால் மாநஸிம்ஹருக்கு இப்போது வங்காளத்தில் முதுகுநிமிர வேலையிருக்கிறது. திரும்பவும் கலகம் விளைத்த ஆப்கானியர்களை யடக்குவது சுலபமான காரியமல்ல. மேலும் அவருடைய சகோதரியை எனக்கு மணம் செய்து கொடுத்திருக்கிறார். ஆதலினால் அவர் விஷயமாய் நான் யோசிக்க வேண்டிய அவசியமில்லை."

Koviloor Digital Library
4102



"ராஜ குமாரரே, நீர் செய்துள்ள ஏற்பாடுகள் யாவும் அற்புதமாயிருக்கின்றன. அவற்றில் குற்றங்குறை யொன்று மில்லை. நீரோ ஆண் மகன்; நானோ பேதமை மிகுந்த ஒரு பெண்பிள்ளை. உமக்குத் தெரியாததும் தெரியக்கூடாததும் ஒன்றுமில்லை. ஆயினும் நான் ஒன்று சொல்லுகிறேன், அதை என்றைக்கும் கவனத்தில் வைத்துக்கொள்ளும். உமது தந்தையாரின் கண்களும் காதுகளும் அறுபது நாழிகையும் திறந்தவண்ணமா யிருக்கின்றன. அவருடைய காவல் வீரர்கள் எப்பொழுதும் உறங்குவதில்லை. நீர் இன்றைக்கு ஜ்னானு வந்தது அவருக்குத் தெரியும். நான் ரக்யா பேகத்தைப் பார்க்க வந்ததையும் அவருடைய ஒற்றர்கள் அறிவார்கள். யமுனா நதியினின்று நான் கோட்டைக்குள் நுழைந்த போது வழியில் ஆற்றுக்கு அக்கரையில் ராஜவீரர்களுடைய ஆயுதங்களின் ஒலி ஸ்பஷ்டமாய் எனக்குக் கேட்டது. இளவரசே, அடியேன்மீது இவ்வளவு தயை வைத்து வந்த தங்களிடம் என் மனத்திலுள்ளதை ஒளிக்காமல் சொல்லி விடுகிறேன். மிஹ்ருந்நிஸா பதிவிரதா தருமத்தைப் பூர்ண மாய்க் கொண்டவள்; தனக்கு மாலையிட்ட புருஷருக்கு அவள் ஒரு க்ஷணமும் துரோகம் செய்யக் கருதமாட்டாள். இது திண்ணம், அரசே. நாம் இப்போது மித்திர ராகப் பிரிந்து செல்கிறோம். இனிச் சந்திக்கப்போவதில்லை. இதுதான் நான் தங்களிடம் கடைசிமுறையாய் விடை பெற்றுக்கொள்வது."

"இப்போது விடை பெற்றுக்கொள்வது வாஸ்தவந் தான். ஆனால் இது கடைசி முறையன்று".

அந்தப்புரத்தினின்று ஓர் ஊதல் சப்தித்தது; ஸலிம், மிஹ்ருந்நிஸா இருவரும் திடுக்கிட்டனர். அந்தச் சப்தத்தின் பொருள் அவர்களுக்கு நன்றாய்த் தெரியும்; அதனால் உண்டாகக்கூடிய கஷ்டங்களையும் அவர்கள் நன்கு அறி

Koviloor Digital Library



வார்கள். அறைக்கு வெளிப்புறமுள்ள சலவைக்கல் தரையில் காலடியோசை கேட்டது. நக்ஷத்திர ஒளியில் கத்திகளும் கட்டாரிகளும் பிரகாசித்தன. தூரத்தில் ஏதோ ஒரு பெரிய சந்தடி கேட்டது. மறுபடியும் எல்லாம் நிச்சப்தம். பழைய பிராகாரம் அரண்மனை மண்டபங்களின்மீதும் நந்தவனங் களின்மீதும் காற்றடித்துக் கொண்டிருந்தது. முன் போலவே யமுனாநதியின் அலைகளும் மதில்களின்மீது சாந்த மாய் அடித்துக்கொண்டிருந்தன. ஸலீமைச் சேர்ந்த பேடிகள் நிராயுதபாணிக ளாயினர். அவர்களுள் பலர் மாண்டனர்; சிலர் கைது செய்யப்பட்டனர்.

மறுபடியும் ஒரு சந்தடி கிளம்பிற்று. ஆற்றுக்கு அக் கரையிலிருந்து துப்பாக்கிவெடி கேட்டது. ஸலீமுடைய குதிரையாட்கள் ராஜஸைந்யத்தால் சூழப்பட்டனர். சப்தத் தைக் கேட்டு ஸலீம் உடல் நடுங்கினான். குடிவெறியன்; சிற்றின்பப் பிரியன்; ஸ்திரீலோலன். அக்பருக்கிருந்த சாந்தமும், பொறுமையும், நிதான புத்தியும் அவனிடம் மருந்துக்குக்கூடக் கிடையாது. அவருடைய முன்யோசனை யும், தயாள குணமும் அவரிடமே நின்றுவிட்டன. தகப்ப னாது நல்ல குணங்கள் ஒன்றும் ஸலீமுக்கு வரவில்லை. ஜயமடைந்தபோது அவன் சத்ருக்களிடம் நிர்தாக்ஷிண்ய முடையவன்; பழிக்குப்பழி வாங்கும் துர்க்குண சம்பன்ன னாகிய ஸலீம், தோல்வியடைந்த சத்ருக்களை அடியோடு நாசம் செய்யும் இயல்புடையவன். இப்பேர்ப்பட்ட சூரன் அபாயம் நேருமென்று முற்குறி யுண்டாகும்போதே கைகால் 'வெலவெலத்துப்' போய்விட்டான். தொலைவில் துப்பாக்கி வெடிகள் பலமாய்க் கேட்கவே அவன், கல் ஸ்தம்பத்தின்மீது சாய்ந்தான். சாய்ந்துகொண்ட கம்பத் தைப்போலவே அவனுடைய முகமும் வெள்ளைவெளே

Koviloor Digital Library


றென்று ஆய்விட்டது; கைகால்கள் நடுங்கிய வண்ண மாகவே யிருந்தன.

அக்பரது மரணகாலம் முதற்கொண்டு தினேதினே க்ஷீண தசையடைந்து தத்தளித்துக்கொண்டிருந்த மொகலாய ராஜ்யத்தை நிலைநிறுத்தி, பூர்வ ஸ்திதிக்குக் கொண்டு வருவதற்கு அவளுக்குப் பெரிதும் உபயோகமாயிருந்த அந்த மனோதைரியத்தின் சிறிது அம்சத்தை மிஹ்ருந்நிஸா இப்போது இந்த அபாய காலத்தில் வெளிப்படுத்தினுள்.

அளவிடக்கூடாத மனோதைரியமும், வீராவேசமும் உடையவளாகிய மிஹ்ருந்நிஸா அவ்விளங் குமரனைப் பார்த்து, "இளவரசே, உங்களுடைய ஆண்மை என்ன ஆண்மை? நீங்களா புருஷர்? மாநஸிம்ஹருடன் கூடி, மேவார் ராணுவை விரட்டியதாக ஜம்பமடித்த சூரரா நீர்? நீரா அக்பரது ஸிம்ஹாஸனத்தில் வீற்றிருக்கப் போகிறவர்? 'அக்பரது புதல்வர் நாம்' என்ற ஞாபகம் இருந்தாலும் போதுமே! உமக்குப் போதுமான ஆண்மை உண்டாகுமே! இவ்வளவு பௌருஷமுடைய இளவரசரா இவ்விராஜ்யத்துக்குச் சக்கரவர்த்தியாகப் போகிறுர்! ஸலீம், இது ஜனுனு; ஸ்திரீகள் இருப்பிடம் இது. கத்தி கைப்பிடித்த சூரர்களுடைய புகலிடம் அன்று இவ்வறை. வந்த விதமாகவே தைரியமாக வெளிச்சென்று தங்களுடைய தந்தையை நேரில் பார்த்து, "நான் ஒரு காலத்தில் காதல் கொண்டிருந்த ஸ்திரீயை அவள் இவ்வூரைவிட்டுப் போவதற்கு முன்னர் கடைசிமுறையாகப் பார்த்துவிட்டு வரலாமென்று சென்றிருந்தேன்" என்று உள்ளதைச் சொல்வீரானுல், அதி தயாளுவாகிய உமது தகப்பனுர் உமது குற்றத்தை மன்னித்துவிடுவார். வேறு ஒன்றும் உம்மைக் கோபிக்க மாட்டார். இன்னும் தாமதமேன்? புறப்படும். சற்றுமுன் உமது வீரதீரத்தைப்பற்றி மஹாப் பிரமாதமாய் வெண்

Koviloor Digital Library


கலக்கடை யானையைப்போல் பேசினீரே! உமக்குத் தைரியமில்லையா? சொல்லும். நான் பெண்தானே. நான் போய் அவரைப் பார்த்து வாழ்வில் நான் இனி காணக் கூடாத எனது நண்பரை மன்னிக்கும்படிக்குச் சொல்கிறேன்! என்ன, சொல்லும், புறப்படட்டுமா?"

பயம், என்ன விலையெனக் கேட்கும் இந்த வீரதீரப் பெண்மணிமுன், தனது பயிலையை வெளியிட்டுக் கொண்டதைப்பற்றிப் பெரிதும் அவமானமடைந்தான் ஸலீம். அவளுடைய வார்த்தையைக் கேட்டு ரோஷங் கொண்டவனாய் இளவரசர் தம் வழக்கப்படி ஜம்பமாய்ப் பேசலானார்:

"சேனாதிபதியாயிற்று நான், இவற்றையெல்லாம் கண்டு நான் பயப்பட்டுவிடுவேனோ? நமது அந்தரங்கங்கள் வெளியாய்விட்ட பின்னர் உன்னை இவ்வரண்மனையில் தனியாய் விட்டுப்போவது யுக்தமா அல்லவா என்று நான் சிறிது நேரம் யோசித்துக் கொண்டிருந்ததைக்கண்டு, நீ என்னைப் பயங்கொள்ளி என்று தூஷிப்பது சிறிதும் பொருந்தாது. எனது படகுக்காரர்கள் சித்தமாயிருக்கிறார்கள். நொடி நேரத்துக்குள் நான் என் குதிரையாட்களைச் சேர்ந்து விடுவேன். ஹிந்துஸ்தான முழுவதும் ஜயபேரிகை கொட்டிய தளகர்த்தர்முன் ராஜஸைன்யம் நீர்த்துளியாய்விடும். ஆனால் உன்னைத் தனியாய் இவ்விடம் விட்டுப் போவது நியாயமா?"

"நிரம்பப் பதைபதைத்து விடுவதனால் காரியம் சித்தியாய்விடாது. ஆத்திரப்பட்டு ஏதாவது மூடத்தனமாய்ச் செய்தால், நீர் இன்னும் அதிகமான கஷ்டத்துக்குள் அகப்பட்டுக்கொள்வீர். உமது பேடிகளெல்லாம் கைதிகளாய் விட்டனர்; நதித்துவாரம் சாத்தியாய்விட்டது; இந்நேரத்துக்குள் உமது வாயுவேக மனோவேகக் குதிரையாட்களும்

Koviloor Digital Library



நிராயுதபாணிகளாய் விட்டிருப்பார்கள். நான் பெண்ணு யிருப்பினும் இவ்விஷயத்தில் நான் சொல்வதைக் கேளும். நாளைய தினம் சக்கரவர்த்தியவர்களிடம் சென்று விஷயங் களையெல்லாம் உள்ளபடி விவரமாய் அவரிடம் சொல்லும். அவர் உம்மை மன்னித்துவிடுவார்; அதற்கு நான் உத்தர வாதம். என்னைப்பற்றி நீங்கள் ஒன்றும் கவலைப்படவேண் டாம். எனக்குத் தெரியும் தப்பித்துக்கொள்ள வழி. நான் இராணியார் ரக்யா பேகம் அவர்களுடைய விருந்தாளி; ஷேர் ஆப்கன் மனைவி; என்னை ஒருவரும் பகைத்துக்கொள்ள மாட்டார்கள். எனக்குப் பயமில்லை. நீர் மாத்திரம் நான் சொன்னபடி செய்யும்" என்று பேசிமுடித்தாள் மிஹ்ருந் நிஸா.

ஒரு ஸாமான்ய சிற்றரசனின் மனைவி இவ்வாறு கம்பீர மாய்ப் பேசினுள்; தனது அபூர்வ வல்லமையும் தைரியமும் வருங்கால உயர்பதவியும் யாவும் அறிந்து அவள் பேசியது போல் காணப்பட்டன அவளுடைய வார்த்தைகள். பிறரைத் தன்கீழ் அடக்கியாளுவதற்கென்றே அவதரித்த பெரியோர்க ளுடைய வதனத்தைக் கண்ணுறும் பேதைகளின் மனத்தில் உண்டாகும் ஆச்சரியத்துடன் ஸலீம், இவ்வளவு அபாயங் களுக்குமிடையில் சிறிதும் கலக்கமடையாமல் சாவதானமா யிருந்த அவளுடைய முகத்தை உற்றுநோக்கினுன். அவ ளிடம் இப்போது அவனுக்கு ஒரு புதிய பக்தி உண்டாயிற்று. இவ்வாறு காதலும் பக்தியும் கலந்துள்ள ஸலீம், மறுபடியும் கூறிய மொழிகள் அவ்வளவும் உண்மையேயெனத் தோன்றின.

"மிஹ்ருந்நிஸா, நீ கட்டளையிடவும் நான் அதற்கு வணங்கிக் கீழ்ப்படியவும் பிறந்திருக்கிறோம். ஓர் அகண்ட ராஜ்யமெல்லாம் உனது கட்டளைகளை எதிர்பார்த்து நிற்குங் காலம் ஒன்றுவரும். உன் இஷ்டப்படியே நான் உன்னை

Koviloor Digital Library



விட்டுச் செல்கிறேன்; நீ சொல்லியபடியே செய்கிறேன். ஆனால், நாம் பிரிவதற்குமுன் நான் உன்னைக் கேட்டுக்கொள்ளும் ஒரு வேண்டுகோள் உண்டு. அதாவது, ஹே! நாரீமணி! ஸ்திரீகள் நடுநாயகமே! இந்த சொர்க்கலோகத்தை விட்டுச் செல்லுமுன் உனது திவ்விய முகத்தை யொருதரம் நான் பார்க்கவேண்டும். அதுதான் நான் உன்னை வேண்டிக் கேட்டுக்கொள்வது. உன் கடைக்கண் பார்வையொன்றே எனக்கு அமிருதத்துக்குச் சமானமாயிருக்கும். நெடுநாள் மட்டும் மனவமைதியற்று ஊரூராய்த் திரியப்போகும் ஓர் இளவரசன், உன்னையே தியானித்துக் கொண்டிருப்பான். உன்னுடைய முகத்தை அவன் என்றைக்கும் மறவான்."

எத்தனை யிருந்தாலும் கடைசியில் மிஹ்ருந்நிஸாவும் ஒரு பெண்ணன்றோ? ஸலீம் உருக்கமாய்ப் பேசியதைக் கேட்டு, அவள் அவன்மீது சிறிது இரக்கங்கொண்டாள். இப்போதுதான் முதல் முறையாய்ச் சிறிது நடுக்கமுற்ற த்வனியாய் அவள், "நான் செய்வது தப்பான காரியமாயிருக்கலாம். அல்லா என்னைப் மன்னிப்பாராக. நீர் கடைசியாய்க் கேட்ட வேண்டுகோளுக்கு நான் இணங்காதிருப்பது சரியன்று" எனக் கூறிக்கொண்டே அவள் தன் முகமறையைத் திறந்தாள்.

லஜ்ஜையால் சிறிது மாறிய புன்னகை தவழும் ஜோதி மயமான ஒரு இரமணிய வதனம் அங்குப் பிரகாசித்தது. பாரஸிக முழுவதும் தேடித் தேடிப் பார்த்தாலும் அவ்வளவு வசீகரமான வதனத்தைக் காண்பதரிது; பரதகண்டம் முழுவதும் அலைந்து திரிந்தாலும் காண்போர் மனத்தை அவ்வளவு கவரக்கூடிய கருவிழிகளும் கிடையா.

வினே டில்லி நகரத்துச் சிற்பிகளும், சித்திரக்காரர்களும் அந்த ஜகஜ்ஜோதியை வர்ணப் படங்களிலும்,

Koviloor Digital Library



யானைத் தந்தங்களிலும் சித்தரிக்க முயன்றனர். இன்னும் கீழ்நாட்டு மேல்நாட்டுக் கவீசுவரர்களும் பாடகர்களும், விருதாவாய்ப் பிரயத்தனப்பட்டுக்கொண் டிருக்கின்றனர். அந்த நாரீமணியின் லாவண்யம் எவராலும் வர்ணித்து வரையமுடியாதது; மிஹ்ருந்நிஸாவின் அழகு அவளுடனே பிறந்து அவளுடனே நசித்துவிட்ட ஒரு வரப்பிரஸாதம்.

அவளுடைய முகமண்டலத்தின் சோபையைப் பார்த்து ஸலீம் பெருமூச்சுவிட்டான். அவளுடைய கண்களில் சாந்தமும் பரிவும் குடிகொண்டிருந்தன; சற்றே லஜ்ஜைப்பட்டவளாய் ஸலீமை ஒருதரம் ஆதரவாய்ப் பார்த்தனள். அவளுடைய மனது துடித்தது. மறையாடை திரும்பவும் மூடிக்கொண்டது. சற்று முன் மின்னலைப் போல் ஒளிவீசிய பிம்பம் கனவுபோல் மறுபடியும் மறைந்து விட்டது.

Koviloor Digital Library

## ஐந்தாம் அத்தியாயம்.

## சௌந்தரியவதியுடன் சம்பாஷணை

நரேந்திரன் எத்தனையோ கதைகள் படித்திருக்கிறான்; எத்தனையோ கதைகள் கேட்டுமிருக்கிறான். ஆனால் ஒரு கதையிலாவது அன்றிரவு நடந்த விஷயங்களைப் போன்ற அதிசயமான விஷயங்களை அவன் கண்டதுமில்லை; கேட்டதுமில்லை. அன்று சாயங்காலந்தான் தன்னைச் சூழ்ந்திருக்கும் அந்தரங்கங்களைக் கண்டறிய அதிக ஆவலுடன் பதைத்துக்கொண்டிருந்தான். இப்பொழுதோ எல்லாம் வெட்ட வெளிச்சமாகிவிட்டது. அக்பரது அரிய சாமார்த்தியத்தால் யமுனாநதிதீரத்தில் காண்போர் அதிசயிக்கத்தக்க வண்ணமாய் எழுப்பப்பட்டிருந்த ஆக்ரா கோட்டைக்குள் நரேந்திரன் கொண்டுவரப்பட்டான். சக்கரவர்த்தியவர்கள் பிரதி தினமும் தன் குடிகளுக்குப் பேட்டியளிக்கும் சபாமண்டபம், கோட்டையின் வெளிப் பிராகாரத்தில் அமைந்திருந்தது. அவ்விடந்தான் இருந்தது, ஜம்பர் அரசியின் விருந்தாளிகள் கிருஹம். அந்தக் கிருஹத்தில்தான் நரேந்திரன் சில மாதங்களாகத் தங்கியிருந்தான். அந்தப்புரத்திலுள்ள இராணிமார்களையும் பேகங்களையும் பார்ப்பதற்கு அவ்விடத்திலின்று அவனுக்குச் சந்தர்ப்பம் உண்டாயிற்று. அக்பரது பிரதான இராணியும், இளவரசரது தாயுமாகிய ஜோத்பாய்ச்சி மாட்டியைத் தரிசிக்கும் பாக்கியம் அவனுக்குக் கிடைத்தது. அதன் பின்னர் இளவரசருடன் சென்று ஸலீம் போற்றும் பாரஸிகக்

Koviloor Digital Library



கட்டழகியைக் கண்டான். இதுவரைக்கும் அவனுக்கு ஒருவிதக் கஷ்டமும் ஏற்படவில்லை. ஆனால் இப்பொழுதோ எதிர்பாராத சங்கடங்கள் உண்டாகும்போலத் தோன்றின. இளவரசருடைய துரோகச் சிந்தை, அவர் செய்திருந்த அந்தரங்க ஏற்பாடுகள், மிஹ்ருந்நிஸாவிடம் அவர் ஜபம் பலிக்காமல்போனது, கடைசியாக அப்பெண்மணி அவரை ஏளனஞ்செய்து அவருக்குப் புத்திமதி கூறியது எல்லாம் இப்போது நரேந்திரனுக்கு வெளிப்படையாய்த் தெரிந்துவிட்டன. இனி என்ன நடக்கப்போகிறதோ? எந்தெந்தக் கஷ்டங்களுக்கும் அபாயங்களுக்கும் தான் உட்படவேண்டுமோ? கடைசியில் தன் விதி எவ்வாறு முடியுமோ எனப்பலவிதமாய்ச் சிந்திக்கலானான் நரேந்திரன்.

இளவரசர் போய்விட்டார். ஜெலேகாவையும் அவளுடைய தோழியையும் உள்ளே வரும்படி பாரஸிகப் பெண் கட்டளையிட்டாள். பெண்ணுடை தரித்து உடல் நடுங்கிக் கொண்டிருக்கும் நரேந்திரனை ஒருமுறை கவனமாய் பார்த்தாள் மிஹ்ருந்நிஸா. தன் நடுக்கத்தை யடக்கிக்கொண்டு சரியாய் நிற்பது நரேந்திரனுக்குக் கஷ்டஸாத்தியமாயிற்று; இதற்குள் அவனுக்குப் பிராணன் போய்ப் பிராணன் வந்தது. ஆனால் அவன் சற்றுக்கெல்லாம் கைகூப்பித் தலைகுனிந்து வணக்கமாய் நின்றுவிட்டான்.

வீர தீரம் படைத்த அம்மாது சிரோமணி நரேந்திரனைப் பார்த்து,

"இரண வீரரே, நீர் தரித்திருக்கும் ஸ்திரீயாடையைக் கழற்றிவிடும்; போர்வீரருக்கு ஏற்றவையல்ல இவ்வுடைகள். மேலும் இவ்வுடைகளைத் தரித்துக் கொள்ளுவதினாலேயே உமது முகத்தில் தோன்றும் ஆண்மகனுக்குரிய அடையாளங்கள் மறைந்துவிடுமா?"

Koviloor Digital Library



நரேந்திரன் வெளியே போய்த் தன் பூர்வாசிரமக் கோலத்துடன் திரும்பிவந்தான். மிஹ்ருந்நிஸா அவனைப் பார்த்து, "சக்கரவர்த்தியவர்களுடைய யுத்தத்தில் பலமாய்க் காயப்பட்டு ஸ்மரணையற்றிருக்கும் ஸ்திதியில், ஆக்ராவுக்குக் கொண்டுவரப்பட்ட வங்கதேசத்துப் புராதன சிற்றரச வம்சஸ்தர் அல்லவா இந்த யௌவன வீரர் ?"

"ஆம், வங்க நாட்டைச் சேர்ந்தவர்தான் இவர்" எனப் பதில் கூறினாள் ஜெலேகா.

"ராஜா தோடர்மல்லரை ஆப்கானியர்கள் பலமாய்த் தாக்கியபோது வங்கதேசாதிபதிகளுள் சக்கரவர்த்தி பக்கம் தனித்து நின்ற வீரசிகாமணியல்லவா இவருடைய பாட்டனார் ?"

ஜெலேகா பதில் சொல்லவில்லை. அதைக் கண்டு நரேந்திரன், "ஹே, சீமாட்டி, சக்கரவர்த்தியவர்களுடைய பலமான லைஸ்யத்துக்கு எங்களுடைய வம்சத்தார் என்னப் பிரமாதமான உதவி செய்திருக்கக்கூடும் ? ஏதோ தம்மாலானதைத் துரோகமின்றி எனது பாட்டனார் சக்கரவர்த்தியவர்களுக்குச் சமர்ப்பித்தார் ; அக்பர் அவர்களுக்குத் தம் பிராணனை அவர் அர்ப்பணம் செய்தார் ; அவ்வாறே ஏதோ என்னாலாகக்கூடிய ஊழியத்தைச் செய்ய நானும் சித்தமாயிருக்கிறேன்."

"ஆக்ரா நகரத்துப் பாஷை இவருக்கு சரியாய்த் தெரியவில்லையாயினும், நமது கேள்விகளுக்குத் திருப்திகரமான பதில் அளிக்கிறார். ஜெலேகா, இவர் முதன்முதல் இக்கோட்டைக்குள் எவ்வாறு பிரவேசித்தார், அந்த விவரத்தைச் சொல்."

"இவர் துப்பாக்கிக் காயம்பட்டு மரணாவஸ்தையிலிருந்தார். ராஜா மானஸிம்ஹர் அவர்கள் சக்கரவர்த்தியாரைப் பார்த்து இவரை ஆம்பர் அரண்மனைக்குள் விடும்படி

Koviloor Digital Library



உத்தரவு வாங்கிவந்தார். ராஜா அவர்களுடைய அத்தை, அதாவது, நமது திவ்விய சக்கரவர்த்தியாரின் இராணியார் தமது அரண்மனை வைத்தியர்களை அனுப்பி நாதனற்ற இந்த வங்கதேசாதிபதியை ஜாக்கிரதையாய்க் காப்பாற்றும்படி ஏற்பாடு செய்தார்கள். எனது எஜமானியார் ஜோத்பாய்ச் சீமாட்டியாரும் அடிக்கடி இவருடைய க்ஷேமத்தைப் பற்றி விசாரித்துக்கொண்டிருந்தார்" என்றாள் ஜெலேகா.

"இந்த யௌவன வீரர் நல்ல அதிர்ஷ்டசாலி. இல்லாவிட்டால் ஒப்புயர்வற்ற இவ்வரண்மனை ராஜஸ்திரீகளுடைய தயையை எவர் சம்பாதித்திருக்கக் கூடும்? சக்கரவர்த்தியவர்களுக்காகப் போர்புரிந்து தமது பிராணனை அபாயத்துக்குள்ளாக்கிய வீரர்களுக்குச் சம்மானம் செய்வதில் ராஜபுத்திர ஸ்திரீகள் பின்வாங்குவதில்லை."

நரேந்திரன் தலைகுனிந்து ஸலாம் செய்தான். இராணிமார்களுடைய தயையைப் பெற்றது மாத்திரமேயன்றி, இவருக்கு அங்கே நல்ல சுசுரூஷையும் நடந்ததாமே? ஜோத்பாய் அவர்களுடைய தார்த்தாரி அடிமைப் பெண் ஒருத்தி வைத்தியர்களைவிடப் பதின்மடங்கு அதிகக் கவலையும் அக்கரையும் எடுத்துக்கொண்டு இவருக்குப் பலவிதத்திலும் சுசுரூஷை செய்து வந்தனளென நான் கேள்விப்பட்டேன். அது உண்மைதானா ஜெலேகா?

ஜெலேகாவின் முகம் சிறிதே சிவந்தது: இருந்தாலும், அவள் முன்போலவே மரியாதையாய்ப் பதில் கூறினாள்.

"தங்களுக்குத் தெரியாதது ஒன்றுமில்லை. என்னுடைய எஜமானியவர்கள் கட்டளையின்படி நான் பிரதி இரவும் அவர் இருந்த அறைக்குச் சென்று அவருடைய தேக ஸ்திதியை யறிந்து வந்து எனது எஜமானிக்குத் தெரிவித்துக்கொண்டிருந்தேன்."

Koviloor Digital Library



"ஜெலேகா, சில தினங்கள் நீ அரண்மனைக்குத் திரும்பி வர நேரமாகியிருந்தாலு மிருக்கலாம்; அந்த யௌவன வீர புருஷருக்கும் உன் சுசுரூஷை சில வேளைகளில் மிகவும் மனோஹரமாய் இருந்துமிருக்கலாம். அதைப்பற்றியெல்லாம் பிறர் பன்னிப் பன்னிக் கேட்பது நியாயமாகாது."

மறுபடியும் ஜெலேகாவின் முகம் சிவந்தது; ஆயினும் அவள் தன் நிலைமை அறிந்து மௌனமா யிருந்தாள். "பால்ய வீரரே, என் கணவனார் உம்மைப்பற்றி என்னிடம் பலமுறை கூறியிருக்கிறார். நீர் இக் கோட்டைக்குள் இருப்பதாகக் கேள்விப்பட்டு, உம்மை ஸ்திரீயாடை தரிக்கும் படிச் செய்து, இவ்விடம் அதாவது இராணிமார்களின் பவனத்துக்கு, அழைத்து வரும்படிச் சொன்னேன். ஜெலேகா நிரம்ப கெட்டிக்காரி; அதிக சாகசமுடையவள். இக்கோட்டையி லுள்ளவர்கள் எவருக்கும், அவளுடைய சொந்த எஜமானிக்குக்கூடத் தெரியாமல் அவள் எவ்வளவோ பக்குவமாய் உம்மை இங்கே அழைத்து வந்தாள். மஹா வீரசூரர்களும் நடுங்கும்படியான இத்தொழிலில் நீரும் எவ்வளவோ மனோதைரியத்துடன் தலையிட்டுக் கொண்டீர். இவ்வாறு எத்தனையோ ஆபத்துக்களை யெல்லாம் லக்ஷியம் செய்யாமல் எனது வேண்டுகோளுக்கு நீர் இணங்கியதற்கு நான் நன்றிபாராட்டக் கடமைப்பட்டிருக்கிறேன். நாங்கள் வங்காளம் செல்கிறோம். அவ்விடம் முன் பின் அறியோம்; அங்கே எங்களுக்கு ஒரு நண்பர்கூடக் கிடையாது. என் புருஷர் உமது சிநேகத்தை நம்பியிருக்கிறார். நானும் சமயாசமயங்களில் உமது சௌரியத்தை நம்பி யிருக்கலாமா?"

மிஹ்ருந்நிஸா மஹா தந்திரக்காரி; மிக்க வாசாலகம் உடையவள். வார்த்தை ஸாமர்த்தியத்தால் ஜன்ம விரோதியையும் வழிக்குக் கொண்டுவரும் சக்தி உடையவள்;

Koviloor Digital Library


அவளுடைய வாக்சாதுரியத்தைக் கண்டு மயங்காதவர் வெகு சிலரே. நரேந்திரன் தலைவணங்கித் தன் கத்திப்பிடியை அவளிடம் கொடுத்தான். அவள் அக்கத்திப்பிடியைப் பிடிக்கும்போது, அவளுக்குத் தெரிந்தோ தெரியாமலோ - அநேகமாய்த் தெரிந்தே என்றே வைத்துக்கொள்ளலாம் - அவளுடைய கை அவனுடைய கையின்மேல் பட்டது. அந்த ஸ்பர்சமாத்திரத்தால் நரேந்திரனுடைய உடல் புளகாங்கித மெய்தியது; நரேந்திரனும் அந்தப் பெண்மணிக்குக் கீழ்ப் படிந்துவிட்டான்.

“என் புருஷர் பர்த்வான் பிரதேசத்துக்கு ஜாகீர் தாரராகச் செல்கின்றார். நண்பரே, உமது ஊருக்கும் அதற்கும் எவ்வளவு தூரம்?”

“நான் என் துரிதமான படகில் ஆற்று மார்க்கமாய் ஒரு தினத்துக்குள் சென்றிருக்கின்றேன். நில மார்க்கமாயும் பர்த்வான் நகருக்கு ஒரு நாள் பிரயாணந்தான்.”

“உம்மைப் போன்ற யௌவன புருஷர்களுக்கு அது ஒரு தூரமில்லை. நீர் எப்போது வேண்டுமானாலும் எமது பர்த்வான் அரண்மனைக்கு வந்து போய்க் கொண் டிருக்கலாம். வீரநகரத்து அதிபதியின் வரவு எப்போதும் நல்வரவே யாகும்.”

“இந்த அநுமதியைவிடச் சிறந்த அநுமதி வேறென்ன எனக்குக் கிடைக்கப்போகிறது? தாங்கள் கூறியபடியே நான் அடிக்கடித் தங்களுடைய புருஷரைக் கண்டு செல்கிறேன்.”

“கண்டு செல்வானேன்? நீரும் ஒரு சிற்றரசராயிற்று. என் புருஷரும் ஒரு சிற்றரசராயிற்று; இருவரும் சமான அந்தஸ்துடையவர்கள். நீங்கள் ராஜதோரணையில் வரலாம். உங்கள் தேசாசாரம் எப்படியோ எனக்குத் தெரியாது. உமது மனைவியும் உம்முடன் வந்தால் எனக்குப் பரமசந்தோஷம். நான் அவளை என் உடன்பிறந்தாளாகப் பாவிப்பேன்.”

Koviloor Digital Library


நரேந்திரனுடைய முகம் சிறிது விகாரமடைந்தது. அவனுக்குக் குரலெடுத்துப் பேசமுடியவில்லை. ஈனத்வனியில் "எனக்கு மனைவியொருத்தியும் இல்லை. நான் இன்னும் கலியாணம் செய்துகொள்ளவில்லை!" என்று விசாரத்துடன் சொன்னான்.

நரேந்திரனுடைய முகம் வெளுத்து விகாரமடைந்ததை மிஹ்ருந்நிஸா அறிந்துகொண்டாள். அவ்வாறு முகத் தோற்றம் மாறியதன் காரணம் அவளுக்குப் புலப்பட வில்லை.

"வீரபுருஷரே, நான் அறியாமல் சொல்லிவிட்டேன். உமது வயதில் இந்நாட்டுப் புருஷர்களுக்கு விவாஹமாய் விடுகின்றதே. அதுவும் உமது மதத்தைச் சேர்ந்த அரசர்கள் தமது ராஜ்யத்தின் க்ஷேமத்துக்காகத் தமக்குப் புத்திர சந்தானம் உண்டாவதைப்பற்றி அதிக ஆவலுடையவர்க ளாயிற்றே. உமது விஷயத்தில் கால விச்தியாசத்தால் ஏதோ தடங்கல்கள் ஏற்பட்டிருக்கின்றன போலும். இம் மொழிகளால் உமக்கு ஏதோ துக்ககரமான பூர்வஞாபகங்க ளெல்லாம் மனத்துக்கு வருகின்றனவெனத் தோன்றுகிறது. இனி இவ்விஷயத்தைப்பற்றி நான் பிரஸ்தாபிப்பதில்லை."

நரேந்திரன் துக்காக்கிராந்தனாய், "நான் சிறு வயதி லேயே போர்க்கோலம் பூண்டு வந்துவிட்டேன். அதுமுதல் நான் ஊருக்குத் திரும்பிப் போனதில்லை" என்றான்.

மிஹ்ருந்நிஸா நரேந்திரனுடைய மனோவேதனையை உணர்ந்தாள். இனி நாம் அவர் மனத்தைப் புண்படுத்தக் கூடாதென்று அவள் பேச்சை மாற்றினாள்.

"உங்களுடையதைப்போல் அவ்வளவு புராதனமான தும் பராக்கிரமம் பொருந்தியதுமான இதர ஜமீன்கள் ஏதாயினும் இன்னும் உண்டோ வங்காளத்தில்?" எனக் கேட்டாள் மிஹ்ருந்நிஸா.

Koviloor Digital Library


இக்கேள்விக்கு நரேந்திரன் "எங்கள் ஜமீனை விடப் பணம் பெருத்த ஜமீன்கள் வங்காளத்தில் பல உண்டு. ஆனால் எங்களுடையதைப்போல் அவ்வளவு புராதனமான ராஜ வம்சங்கள் வெகு சொற்பமே. ராஜபக்தியிலும் எங்களை விடச் சிறந்தவர்கள் கிடையாது" எனக் கம்பீரமாய் விடை பகர்ந்தான்.

"எல்லா ஜமீன்தார்களும் சக்கரவர்த்தியவர்களுக்குச் சேரவேண்டிய பகுதித் தீர்வையைக் கட்டி, அவருடைய உபயோகத்துக்காகச் சேனைகளைப் போஷித்து வைத்து, நாட்டை நீதியாய்ப் பரிபாலித்து வருகிறார்கள்."

"ஆம். அவ்வாறுதான் கேள்விப்பட்டேன். சகல ஜனங்களும், சிற்றரசர்கள் யாவரும் மனப்பூர்வமாய் நேசித்து ஒன்றுகூடி உழைக்கும் ராஜ்யத்தின் மகிமையை எவரால் எடுத்துரைக்கமுடியும்! ஆனால் கூடக்கூட ஆப்கானிய மொகலாய ஜாகிர்தாரர்கள் பலரும் அந்நாட்டில் இருக்கின்றனராமே?"

"ஆமாம், இருக்கிறார்கள். ஆதிகாலத்தில் ஆப்கானியர்கள் சொந்தமாய்ப் பல ஜமீன்களை ஸ்தாபித்துக்கொண்டார்கள். தற்காலத்திலும் நமது காருண்ய வள்ளலாகிய அக்பர் பெருமான் பல சேனாதிபதிகளுக்கு அவ்விடத்தில் ஜாகிர் அளித்துவருகின்றனர். இதுவரைக்கும் அவ்வாறு சம்மானிக்கப்பட்டவர்களுள் உமது புருஷரே சிறந்தவர். முஸல்மான் ஜாகிர்தார்கள் அதிகமாய் யுத்தப்பயிற்சியிலேயே கருத்தாயிருக்கின்றனர். அவர்கள் கீழிருக்கும் ஹிந்து ஜமீன்தார்களிடமிருந்து அவர்களுக்கு வருஷா வருஷம் தவறாமல் கப்பம் வந்துகொண்டிருக்கிறது. அந்த ஜமீன்தார்களுக்கும் குடிகளுக்குமுடைய பழைய சம்பிரதாயப் பாத்தியதைகளை அவர்கள் மாற்றுவது கிடையாது."

Koviloor Digital Library


"நீர் சொல்லும் விஷயங்களை நன்கறிந்து கொண்டேன். நான் உம்முடன் இவ்வளவு தூரம் வார்த்தையாடியதில் எனக்கு ரொம்ப சந்தோஷம். வங்காளத்தைப்பற்றி, அவ்விடமே பிறந்துவளர்ந்தவர் மூலமாகச் சில விஷயங்கள் எனக்குக் கேட்க வேண்டுமென்றிருந்தது; உம்மைவிட வேறெவர் எனக்கு இவ்வளவு விவரமாய்ச் சொல்வார்கள்? தன் புருஷருக்குத் தெரியாத ஓர் அந்நியனைக்கண்டு அவருடன் ஒரு ஸ்திரீ உரையாடுவதென்பது அவ்வளவு யுக்தமான காரியமன்றுதான். ஆனாலும் என்ன செய்வது? சில வேளை அப்பேர்ப்பட்ட ஆவசியகங்கள் ஏற்படுகின்றன. எங்கள் மதத்தில் ஸிம்ஹாஸனம் ஏறி ஸைந்யம் நடத்திய மாதரசிகளும் இருந்திருக்கின்றனர்."

இவ்வளவு தைரியமாய்ப் பேசிய இம்மாது சிரோமணி திரிகாலதரிசியா என்ன? தான் ஒரு காலத்தில் ஆசியா கண்டத்தில் நிகரற்றதென்று பெயர்பெற்று விளங்கிய ராஜ்யத்துக்கு அதிபதியாகிப் போர்க்களத்தில் ஸேனாநாயகியாய் விளங்கப் போகிறோம் என்ற ஆந்தரிக அவா அவள் மனத்தில் அக்காலத்தே குடிகொண்டிருந்ததோ?

"சிற்சில காலங்களில் வங்கதேசாதிபதிகள் தமது சக்ரவர்த்தியவர்களுக்குத் தாம் புரிய வேண்டிய கடமையை மறந்து தமக்குள் ஒருவருடனொருவர் போர் புரிவது வழக்கமாமே? அது உண்மைதானா?"

"சில புராதன வம்சங்கள் தமக்குள் தொன்றுதொட்டுப் பரஸ்பர விரோதம் பாராட்டிவருவது உண்டு. அந்த விரோதத்தின் காரணமாய்ச் சில வேளைகளில் அவர்களுக்குள் சண்டை மூண்டுவிடுகிறது. ஆனால் அவ்வதிபதிகள் ஒருபோதும் சக்ரவர்த்தியவர்களுக்குத் தாம் புரிய வேண்டிய கடமைகளை மறப்பதில்லை."

Koviloor Digital Library


"உமது வீட்டாருக்கு அத்தகைய பகைவர்கள் எவரேனும் உண்டா?"

"எங்களுக்கும் தேவிபுரத்தாருக்கும் முன்னூறு வருஷ காலமாகப் பகைமையும், போர்களும், கலகங்களும் அதிகமாய் உண்டு. இவ்வளவு விரோதங்களுக் கிடையிலும் சமயம் வந்தபோது நாங்கள் ஒருவருக்கொருவர் மரியாதை பாராட்டிக் கொள்ளுகிறோம். சக்கரவர்த்தியவர்களுக்கு நாங்கள் ஒருவருடனொருவர் போட்டி போட்டுக்கொண்டு உழைத்து வருகிறோம். இந்தப் பரஸ்பர விரோதத்தை ஒழிக்கும் நிமித்தம் எத்தனையோ முறை நாங்கள் ஒருவருடனொருவர் சம்பந்தங்கள்கூடச் செய்துகொண்டிருக்கிறோம். இதுவரைக்கும் ஒன்றும் பயன்படவில்லை."

"அதற்கென்ன, பெரிய குடும்பங்கள் தமக்குள் பரஸ்பர விரோதம் கொள்வது சர்வசாதாரணம். ஆனால் சம்பந்தம் செய்துகொண்டோம் என்றீரே. அது விஷயமாய் ஒன்று உம்மைக் கேட்கவேண்டும். ராஜா மானஸிம்ஹருடன் போர் முனை செல்லுமுன் அவ்வாறு தேவிபுரத்துப் பெண்மணி எவளையாவது நீர் மணம்புரிய உத்தேசித்ததுண்டா?" என்று புன்னகை செய்துகொண்டே கேட்டாள் மிஹ்ருந்நிஸா.

நரேந்திரன் தலைகுனிந்து பூமியைப் பார்க்கலானான். அவனுடைய முகம் கோவைப்பழமாய்ச் சிவந்தது; 'தன் பூர்வ சரிதம் இப்பெண்மணிக்குத் தெரியுமா? தெரிந்து கொண்டேதான் புண்பட்ட தன் மனதை இவ்வாறெல்லாம் வேணுமென்று ஹிம்ஸிக்கின்றனளா? தன் வாயைவிட்டுச் சொல்லமுடியாத தன் அந்தரங்கத்தை எப்படியாவது கிரஹிக்க வேண்டுமென்று இவ்வாறெல்லாம் தன்னைத் திருப்பித் திருப்பிக் கேட்கிறாளா?' உண்மை விளங்கவில்லை. இருந்தாலும், நரேந்திரன் அம்மாது சிரோமணி கேட்ட

Koviloor Digital Library


கேள்விக்குப் பின்வருமாறு பணிவும் அழுத்தமும் தோன்ற விடைபகர்ந்தான்.

"ஏதோ பால்யத்தில் இருந்திருக்கலாம். அவற்றை யெல்லாம் இப்போது எடுத்துரைப்பானேன்? புருஷனென் பவனுக்கு எத்தனையோ கோரிக்கைகள் இருக்கலாம். அவற்றுள் பல பொய்த்துவிடுகின்றன. அவையெல்லாம் தங்களுக்குத் தெரிவானேன்?"

"ஒன்றும் சொல்லவேண்டாம். அவற்றையெல்லாம் சொல்வதற்கு உமக்கு வருத்தமாயிருக்கிறது போலும். இனி நான் அவ்விஷயமாய் ஒன்றுங் கேட்கமாட்டேன். உம்மை நான் இங்கே அழைத்ததனால் நீர் எத்தனையோ அபாயங் களுக்கு உட்பட்டீர். உம்மை நம்பினவளும், வீரதீரரான விரகநாத்து அதிபதியின் உதவியை ஒரு காலத்தில் ஆசிரயிக்கக் கூடியவளுமான ஒரு சிநேகிதையை நீர் இன்றைக்குச் சந்தித்தீர் அல்லவா? இந்தாரும், இந்தச் சம்பாஷணையின் ஞாபகார்த்தமாக இந்த மோதிரத்தைப் பெற்றுக்கொள்ளும்."

மிஹ்ருந்நிஸா கையில் மோதிரத்துடன் தன்னிடத்தை விட்டு எழுந்தாள். நரேந்திரனும் அந்தப் பெண்ணரசிமுன் முழந்தாளிட்டான். மோதிரத்தைப் பெற்றுக்கொள்ளும் போது இன்னொருமுறை அவர்களுடைய கைகள் ஸ்பர்சித்தன.

"எழுந்திரும்; நீர் வாய்விட்டுச் சொல்லாததொரு விஷயம் நான் உமது முகத்தினின்றும் கிரஹித்துக்கொண் டேன். நீர் பிறருக்கு வெளிப்படுத்தக்கூடாத ஓர் அந்தரங் கத்தை வைத்துக் காப்பதை நான் மெச்சினேன். கோரிக்கை நிறைவேறாமையினால் ஏதாவது துக்கம் ஏற்படுமாயின், அந்தத் துக்கத்தால் மனிதனுடைய குணம் சீர்ப்படுகிறது, திடப்படுகிறது. இளம்பருவத்தில் நற்குண

Koviloor Digital Library


முடைய ஒரு ஸ்திரீயுடன் பழகியிருந்தால் அப்பழக்கத்தால் வாழ்நாட்கள் பரிசுத்தமாகின்றன. தாயோ, தமக்கையோ, தங்கையோ, பெண்ணோ, பெண்சாதியோ யாராவது ஒரு ஸ்திரீயுடன் பழகாமலிருந்தால் அம்மனிதன் என்ன சௌரிய வானாயிருப்பினும் அவன் அரை மனிதன்தான். கடவுள் அவனுக்குப் பூர்ண மானிட ஜன்மம் அளிக்கவில்லையென்றே சொல்லவேண்டும்" என்று பேசி முடித்தாள் மிஹ்ருந்நிஸா.

Koviloor Digital Library

# ஆறம் அத்தியாயம்

## அந்தப்புர இரகசியம்

சூரியோதயமாவதற்கு இன்னும் ஒரு மணி இரண்டு மணி நேரமிருந்தது. ஜெலேகாவும் அவளுடைய தோழியும் அந்தப்புர வாயிலண்டை வந்தனர். கதவு தாளிடப்பட்டிருந்தது. காவலாளிகள் ஒருவருமில்லை.

" இதில் ஏதோ விசேஷமிருக்கிறது. சரி, அவன்தான் இதற்கெல்லாம் மூலகாரணம். நாம் சுவர் ஏறிக் குதிக்க வேண்டும் ; அல்லது ஆற்றுவாயில் வழியாய் வெளிச்செல்ல வேண்டும். இரண்டினுள் பின்கூறியதுதான் உத்தமம். சுவர் ஏறிக்குதிப்பது உசிதமன்று" என்று ஜெலேகா தனக்குள் சொல்லிக்கொண்டாள்.

நரேந்திரன் வாய்மூடி மௌனமாய்த் தார்த்தரிப்பெண் செல்லும் வழியே 'ஊசி வழியே தொடரும் நூல்போல்' நடந்தான். அப்பெண் எத்தனையோ கோணல் வழிகள், இடுக்கு வழிகளெல்லாம் தாண்டிப் படிக்கட்டுகள் பல இறங்கிப் பரபரவென்று சென்றாள். கடைசியில் ஆற்றண்டையிருந்த சிறுவாயிலைத் திறந்து இருவரும் ஆற்றங்கரை சேர்ந்தனர். இருவரும் இரண்டு தண்ணீர்க் குடங்கள் சம்பாதித்துக்கொண்டனர். அந்த நள்ளிருளில் ஜெலேகாவும் அவளுடைய தோழியும் கையும் குடமுமாய் நீர் மொள்ளவந்த இரண்டு ஸ்திரீகளைப்போல் யமுனாநதி தீரத்தில் நின்றனர்.

Koviloor Digital Library


நரேந்திரன் தன் ஆபத்தான நிலையை யறிந்து ஒன்றுந் தோன்றுதவனாய் நின்றான். ஜெலேகா திடீரென்று சிரித்தாள். அப்போது இருக்கும் ஆபத்தைப்பற்றிச் சிந்தித்துக்கொண்டிருந்த நரேந்திரன் ஜெலேகா சிரித்ததின் காரணத்தைக் கிரகிக்கக் கூடாதவனாய்,

"என்ன ஜெலேகா, சமயம், சந்தர்ப்பம் அறியாமல் சிரிப்பதின் பொருள் எனக்குப் புலப்படவில்லையே!"

"நீ இன்னார் என்பது உனக்கு இன்னும் ஞாபகமிருக்கிறதோ இல்லையோ என்பதை நினைத்துச் சிரித்தேன்."

"பெண்ணே, நீ செய்யும் காரியங்களெல்லாம் அற்புதமாயிருக்கின்றன. இவற்றையெல்லாம் கண்டு சில வேளை நான் இன்னானென்பது எனக்கே மறந்துபோய் விடுகிறது. ஒருமணி நேரத்துக்குமுன் நீ என்னை உன் சகோதரி ஷெரிபா என்று அழைத்தனை அல்லவா?"

"ஆமாம் நிஜந்தான்! ஆனால் எனது சகோதரி ஷெரிபா இவ்வளவு விடியற்காலத்தில் நீர் மொள்ள வரமாட்டாளே."

"ஜெலேகா, நானோ ஒரு போர்வீரன். இந்தச் சாகசங்கள், மாறுவேஷங்கள், புனைபெயர்கள் எல்லாம் எனக்கு ஒன்றுந் தெரியாது" என்று நரேந்திரன் சிறிது கோபத்துடன் கூறினான்.

"போர்வீரனா? போர்வீரன் வெளிப்பிராகாரத்தில் விருந்தாளி மண்டபத்தில் சுகமாய் நித்திரை செய்துகொண்டிருக்கிறான். தோழீ, அப்போர்வீரன் அந்தபுரத்துக்குள் அடிவைத்தால் இரண்டு துண்டாய்ப் போய்விடுவான். தெரியாதா?"

"சரி, நீ என்ன கட்டளையிடுகிறாயோ அவ்வாறே செய்கிறேன்."

"அது எப்படி? நாம் இருவரும் அடிமைகளாயிற்று. நான் யார் உனக்குக் கட்டளையிட? ஒருவருக்கொருவர்

Koviloor Digital Library


ஏற்றத்தாழ்வில்லை. நான் மஹாராணியார் ஜோத்பாய் பிராட்டியின் வேலைக்காரி; நீ மிஹ்ருந்நிஸா பேகம் அவர்களின் வேலைக்காரி; இருவரும் ஆற்றுக்கு நீர் மொள்ள வந்திருக்கிறோம். தெரிந்ததா?"

கோபம் ஒரு பக்கமிருக்க அதை மறந்து புன்னகை செய்து நரேந்திரன், "தெரிந்தது. போதும் இன்றையுடன். இனி ஒருபோதும் நான் ஒரு பெண் வேஷம் போட்டு இவ்வாறெல்லாம் தத்தளிக்க மாட்டேன். சிறிது நேரத்துக்குள் என்னவிதமெல்லாம் ஆட்டுவித்து விட்டாய்! இனியும் முடிந்தபாடில்லை" என்றான்.

"ஆகட்டும், அப்படியே செய்; மறந்துவிடாதே. ஜெரீபா, என்ன சுத்த அசடாயிருக்கிறாய். உன் மட்டுங்கூட உன் முகம், தலைமயிர், துணிமணி இவற்றைச் சரியாய் வைத்துக்கொள்ளத் தெரியவில்லையே. அதோ பார், மயிர் எல்லாம் ஒரு பக்கம் சரிந்து தொங்குகிறது. இதைச் சரியாய் முடித்துக்கொள்ளத் தெரியவில்லையே? குழந்தையாயிருந்த போது உன் தாயார், தலையை வாரி முடிபோடச் சொல்லிக் கொடுக்கவில்லையா? இங்கே வா, சரியாய் முடிக்கிறேன். இதோ - இப்படி - இப்படி. சரியாய் வந்துவிட்டது. பார். இது தெரியவில்லையே! சரி, துணியைச் சரியாய்க் கட்டிக் கொள்; எல்லாம் ஒரு பக்கமாய்ப் போயிருக்கிறது பார். கொஞ்சங்கூட வெட்கமென்பதே உனக்குத் தெரியவில்லையே. குடத்தைத் தலைமீது நேராக வைத்துக்கொள்; இந்தா, இந்த இடது கையை இடுப்பின்மேல் வை; இடதுகாலை எடுத்து வைத்து, வலது கையை வீசிக்கொண்டு நட; குற்றமில்லை, நட. நீ என் வார்த்தையைக் கேட்டு நான் சொல்கிறபடி நடந்தால் சீக்கிரத்தில் உனக்கு அரண்மனையில் வேலையகப்படும். உனது எஜமானிப் பேகமும் உனக்கு இன்னும் இரண்டு மோதிரங்கள் பரிசாகக் கொடுப்பார்கள்."

Koviloor Digital Library 4102



இப்படிக்கெல்லாம் பரிகாசம் செய்துகொண்டே தன்னை இப்படி அப்படியென்று ஹிம்ஸித்துக்கொண்டிருக்கும் அந்தப் பெண்ணின் தலையில் தன் குடத்தைப் போட்டு உடைக்கலாமா என்று ஆத்திரம் உண்டாயிற்று நரேந்திரனுக்கு. படிக்கட்டுகளில் தட்டித்தடுமாறி, உடம்பெல்லாம் ஜலத்தைக் கொட்டிக்கொண்டு, நிறைகுடத்தை அரைக்குடமாக்கி விதியே என்று நடந்துசென்றான் நரேந்திரன்.

ஆற்றுப்பக்கம் பாரா இருந்த ஒரு காவல்காரன் அவர்களை நிறுத்தி, "நீங்கள் யார்?" என்று கேட்டான்.

அவள் "மிஹ்ருந்நிஸா பேகம் அவர்களின் வேலைக்காரி. அவள் பெயர் நஸீமா. நான் ஜோத்பாய் மஹாராணியாரின் அடிமை, ஜெலேகா."

"நீ சரிதான். அவளை எனக்குத் தெரியாது. இவ்விடத்துக்கு அவள் புதியவள். ஹுஸூர் அவர்களின் உத்தரவு; இன்றிரவு அந்தப்புரத்துக்குள் பழக்கமில்லாத ஸ்திரீகள் ஒருவரும் போய்வருவது கூடாது."

நரேந்திரன் மனது படபடவென்று அடித்துக்கொண்டது. அவனுடைய வலது கையும் கத்தியை நாடிச் சென்றது. ஆனால் ஜெலேகா பக்கத்திலிருக்க, அந்த அவசியம் எதற்கு?

ஜெலேகா சிறிதும் அஞ்சாமல் "நஸீமா, உன் எஜமானியவர்களின் மோதிரத்தைக் காண்பி. அப்புறமும் அவன் தடைசெய்தால் இராணியார் அவர்களுக்கு அவன் பதில் சொல்லிக்கொள்கிறான். நமக்கென்ன?" என்று தீரமாய்ச் சொன்னாள்.

நஸீமா மோதிரத்தைக் காண்பித்தாள். காவற்காரனும் தலைகுனிந்து அவர்களுக்கு வழிவிட்டான்.

இன்னும் இரண்டொருமுறை இவ்வாறே தொந்தரவு ஏற்பட்டது. 'சரி, பேர்வழியினுடைய ஏற்பாடு இது

Koviloor Digital Library


அவன் மட்டும் அவன் என்னமோ தன் வலையை நாலா பக்கமும் நன்றாய் வீசியிருக்கிறான். இருந்தாலும், இந்த மீன் அவன் கையில் அகப்படாது. இல்லாவிட்டால் எனக்குத் தார்த்தரிப் பெண் என்னும் பெயர் பொருந்துமா?" என்று ஜெலேகா தனக்குள் சொல்லிக்கொண்டாள்.

ஆம்பர் அரமிையின் வேலைக்காரிகளாகிய சில ராஜபுத்திர ஸ்திரீகள் வழக்கப்பிரகாரம் இந்த விடியும் நேரத்தில் ஆற்றங் கரைக்கு வந்திருந்தனர். அவர்கள் தங்கள் குடங்களை மணலின்மீது வைத்துவிட்டுச் சிரித்து விளையாடிக் கொண் டிருந்தனர். அவர்களைப் பார்க்கு முன்னமே அவர்களு டைய வார்த்தைச் சப்தம் ஜெலேகாவுக்குக் கேட்டது. நிதா னித்து உற்றுக்கேட்டாள். அவர்கள் இன்னார் என்பது அவளுக்குத் தெரிந்தது. மேலே நடக்கவேண்டிய ஏற்பாடு களைப் பற்றி உடனே ஜெலேகா யோசித்துவிட்டாள்.

"கலீமா, ரொம்ப சமத்தாயிருக்கிறாயே! உடம்பெல் லாம் நனைந்து போய்விட்டது; துணியெல்லாம் தெப்பமா யிருக்கிறது. சுவரின்மீது மோதித் தண்ணீர்க் குடத்தை உடைத்துவிட்டாய். சரி, அதைக் கீழே போட்டுவிடு."

"ஜெலேகா, போதும் இந்தப் பரிகாசமெல்லாம். இனி நான் பொறுக்கமாட்டேன். இதோ, குடத்தைப் போட்டுவிட் டேன். உன் விளையாட்டு வேடிக்கைகளையெல்லாம் கட்டிவை. மேலே நடக்கவேண்டிய காரியத்தை விட்டுச்சொல்லிவிடு. யாரோ நமக்கு எதிரே பெண்கள் குரல் கேட்கிறது. அவர்கள் கண்ணுக்கு அகப்படக்கூடாது நாம்."

"அவர்களை நாம் அவசியம் சந்திக்க வேண்டும். ஒரு சிறு குடத்தைத் தூக்கித் தலைமேல் வைத்துவரத் தெரியாத அசட்டுப்பெண்ணுக்கு அவர்கள்தான் உதவிபுரிய வேண்டும்."

Koviloor Digital Library


"பைத்தியம் பிடித்துவிட்டதா என்ன உனக்கு? அவர்கள் கண்ணில் நாம் அகப்படக் கூடாது. அவர்கள் கண்டுவிட்டால் நாம் தப்பித்துக்கொள்ள முடியாது."

"சீ, அசடே, அவர்கள் உதவியைத்தான் நாம் அவசியம் நாடவேண்டும் இச்சமயம்" என்றாள் ஜெலேகா. "வீணாய் நீ கற்றதையெல்லாம் இன்றைக்கே பேசி விடாதே; உனக்கு என்ன தெரியும் இந்தச் சமாசார மெல்லாம்? நீயோ சுபாவமாகவே 'மஹா புத்திசாலி'; கூடப் போதும் போதாததற்கு நீ இந்த ஊருக்குப் புதியவள். சற்று உன் வாயை மூடிக்கொண்டு நான் சொல்கிறபடியே செய். உன் யோசனை ஒன்றும் இங்கே வேண்டாம்; தெரியுமா?"

"யார் அங்கே? கொஞ்சம் ஒதுங்கி நில்லுங்கள். நாங்கள் தலையில் குடமெடுத்து வருகிறோம்" என்றாள் ராஜ புத்திர ஸ்திரீகளில் ஒருத்தி.

"சகோதரீ, உங்களை எனக்குத் தெரியும்; நீங்கள் வாருங்கள் ஒதுங்கியிருக்கிறோம்; நீங்களெல்லோரும் மிக்கப் பிரசித்திபெற்ற ஆம்பர் இராணியாரின் ஆட்கள் அல்லவா? என் குரல் தெரியவில்லையா உங்களுக்கு?"

"ஓஹோ நீயா! தெரிந்தது. நீ ஜோத்பூர் அரசியின் வேலைக்காரி ஜெலேகா அல்லவா?"

"ஆமாம், இவள் மிஹ்ருந்நிஸா பேகம் அவர்களின் வேலைக்காரி நஸீமா. ஆக்ராவுக்குப் புதிதாய் வந்தவள்."

"அவளும் உன்னோடு ஜலத்துக்கு வந்தாள் போலும். நீங்கள் உங்கள் வழியைவிட்டு வழிதப்பி வெகுதூரம் வந்து விட்டீர்களெனத் தோற்றுகிறது."

"இல்லை, கோட்டையின் வெளிப்பிராகாரத்திலிருக்கும் விருந்து மண்டபத்தில் காயம்பட்டுப் படுத்திருக்கும் வங்க தேசத்து வீரனைப்பற்றி விசாரித்து வரும்படி இராணியார்

Koviloor Digital Library


ரக்யா பேகமவர்கள் இவளை அனுப்பினராம். வெளிக் கோட்டையின் கதவுகள் இன்றைக்கு மூடியிருக்கிறதாம். ஆற்று வாயில் வழியாய் வந்தாள்; உள்ளே போகவேண்டுமாம்; விழித்துக்கொண்டிருக்கிறுள்."

"ஆமாம் வெளிக் கோட்டைக் கதவுகள் மாத்திரமன்று; எல்லாக் கதவுகளும் இன்றைக்கு மூடப்பட்டிருக்கின்றன. ஸலீம் இளவரசரின் பேடிகள் யாவரும் சிறைப்பட்டனர். இளவரசரும் ஆபத்துக்குள்ளாகியிருக்கிறுர். இதெல்லாம் உனக்குத் தெரியாதா? கூட, இளவரசரால் அனுப்பப்பட்ட ஒற்றன் ஒருவன் மாறுவேஷம் பூண்டு மிஹ்ருந்நிஸா அறைக்குள் பிரவேசித்தானும். உன் காதில் ஒன்றும் விழவில்லையா?"

"ஏதோ சச்சரவு சப்தம் காதில்பட்டது. ஆனால் கிணற்றுத் தவளைக்கு நாட்டு வளப்பமேன்? தார்த்தாரிப் பெண்ணுக்கேன் அந்த விசாரமெல்லாம்?"

"அது சரிதான், நீ ஏன் விசாரிக்கவேண்டும்? நான் எங்கள் இராணியாருக்குப் பணிவிடை செய்துகொண்டிருந்தேன்; அப்போது யாரோ வந்து சொன்னுர்கள். பயங்கரமான அந்த மூஸ்ஸூர் சூரியோதயத்துக்கு முன் அந்த ஒற்றனைக் கண்டுபிடித்துவிடுவதாகக் கச்சை கட்டியிருக்கிறுனும்."

"அவன் மஹா சமர்த்தன். எப்படியாவது கண்டு பிடித்துவிடுவான்" என்று புன்சிரிப்பு சிரித்துக்கொண்டே சொன்னுள் ஜெலேகா.

"ஆமாம் இவள் இப்போது எங்கே போய்க்கொண்டிருக்கிறுள்? அந்த வழியாய்ப் போனுல் வெளிக்கோட்டைக்குப் போகமுடியாது."

"அதுதான் நானும் சொன்னேன். அவள் பாரஸீகப் பெண்; நம் பாஷை அவளுக்குத் தெரியவில்லை. மிஹ்ருந்நிஸா

Koviloor Digital Library


பேகத்தின் வேலைக்காரிகள் இந்த அரண்மனையில் அடிக்கடி வழிதப்பிப் போகிறார்கள். மஹா மூடங்கள்!"

"மூடமா, அந்தப் பாரஸீகப் பெண்! நீ சொல்கிறபடி அவ்வளவு மூடமாகக் காணோம். பார்ப்பதற்கு அப்படியிருக்கிறாள். அவள் ஏதாவது சொந்த அலுவலை உத்தேசித்து ஆற்றங்கரைக்குத் தானே ஒருவரிடமும் சொல்லாமல் வந்திருக்கலாம். என்ன இரகசியமோ? என்ன அந்தரங்கமோ? யாருக்குத் தெரியும்?"

"ரக்யா பேகம் அனுப்பினாள் என்பது வெளிக்குச் சாக்காயிருக்கலாம்."

"இருந்தாலும் இருக்கலாம். சகோதரீ! அடிக்கடித் தமது காதலர்களைப்பற்றிப் பாடிக்கொண்டு கேளிக்கையில் காலங் கழிக்கும் இந்தப் பாரஸீகப் பெண்களைத் தார்த்தாரிப் பெண்களாகிய நாங்கள் நம்புவதில்லை. ராஜஸ்தானத்துப் பெண்களைப்போல் மதியூகமும் நற்குணமும் இவர்களுக்குக் கிடையாது. இந்த அசடு எந்தப் பாரஸீகப் புருஷனையோ கண்டு மதிமயங்கி இப்படிக்கெல்லாம் அலைந்து அவஸ்தைப்படுகிறது. என்ன, நஸீமா அப்படித்தானா? உண்மையைச் சொல்" என்றாள் ஜெலேகா.

அதிகப் பிரசங்கியாகிய இந்த ஜெலேகா இவ்வாறெல்லாம் தன்னைப்பற்றிப் பேசியதைக்கேட்டு நரேந்திரனுக்குக் கோபமும் ஆத்திரமும் உண்டாயின. அவன் உதட்டைக் கடித்துக்கொண்டான். அவனுக்கு உண்டான கோபத்துக்கு அளவேயில்லை. ஆனால் என்ன செய்வது? இப்போது அவன் அவள் கையில் அகப்பட்டிருக்கின்றான். பேய்க்கு வாழ்க்கைப்பட்டால் புளிய மரத்தில் ஏறித்தானே தீரவேண்டும். ஏதோ இரண்டொரு மொழிகள் பேச வாயெடுத்தான். ஜெலேகா அடக்கிவிட்டாள்.

Koviloor Digital Library


"இந்த மக்கு, இடித்த புளிபோல் நிற்கிறது; வாயைத் திறக்கமாட்டேனென்கிறாள். கொஞ்ச தினங்களுக்கு முன்புதான் பாரசீகத்திலிருந்து வந்தது; நம்முடைய பாஷை இன்னும் தெரியவில்லை; என்ன சொன்னாலும் தெரியாது."

"அப்படிச் சொல்லாதே ஜெலேகா. நீ சொல்வதெல்லாம் அவளுக்கு அர்த்தமாகிறது. அர்த்தம் தெரியாமல் வாயை மூடிக்கொண்டு இல்லை. வாயைத் திறந்தால் தன் இரகசியம் வெளியாய் விடுமென்று மௌனம் சாதிக்கிறாள். இந்த நிச்சப்தமான இரவில் ராதை கிருஷ்ணனைத் தேடி யமுனா நதிதீரத்துக்கு வந்திருக்கிறாள்."

"அவள் வேண்டுமானால் கிருஷ்ணனைத் தேடி வந்திருக்கலாம். பனைமரம்போல் வளர்ந்திருக்கும் இந்த இரதியைக் கண்டு அவன் ஓடிவந்து விடமாட்டானோ?" என்றாள் ஜெலேகா. எல்லோரும் கொல்லென்று சிரித்தார்கள். நரேந்திரனுக்கு ஆத்திரம் அதிகரித்தது.

"சகோதரி, வெளிக்கோட்டையில் படுத்திருக்கும் சேனாதிபதியைப்பற்றி உனக்கு ஏதாவது தெரியுமா? சொல், அவர் தேகஸ்திதி எப்படியிருக்கிறது?" எனக் கேட்டாள் ஜெலேகா.

"ஆம்பர் விருந்து மண்டபத்தில்தானே அவர் இருக்கிறார்; அவரைப்பற்றித் தெரியாதா எனக்கு? மேலும் என் எஜமானியாரது வைத்தியர்கள்தான் அவருக்குச் சிகிச்சை செய்கிறார்கள். அவருக்கு இப்போது நன்றாய்க் குணமாய் விட்டதென்றும், நாளையதினம் காலை அவர் கோட்டையை விட்டுச் செல்வதாயும் ராஜா மானஸிம்ஹர் என் எஜமானியாருக்கு நேற்றையதினம் செய்தியனுப்பினார்."

"அப்படியானால் துரிதஞ்செய். அவர் கோட்டையிலின்றும் புறப்படுவதற்குமுன் இந்தப் பெண்ணைச் சற்று அவரிடம் அழைத்துச்செல். ஒழிந்துபோகிறது; அசட்டுப்

Koviloor Digital Library



பெண் ; போய்ப்பார்த்து வரட்டும். வங்காளத்துக்குப் போகும் பேகம் ஏதோ சில கட்டளைகள் அவருக்கு இட்டிருக்கிருள் போலிருக்கிறது. அவள் சொல்வதினின்று அவ்வளவுதான் தெரிகிறது எனக்கு. பேகம் அவர்களுடைய கட்டளையை நிறைவேற்றுவிட்டால் இந்த அசட்டுப் பெண் தலை போய்விடும். ஐயோ பாவம்! சற்று உபகாரஞ் செய், சகோதரீ."

"ஜெலேகா, இந்த அயல்நாட்டுப் பெண்கள் ஆக்ராவுக்கு வருவது எனக்குப் பிடிக்கவில்லை. ஆயினும் நீ இவ்வளவு தூரம் சொல்வதால் இவளுக்கு உதவி செய்கிறேன்."

"சகோதரீ, நீ மிகவும் நல்லவள். உனது எஜமானியாகிய இராணியாருக்கு நிரம்பவும் வேண்டியவள் நீ. உன்னைக் கண்டால் எந்தக் காவற்காரனும் பதில் வார்த்தை சொல்லமாட்டான்."

"நீ சொல்வது உண்மையே. காவற்காரன் தயை எதுக்கு? எங்களுடைய கதவின் சாவி என்னிடமிருக்கிறது. ஆம்பர் விருந்து மண்டபத்துக்குச் செல்லும் வழிக்கு அழைத்துப் போய்விடுகிறேன். அதற்குமேல் அவள் தானே சென்றுவிடுவாள் அல்லவா?"

"ஆம், அதற்குமேல் அவளுக்குத் தெரியும் வழி. நீ எனக்காக இவ்வளவு சிரமம் எடுத்துக் கொள்வதற்குப் பிரதியுபகாரம் நான் என்ன செய்யப் போகிறேன். ராஜபுத்திரர்கள் என்றால் ராஜபுத்திரர்கள்தாம் ; அவர்களைப்போல் அன்பும் நம்பிக்கையும் உடையவர்கள் வேறு எவர் இருக்கின்றனர்! உங்கள் எஜமானியார் ஆம்பர் அரசியை, எனது தலைவி ஜோத்பூர் இராணியார் ரொம்பவும் விசாரித்ததாகச் சொல்லுங்கள்."

உடனே யாருக்குந் தெரியாமல் நொடி நேரத்துக்குள் ஜெலேகா நரேந்திரனண்டை வந்து, "அந்த ராஜபுத்திர

Koviloor Digital Library


ஸ்திரீயைப் பின்பற்றிச் செல். அந்தகார வழியில் நின்றிரு. நான் வருகிறேன்" என்று சொல்லிப் போய்விட்டாள்.

ராஜபுத்திர ஸ்திரீ எத்தனையே இடுக்கு வழிகளெல்லாம் கடந்து ஆம்பர் இராணியார் அறைக்குச் சென்றாள். இராணியார் அயர்ந்த நித்திரையிலிருந்தாள். எல்லாம் நிச்சப்தமாயிருந்தது. நரேந்திரன் அந்த ஸ்திரீ செல்லும் வழியே நடந்து சென்றான்.

பல அறைகள், மண்டபங்களைக் கடந்து இருவரும் அந்தப்புரத்துக்கும் வெளிக்கோட்டைக்கும் இடையிலுள்ள சுவரை யடைந்தனர். ராஜபுத்திர ஸ்திரீ தன் மடியிலிருந்து ஒரு திறவுகோலை யெடுத்துக் கதவைத் திறந்தாள். அந்த வாயிலைத் தாண்டி, அதற்கு அப்புறம் உள்ள முற்றத்தைக் கடந்து இருவரும் அந்தகார வழியண்டை வந்தனர்.

"இந்த வழியே நேராகச் செல். வங்கநாட்டு யௌவனவீரர் இருக்கும் அறையை அடைவாய். தெரிந்ததா நான் கூறியது?"

அந்த ராஜபுத்திர ஸ்திரீக்கு நரேந்திரன் தலையை ஆட்டி வந்தனம் புரிந்தான். அவளும் புன்னகை செய்து ஏதோ ஒரு பாட்டைப் பாடிக்கொண்டே திரும்பிச் சென்று விட்டாள்.

அந்த அந்தகாரத்தில் நரேந்திரன் நெடுநேரம் காத்திருந்தான். ஒருவரும் காணோம். எல்லாம் நிச்சப்தம்; பேச்சு மூச்சுக் கிடையாது. ஜெலேகா என்ன ஆபத்துக்குட்பட்டாளோ என்று நினைத்து அவன் வருத்தப்பட்டான். காற்று ஜில்லென்று வீசியது; நரேந்திரனுக்கு மிகவும் குளிராயிருந்தது.

ஒரு மிருதுவான ஸ்பர்சம்: ஜெலேகா அவன் பக்கம் நின்றிருந்தாள். "கேட்டாயா அந்தச் சப்தத்தை?" என்றாள்.

Koviloor Digital Library


" எனக்கு ஒன்றும் கேட்கவில்லையே. காற்று வீசும் சப்தந்தான் என் காதில் பட்டது."

மறுபடியும் ஒரு சப்தம் உண்டாயிற்று. காற்று வீசும் ஒலியன்று ; யாரோ ஒருவர் பயங்கரமாய் நகைப்பது போலிருந்தது. வீரதீரம் படைத்த ஜெலேகாவே நரேந்திரனைக் கெட்டியாய்க் கட்டிக்கொண்டாள் ; அவளுடைய கால் கைகள் உதறலாயின.

"கடவுள்தான் காப்பாற்றவேண்டும்" என்று மெள்ளப் பிரார்த்தித்தாள் அவள்.

" என்னிடம் பாரஸீகப் பெண்மணியின் மோதிரம் இருக்கிறது. நமக்குப் பயமில்லை, ஜெலேகா."

" அரசருடைய அந்தப்புரத்துக்குள் புருஷன் ஒருவன் சென்றிருந்தா னென்றால், சக்கரவர்த்தியவர்களுடைய மோதிரமா யிருந்தாலும். சரி, பிரயோசனப்படாது. நல்ல காலம், நீ ராஜபுத்திர ஸ்திரீயுடன் வந்தனை ; உன்னை யாரும் சந்தேகிக்கவில்லை. ஆனால் என்னைக் கவனித்தார்கள். அவர்கள் என்னைப் பின்பற்றி வருகின்றனர். ஆற்றங்கரைக் காவலாளிகளுக்கெல்லாம் கடும் உத்தரவு கொடுக்கப்பட்டிருக்கிறது."

"ஜெலேகா, நீ மஹா தைரியசாலியாயிற்றே. நீயே இவ்வாறு அகாரணமாய்ப் பயப்படுகின்றனையே. அவர்கள் உன்னைப் பின்பற்றி ஏன் வரவேண்டும்?"

" நான் ஓர் ஒற்றனை உள்ளே அழைத்துப் போனதாக அவர்கள் சந்தேகிக்கிறார்கள்."

" வா, என்னுடைய அறைக்குப் போய்விடலாம். அங்கே பயமில்லை " என்றான் நரேந்திரன்.

" சரி, அவர்களுக்குப் பழம் நழுவிப் பாலில் விழுந்தது போலாகும் ; எல்லாம் வெளியாய்விடும். இருவரும் இறக்க வேண்டியதுதான்."

Koviloor Digital Library


"அங்கே யார் வரப்போகிறார்கள்?"

"யாரா? யார் இருக்கிறான்? அவன்தான்; அந்தக் கொலைபாதகன்தான்."

"யார் அந்தக் கொலைபாதகன்?"

பதில் இல்லை.

சிறிது நேரஞ் சென்றது. அவர்கள் நின்றிருந்த பக்கமாய் யாரோ வருகிற காலடிச்சப்தம் கேட்டது. அந்த க்ஷணமே ஜெலேகா மேல் நடக்கவேண்டியதற்கு ஏற்பாடு செய்துவிட்டாள்.

"போய்விடு, நீ உன் அறைக்கு. நாம் இருவரும் இங்கே ஒன்றாய் இருக்கக் கூடாது. போ, போ, இல்லா விடில் செத்தோம். சூரியோதயத்துக்குள் உன்னை மறு படியும் வந்து பார்க்கிறேன். அதற்குள் நான் சந்தித்தாக வேண்டும், என்னுடைய—காதலனை!"

மறுபடியும் ஒருமுறை ஜெலேகாவின் வெளுத்த முகத்தில் ஒரு புன்சிரிப்பு உண்டாயிற்று.

அவள் நிஷ்கிரமித்தாள்.

நரேந்திரன் இம்முறைதான் ஜெலேகாவின் வார்த்தையைத் தட்டியது; அவன் அறைக்குப் போகாமல் அந்தகார வழியில் பிறருக்குப் புலப்படாவண்ணம் என்ன நடக்கிறது பார்க்கலாமென்று கத்தியும் கையுமாய் நின்றான்.

காலடியோசை நின்றுவிட்டது. காவலாளி அப்புறம் போய்விட்டிருக்க வேண்டும். ஜெலேகாவும் உடன்சென் றிருக்க வேண்டும். அரைமணியாயிற்று. ஒன்றும் கேட்க வில்லை. கண்ணுக்கும் ஒன்றும் தென்படவுமில்லை.

வெகு தூரத்திலின்று ஏதோ பேச்சுக்குரல் கேட்டது. அது அவ்வளவு தெளிவாயில்லை. நரேந்திரன் திடுக்கிட்டான். அவன் கதவை நெருங்கினான். முன்னர் கேட்ட குரல் இப் போது கெஞ்சிக்கேட்பதும், இன்னொரு குரல் கோபத்துடன்

Koviloor Digital Library


விடையளிப்பதும், பிறகு மனத்தைப் பிளக்கும்படியான கதறலும் கேட்டன; கடைசியில் எல்லாம் அடங்கிவிட்டது.

மறுபடியும் தூரத்தினின்று மந்தமான சப்தம்; ஒரு நெடிய கீச்சென்ற அழுகைக் குரல், நரேந்திரனால் சகிக்கக் கூடவில்லை. அவன் வெளியேவந்து சுற்றிப்பார்த்தான். ஒரே இருள்; காடாந்தகாரம்; ஒரு குரலொலியும் இல்லை பின்பற்றிச் செல்லலாமென்றாலும்.

திரும்பவும் முன்போல் மந்தமான அழுகைக்குரல். மறுபடியும் நிச்சப்தம்!

கைகள் தன்மேல் பட்ட உணர்ச்சி! ஜெலேகா அவன் கையைப் பிடித்துப் பரபரவென்று அவனுடைய அறைக்கு அழைத்துச் சென்றாள்.

இருவரும் உள்ளே நுழைந்தவுடன் ஜெலேகா உரக்க நகைத்தாள்; நரேந்திரன் ஜெலேகாவை விளக்கொளியில் பார்த்தான்; திடுக்கிட்டான். அவளுடைய ஆடையெல்லாம் தாறுமாறாய்க் கிழிந்துகிடந்தது; தலைமயிரெல்லாம் அவிழ்ந்து கோணல்மாணலாய் விழுந்திருந்தது; அவளுடைய புருவத்தில் ஒரு இரத்தக் கறை.

நரேந்திரன் அவளைக்கண்டு பிசாசைக் கண்டு பயப்படுபவனைப் போல் பின்வாங்கினான். "சிரிப்பதற்குத் தருணமா இது, ஜெலேகா?" என்றான் நரேந்திரன். "சலவைக் கல்விட்ட அந்த முற்றத்தில் ஏதோ விசேஷம் நடந்திருக்கிறது. நீ அதை என்னிடமிருந்து மறைக்க வீணாய்ப் பிரயத்தனப்படுகிறாய். சொல்லமாட்டாயா?"

"ஆம், விசேஷம் நடந்திருக்கிறது. அதை உன்னிடம் வெளிப்படுத்த எனக்கு விருப்பமில்லை. வீரஸிம்ஹமே, அரண்மனைக்குள் எத்தனையோ இரகசியங்கள் உண்டு; சிறிய பெண்களுக்கு எத்தனையோ அந்தரங்கங்கள் இருக்கும். அவற்றையெல்லாம் உனக்குச் சொல்லவேண்டுமா?"

Koviloor Digital Library


"ஜெலேகா, என் அன்பே, உனக்கும் எனக்கும் ஏற்பட்டுள்ள பற்று கேவலம் சிநேகப் பற்றுமட்டுமேயன்று. இத்தருணம் உனக்கு எவ்வித உதவிவேண்டுமாயினும் செய்யச் சித்தமாயிருக்கிறேன். உன் மெல்லிய உடல் இவ்வாறு உதறுவதும், மார்பு படபடவென்று அடித்துக்கொள்வதும், காதல் விவகாரத்தால் உண்டாவது அன்று. உண்மையை என்னிடம் விட்டுச் சொல்லமாட்டாயா?"

"யௌவன வீரரே, நீர் ஸ்திரீகளின் உள்ளத்தை எளிதில் கண்டறிந்து விடுகிறீர். என்னைப் பார்த்தால் சிறிது அலங்கோலமாயிருக்கிறது போலும். அதைப்பற்றிக் கவலைப்பட வேண்டாம். ஏதோ ஓர் அந்தரங்க ஆலிங்கனத்துக்குப் பின் உண்டாகும் மன நடுக்கத்தின் காரணத்தை ஒரு பெண் வெளிக்குச் சொல்லிக்கொள்ளவேண்டுமா?"

"ஜெலேகா, இவ்வாறு பயனற்றமொழிகளால் நீ வீண் காலஹரணம் செய்கிறாய். பொழுது விடிவதற்காயிற்று; நம்மிருவருக்கும் அபாயம் நேரிடும். தூரத்திலின்று என் காதில் ஓர் ஒலி விழுந்தது. அது காதல் சம்பந்தமாய் எழுந்த ஒலியன்று; கதறலும், அழுகைக்குரலும் காதலர் களிப்பால் எழுவனவல்ல."

"உமக்குக்கூடக் கேட்டதா? ஆனால், உமக்கென்ன தெரியும் அந்தப்புர இரகசியங்கள்? இவ்விஷயங்களில் நீர் கற்றுக்குட்டி. இவ்விடங்களில் நெருங்கிச்சேர்ந்த காதலர்கள் திரும்பிப் பிரிந்து செல்லக்கூடாத சந்திப்புகள் பல ஏற்படுகின்றன; இங்கே செய்துகொள்ளும் ஆலிங்கனங்கள் மரணாந்தமான ஆலிங்கனங்கள்."

"ஜெலேகா, சற்று நிதானி. மனத்தைச் சரிப்படுத்திக் கொண்டு பேசு. அர்த்தமாகாமல் ஏதோ வாயில் வந்தபடிக்கெல்லாம் பிதற்றுகிறாயே?"

Koviloor Digital Library



தனக்கே தான் பேசிக்கொள்வதுபோல் ஜெலேகா, "ஆமாம், மற்றவர்களுக் கிருப்பதுபோல் பேகங்களுக்கும் இரத்தமும் சதையும்தான் இருக்கின்றன. அவர்களுக்கும் அந்தப்புரத்தின் கள்ளவழிகள் நன்ருய்த் தெரியும். தலை குனிந்து அதிகப் பணிவாயிருக்கும் அடிமைகளுக்கும் அவர்களுக்கேற்ற அந்தரங்கங்கள் உண்டு. ஆனல் இந்தக் கொடிய பேடிகள் அவர்களைப் புருஷர்கள்போல் பின்பற்றி வந்து புலிபோல் அவர்களுடைய இரத்தத்தைத் தயை தாக்ஷண்யமின்றி உறிஞ்சுகின்றனர்" என்ருள்.

"உஸ், உஸ்! வாயை மூடு ஜெலேகா. பைத்தியக் காரியைப்போல் பிதற்றுகிருயே உனது ஆப்த நண்பனுடைய வார்த்தையைச் சற்றுக் கவனித்துக்கேள். உட்கார், என் பக்கத்தில். என்மீது சாய்ந்துகொண்டு சற்றே புத்தியை ஸ்திரப்படுத்திக்கொள். நான் படுகிடையாய்க் கிடந்தபோது நீ பலமுறை எனக்கு உதவி செய்துள்ளாய். இப்போது நீ துன்பப்படும்போது உனக்கு மனப்பூர்த்தியாய் உதவி செய்யக் காத்திருக்கிறேன். ஜெலேகா, சமாசாரத்தைச் சொல். உன் கண்கள் முன்போலில்லை; நீ சிரிக்கும் சிரிப்பு, சிரிப்பு அல்ல."

ஜெலேகா மெதுவாய்க் கீழ்ப்படியலானுள்; நரேந்திரன் அவளுடைய கையைப்பற்றி இழுத்துப் பக்கத்தில் உட்கார வைத்துக்கொண்டான். தன்னுடன் பல ஆபத்துக்களுக்கும் அபாயங்களுக்கும் உட்பட்டுத் தனக்குப் பலவாறு ஆறுதல் கூறும், அன்பு தவழும் அந்த சுந்தர வீரனது முகத்தைப் பார்க்கப் பார்க்க, அவளுடைய பார்வை சாந்தப்பட்டுக் கொண்டே வந்தது.

"ஜெலேகா, பயப்படாதே, உன் புத்தியைச் சரிப் படுத்திகொள்; தைரியமா யிரு. உன் முகம் தெளிவடைந்து வருகிறது; இப்போது எனக்கு உயிர் வந்தது" எனத்

Koviloor Digital Library



தொடங்கினான் நரேந்திரன். "நான் சொல்வதை நிதானமாய்ச் செவிசாய்த்துக் கேள். உன் அந்தரங்கங்களைக் கண்டறிய வேண்டுமென்று நான் ஆசைப்படவில்லை. ஆனால் ஒன்று மாத்திரம் நிச்சயம். நாமிருவரும் ஒரே அபாயத்துக்குட்பட்டிருக்கிறோம். இஷ்டமிருந்தால் உன் அந்தரங்கத்தை என்னிடம் சொல். இஷ்டமில்லாவிட்டால் சொல்லவேண்டாம். அதைப்பற்றி எனக்கு அவசியமில்லை; நான் அதைப் பற்றிக் கவலைப்படவுமில்லை. ஆனால் நண்பர், உறவினரற்றுத் தன்னந்தனியனாயிருக்கும் போர்வீரனால் ஆகக்கூடிய உதவி ஏதாவதிருந்தால், சங்கோசப்படாமல் சொல். எவ்வளவு அபாயத்துக் கிடமாயிருப்பினும் சரி, உடனே செய்து முடிக்கக் காத்திருக்கிறேன்."

காட்டுத்தன்மையுள்ள இந்தத் தார்த்தரிப் பெண்ணின் மனத்தை மாற்றியதெது? சற்றுமுன் ஜெலேகா அநுபவித்த கஷ்டங்கள், மனவுணர்ச்சிகள் இவற்றின் பிரதிபலனோ? அல்லது நரேந்திரனுடைய வாக்சாதுரியந்தானோ? இதற்கு முன் ஒரு தடவையும் அவள் இவ்வளவு சாவதானமாய் உட்கார்ந்து புருஷர்களுடைய வார்த்தைக்குச் செவிகொடுத்துக் கேட்டதில்லை. இப்போது அவள் ஆட்டுக்குட்டிபோல் சிழ்ப்படிந்து, நரேந்திரன் சொன்னதையெல்லாம் ஒன்றுவிடாமல் கேட்டுக்கொண்டே, அவன் பேசுவதை நிறுத்துவதாகத் தோற்றியபோதெல்லாம்,

"ஆகட்டும், மேலே சொல்" எனச் சொல்லிவந்தாள்.

"நான் என்ன சொல்லப் போகிறேன்? ஒன்றும் அதிகமில்லை. நடந்த விஷயங்கள் ஒன்றும் எனக்குத் தெரியாது. உன் அன்பையும், ஆதரவையும் முதன் முதலில் அறிந்தேன்; பிறகு உனது சௌரியத்தையும், தைரியத்தையும் கண்டு மகிழ்ந்தேன். நீ சிறிதே காட்டுத்தன்மையும் முரட்டுச்சுபாவமும் உடையவளாய் இருந்தால்தானென்ன,

Koviloor Digital Library


அல்லது அரண்மனையில் அடிமையாய்த்தான் உழைத்துவந்தாலென்ன? உனது சத்தியமும், உனது வீரியமும், உனது சமயோசித புத்தியும் மெச்சத்தக்கன. என்னை நம்பினால் உனக்குத் துரோகம் புரியமாட்டேன்; இது சத்தியம்; இது திண்ணம்."

ஜெலேகா இப்போதுதான் முதல்தடவை ஒரு துளிக் கண்ணீர் சொரிந்தாள். அவளுடைய கல்மனம் சற்றே கரைந்தது; அவளும் ஸாமான்ய ஸ்திரீகளைப் போலாயினள்; அந்த எஃகுக்கம்பி சற்றே இளகியது. அப்போது நரேந்திரன் அவளைக் கிட்டே அழைத்துக் கட்டித் தன் அதரங்களை அவளுடைய பளிங்கு நெற்றியில் படிந்திருக்கும் கலைந்த கேசத்தின்மீது வைத்து முத்தமிட்டான்.

அந்த ஸபர்சமானது ஜெலேகாவுக்கு ஒரு நூதன உணர்ச்சியை உண்டாக்கியது. அவள் கனவில்போல் பட்டதும் படாததுமாய், 'ஸ்திரீகளைப்போல் புருஷர்களிடமும் வசிய சக்தியிருக்கிறது. தார்த்தாரிப் பெண்ணினிடம் போலவே ஒரு யுத்தவீரனிடத்தும் மாந்திரிக பலம் இருத்தல்கூடும்' என்று தனக்குத்தானே சொல்லிக் கொண்டாள்.

"உனது வசியம், ஜெலேகா, ஸ்திரீகள் புருஷர்கள் மீது பிரயோகிக்கும் சர்வ வசியங்களுள்ளும் மிகச் சிறந்தது; அதாவது, அன்பார்ந்த உனது ஆதரவும் சுசுரூஷையுமே அத்தகைய வசியம். எனது வசியமோ உன் கண்ணீரைத் துடைத்து உனக்கு எல்லாவிதத்திலும் உதவி புரியக்கூடியது. நாழிகையாகிறது. நடந்ததை யெல்லாம் சொல்."

"அப்படியானால் இந்தக் கட்டுகளையெல்லாம் அவிழ்த்து விடு; இரகசியம் வெளிப்படும்."

பலவிடங்களில் கிழிந்திருந்த முஹமல் இரவிக்கையின் கட்டுகளை யவிழ்த்தான் நரேந்திரன். உள் இரவிக்கை

Koviloor Digital Library


தோம்புத் துளிபோல் இரத்தத்தால் நனைந்து கிடப்பதைக் கண்டு தன்னையுமறியாமல் நரேந்திரன் கதறினான். மெள்ள மெள்ள அந்த உள்ளாடையை நீக்கிப் பார்க்கையில், வயிற்றுக்குமேல் ஒரு பலமான காயம் பட்டிருந்தது. அக் காயத்தினின்று இரத்தம் இன்னும் வேகமாய் வந்துகொண்டிருந்தது; கட்டாரி மார்பில் பதிய மயிரிழையே தவறியிருந்தது.

கண்கள் சிவக்க, குரல் நடுங்க நரேந்திரன் "ஜெலேகா, என்ன இந்தக் கோரமெல்லாம்?" எனக் கேட்டான்.

"அதுதான் என் காதலருடைய ஆலிங்கனக் குறி" என்றாள் ஜெலேகா. "ஆனால் இப்போது என் ஆருயிர்க் காதலர் நல்ல காடாந்த நித்திரையிலிருக்கிறார். தார்த்தாரிப் பெண் ஆலிங்கனம் ஸாமான்யமானதன்று."

"இந்த விடுகதை யெல்லாம் சற்று அப்புறமிருக்கட்டும். நடந்ததைத் தெளிவாய்ச் சொல். உனது விடுகதைகளை விடுவிப்பதற்குச் சமயம் இது அல்ல" என்றான் நரேந்திரன்.

உடனே ஜெலேகா எழுந்து, "புறப்படு, சீக்கிரம். நீ இந்த க்ஷணமே கோட்டையை விட்டுச் செல்லுதல் வேண்டும். சூரியோதயத்துக்கு இன்னும் இரண்டு நாழிகை தானிருக்கிறது. கதவுகளெல்லாம் அதற்குள் மூடப்படும்; கோட்டை முழுவதும் வலை போட்டுத் தேடுவார்கள். அரண்மனையின் வேட்டைநாய்கள் மோப்பம் பிடித்துத் தேடத் தொடங்கும். இப்போது கோட்டைக் கதவுகள் திறந்திருக்கின்றன. காலதாமதம் வேண்டாம்" என்றாள்.

"உன்னை இந்த நிலைமையில் விட்டுவிட்டு நான் இந்த அறையைவிட்டுச் செல்லமாட்டேன். இங்கேயே தங்கியிருந்து உனக்கு உதவிபுரிவேன்."

Koviloor Digital Library



" ஸ்வாமீ, இதென்ன சோதனை! புருஷ ஜன்மமென்பது இவ்வளவு மூடஜன்மமா? கழுத்துக்குமேல் தொங்கும் கத்திகூடக் கண்ணுக்குத் தெரியாதா? இவ்வளவு மந்த புத்தியா? என்ன ஆகாத்தியம் பண்ணுகிறீர்? நான் மடிவதைப் பார்த்துவிட்டுத்தான் நீர் அப்புறம் செல்வீர் போலும்! இவ்வளவு கல்நெஞ்சா உமக்கு? என்னிடம் எவ்வளவோ அன்பு பாராட்டுவதாகச் சொன்னீரே! கடைசியில் நம்பிக்கைத் துரோகியா நீர்? நான் எனது தாயாரை விட்டு வந்தபின், உம்மைப்போல் என்னிடம் இவ்வளவு பரிவு காண்பித்தவர் வேறு எவருமில்லை யென்று எண்ணியிருந்தேனே. மோசம் போனேனே" எனக் கதறினாள்.

"பெண்ணே, நான் நம்பிக்கைத் துரோகியல்ல. உன்பொருட்டு என் பிராணனைக்கூட விடுவேன்."

" அப்படியானால் இந்த க்ஷணமே வெளியே செல்லும்; அது எனக்குப் பேருதவியாகும். நீர் இங்குத் தங்கியிருந்தால் நான் இறப்பது திண்ணம், திண்ணம்! நீர் சென்றுவிட்டால் அநேகமாய் நான் தப்பித்துக்கொண்டு விடுவேன். இதற்கு முன் எத்தனையோ முறை தார்த்தாரிப் பெண்களும் அரண்மனைப் பேடிகளும் சண்டையிட்டிருக்கின்றனர்; அந்தப்புரச் சச்சரவுகள் அன்றுடனே ஒழியும். அதைப்பற்றி நீர் கவலைப்படவேண்டாம்."

"ஜெலேகா, எல்லாம் தெரிந்தவள் நீ. நீ கட்டளையிடும் விதமே நான் செய்கிறேன். ஆனால் ஒரு வேண்டுகோள். மறுபடியும் உன்னைச் சந்திப்பது எங்கே? எப்போது? என் ஆருயிர்த் தோழியும், எனக்கு உயிர்ப்பிச்சை தந்தவளுமாகிய ஸ்திரீயை, இன்னொரு முறை பார்த்து எனது நன்றியைக் காண்பிக்காவிட்டால் என் மனம் நிம்மதியடையாது" என்றான் நரேந்திரன்.

Koviloor Digital Library


"அப்படியானால் இன்றைக்கு முப்பதாம் நாள் நிசி, இக்கோட்டையின் வெளிவாயிலில் நாம் சந்திப்போம். யுத்த வீரரே!" எனத் தொடங்கிய ஜெலேகா சற்று நடுங்கிய குரலாய், "அப்போது நாம் அதிக நேரம் பேசவேண்டி யிருக்கும். ஏதாவது அபாயம், ஆபத்து நேரினும் நேரக் கூடும். ஆனால் நான் உம்மிடம் பூர்ண நம்பிக்கைகொண் டிருக்கிறேன். என் அன்னையை விட்டுவந்தது முதல், எவ ரிடத்தும் நான் காணாத ஓர் அன்பும் ஆதரவும் உமது முகத்தில் காணப்படுகின்றன. நீர்தான் நெடுநாளாய் நான் நாடிநின்ற புருஷர்" என்று முடித்தாள்.

ஜெலேகா நிஷ்கிரமித்துவிட்டாள்.

Koviloor Digital Library

## ஏழாம் அத்தியாயம்

## தர்பார் மண்டபம்

மனோஹரமாய் மந்தமாருதம் வீசிக்கொண்டிருக்கும் மாரிக்காலத்தில் கால வேளையில் மப்பு மந்தாரமின்றி ஒரே நீலநிறமாயிருக்கும் ஆகாயத்தை இன்றைக்கெல்லாம் சலிக்காமல் பார்த்துக்கொண்டிருக்கலாம். நகர்ப்புறங்களிலிருக்கும் கூடகோபுர மாடமாளிகைகளின் மீதும், நாட்டுப்புறங்களிலிருக்கும் நெல்பயிர், பசும்புல் தரை முதலியவைகளின் மீதும் சூரியனுடைய பொற்கிரணங்கள் வீழ்வதின் ஆச்சரியமே ஆச்சரியம். இரமணீயமான அன்றைத்தினங் காலை, நரேந்திரனும் கஜபதிஸிம்ஹரும் அழகிய ஆக்ரா நகரத்தின் அகன்ற வீதிகளின் வழியாய்க் குதிரையேறிச் சென்றனர். அந்த ராஜநகரம், அன்றைய தினம் அதிக கம்பீரமாய் விளங்கியது.

முதன் முதலில் டில்லி நகரத்தை நிர்மாணஞ் செய்தவர் ஷாஜஹான். அதைப்போல் முதன்முதலில் ஆக்ரா நகரத்தை நிர்மாணித்தவர் அக்பர் மஹா சக்கரவர்த்தி. மொகலாய அரசர்கள் கட்டுவித்த கட்டடங்கள்தாம் இன்றைக்கும் உலகத்திலுள்ள புராதன கட்டடங்களுள்ளெல்லாம் சிறந்து விளங்குவன. இத்தகைய அழியாப் புகழ் எய்திய கோரிகளையும், மசூதிகளையும், மாளிகைகளையும் கட்டுவிக்கத் தொடங்கியவர் அக்பரே. ஆக்ரா, அல்லஹாபாத் முதலிய பட்டணங்களின் கோட்டைகளையும், அவற்றின் சாதுரிய அமைப்பையும் நுட்பமாய்க்

Koviloor Digital Library


கவனிப்பவர்கள் அனைவருக்கும் அக்பருடைய அரிய சாமார்த்தியமும், ராஜுவத் திறமையும் உள்ளங்கை நெல்லிக் கனிபோல் தெளிவாய் விளங்கும். ஏற்றவிடங்களில் கோட்டை கொத்தளங்களை மதியூகமாய் அமைக்கும் ஆற்றல் வேறெவருக்கு உண்டு? அவருக்குப் பின்னர் அவருடைய பேரன் ஷாஜஹான் காலத்தில், கலைநுட்பமும் வர்ணபேதங் களும் சித்திர வேலைப்பாடுகளும் அமைந்த சிரேஷ்டமான கட்டடங்கள் எண்ணிறந்தன கட்டப்பட்டன; அவைகளுள் ஒன்றாகிய தாஜ்மஹாலைச் சிற்ப சாஸ்திர பண்டிதர்கள் உலகத்திலுள்ள நவ விநோதங்களுள் ஒன்றெனக் கருது கிறார்கள்; ஆனால் சுத்த 'இண்டோ - ஸாரஸெனிக்' சிற்ப முறையைத் தழுவிப் புத்தி விசாலத்துடன் கம்பீரமுறக் கட்டப்பட்ட கட்டடங்கள் அக்பர் காலத்தில்தான் ஆரம்பமாயின.

இக்காலத்தில் போலவே, பதினாறும் நூற்றாண்டின் இறுதிப் பாகத்திலும் ஆக்ராவில் ஜனங்கள் அபரிமிதமாய் வசித்துக்கொண்டிருந்தனர். ஆனால் கஜபதிஸிம்ஹர் தமது தோழனுடன் அந்நகரத்துக்கு வெளிப்புறத்திலிருந்து ஆக் ராவைப் பார்க்கும்போது அது ஒரு குக்கிராமம்போலவே தோன்றியது; ஒரு பெரிய பட்டணமாகவே தோற்றவில்லை. உஷ்ணப்பிரதேசங்களுக்குரிய புல் பூண்டு, செடி கொடிகள் வளமாய்ப் பயிராயிருக்கும் நந்தவனங்களுக்குள்ளிருந்த வீடுகளில் சிற்றரசர்கள் ஜமீன்தாரர்கள் மிராசுதாரர்கள் முதலிய பிரபுக்கள் வசித்திருந்தனர். அடர்ந்த காடு போல் பச்சை நிறமாயிருந்த விருக்ஷாதிகளுக்கிடையில் ஆங்காங்கு சிற்சில இடங்களில் பிரபல வர்த்தகர்கள் இல்லங்களாகிய, தனலக்ஷ்மி நர்த்தனம் புரிந்து நிற்கும் தூயவெண்ணிறமுடைய அரண்மனைகள் பல செறிந்து கிடந்தன.

Koviloor Digital Library



குதிரை வீரர்கள் தாங்கள் நின்றுகொண்டிருந்த மேட்டு இடத்தைவிட்டுப் பெயர்ந்து நகரத்துக்குள் பிரவேசித்தார்கள். முன்னர்த் தோன்றிய சௌந்தரியக் காட்சிகளெல்லாம் வரவர மறைந்துவிட்டன. அக்காட்சிகளுக்குப் பதிலாய் ஜனங்கள் கஜகஜவென்று நிறைந்திருந்த, குறுகிக் கோணலாய்த் தாறுமாருக வளைந்து செல்லும் தெருக்களும் சந்துகளுமே கண்ணுக்குத் தென்பட்டன. வீடுகள் அநேகமாய்க் கூரை வீடுகள்தான்; தட்டோடு வீடுகள் மிகவும் சொற்பமே. சில்லரை வர்த்தகம் செய்து ஜீவித்துவரும் ஸாமாந்ய மனிதர்களுடன் ஏராளமான போர்வீரர்களும் தங்களுடைய பெண்டு பிள்ளை பரிவார சகிதமாய்க் கூரை வீடுகளில் குடியிருந்தனர். ஆங்காங்கு தெருக்களில் ஒரு கோணியைப் பரப்பி மொத்தம் சுமார் காலணு விலைக்கு மேல் படாத நிறுசுகளை வைத்து வியாபாரம் செய்துகொண்டிருந்தார்கள் சில எளிய ஸ்திரீகள். பழக்கடைக்காரர்கள் காபூல், ஆப்கானிஸ்தானம் முதலிய மலைப் பிராந்தங்களில் உற்பத்தியாகும் பலவித பழவர்க்கங்களை வெகு ஒழுங்காய் அடுக்கி வைத்திருந்தனர். தெருவில் போகிறவர்களுக்குத் தெரியும்படி வைத்திருந்த மிட்டாய்களின் மீது ஈக்கள் மொய்த்திருப்பதைக் கவனியாமல், பணத்தையே பெரிதாக நினைத்து, வியாபாரம் செய்துகொண்டிருக்கும் கடைகளில் சிறுவர்கள் கூட்டங்கூட்டமாய்க் கூடியிருந்தார்கள். தெருவோரங்களில் அநேக ஸ்திரீகள் ஆட்டிறைச்சியைப் பொரியல் செய்து விற்றுக்கொண்டிருந்தனர்.

சூரியன் உதித்து இரண்டு நாழிகையாகவில்லை. காய்கறி மார்க்கெட்டிலும், அந்நிய பதார்த்தங்கள் விற்குமிடங்களிலும் ஜனங்கள் நிறைந்திருந்தார்கள். இந்தக் கடைகளுக்குப் போய்வரும் வழிகளில் வண்டி வந்துவிட்டால் ஜனங்கள் அக்கம்பக்கத்து வீடுகளில்தான் ஏறிக்கொள்ள

Koviloor Digital Library



வேண்டும்; அவ்வளவு விசாலமான தெருக்கள்! நரேந்திரன் வங்காளத்தில் பார்த்திருக்கும் கடைத்தெருவுகளுக்கும் இவ்வூர்க் கடைத்தெருவுகளுக்கும் எவ்வளவோ வித்தியாச மிருந்தது. நீர்வளம், நிலவளம் சம்பூர்ணமாயிருந்த வங்காள நாட்டில் செழிப்பாய் உற்பத்தியாகும் காய்கறிகளில் கால் பங்குகூட ஆக்ரா கடைத்தெருவில் இல்லை. கீழ்ப்பிரதேசங் களிலுள்ள காலுறுகளிலும், ஓடைகளிலும், நதிகளிலும் அகப்படும் மீன்களில் அரைவாசி இராது யமுனாநதியில் அகப்படுவன. வங்கநாட்டில் கோழி, வாத்து முதலியவை ஏதேஷ்டமாய் அகப்படும்; ஆக்ரா நகரத்துக் கடைத் தெருவிலோ காடை, கவுதாரி, கோழி முதலியவைகள் அதிகமாய்க் காணவில்லை.

ஜனநெருக்கமான இத்தெருக்களைக் கடந்து இரண்டு குதிரை வீரர்களும், நகரத்தின் நடுமத்தியில் செல்லும்விசால மான ராஜ வீதிகளிலொன்றை யடைந்தனர். அத்தெருவில் மிகப் பெரிய கற்கட்டடங்கள், செங்கற் கட்டடங்கள் பல காணப்பட்டன: பிரதி வீட்டிலும் இன்றும் ஆக்ராவில் காணப்படும் மாடித்தாழ்வாரங்களும், வாசற்படியும், தெருத் திண்ணையும் அதிக கம்பீரமாய் விளங்கிக்கொண்டிருந்தன. அவ்வீதியில் 'வசிப்பவர்களெல்லாம் தனிகர்கள். வெளியூர் வர்த்தகர்கள் அவ்விடத்தில் பட்டு வஸ்திரங்கள், கம்பளித் துணி முதலிய விலையுயர்ந்த ஆடைகள் விற்றுக்கொண்டிருந் தனர். கைதேர்ந்த தட்டார்கள், பார்ப்பவர்கள் பிரமித்து நிற்கும்படியான அழகிய சித்திர வேலைப்பாடு அமைந்த அநேக நகைகள் செய்துகொண்டிருந்தார்கள். காசி நகரத் துப் பித்தளைப்பாத்திரங்களும், டில்லி நகரத்து விலையுயர்ந்த நகைகளும், ஜரிகை வேலைகளும் ராஜஸ்தானத்துப் பளிங்குச் சாமான்களும், குஜராத் கத்தி கேடயங்களும், வங்கநாட்டு நேர்த்தியான மஸ்லின் ஆடைகளும் மற்றும் தனிகருக்குத்

Koviloor Digital Library



தேவையான வஸ்துக்கள் பலவும் அத்தெருவின் இருமருங்கி லும் அதிகமாய் விற்கப்பட்டன. இவ்வித விலையுயர்ந்த சாமான்களை வாங்க யோக்கியதையிராதவர்கள் பலர் அவற் றைக் கண்டாவது களிக்கலாமென்று அத்தெருவுக்கு வந்து கொண்டிருந்தனர். வட இந்தியாவிலும், அண்டை அயல் நாடுகளிலும் செய்யப்படும் சகலவிதப் பொருள்களும் ஆக்ரா கடைத்தெருவுக்கு வந்துவிடும். நாளுவிதக் கைத்தொழில் களையும், தொழில்காரர்களையும் அன்புடன் ஆதரித்துவந்த அக்பர் மகிபனை பிரஜைகள் யாவரும் வாயார வாழ்த் தினார்கள்.

இன்னும் இதர வீதிகளிலுள்ள நாறுகால் மண்டபங் களிலும் கடைகளிலும், மண்டி, மளிகைகளிலும், பாரசீகம், தார்த்தரி முதலிய அந்நிய நாட்டு வியாபாரிகள் வர்த்தகஞ் செய்துகொண்டிருந்தார்கள். ஐரோப்பிய வியாபாரிகளும் ஆக்ராவில் குடியிருந்தனர். ராஜநகராகிய ஆக்ராவில் வசிக்கக் கிறிஸ்தவர்களுக்கு அநுமதி கொடுத்ததுமல்லாமல், அவர்களை வரவழைத்து வியாபாரஞ் செய்யச் சொன்ன அக்பர் வள்ளலவர்களுடைய ஆதரவின்கீழ் போர்த்துக் கேசிய 'ஜெஸுயிட்' கிறிஸ்தவர்கள் ஓர் ஆலயங் கட்டி, அதில் இருபது முப்பது கிறிஸ்தவப் பிள்ளைகளுக்கு இரகசியமாய்ப் பாடஞ்சொல்லிக் கொடுத்துவந்தார்கள். இவர்களைப் பார்த்து டச்சுக்காரர்களும் ஆக்ராவுக்கு வந்து ஒரு வியாபார ஸ்தலம் ஏற்படுத்திக்கொண்டு சொல்ப வர்த்தகஞ் செய்துவந்தனர்.

திரவியம் புரளும் கடைகளையும் கடைத்தெருக்களையும் கடந்து, பிரயாணிகள், வழிப்போக்கர், அந்நிய நாட்டு வர்த்தக வியாபாரிகள் இவர்களுடைய சௌகரியத்தை உத்தேசித்துக் கட்டப்பட்டிருக்கும் சத்திரங்களையும், மூஸாபர்கானுக்களையும் தாண்டி, கஜபதியும் நரேந்திரனும்

Koviloor Digital Library



கடைசியாகக் கோட்டை வாயிலுக்கு எதிரேயிருந்த விசாலமான மைதானம் வந்துசேர்ந்தார்கள். செந்நிறமான மணற்கற்களால் எழுப்பப்பட்டிருக்கும் உன்னதமான மதிற் சுவர்களின் வலிவையும், வனப்பையும், அநேக அரண்மனை களையும் நந்தவனங்களையும் கோட்டைகளையும் வளைத்துத் தன்னுள் அடக்கிக்கொண்டு ஓங்கி உயர்ந்து செல்லாநின்ற மதிற்சுவர்களின் அழகையும், அரிய காட்சிகளையும் இப் போது மறுபடியும் ஒருமுறை கண்டு, நரேந்திரன் அக்பரது அரிய சாமர்த்தியத்தையும் அபூர்வ வல்லமையையும் சிலா கித்து நின்றான். யமுனையாற்றுப்பக்கம் தவிர, மற்ற எல்லாப் பக்கங்களிலும் ஆழமான அகழிகள் கற்கட்டடத்தால் அமைக்கப்பட்டிருந்தன. ஜலம் பூர்ணமாய் நிறைந்து ததும்பிக்கொண்டிருந்த அவ்வகழிகளும் கோட்டையின் மதிற்சுவர்களுமே ராஜமாளிகைகளை நகரத்து எல்லைகளி லின்றும் பிரித்து நின்றன.

சக்கரவர்த்தியவர்களுடைய ராஜபுத்திர படைவீரர்கள் உருவின கத்தி உருவினபடியே மைதானத்தில் நின்று கோட்டைவாயிலைப் பாதுகாத்தனர். பிரதிதினமும் காலையில் ராணுவக் குதிரைகள் இம்மைதானத்தில் பழக்கப்படும். அவற்றைப் பரிக்ஷிக்கும்பொருட்டு, ராஜ அசுவதிபதி தினந் தோறும் இவ்விடம் வருவார்.

நாலுதிக்குகளிலிருந்து ஜனங்கள் சமுத்திர அலைகள் போல் கும்பல்கும்பலாய் வந்துகொண்டிருந்தனர். நகரத்தின் நடுமத்தியாகிய இந்தக் கோட்டை மைதானத்தில் கண்கட்டி வித்தைக்காரன், யூனானி வைத்தியன், ஜோதிஷ நிபுணர்கள், கரடி பழக்குவோன், குரங்காட்டி முதலியவர்கள் தங்கள் தங்கள் வேடிக்கைகளால் ஜனங்களைச் சந்தோஷிப்பித்துப் பணம் பறித்துக்கொண்டு செல்வார்கள்.

Koviloor Digital Library


ஆயிரக்கணக்கான ஜனங்கள் வந்துகூடும் இந்த இடத்தில் பலசரக்குக் கடைகளும், பொம்மைச் சாமான் கடைகளும், முக்கியமாய், மிட்டாய்க் கடைகளுமே அதிகமாய் விருத்தியாய்விட்டன. ஸ்திரீகளும், சிறுவர்களும் இந்தக் கடைக்காரர்களைக் கைவிடாமல் ஆதரித்து வந்தார்கள். பிரபுக்கள் பல்லக்குகளிலும் குதிரைகளின் மீதும் ஏறிக்கொண்டு தங்களுடைய பரிவாரங்களுடன் ஜனங்கள் ஏகமாய்க் கூடியிருந்த இந்த மைதானத்தின் வழியாய் அதிக டம்பமாய்ச் செல்வார்கள். சக்கரவர்த்தி யவர்களுடைய மலர் முகத்தை ஒருமுறை இருமுறை தரிசித்துத் திருப்தி யடையாதபடி அவ்வளவு ராஜபக்தி அவரிடம் வைத்திருந்த அவருடைய பிரஜைகள் பிரதிதினமும் இவ்வழியாய் அரண்மனைக்குச் செல்வார்கள்.

நமது போர் வீரர்கள் இருவரும் இக்கோட்டை மைதானத்தைக் கடந்து பலமாய்க் காவல் புரியப்படும் கோட்டை வாயிலுக்குள் நுழைந்தனர். கோட்டையின் உட்புறத்தில், ராஜ்யத்திலுள்ள சிறந்த முஹம்மதிய மன்ஸாப்தாரர்களே காவல் காத்துக்கொண்டிருந்தார்கள். தெருக்களெல்லாம் அதிவிசாலம். இரண்டு பக்கங்களிலும் உந்நதமான மாடமாளிகைகள். அங்குமிங்கும் சில சிறு கட்டடங்கள். அவ்விடத்தில் அரண்மனைத் தொழிலாளிகள் வசித்திருந்தனர். பொன், வெள்ளி, ஜரிகை வேலை செய்பவர்களும், தட்டார்களும், சிற்பிகளும், அரக்குவேலை செய்பவர்களும், பட்டு ஆடை நெய்பவர்களும் ஜிகினு வேலைக்காரர்களும், ஜனனு ஸ்திரீகள் பேகங்கள் பெரிதும் போற்றும் நேர்த்தியான மஸ்லின் ஆடைநெய்பவர்களும், மரவேலைசெய்பவர்களும்,தையல்காரர்களும்,துணிமணிகளுக்குப் பூப்போடுவதில் கைதேர்ந்தவர்களும் இன்னும்இதரத்தொழிலாளிகளும் காலை முதல் மாலைவரையில் உல்லாசமாய்த் தத்தம் தொழில்

Koviloor Digital Library


கஸீச் செய்துகொண்டிருந்தார்கள். அரண்மனைக்கு வேண்டியசாக்குகளெல்லாம் இவர்கள்தான்செய்துகொடுக்கவேண்டும். இத்தொழிலாளிகள் ஒவ்வொருவரும் தத்தம்வேலையில் ஒப்புயர்வற்றவர்கள். சக்கரவர்த்தியவர்கள் இவர்களைத் தம் கண்ணாகப் பரிபாலித்து வந்தனர். இத்தொழில்கள் பரம்பரைத் தொழில்கள்; தொழிலாளிகள் தம் பிள்ளைகளைத் தமது சொந்தத் தொழிலிலேயே பயிற்றிவந்தனர்; தமது பெண்களைத் தமது ஜாதிக்குள்ளேயே மணம் புரிவித்தனர். இந்த முறையை ஹிந்து முஸ்லிம் தொழிலாளர்கள் இருதாத்தாரும் அநுசரித்துவந்தனர். அரண்மனையில் வேலைசெய்து ஒழிந்த வேளைகளில், இவர்கள் ஆக்ரா நகரத்துப் பிரபுக்களுக்கும், ஸம்ஸ்தானத்திலுள்ள ஜமீன்தாரர்களுக்கும் வேண்டிய விலையதிகமான உயர்தரச் சாமான்களைச் செய்துகொடுப்பார்கள்.

வழியில் இருபக்கங்களிலுமுள்ள அழகிய கட்டடங்களைப் பார்த்துக்கொண்டே நரேந்திரன் ஆம்பர் அரண்மனை வந்துசேர்ந்தான். உடனே கஜபதி அவனைப் பார்த்து, "அப்பா, நீ படுகிடையா யிருந்தபோது உனக்கு வைத்தியம் செய்து உன்னை ஆதரித்துவந்த புண்ணியாத்மாக்களின் வீடு அல்லவோ இது! அரண்மனை வைத்தியர்களுடைய சிகிச்சையில்லாவிட்டால் நீ இந்நேரம் யமன் பட்டணம் சென்றிருப்பாயன்றோ? விரநகரத்து அதிபதி பாடு அன்றுடன் முடிந்துவிட்டிராதோ? இன்றையதினம் இங்கே நீ கஜபதியுடன் நின்றிருப்பாயோ?" என்றார்.

சூரியனுடைய ஒளியால் ஜ்வலித்துக்கொண்டிருக்கும் அந்த மாளிகையின் ஜன்னலை உற்று நோக்கும்போது, நரேந்திரனுக்கு வைத்தியர்களுடைய ஞாபகமா உண்டாயிற்று! அவன் அவர்களைப் பற்றிச் சிறிதேனும் நினைத்துக் கொண்டிருக்கவில்லை. அவன் எண்ணிய எண்ணமும் வேறு;

Koviloor Digital Library


அவ்விடம் அவன் நாடிய பொருளும் வேறு. கோட்டைக்குள் பூர்வகாலத்தில் தான் புரிந்த சாகசமும், கண்ட காட்சிகளும், தனக்கு நேர்ந்த ஆபத்துகளும் ஒன்றன்பின் ஒன்றாய் அவனுடைய மனத்தில் தோன்றின. அவன் சஞ்சல சித்தன் ஆனான்; உடல் முழுவதும் ஒருதரம் நடுங்கிற்று. முகம் வெளுத்தது. சற்றுக்கெல்லாம் கண்ணினின்றும் ஒரு நீர்த் துளி விழுந்தது. இவற்றையெல்லாம் அவன் தன் நண்பன் பாராதபடி சாதுரியமாய் மறைத்துக்கொண்டான். கஜபதிக்குத் தெரியாமல் அவன் பலமுறை திரும்பித்திரும்பி அந்த ஜன்னலையே பார்த்துக்கொண்டு சென்றான். அவ்வாறு பார்த்ததற்குக் காரணம் யாதென்பதை நாம் இங்கு குறிக்க வேண்டியது அநாவசியம். எத்தனைதரம் தான் பார்த்த போதிலும், நரேந்திரன் நாடியதொன்றும்—வளையலிட்ட கையோ, வெண்பட்டுக் குட்டையோ—அவ்விடம் காணப் பட்டபாடில்லை. அம்மாளிகையில் மனித சஞ்சாரமே இல்லையோவென அவன் சந்தேகப்படலானான்.

நக்கார்கானாவினின்று பாண்டு சப்தம் கேட்டது. சக்கரவர்த்தியவர்கள் ஸிம்ஹாசநத்தில் உட்கார்ந்துவிட்டாரென்று உணர்ந்த நரேந்திரன், திரும்பித்திரும்பி ஜன்னலைப் பார்த்துக்கொண்டே போவதை யொழித்து விரைவாய்ச் சென்றான்.

தங்களுடைய அன்பார்ந்த தந்தையாராகிய ராஜாதி ராஜகம்பீரருடைய திருமுகத்தைக் கண்டு களிக்கப் பிரஜைகள் அனைவரும் ஆற்று வெள்ளத்தைப்போல் புரண்டு சென்றனர். கஜபதியும், நரேந்திரனும் குதிரைகளைத் துரிதப்படுத்திச் சீக்கிரமாகக் கொலுமண்டபம் போய்ச் சேர்ந்தார்கள்.

சக்கரவர்த்தியவர்கள் பிரதிதினமும் தம் குடிகளுக்குப் பேட்டி கொடுப்பவராயினும், ஆமத்தகரத்தை ஜயித்துத்

Koviloor Digital Library


திரும்பியபின் ஆக்ராவில் நடக்கும் இந்தத் தர்பார்தான் முதலாவதாகையால், நாட்டிலுள்ள பிரபுக்கள், பிரதானிகள், சேனாதிபதிகள், சிற்றரசர்கள் நெடுந்தூரத்திலிருக்கும் பிராந்தியத்துக் கவர்னர்கள் உள்ளிட்டு யாவரும் கொலுமண்டபத்தில் கூடியிருந்தனர். ஷாஜஹான் வீற்றிருக்கப்போகிற அவ்வளவு சிறந்த மயிலாசனத்தை யொத்த சிறந்த ஆசனத்தின் மீதில்லா விட்டாலும், தமது அபூர்வ சாமர்த்தியத்தாலும் வல்லமையாலும் ஒரு பெரிய ராஜ்யத்தை ஜயித்து அதனைத் தன் தருமபரிபாலத்தின் கீழ்க் கொண்டுவந்த ஒரு யுத்த வீரருக்கேற்ற ஸிம்ஹாஸனத்தில் அக்பர் வள்ளல் அமர்ந்திருந்தார். உயர்ந்து கம்பீரமாயிருந்த அவர் உருவமும், சிறிதே கறுத்திருந்த அவர் தேகமும், அவருடைய இருண்ட நட்பமான விழிகளும், விசாலமான அவரது நெற்றியும், பகைவரைப் பறக்கடிக்கும் அவருடைய பருத்த புஜங்களும் பார்ப்பவர் மனத்தைப் பரவசப்படுத்தின.

ஜன்மவிரோதிகளுக்கும் அவரைக் கண்டவுடன் அவரிடம் ஒருவித பக்தி உண்டாயிற்று. கோரமான யுத்தகளங்கள் பலவற்றில் அவருக்கு ஜயத்தை உண்டுபண்ணிய அவருடைய கைகளின் அழகே அழகு. 'அஜாநுபாகு' என்பது அவருக்கே தகும். பால்யம் முதல் போர்க்களங்களிலேயே காலங் கழித்து வந்ததனாலும், வயோதிகத்தினாலும், அவருடைய தேகம் கொஞ்சம் வலிவு குறைந்திருந்தது. அநேக சண்டைகளில் முன் நின்று போர் புரிந்தவராயினும், அவர் ஒருபோதும் ஜீவஹிம்ஸை என்பதே செய்தறியார்; இன்னொருவர் ஜீவஹிம்ஸை செய்வதையும் பார்த்து அவர் சகிக்கமாட்டார். தீர ஆலோசித்துத் திடநிச்சயத்துடன், காரியத்தை எடுத்து விரைவில் முடிப்பதில் இணையற்ற தீர புருஷராகிய அவரிடம் ஓர் அரசனுக்குரிய குணங்கள், வல்லமைகள் யாவும் ஒருங்கே அமைந்திருந்தன. அவர்

Koviloor Digital Library


மஹா தயாளு; மனப்பூர்த்தியாய் ஒருவருக்கும் தீங்கு இழைக்கமாட்டார். பொறுமையையே ஆபரணமாக அணிந்தவர். தஞ்சமென்றடுத்த பேரைத் தப்பாது இரக்ஷிப்பவர். ஜன்ம விரோதிகளையும் சாந்தப்படுத்தித் தன் வசப்படுத்தும் ஆற்றலுடையவர். அவர் வென்ற பகையரசர்கள் யாவரும் அவரைத் தம் ஆப்தமித்திரராகப் பாவித்து வந்தார்கள். அவர் அதிகமாய்ப் படித்தவரல்லராயினும், ஸம்ஸ்தானத்திலுள்ள தத்துவ சாஸ்திரிகளுடைய சித்தாந்தங்களையும், தர்க்க சாஸ்திரிகளுடைய சம்வாதங்களையும், பல்வேறு மதாபிமானிகளுடைய கொள்கைகளையும், கவிகளுடைய இனிய பாடல்களையும், கவனமாகக் கேட்டு எளிதில் யாவற்றையும் கிரஹித்துக்கொண்டு அந்நிபுணர்களுக்குக்கூடத் தெரியாத சில விஷயங்களை உபந்யஸிக்கும் ஸாமர்த்தியமுடையவர். தெய்வகடாக்ஷத்தால் உண்டாயிருக்கும் நிகரற்ற சுயபுத்தி சாதுரியத்துடன், எவ்வளவு வருத்தமான தொழிலையும் எளிதில் செய்து முடிக்கும் ஆற்றல் பொருந்தியவராகிய அவர் தமது அகண்ட ராஜ்யத்தை ஓர் ஒழுங்குபடுத்திச் சிராய் ராஜ்யபாரஞ் செய்துவந்தாரென்பது சரித்திரக்காரர்கள் அனைவரும் அங்கீகரிக்கும் உண்மையே. ராஜ்ய விவகாரங்களில் பிரதி இலாகாவிலும், அவருடைய மதியூகத்தையும் நிர்மாணத் திறமையையும் காணலாம்.

ஹுமாயூனிடமிருந்து பிதுரார்ஜித சொத்தாய்த் தமக்குக் கிடைத்த சொல்ப மாகாணங்களை ஆதாரமாகக்கொண்டு, தமது வல்லமையால் வடஇந்தியா முழுவதையும் சுயார்ஜிதமாய்ச் சம்பாதித்து, அப்படி ஜயிக்கப்பட்ட ஒவ்வொரு மாகாணத்திலும், அமைதியும் ஒழுங்கும் பொருந்தி ஜீவகளையுடன் விளங்கிய தமது தரும பரிபாலனத்தை ஸ்தாபித்தவர் அக்பர். அவருடைய சந்நிதானத்தில் விளங்கிய அமரிக்கையான யுத்தவீரர்கள், மேன்மையான ராஜதந்திரிகள், ஸமர்த்த

Koviloor Digital Library


ரான சம்பிரதிகள், நிபுணர்களான வித்வத் சிரோமணிகள் யாவரும் அரண்மனை இரத்னங்களாவார்கள். பதினாறும் நாற்றாண்டில் இப்பூவுலகில் வேறெங்கும் காணப்படாத சர்வமத சகோதரப் பான்மையுடன் தம் குடிகளைப் பூர்ணமாய் நம்பி அவர்களுடைய சுகத்திற்காகவே சுயநல மில்லாமல் அரசுபுரிந்த சக்ரவர்த்தி அக்பர் ஒருவர்தான்.

ஒரு குடைக்கீழிருந்து வட இந்தியா முழுவதையும் ஆட்சி புரியும் பெருமைவாய்ந்த மொகலாய திலகத்தின் அருகே நின்றுகொண்டிருந்த அவரது புத்திரராகிய ஸலீம் இளவரசரிடமே சபையோருடைய நோக்கமெல்லாஞ் சென்றிருந்தன. அவர் சில தினங்களுக்குமுன் தம் தகப்பனாருடைய ஆணையை மீறி நடந்த விஷயத்தை அரைகுறையாய் அவர்கள் யாவரும் அறிந்திருந்தனர் போலும்; ஆனால் உண்மை யொன்றும் வெளியாகவில்லை. அந்த விஷயத்தைப் பற்றி எவரும் வாய்திறக்கவில்லை. ஸிம்ஹாஸன மேடைக்குச் சற்றுக்கீழே, வெள்ளிக் கம்பிகளால் தடுக்கப்பட்டிருந்த ஓரிடத்தில் சிற்றரசர்கள், ஜமீன்தாரர்கள், ஜாகிர்தாரர்கள் முதலிய பிரபுக்களும், பிரதானிகளும், அயல் நாட்டுத் தூதர்கள் பலரும் கூடியிருந்தனர். இந்தியாவில் பல திக்குகளில் தங்களுடைய வல்லமையால் பல ஜில்லாக்களை ஜயித்து அவற்றை நீதியாயும் நியாயமாயும் அரசுபுரிந்து வந்த தளகர்த்தர்களும் அங்கே விஜயஞ் செய்திருந்தார்கள். கொலுமண்டபத்தின் முன், ஸாமான்யப் பிரஜைகள் தங்களுடைய அன்பார்ந்த அரசருடைய வதனத்தை ஆவலாய்ப் பார்த்துக்கொண்டு நின்றார்கள்.

வழக்கப்படி அழகாய் அலங்கரிக்கப்பட்ட அசுவங்கள் அக்கொலுமண்டபத்தின் முன்னர் கொண்டுவரப்பட்டன. சிங்காரமான அம்பாரிகளிடப்பெற்ற யானைகள், தங்களுடைய பாரி சரீரங்களுடன் மெதுவாய் அடிமேலடி வைத்துக்

Koviloor Digital Library


கம்பீரமாய் நடந்துவந்து ஸிம்ஹாஸனத்துக்கு எதிரில்நின்று, அரசருக்கு வந்தனஞ் செய்வனபோல் முழங்காலை மடித்துத் துதிக்கைகளை மேலே தூக்கின. குதிரைகளும் யானைகளும் சென்றபின், மற்றுமுள்ள சில மிருகங்கள் ஒன்றன்பின் ஒன்றாய் வந்தன. பழக்கப்பட்ட கலைமான்கள், நீண்ட கொம்புகளையுடைய வங்காளத்துக் காட்டு எருமைகள், சிறுத்தைப் புலிகள், வங்காளத்துப் பெரும்புலிகள், பல ஜாதி வேட்டை நாய்கள், வலிவிற் சிறந்த புள்ளினங்கள் முதலியன அநேக ஆச்சரியமான செய்கைகள் புரிந்தன. கடைசியாக, ஸம்ஸ்தானத்துப் பிரபுக்கள் சிலர், இருப்புக் கவசம், சித்திர ஆடைகள் முதலியவைகளால் அலங்கரிக்கப்பட்ட குதிரைகளின்மீது ஊர்ந்து சென்றார்கள்.

மறுபடியும் நக்கார்கானாவிலிருந்து பறையொலி கேட்டது. அன்றையதினம் கொலு மண்டபத்தில் நடைபெற வேண்டிய காரியங்கள் துவக்கமாய் விட்டன என்று யாவரும் உணர்ந்தார்கள். மண்டபத்தில் கூடியிருந்தவர்கள் யாவரும் சந்தோஷத்தால் ஆரவாரஞ் செய்து பயபக்தியுடன் நிச்சப்தமாய் அமர்ந்தவுடன், ராஜாதிராஜ கம்பீரர் தமது இனிய குரலுடன், "ஸலீம் இளவரசே, இந்த அகண்ட ராஜ்யத்து வருங்கால அதிபதியே, எனது செல்வக்குழந்தையே, தவப்புதல்வனே" என்றழைத்துப் பேசத் தொடங்கியவுடன், ஸலீம் ராஜகுமாரர் வணக்கமாய்த் தலைகுனிந்து அவரது ஆக்ஞையை ஏற்றுக்கொள்ளத் தயாராய் எழுந்து நின்றார்.

"நான் உன்னைப் பால்யம் முதல் அன்பாய் வளர்த்து வந்தேன்; அரசர்களுக்குரிய கலைகள் யாவற்றிலும் உன்னைப் பயிற்றுவித்தேன். சீக்கிரத்தில் இன்னும் சில வருஷங்களுக்கெல்லாம் உன்மீது விழப்போகும் ராஜ்ய பாரத்தைச் சுமக்க நீ வல்லவன் என்று எண்ணி நான்

Koviloor Digital Library


இதுகாறும் அகமகிழ்ந்திருந்தேன். எப்போதும் வாலிபர்கள் கொஞ்சம் துடுக்கானவர்களே; யௌவனத்திற்குரிய அவாக்கள் அநேகம் சில வேளைகளில் தீமையாய் முடிகின்றன; ஆனால், நடந்ததைக் குறித்து மனம் வருந்தி, அதன் பலனாகச் சீர்திருத்தமடைவதால் குற்றத்தினாலுண்டான பழி மறைந்துவிடுகிறது. மகனிடம் அதிக அன்பு வைத்திருக்கும் தகப்பனார் தம்முடைய அன்பின் மிகுதியால் தம் மகன் செய்த பாதகங்களை அறவே மறந்துவிடுகிறார்; போனதெல்லாம் போகட்டும்; இனியாவது, உன் அந்தஸ்துக்கேற்ப உன் கடமைகளைத் தோஷமின்றிச் செய்து முடிப்பாயாக. உனது வீரதீரத்துக்கும் அஞ்சாநெஞ்சத்துக்கும் தக்கவாறு நீதியாயும் நியாயமாயும் இருந்து வருவாயாக. ஸர்வத்துக்கும் கர்த்தாவாய் விளங்குகின்ற ஒன்றான அந்த ஈசுவரனே நினக்குச் சன்மார்க்கத்தை உபதேசஞ் செய்து நின்னை நல்வழியில் பயிற்றிவருவாராக."

"நீ இதுகாறும் செய்தனவெல்லாம் போகட்டும்; இனி அதைப்பற்றி யொன்றும் பேச வேண்டாம். இந்தா, இந்த ராஜ உடைகளையும், ராஜ வம்சத்துக் கத்தியையும் ஏற்றுக்கொள்; ஒரு தரம் நேசிக்கத் தொடங்கிவிட்டால் திரும்ப என்றைக்கும் அதினின்றும் மாறாத தன்மையராகிய உனது தந்தையின் பக்கம் வந்து உட்கார்" எனச் சொல்லி முடித்தார்.

தகப்பனார் வாயினின்று பிறந்த மொழிகளைக் கேட்டு, அவர் கொடுத்த ஆடைகளையும் கத்தியையும் பெற்றுக்கொண்டு அவருக்குப் பணிந்து, அவருடைய வலது பக்கத்திலிருந்த ஓர் ஆசனத்தில் அமர்ந்தார் ஸலீம்.

செய்த குற்றத்தை ஒப்புக்கொண்டு அதற்காகப் பச்சாதாபப்படும் தன் குமாரனிடம், அவனது தந்தையும், அரசர்களுக்கெல்லாம் அரசருமாகிய அக்பர் வள்ளல் காட்டிய

Koviloor Digital Library


பொறுமையையும் மன்னிப்பையுங் கண்டு வியப்புற்று, அங்குள்ள தனிகர்கள், தரித்திரர்கள், வலியோர்கள், எளியோர்கள், வாலிபர்கள், வயோதிகர்கள், கீழோர், மேலோர் ஒருவர் தவறாமல் யாவரும் ஒருங்கே மங்கள கோஷஞ் செய்தனர்.

ராஜவம்சத்திற் பிறந்த மற்ற ராஜகுமாரர்களுக்கும் அவரவர்கள் அந்தஸ்துக் கேற்றவாறு பரிசுகள் அளிக்கப்பட்டன. கடைசியில் ராஜா மானஸிம்ஹர் அவர்களுக்கு மரியாதை செய்யும் சமயம் வந்தது. அங்குள்ளோர் யாவரும் ஆனந்தக் கடலில் மூழ்கினவர்களாய், கம்பீரமாய்ச் சக்கரவர்த்தியவர்களுக்கு எதிரில் நின்றுகொண்டிருந்த, வீரதீரமும் அஞ்சா நெஞ்சமும், போர்முகத்தில் சலியாத ஊக்கமும் படைத்த வீரஸிம்ஹத்தையே கண்கொட்டாது பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

மொகலாய அரசர், அந்தத் தீரபுருஷனை நோக்கிப் பின்வருமாறு சொல்லலுற்றார் :—

“அழகிய ஆம்பர் நாட்டு அதிபதியே, உமது நிகரற்ற அந்தஸ்திற்கும், நீர் பால்யம் முதல் இதுவரைச் சுயநலம் சிறிதும் பாராட்டாமல், இப்பரதகண்டத்து வாஸிகள் உய்யும்பொருட்டு நமக்கும், நமது ஹிந்து, முஸல்மான் பிரஜைகளுக்கும் செய்திருக்கும் பேருபகாரத்துக்கு ஏற்பவும், ஒப்புயர்வற்ற உமது சௌரியத்துக்கேற்பவும், உமது சமயோசித மதியூகத்துக்கேற்பவும் மரியாதை செய்வது எம்மால் ஸாத்தியமன்று. நமது ஸம்ஸ்தான சேனாதிபதிகளுள் நமது மாளிகைக்கு அத்தி பூத்தாற்போல் நீர் விஜயஞ் செய்பவர். ஆனால், சதாசர்வகாலமும் நமது ராஜ்யத்துத் தொலைப்பிரதேசங்களில் ஓயாமல் உழைத்து, வெற்றிமேல் வெற்றி யடைந்து உம்மைப்போல் உலகெங்கும் பிரசித்தி பெற்ற வீரர் நமது ராணுவத்தில் யாருளர் ? உம்முடைய

Koviloor Digital Library


பெயர் நமது நாட்டில் மாத்திரமன்று; அயல் நாடுகளிலும் பரவியிருக்கின்றது. உமது நாமதேயத்தைக் கேட்டு நடுங்காத பகைவர் உண்டோ? மேற்கில் காபூலிஸ்தானத்திலும், ஜாபூலிஸ்தானத்திலும் எமது அரசாட்சியை நிலைநிறுத்தியவரும், கீழ்த்திசையில், அஞ்சாநெஞ்சம் படைத்த ஆப்கானிய வீரர்களிடமிருந்து வங்காளத்தையும் ஒரிஸ்ஸாவையும் கைப்பற்றியவரும் நீரே. நீர் செல்லும் யுத்தங்களுக்கெல்லாம் உமது சிநேகிதை விஜயலக்ஷ்மி உம்முடன் விஜயஞ் செய்கிறாள் போலும்."

"வேந்தர்க்கெல்லாம் வேந்தே, தங்களைப்போல் அவ்வளவு சாதுரியமாய்ப் பேச அடியேனுக்கு ஸாமர்த்தியமில்லை. நான் தங்களுக்கு என்றைக்கும் ஊழியனாக உழைக்கக் கடமைப்பட்டவன். விஜய வீரப் பிரபூ, அடியேன் இப்போது வைத்திருப்பது தங்களுடைய கத்திதான். நீர்வளம், நிலவளம் முதலியன யாவும் சம்பூர்ணமாயுள்ள வங்கநாட்டை ஜயித்துத் தங்களுடைய ராஜ்யத்துடன் சேர்த்தவன் அடியேனல்லேன்; என்னைக்காட்டிலும் எல்லா அம்சங்களிலும் சிறந்த நிகாற்ற சுத்த வீரராகிய ஒருவர், தங்களுக்கும், அடியேனைப்போல இங்கே தங்களுடைய திவ்விய தரிசனம் செய்துபோக வந்திருப்பவர்களுக்கும் அப் பேருதவியைச் செய்தவராவர். எனக்குமுன், வீரஸ்வர்க்கம் எய்திய எனது குருநாதர் சென்ற வழியிலேயே நானும் செல்கிறேன்" என்று பணிவாய் மொழிந்தார் மானஸிம்ஹர்.

இவருடைய மொழிகளைக் கேட்ட சக்கரவர்த்தியவர்கள் விசனத்தால் தழுதழுத்த குரலுடன், "காலஞ்சென்ற ராஜபக்தர்களையும், ஆப்தமித்திரர்களையும் நாம் ஒருபோதும் மறவோம். மிகவும் கஷ்டப்பட்டு இந்த ராஜ்யத்தை பொன்றுசேர்த்துச் சமாதானப்படுத்தி விருத்தி செய்தவராகிய ராஜா தோடர்மல்லர் என்னும் சம்பிரதி எமது

Koviloor Digital Library


அரண்மனைக்கு ஓர் அணிகலமாய் விளங்கியவர். அவர் தம் வயோதிக காலத்தில் கங்கையாற்றங்கரைக்குப் போய் வைதிகசிஷ்டராய்க் காலங்கழிக்க விரும்பி அங்கே சென்ருர். ஆனால் அந்தச் சிறந்த ராஜதந்திரி - அந்த நிகரற்ற சம்பிரதி - அகன்றதும் தூண் இல்லா மண்டபமாயிற்று நமது ராஜ்யம்; உடனே அவர் எமது வேண்டுகோளுக்கு இணங்கித் திரும்பிவந்தார். தமது தாய் நாட்டிற்காகவும், தமது சகோதரர்களுக்காகவும் உழைத்துத் தேகவியோக மானார். ஓர் எஜமானர் தம் ஊழியனுக்கு அளிக்கக்கூடிய எவ்விதமான வெகுமதியையும் உபசார வார்த்தைகளையும் பெறக்கூடாத நிலையில் அவர் இப்போது இருக்கிருர். இம் மண்ணுலகை விட்டகன்ற நண்பருக்கு ஒரு சக்கரவர்த்தி செய்யக்கூடிய சிறந்த உபகாரம் யாது? கண்ணீர்தான்" என்று கூறும்போதே, அவருடைய இருவிழிகளினின்றும் இரண்டு சொட்டு கண்ணீர் சிந்தின. சபையோரெல்லாம் மௌனமாய் இருந்தார்கள்.

"மான்ஸிம்ஹரே, நம்மாலாகிய வெகுமதியை உமக்கு அளிக்க நாம் சித்தமாயிருக்கிறோம். பத்ராக்கில் உமது குமாரரின் மேற்பார்வையின்கீழ் நடந்த யுத்தத்தில் நாம் தோல்வியடைந்தவுடன், வீர ரத்னமே, என்றைக்கும் பிரபலமாய் விளங்கக்கூடிய ஷேர்பூர் சண்டையில் நீர் ஒரிஸ்ஸாவைக் கைப்பற்றினீர். இதுவரைக்கும் ராஜ வம்சத்தவர்கள் தவிர வேறெவரும் பெருததொரு பதவியை உமக்கு அளிக்க நாம் உத்தேசித்திருக்கிறோம். ஏழாயிரம் படைவீரர்களுக்குத் தலைவராய் உம்மை நியமித்திருக்கிறோம். சக்கரவர்த்தியவர்கள் வம்சத்தினருக்கன்றி வேறெவருக்கும் இத்தகைய மரியாதை இதுவரை நாம் அளித்ததில்லை. இதோ, அப்பதவியின் சின்னங்களாகிய இந்த உடைகளையும், இவற்றுடன், என்றைக்கும் மாருத எமது நட்பினையும்

Koviloor Digital Library


ஏற்றுக்கொள்ளும்" என்றார் அக்பர். தாம் கனவிலும் கண்டறியாத இத்தகைய அரும்பெரும் மரியாதையைத் தம் எஜமானரிடமிருந்து பெற்றுக்கொண்ட மானஸிம்ஹர் ஆனந்த பரவசமானார். தமது நன்றியறிதலை ஒரு வேளை அவர் வெளியிட்டிருந்தாலும் இருக்கலாம்; அது நமக்குத் தெரியாது; சபையோர்கள் அப்போது பெருத்த ஆரவாரம் செய்துகொண்டிருந்தார்கள்.

குதூஹலம் சிறிதே மட்டுப்பட்டவுடன், சக்கரவர்த்தியவர்கள் புன்சிரிப்புடன் இனிய குரலில், "என் அருமை மருமகனே, கங்காநதி சமுத்திர சங்கமமாகும் இடத்திலிருந்து காபூல் வரைக்கும் உள்ள பிராந்தங்களையெல்லாம் ஒன்றுவிடாமல் ஜயித்து, அம்மாகாணங்களி லெல்லாம் உத்தம அரசாட்சியை நிலைநிறுத்திய ஒரு ஹிந்து ராஜா வைப்பற்றி, நமது நாட்டு இதிகாஸம் இருக்குமட்டும் அது புகழ்ந்துகொண்டிருக்கும்" என்றார்.

தமது அத்தையாரின் கணவராகிய சக்கரவர்த்தியவர்களைப் பார்த்து, ராஜா மானஸிம்ஹர் சிநேக பாவமாய், "ஹிந்துக்களுக்கும் முஹம்மதியர்களுக்கும் பரஸ்பரமுள்ள சகோதரப் பான்மையை விருத்தி செய்து, ஹிந்துக்களை அன்பினாலும் ஆதரவினாலும் தமதுகுடும்பத்துடன் சேர்த்துக் கொள்ளும் அரிய ஸாமர்த்தியத்தையுடைய ஒரு மொகலாய சக்கரவர்த்தியையும் பாரத தேச இதிகாஸம் பிரபலமாய் எடுத்துரைக்கும்" என்று சொல்லிவிட்டுத் தம் ஆசனத்துக்கு வந்தவுடன், இன்னொரு தளகர்த்தர் அரசர்முன் வந்து நின்றார்.

கான்கானானாகிய (அதாவது, பிரபுக்களுக் கெல்லாம் பிரபு) அப்துர் ரஹீம் வந்து அரசர்க்கு வந்தனம் புரிந்த போது, அங்குக் கூடியிருந்தவர்கள் அனைவரும்,

"மாட்சிமைதங்கிய கான்கானான்!"

Koviloor Digital Library



"குஜராத்தை ஜயித்தவர்!"
"வீரர்களுக்கெல்லாம் வீரர்!"
"கலைமகள் கருணைபெற்ற கவிசிரேஷ்டர்!"
"கலிகாலக் கர்ணன்!"

என்று பலவாறு புகழ்ந்து பேசி மகிழ்வுற்றனர்.

"கனம் பொருந்திய கான்கானுன் வரவு நல்வரவாகுக" என்று பேசத் தொடங்கினர் அக்பர். "இத்தனை மாதகாலம் வெளியே போயிருந்த நீர் நமது ஸம்ஸ்தானத்துக்கு இப்போது வந்தது நமக்கு அளவிலா ஆநந்தத்தைத் தருகிறது. வங்க விஜயராகிய ராஜா மாநஸிம்ஹரைப்போல், நீரும் குஜராத் மாகாணத்தை ஜயித்தவராவீர். வீரர்களுக்கெல்லாம் வீரரே, உம்மை ஐயாயிர ராணுவ வீரர்களுக்குத் தலைவராக்கி யிருக்கிறோம். உம்மிடமிருக்கும் இன்னொரு யோக்கியதைக்காகவும் உமக்கு மரியாதை செய்யவேண்டியிருக்கிறது. உம்முடைய கத்தி துருப்பிடித்து நசித்துப் போன பின்பும், உமது காவியங்கள் உலகத்தாரை மகிழ்வித்து நிற்கும். சபையோரெல்லோரும் சற்றுநேரம் ஓயாமல் கைகொட்டிக் களித்தனர்.

மறுமடியும் அக்பர், அப்துர் ரஹீமைப் பார்த்து அன்புடன் "கான்கானுன், ஏதோ நீர் உமது அந்தஸ்துக்கு மிஞ்சி தான தருமஞ் செய்வதாகக் கேள்விப்பட்டேன். நிஜந்தானு? தங்களை வந்து கடைசியாய் யாசித்தவருக்குக் கொடுக்க ஒன்றும் இல்லாமல், மசிக்கூட்டைக் கொடுத்து விட்டீராமே. தங்களுடைய மசிக்கூடு தங்களை விட்டகன்றால், எமது ராஜ்யத்துக்கு அதிக நஷ்டம் உண்டாகுமே" என்றார்.

அரசரது சாதுரிய மொழிகளைச் செவியுற்ற கான்கானுன், இராணியாராகிய ஸலீம் பேகமவர்களுடைய கவித்திறமையைத் தாம் மெச்சி அநுபவித்ததை அரசர்க்கு மட்டும் அறிவிக்கும் பொருட்டு, "அரசே, இந்த மாளிகை

Koviloor Digital Library


யில் என் காவியங்களைக் கொண்டுவர அவசியமில்லையே. மாட்சிமைதங்கிய தங்களுடைய அரண்மனையில் எங்கே பார்த்தாலும் கவிமயமாய் இருக்கிறது" என்று சொன்னதை அக்பர் தவிர வேறெவரும் கவனிக்கவில்லை.

ரஹீம் போனவுடன், அவர் ஸ்தானத்தில் வந்தனஞ் செய்து நின்ற மீர்ஜா அலிஜைப் பார்த்து, சக்கரவர்த்தியவர்கள், "இதோ இன்னொருவர் வருகிறார். நல்ல வைதிக சிஷ்டர்; நிகரற்ற கவி; பகைவரனைவரும் கண்டு நடுநடுங்கும் போர் வீரர். உண்மையான முஸல்மானுக் கேற்ப மக்காவுக்கு யாத்திரை போய்வந்தவர். முஹம்மதியர், ஹிந்துக்கள் ஆகிய இரண்டு மதத்தினரும் அறிந்துகொள்ளக் கூடாத ஒரே முதற்பொருளை நம்புவதால், இருதிறத்தாரையும் ஒன்று சேர்க்க விருப்பங்கொண்டு நாம் ஸ்தாபித்த நூதன ஒளியை யுணர்ந்து கடவுள் பக்தி மதத்தினை (தீன்—இலாஹியை) ஏற்றுக்கொண்டவர். வெகுதூரத்திலிருக்கும் பீஹார் மாகாணத்தில், நீதியாய் நீர் ராஜ்யபரிபாலனஞ் செய்ததை நாம் இன்னும் மறந்திலோம். உமது சாதுரியமான பாடல்களைச் சிறுவர்கள் இன்னும் பாடிக் களிக்கிறார்கள். பாத்திரம் அறிந்தே பிச்சையிடவேண்டியது; இடமறிந்தே மரியாதை செய்யவேண்டும்" என்று கூறினார்.

மீர்ஜா அலிஜ் பணிவாய் வெகுமதியைப் பெற்றுக் கொண்டு அகன்றபின், ஒருவர் பின்னொருவராக இதர அரசர்கள், சிற்றரசர்கள், சேனாதிபதிகள் வந்துகொண்டேயிருந்தனர். அவர்கள் ஒவ்வொருவருக்கும் அவரவருக் கேற்ப அக்பர் பெருமான் நயமொழிகள் கூறி மரியாதை செய்தனுப்பினார்! அவர்களுள் ஒருவர், அக்பரவர்கள் தம் நாட்டுடன் சேர்த்துக்கொண்ட காஷ்மீர ராஜ்யத்து முஹம்மதிய அரசர்; தன் சொந்த மாகாணத்தைப் பறி கொடுத்து வருந்திய அச்சிற்றரசருக்குச் சக்கரவர்த்தி

Koviloor Digital Library


யவர்கள் ஒரு விஸ்தாரமான ஜாகீரைக் கொடுத்து அவரைத் தகுந்த அந்தஸ்தில் வைத்திருந்தனராதலால், அவ்வரசர் மிகுந்த ராஜபக்தியும் ராஜவிசுவாசமும் உடையவராய் அக்பரைத் தன் குலதெய்வமாக நினைத்து வந்தனம் புரிந்து சென்றனர். சக்கரவர்த்தியவர்களுடைய மருமகனாகிய மிர்ஜா ஷா ருக் என்பவரும் அக்பரைக் கண்டு போக வந்திருந்தனர். அவருக்குப் பின்னர், தம் சுய மாகாணத்தை விட எல்லாவிதத்திலும் சிறந்து விளங்கும் ஓர் இந்திய மாகாணத்தைப் பரிசாகப் பெற்றிருந்த காந்தஹார் நாட்டு மிர்ஜா சகோதரர்களும், ராஜாதிராஜ மஹீபதியை வணங்கிச் சென்றனர்.

இதுவரைக்கும் சாதாரணமாய்க் கைகொட்டிக் கோஷம் செய்துகொண்டிருந்த ஜனங்கள் திடீரென ஏககாலத்தில், காது செவிடடையும்படி ஆரவாரஞ் செய்தனர். அக்கூட்டத்தில் சற்று அப்புறம் இப்புறம் பார்த்துக் கொண்டிருந்த சிலர் இந்த ஆராவாரத்தைக் கேட்டு சக்கரவர்த்தியவர்கள் அமர்ந்திருந்த திசையை நோக்கினர். அவ்விடம், பாருள்ளளவும் க்ஷத்திரிய தருமத்தை மறக்காத இயல்பினராகிய க்ஷத்திரிய குலத்து உதித்த ஓர் யௌவன சுத்தவீரர் தமது தேசிய உடை தரித்து முகத்தில் வீரலக்ஷ்மியின் கலைகள் விளங்க அதி கம்பீரமாய் ஸிம்ஹாஸனத்தின் முன்பாகப் பணிவாய் வந்தனம்புரிந்து நின்றிருந்தார்.

"ஹா, வாரும், ராஜகுமாரரே, ராஜபுத்திர சேனு வீர திலகமே, உமது ஆற்றல் வரம்பு கடந்தது. பிருத்விராஜரே, உமது கவித்திறமை சிறிதுகாலத்துக்கு முன்னர்தான் நமது செவிக்கெட்டியது. உம்முடைய போர்த்திறமையா, கவித்திறமையா, எது சிறந்தது என்று எமக்குச் சந்தேகம் உண்டாய்விட்டது. ராஜஸ்தானதின் புஜபல பராக்கிரம

Koviloor Digital Library


சௌரியங்கள் யாவும் உமது நாவன்மையால் இந்நாடெங்கும் பரவியுள்ளதெனக் கேள்விப்படுகிறேன். அத்தகைய பாக்கியம் கிடைப்பது ஸாமாந்யமானவர்களுக்கன்று."

"மொகலாயர் நடுநாயகமே, எனக்கு முன்னிருந்த உத்தம கவிகளாலும் வரப்பிரசாதம் பெற்ற சாரணர்களாலும் ஆற்றலுடன் வர்ணிக்கப்பட்டிருக்கும் ராஜஸ்தானத்து ஸ்ரீ புருஷர்களுடைய மேன்மைகளையும், பராக்கிரமங்களையும் கதை ரூபமாகச் சிறுவர்களுக்குக் கூறும் சக்திகூட அடியேனுக்குக் கிடையாது. எமது சௌரியம் பொருந்திய மூதாதைகள் ஒருவர் ஒருவராய்க் காலமாய்விட்டனர்; ராஜஸ்தானத்தில் அத்தகைய புருஷர்கள் ஒருவரும் இப்போது கிடையாது; தப்பித்தவறி இருந்த இரண்டொருவரும் சிறிது காலத்துக்கு முன் விண்ணுலகஞ் சென்றனர்; சிற்சில சமயங்களில் அப்பூண்டு அடியோடு அற்றுப் போய்விட்டதோ என்று கூடச் சந்தேகிக்க வேண்டியதாயிருக்கிறது."

"தெரிந்தது, நீர் சொல்வது. இருபது வருஷ காலம் இடைவிடாமல் என்னுடன் போராடிக் கடைசிமட்டும் கீழ்ப்படியாமல் நிமிர்ந்த தலையுடனே வீரச்சொர்க்கம் எய்திய மேவார் நாட்டு இராணு பிரதாபஸிம்ஹரைப் பற்றி நீர் இப்போது கூறுகின்றீர் போலும்: காவியங்கள் மூலமாகப் பின்னும் பின்னும் வீராவேசம் புகட்டிப் பிரதாபஸிம்ஹரைச் சண்டைக்குத் தூண்டிப் பிராணன் உள்ளளவும் கத்தியை உறையிலிடாதபடி அவரைத் திடப்படுத்தியவர் நீரன்றோ? அவ்விஷயத்தில் உண்மையில் எமது பகைவர் நீர்தான்."

"இராணுவினுடைய வீரகுணங்களைப் புகழ்வது துரோகமாயின், ஸ்வாமீ, அடியேனைவிடச் சகல விஷயங்களிலும் சிறந்து விளங்கும் இன்னொருவரும் அக்குற்றத்

Koviloor Digital Library


துக்கு உள்ளாகிறார்" என்று சாதுரியமாய் விடைபகர்ந்தார், பிகானீர்நாட்டு அதிபதி.

பரம தயாளுவாகிய சக்கரவர்த்தியவர்கள், சாதுரியமான இந்தப் பிரதியுத்தரத்தைக் கேட்டுச் சந்தோஷமடைந்து புன்முறுவல் செய்தார். "ஆம், தமது பந்து மித்திரர்களுக்காகவும், தமது குலத்துக்காகவும், தமது ஜாதிக்காகவும், தமது நாட்டிற்காகவும், இவற்றிலெல்லாம் சிறந்ததாகிய தமது மானத்துக்காகவும் தருமயுத்தம் புரிந்து பிராணனைப் பலிகொடுத்த சுத்தவீரர் ஜன்மசத்ருவாயினும் அவரை அக்பர் புகழாமல் இருப்பரோ? அவ்வாறு புகழாதிருப்பது சுத்தவீரனென்பானுக்கு ஸாத்தியமா? எனது ராஜ்யத்திலுள்ள தளகர்த்தர்கள் பலர் என்மீது கோபங்கொண்டனர்; ராஜா மானஸிம்ஹர்கூட இராணாவுக்கும் தமக்கும் உள்ள பழைய நாளைய சத்ருத்வத்தை மறந்தாரில்லை; யார் என்ன சொன்னாலும் சரி, என்மீது எவர் எவ்வளவு வருத்தங் கொண்டாலும் சரி, என் உயிருள்ளமட்டும் நான் அவருடைய புத்திரருக்குச் சர்வ சுதந்திரமும் அளித்து அவருடன் சிநேகம் பாராட்டுவேன் என்பதற்கு ஒரு தடையுமில்லை. மேவார் நாட்டைப்போல் ஐம்பது மலைநாடுகளை க்ஷணத்தில் பெறலாம். எனது ஹிந்துப் பிரஜைகளின் நட்புக்கு ஈடாகுமா அவையெல்லாம்?" என்று பேசிமுடித்தார் அரசரெலாம் புகழும் கோமான்.

தம்முடன் போர்புரிந்து அபஜயம் பெற்றவர்களையெல்லாம் தமது உதார குணத்தால் மன்னித்து, என்றைக்கும் தம்மைவிட்டுப் பிரியாத வண்ணமாய்த் தம்முடன் ஐக்கியப்படுத்திக்கொண்டும், அபஜயம் அடையாமல் பிராணனைவிடச் சுதந்திரத்தைப் பதின்மடங்கு அதிகமாய்ப் பாராட்டிப் போர்புரியும் அரசர்களிடம் மதிப்புப் பாராட்டி அவர்களுடைய நட்பை நாடியும், இவ்வாறு அவரவர்களுக்கேற்ற

Koviloor Digital Library


வாறு பெருந்தன்மையுடன் செங்கோல் செலுத்தும் தமது காருண்ய சக்ரவர்த்திப் பெருமானுடைய மொழிகளைக் கேட்டு ஜனங்கள் யாவரும் போற்றினர்.

இதர மன்னர்களும், சேனாதிபதிகளும் வரிசைக்கிரமமாக அப்பரை வணங்கி மரியாதை பெற்றுச் சென்றனர். அப்புறம் தத்வம், சாஸ்திரம், சாஹித்யம், சங்கிதம் முதலிய பல்வேறு துறைகளில் பூர்ண பாண்டித்தியம் பெற்றுவிளங்கும் புலவர்கள் ஒருவர்பின் ஒருவராய் ராஜ சபைக்குவந்து வணங்கிநின்றனர்.

" அதோ ஒருவர், தீர்க்காலோசனை முகத்துடன் அதிக அமரிக்கையாய் அரசர் முன்நின்று வந்தனம் புரிகிறாரே, அந்த மஹான் இன்னாரென உனக்குத் தெரியுமா?" எனக்கேட்டார் கஜபதி.

" ஆமாம், அதோ நிற்கிறார், அவர் யார்? எனக்குத் தெரியாதே!" என்றான் நரேந்திரன்.

" இந்த ஸம்ஸ்தானத்திலிருக்கும் பண்டிதர்களுக்குள்ளெல்லாம் சிறந்த பண்டிதரும், பிரதி கலைகளிலும் பூர்ண அறிவுபெற்றுப் பிரசித்தியடைந்திருக்கும் நிபுணர்கள் பலர் தலைத்தோங்கும் இக்காலத்தில், அவர்கள் எல்லோரையும் ஒருங்கே தலைகுனியச் செய்யும் ஆற்றலுள்ள அறிஞருமாவர் அவர். அவர் தரித்திருக்கும் ஆடை, அவரிடம் காணப்படும் பொறுமை, அடக்கம், அவர் நிற்கும் நிலைமை, அவர் பார்க்கும் பார்வை இவைகளுக்கும் அவருடைய உண்மை யோக்கியதைக்கும் எவ்வளவு தாரதம்யம் இருக்கிறது பார்; நிறைகுடமென்று எவராவது சற்றேனும் எண்ணுவரோ?"

" என்ன, நீ வாஸ்தவமாகவா சொல்கிறாய்?"

" நீ நம்பினாலும் சரி, நம்பாவிட்டாலும் சரி. அவர் நாமதேயந்தான் அபுல்பாஸல். சரித்திரம், சாஸ்திரம், தத்துவம், இவற்றில் அவருக்கு இணையே கிடையாது. இந்த

Koviloor Digital Library


ராஜ்ய முழுவதிலும் அவருடன் ஒப்பிடக்கூடிய ராஜதந்திரியைக் காண்பதரிது."

"சக்கரவர்த்தியவர்களுடைய ஸம்ஸ்தானத்துச் சிரோ பூஷணமாய் விளங்குபவர் இவர்தானு? இவரா ஹிந்துஸ்தான முழுவதும் பண்டிதர் பாமரர் யாவரும் சதா போற்றும் உத்தம புருஷர்!"

"ஆம், இவர்தான் அவர். ஹிந்துஸ்தானத்தில் இவரைப் போற்றுவாரும் உளர்; தூற்றுவாரும் சிலர் உண்டு. பால்யத்தில் ஸம்ஸ்தானத்தினின்று துரத்தப்பட்டுப் பரம தரித்திரராய் ஊரூராய்த் திரிந்து சொல்லமுடியாக் கஷ்டங்களெல்லாம் அநுபவித்தனர். ஆனுல் நமது சக்கரவர்த்தியவர்களுக்கு யுக்தவயது வந்தவுடன் அவர் தம் நண்பரை ஸம்ஸ்தானத்துக்கு அழைத்து அவரை உயர்ந்ததொரு பதவியில்அமர்த்தினுர். இப்போது ஹிந்து, முஸல்மான் இவர்களை ஒன்றுபடுத்தும் உத்தேசத்துடன் சக்கரவர்த்தியவர்கள் நூதனமாய்ப் போதிக்கும் புதிய மதத்தை முதல் முதல் அவருக்கு உபதேசித்தவர் அபுல் பாஸல்தான். மொகலாய ஸம்ஸ்தானத்து முல்லாக்கள் அனைவரும் அவரை நெஞ்சாரப் பகைக்கின்றனர்; அவர் உபதேசித்த நூதன முறையை அங்கீகரிப்பவர் வெகு சிலரே. ஸலீம் இளவரசர் முகத்தைப் பார்த்தாயா? எள்ளும் கொள்ளும் வெடிக்கிறது. அவர் பட்டத்துக்கு வரும்போது கற்றறிந்த புலவராகிய நமது சரித்திரக்காரர் கதி என்னுமோ அறியோம்."

நரேந்திரனுக்கு ஏதோ தன் பழைய நினைவு எழ, "இளவரசர் முகம் எப்போதும் இப்படியிருக்காது. ஒவ்வொரு சமயத்தில் அவர் களிப்புமுற்றிருப்பார்!" என்று புன்னகையுடன் கூறினுன்.

"உஸ், உஸ், வாயை மூடு. பகல், பக்கம் பார்த்துப் பேசவேண்டும். நம்மைச் சுற்றி ஒற்றர்கள் பலர் இருக் -

Koviloor Digital Library


கின்றனர். ராஜ சமூகத்தில் அரண்மனை வாசிகளைப்பற்றிய குற்றங்களைப் பிரஸ்தாபிப்பது தகுதியான காரியமன்று."

"அபுல் பாஸலின் சகோதரர் எங்கே? அவருடைய ஸாமர்த்தியம் சொல்லத்திறமன்று. ஆக்ராவில் மாத்திரம் அல்ல; வங்காள முழுவதும், பாலர் வயோதிகர் பலர் அவருடைய பாடல்களைப் படித்துப் பாடிக் களிக்கின்றனர். ஸரஸ்வதி அநுக்ரஹம் சம்பூர்ணமாய்ப் பெற்றவர் அவர். பெய்ஸி என்னும் நாமதேயமுடைய அவரை, கலைமகளின் செல்வக் குழந்தையென்றே சொல்லவேண்டும்."

"அந்தோ! அவர் போய் எத்தனையோ நாளாயிற்றே. இந்த ராஜசபையில் அதிசோபையுடன் விளங்கிய அவர், பால்யத்திலேயே அகால மரணத்துக்கு உட்பட்டனரே!"

"வங்காளத்துக் கிராமாந்தரங்களில் அக்பரைப்பற்றி வழங்கும் கட்டுக்கதைகள் அநேகங்களில் அவருடைய நாமதேயத்துடன்கூடி வழங்கும் நாமதேயம் வாய்ந்த பீர் பல் (வீரபலர்) என்பவரும் காலமாய்விட்டனர். என்ன மரணங்கள்!"

"நல்லமைச்சும், சுத்த வீரரும், விகடச் சிரேஷ்டருமாகிய அவர், மேற்குப்பிரதேசங்களில் வசிக்கும் யுத்தப் பிரியமுள்ள ஜாதியாருடன் நடந்த போரில் மரணமடைந்தனர். தனது பிராண சிநேகிதருடைய பிரிவையாற்றாமல் சக்கரவர்த்தியவர்கள் துக்காக்கிராந்தராய் இரண்டொரு நாள் பரியந்தம் அன்ன ஆகாரமில்லாம லிருந்தனராம். அதோ, ஒருவர் பச்சை தலைப்பாகையும் நீண்ட தாடியுமாய் அபுல் பாஸலைச் சுடசுடப் பார்த்துக்கொண்டு நிற்கிறாரே அவர் யார் தெரியுமா?"

"கஜபதி, யார் அவர்? பெருமிதமும் நிரம்ப கர்வமுமுடையவர்போ லிருக்கிறாரே."

Koviloor Digital Library


" அவரும் ஒரு சிறந்த கிரந்தகர்த்தாதான். நல்ல சொல் நயமுடைய நூலாசிரியர். சக்கரவர்த்தியவர்களுடைய சரித்திரத்தை எழுதிக்கொண்டிருக்கிறார். நன்றாய்ப் படித்தவர். நல்ல கூர்மையான புத்தியுடையவர். என்ன இருந்தாலும் வித்வத்காய்ச்சல் உண்டே, அது லேசானதா ? அபுல் பாஸலைக் கண்டால், பொறாமையால் அவர் வயிறு வெடித்துச் சாவார். அவர் பெயர் பாடோனீ."

நக்கார்கானாவிலிருந்து பறைமுழக்கம் ஒலித்தது; வரவேற்பு உபசரணை முடிந்துவிட்டது. சக்கரவர்த்தியவர்கள் தம் ஆசனத்தை விட்டெழுந்து தமது பிரபுக்கள், பிரதானிகள் குடிகள் யாவரும் கவனமாய்ச் செவிகொடுத்துக் கேட்டு அறியவேண்டிய விஷயம் ஒன்றுளதெனத் தெரிவித்தார். உடனே ராஜ உத்தியோகஸ்தர் ஒருவர் எழுந்து நின்று, சக்கரவர்த்தியவர்களுக்கு வந்தனம் புரிந்து பின்வருமாறு பேசலானார் :

"தரும பரிபாலகரும், துஷ்ட நிக்கிரஹ சிஷ்ட பரிபாலன ஸம்பந்நரும், ஜகதீசனது பிரதிநிதியும், இந்த அகண்ட ராஜ்யத்துச் சத்திராதிபதியுமாக விளங்காநிற்கும் மஹா மாட்சிமைதங்கிய சக்கரவர்த்தியவர்களுக்கு ஒரு விண்ணப்பம்.

" கடற்பிரயாணத்திலும், பலவித வியாபாரங்களிலும் மஹாப்பிரசித்திபெற்ற மேல்காட்டு ஜாதியார் ஒருநாட்டினர் ஸகல ஐசுவரியங்களும், நீர்வளம் நிலவளம் முதலிய எல்லா வளங்களும் அமையப்பெற்றுச் சீரும் சிறப்புமாய் விளங்கும் தங்களுடைய ராஜ்யத்துடன் வர்த்தகஞ் செய்ய விரும்பிப் பல காத மைல்கள் தூரத்துக்கப்பாலுள்ள ஒரு தீவிலிருந்து தங்களுடைய ஸந்நிதானத்தை நாடி வந்திருக்கின்றனர். ஹிந்துஸ்தானத்து ஜனங்களுடன் வியாபாரம் நடத்த மாட்சிமைதங்கிய தங்களுடைய அநுமதியைக் கோரி,

Koviloor Digital Library


அந்த வெள்ளையர் மஹாராணியார் ஒரு நிருபம் அனுப்பியிருக்கின்றனர். இந்த ஜாதியார் மேற்குச் சமுத்திரத்தில் இங்கிலண்ட் எனவழங்கும் ஒரு தீவில் வசிப்பவர்கள்."

மஹாராணியாரது நிருபம்

"ஸர்வேசுவரரது திருவருட் பிரஸாதத்தாலும்,......., இங்கிலண்டுக்கு அரசியாயிருக்கும் எலிஜபெத், அத்யந்த பராக்கிரமசாலியும், வெல்லற்கரியவரும், வீரக்கழல் புனைந்தவரும் காம்பேயா நாட்டு அதிபதியுமாகிய எலாப்திம் எகிபர் (அக்பர்) விஜயவீரருக்கு எழுதிக்கொள்வதென்னவென்றால்,

"எல்லா நாட்டினர்களுடனும் வியாபாரஞ் செய்து, அதனால் உபய கக்ஷியார்களுக்கும் பரஸ்பரமுள்ள சிநேகபாவமான போக்கு வரவு, வர்த்தகம், ஊதியம் முதலியவற்றை விருத்தி செய்யவேண்டுமென்ற நல்லெண்ணத்துடன் உலகத்தில் வெகுதூரத்துக்கு அப்பாலிருக்கும் தேசங்களுக்குப் போய்ப் பார்த்துவர எமது குடிகளுக்கிருக்கும் பேரவாவின் காரணமாய், இத்திருபத்தைப் பெற்றுவரும் ஜான் நியூபரி என்பவரும், அவருடைய நண்பர்களும், நேர்மையும் பணிவும் அடக்கமுமமர்ந்த தைரியத்துடன் தங்களுடைய ராஜ்யத்துள்ளும் எல்லைப்புற நாடுகளுக்கும் வருவதால், மஹாகனம் பொருந்திய தாங்கள் அவர்களை அன்புடனும் ஆதரவுடனும் வரவேற்பீர்களெனவும், எமது பொருட்டாகத் தாங்கள் அவர்களுக்கு உதவிபுரிந்து அதனால் என்றைக்கும் எங்களை மஹா பெருமைவாய்ந்த தங்களுக்குக் கடமைப் பட்டவர்களாக்கிக் கொள்வீர்களெனவும், நாம் பூர்ணமாய் நம்பியிருக்கிறோம். அவசியமானல் இன்னும் எவ்விதம் வேண்டுமாயினும் எங்களுடைய நன்றியைக்காட்ட நாங்கள் சித்தமாய் இருக்கின்றோம்; தங்கள் சமூகத்தில்

Koviloor Digital Library



இன்னும் அதிகமாய் விண்ணப்பித்துக் கொள்வது அவசிய மென நாங்கள் கருதுவோமாயின் இன்னும் பலவாறு தங்களை வேண்டிக் கேட்டுக்கொள்ளத் தயாரா யிருக் கின்றோம்.

"ஆனால் உலகத்தின் இறுதியாகிய இப்பாகத்தில் கேள்விப்படும் தங்களுடைய உதாரகுணத்தைப் பற்றிய மேன்மையான அபிப்பிராயத்தை முன்னிட்டு அந்தப் பாரம் எம்மைவிட்டு நீங்கிவிட்டதெனத் துணிந்து, நாம் வீணாக நிருபத்தைப் பெருக்குவதொழித்து இரண்டொரு வார்த்தை களில் தாங்கள் ராஜபக்தியுள்ள எமது குடிகளாகிய அவர்களை ஆதரவுடன் அழைத்து ஆதரிக்கும்படிக் கேட்டுக்கொள்ளு கிறோம். அவர்கள் தங்களுடைய திவ்வியமான ராஜ்யத்தை யடையுமுன் எவ்வளவு கடூரமான அபாயங்களுக்கும் கஷ்டங் களுக்கும் உட்பட்டார்களென்பதை உத்தேசித்து மஹா கனம் பொருந்திய தாங்கள் அவர்களுக்குப் பிரயாண சுதந்திரமும், பாதுகாப்பும் அளித்து இன்னும் தங்களுடைய காருண்ய மனத்துக்கிசைந்த சௌகரியங்கள், சுதந்திரங்கள் சிலவற்றைக் கொடுத்து எம்மைக் கௌரவிப்பீர்களெனக் கேட்டுக்கொள்கிறோம். எமது வேண்டுகோளுக்கு இணங்கி, எமதுவிருப்பத்தைத் தாங்கள் நிறைவேற்றிவைப்பீர்களாயின் மனப்பூர்த்தியாய் எம்மால் இயன்றமட்டும் நாம் தங்களுக்கு மரியாதைகளும் பிரதிபலன்களும் செய்யத் தயாராயிருக் கின்றோம். வந்தனங்கள்."

தாங்கள் இதுகாறும் கேள்வியுற்றிராத ஒரு நூதன நாட்டினுடையவும், அந்நாட்டில் வசிப்பவர்களுடைய வும் கதைகளைக் கேட்பவர்களைப்போல், ராஜப்பிரதானிகள் யாவரும் இந்த விளம்பரத்தைச் செவியுற்றனர்.

"நீங்கள் யாவரும் விளம்பரத்தைச் சரிவரக் கேட் டிருப்பீர்களென்று எண்ணுகிறேன். இவ்விஷயத்தில் உமது

Koviloor Digital Library



அபிப்பிராயத்தை அறிய ஆவல் கொண்டிருக்கிறேன். கான்கானுன், முதன் முதலில் உமது அபிப்பிராய மென்ன?"

"உலகமோ மிகப் பெரியது" எனத் தொடங்கினார் கான்கானுன். "இஸ்லாம் மதத்துப் பிறைக்கொடி, பாரசீகம், எகிப்து, கான்ஸ்டாண்டிநோபில் இவ்விடங்களில் மட்டுமேயன்றி, த்யூனிஸ், ஆல்ஜியர்ஸ், மொராக்கோ இவ்விடங்களிலும் கம்பீரமாகப் பறந்துகொண்டிருக்கின்றது. நமது மதத்தினர்கள் சிறிது காலம் முன்னர், ஸ்பெயின், பிரான்ஸ், ஹங்கேரி, ஆஸ்த்ரியா இந்நாடுகளை ஜயித்தனராயினும், இந்த மேல் நாட்டுத் தீவைப்பற்றி நாம் ஒரு வார்த்தைகூடக் கேட்டதில்லை. ஆனால் ஒன்று மாத்திரம் நான் அறிவேன். மேனாட்டு ஜாதியார்கள் சாதாரணமாய்க் கப்பற்பிரயாணத்திலும் கடல் வர்த்தகத்திலும் கைதேர்ந்தவர்கள்; வாணிபஞ் செய்யும் தேசத்தினர்கள்; அவர்கள் அனைவரும் நீர்வளம், நிலவளம் ஒன்றுங் குறைவின்றிச் சகல ஐசுவரியமும் நிறைந்திருக்கும் செல்வம் பெருகிய தங்களுடைய ராஜ்யத்தை நாடி வருகின்றனர்."

"ராஜா மானஸிம்ஹரே, இவ்விஷயம் சம்பந்தமாக உமக்கு ஏதாவது தெரியுமோ? உமது அபிப்பிராயம் என்ன?" என வினவினார் சக்கரவர்த்தி பெருமான்.

வீரக்கழல் புனைந்த அவ்விஜய சிகாமணி, "ஸ்வாமி, மேல்நாட்டைப் பற்றியாவது அவ்விடத்திய ஜாதியார்களைப் பற்றியாவது அடியேனுக்கு ஒன்றுந் தெரியாது. மாட்சிமை தங்கிய தங்களுடைய கொடிச்சீலை பறந்துகொண்டிருக்கும் ஆப்கானிஸ்தானம், காபூலிஸ்தானம், பனியுறையும் ஹிந்துகுஷ் பர்வதம் இம்மட்டுந்தான் நான் என்னுடைய ராஜபுத்திர ஸைந்யத்துடன் சென்றிருக்கிறேன். அதற்கப்பால் எனக்கு ஒன்றும் தெரியாது. அடியேனைவிடக் கற்றறிந்த

Koviloor Digital Library



மேதாவிகளும் மந்திராலோசனை வல்லுனர்களும் பலர் இருக்கின்றனர்" எனப் பணிவாய் விடையளித்தார்.

சக்கரவர்த்தியவர்களுடைய பார்வை அபுல்பாஸல் பக்கம் திரும்பியது. தக்ஷணமே அவர் பேசலானார்.

"கான்கானன் சொன்ன விதமே உலகம் மிகப் பெரியது. இந்த மேனாட்டினர்கள் ஒரு நூதன உலகத்தைக் கண்டுபிடித்திருக்கின்றனர். அப்புதிய பூமியில் ஸ்பெயின் நாட்டரசர் ஏராளமான பாகத்தைக் கைப்பற்றியிருக்கின்றனர்; அதற்குக் கிழ்த்திசையெல்லாம் போர்த்துக்கேசியர்கள் கொடி பறக்கின்றது; போர்த்துக்கேசியருடைய கப்பல்கள் ஐரோப்பா, ஆப்ரிகா, ஆசியா இக் கண்டங்களைச் சுற்றியுள்ள அகண்ட கடல்கள் அனைத்தினும் சுற்றித் திரிகின்றன. டச்சுக்காரர்களும் நல்ல மாலுமிகள்; கடல் வியாபாரத்தில் சிறந்தவர்கள். ஆனால் இந்த இங்க்லீஷ்காரர்களோ, அவர்களெல்லோரையும்விடச் சிறந்தவர்கள்; அவர்களுடைய ராஜ்யம் எல்லாவற்றிலும் சிறந்தது; கடல் சூழ்ந்த தீவினுள் வசிக்கும் இந்த நாட்டினர் சிறிது அகம்பாவமுடையவர்கள். சிறிதுகாலம் முன்னர், அவர்கள் ஸ்பெயின் தேசத்துப் போர்க்கப்பல் குழாங்களைச் சிதற வடித்துச் சின்னபின்ன மாக்கினார்கள்; அந்தத் தோல்வியுடன் அடங்கிவிட்டன ஸ்பெயின் அரசனது கொட்டங்களெல்லாம். சீக்கிரத்தில் கடற்படையில் இங்க்லீஷ்காரர்களே முதன்மைப்பட்டவர்களாவார்கள். வியாபாரத்தால் நாடுகள் சுபிக்ஷமடைகின்றன; என்றைக்கும் தாங்கள் அயல் நாட்டுடன் வியாபாரத்தை ஆதரித்துவருபவர்."

"நண்பரே, சரியான யோசனை. கிழ்த்திசையார் மேல்திசையார் யாவராயினும் யாதொருவித நிர்ப்பந்தங்

Koviloor Digital Library


களுமின்றி எமது ராஜ்யத்தில் தாராளமாய் வர்த்தகம் செய்யலாம். மேனுட்டிலிருந்து இங்கிருபத்தைக் கொண்டு வந்த வர்த்தகர் நமது நாட்டில் சுகமாய் வியாபாரஞ் செய்ய லாம். யாதொரு தங்கு தடையுமில்லை. நமது சகோதரியா ராகிய இங்க்லண்ட் நாட்டு வெள்ளையர் மஹாராணியாருக்கு நாம் நமது நட்பைத் தெரிவித்து அவருக்கு நல்வரவு கூறி வந்தனம் புரிகிறோம்" என்றார் மொகலாய மண்டலாதிபதி.

Koviloor Digital Library

## எட்டாம் அத்தியாயம்

## மந்திராலோசனை மண்டபம்

அன்றையதினம் ஸாயங்காலம் மந்திராலோசனை சபை கூடிற்று. அக்பர் அவர்கள் வங்காள நாட்டின் நிலைமையை உள்ளவாறு அறியவேண்டி ராஜா மானஸிம்ஹரையும் அவருடன் நரேந்திரனையும் சபைக்கு வரும்படிக் கட்டளையிட்டார். நரேந்திரனும், மந்திராலோசனைச் சபைக்கு அழைக்கப்பெற்ற தனது பாக்கியத்தைக் கண்டு அகமகிழ்ந்து சக்கரவர்த்தியவர்கள் உத்தரவுப்படி குறித்த வேளையில் மண்டபம் வந்துசேர்ந்தான்.

தர்பார் மண்டபத்தைவிட மிகச் சிறியது இந்த ஆலோசனை மந்திரம். அக்பரவர்கள், மந்திரிமார் அந்நிய நாட்டுத் தூதர்கள் முதலியவர்களுடன் ராஜ்ய விவகாரங்களைப் பற்றிய இரகசியமான விஷயங்களை இந்த அறையில் தான் விசாரித்து அவற்றைப்பற்றி ஆலோசனை செய்வது வழக்கம். இந்த அறைக்குள் அழைக்கப்படும் பாக்கியத்தைப் பெறுபவர்கள் வெகு சிலரே. பிரதானிகளுள்கூட இரண்டொருவரே இந்த மரியாதை பெற்றவர்கள். இன்னும் இங்கு வருபவர்கள், அக்பரவர்களுடைய அதி நம்பிக்கையான ராஜாங்க ஊழியர்களில் சிலர் உண்டு. இவ்விடத்தில் அக்பர் ஸாமாந்ய உடைதரித்து, அகண்டமானதொரு ராஜ்யத்தின் சுகதுக்கங்களை இமைகொட்டாமல் கண் பார்த்து வருவதால் உண்டாகிய மனக்கவலையால் வயோதிக காலம் வருவதற்கு முன்னரே வயோதிக சின்னங்களடைந்த

Koviloor Digital Library



தீர்க்காலோசனை குறிக்கும் முகத்துடன், சிறிதும் சோம்பலில்லாமல் வெகுநேரம்வரை ராஜகாரிய நிர்வாகத் தொழிலில் ஆழ்ந்திருப்பார். அக்காலங்களில் அந்தக் கம்பீரவதனம் ஒன்று தவிர்த்து இதர ஆடையாபரணாதி ராஜசின்னங்கள் ஒன்றும் அவரிடம் காணப்படாது.

அக்பர் மஹா சக்ரவர்த்தியவர்கள் நாற்பத்தைந்து வருஷகாலம் எவ்விதமான குற்றங் குறையுமின்றி சர்வஜன சம்மதமாய்ச் செங்கோல் செலுத்திவந்தார். சண்டை சச்சரவுகள் என்பதே கிடையாது. எங்கே பார்த்தாலும் ஜனங்கள் மனச்சந்துஷ்டி யடைந்திருந்தனர். இந்த நாற்பத்தைந்து வருஷங்களுக்குள் எத்தனையோ நூதன நாடுகள் சக்ரவர்த்தியவர்களுடைய ஆளுகையின்கீழ்க் கொண்டு வரப்பட்டன. மொகலாய ராஜபுத்திர ஸைந்யங்கள் சேர்ந்தாற்போல் இரண்டு வருஷங்கள் சண்டையிடாமல் சும்மா இருந்ததில்லை. இப்படித் தமது சேனை புதிய புதிய ராஜ்யங்களை ஜயித்துக்கொண் டிருக்கையில், ஜயிக்கப்பட்ட ராஜ்யங்களை அக்பரவர்கள், பிரஜைகள் அனைவரும் வாழ்த்த, சீரும் சிறப்புமாய்ச் செங்கோல் முறைமையுடன் ஆண்டு வந்தார். காபூல், கந்தஹார், காஷ்மீர், ஸிந்து, குஜராத், வங்காளம் இந்த நாடுகள் கடும்போர்கள் காரணமாய் ஒன்றன்பின் ஒன்றாய் மொகலாய ராஜ்யத்துடன் சேர்க்கப்பட்டன.

அக்பரவர்களது அந்திய காலத்தில் அவருடைய ராஜ்யம் ஹிந்துகுஷ் பர்வதம் தொடங்கி, விந்திய பர்வதம் வரைக்கும், மேற்கில் குஜராத் மாகாணம் தொடங்கி கிழக்கில் வங்காளம்வரைக்கும் வியாபித்திருந்தது. இதனுடன் நிற்காமல் சிறிது காலத்துக்கு முன்னர் மொகலாய இராணுவப்படைகள் விந்திய பர்வதத்தைக் கடந்து தெற்கில் ஆமத் நகரத்தைக் கைப்பற்றின.

Koviloor Digital Library



இவ்வகண்ட ராஜ்யமானது பதினைந்து மண்டலங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தது. ஒவ்வொரு மண்டலத்துக்கும் ஒவ்வொரு இராஜப்பிரதிநிதி நியமிக்கப்பட்டிருந்தார். பல்வேறு மதங்களையும், பல்வேறு மதக்கோட்பாடுகளையும் அநுசரித்துவரும் இருபது கோடி ஜனங்களைத் தன்னுள் அடக்கிக்கொண்டு நின்ற ராஜ்யத்தை, சர்வஜன சகோதரப் பான்மையுடன் பரிவாயும் சிநேகமாகவும் அரசாட்சி செய்து வந்த மகிபனது பெருமை என்னே!

ஐரோப்பிய தேசங்களில் இங்கிலாந்து நாட்டு எலிஜபெத் மஹாராணியார், பிரான்ஸ் நாட்டு நாலாவது ஹென்ரி மன்னர், ஸ்பெயின் நாட்டு இரண்டாவது பிலிப் மகிபர் முதலிய ராஜநிபுணர்கள் தலைத் தோங்கிய அந்தக் காலத்தில், எண்ணிறந்த ஜாதி பேதங்களையும், ஒன்றுடனொன்று எவ்வளவோ முரண்படும் பல மதங்களையும் பாராட்டி விளங்கிய இருபதுகோடி மக்களைக்கொண்ட அகண்டமானதொரு ராஜ்யத்தை அவ்வளவு விமரிசையாக ஆட்சிபுரிந்த நிகரில்லா ராஜாதி ராஜராகிய மொகலாய திலகத்தின் நாமதேயத்தைக் கேட்டிராதவர் கிடையாது.

ஆயினும், அவருடைய அந்தியகாலம் அவர் மனத்துக்கு அவ்வளவு திருப்திகரமாகவில்லை; ஒவ்வொன்றாகப் பல கவலைகள் ஏற்பட்டன; தான் அல்லும் பகலும் வேளை தவறாமல் ஜலம் பாய்ச்சி எருவிட்டு வளர்த்த மரம் நாளடைவில் உலர்ந்து போய்விடுமோ என்ற ஏக்கம் அவருக்கு மேலிட்டது. காலையில் தர்பார் மண்டபத்தில் விளங்கிய பிரகாசமான சுந்தரவதனத்தில், நெருங்கிக் கூர்ந்து கவனிக்கும்போது துக்கக்குறிகள் சில தென்பட்டன. இந்த மனக் கவலைகளைப்பற்றி ஆலோசனை செய்யத்தான் அக்பர் இப்போது இம்மண்டபத்தில் தம் ஆப்த மித்திரர்களுடன் கூடியிருந்தது.

Koviloor Digital Library



"கான்காஞன், நீர் ஆமத்நகரத்தை ஜயித்தது ஒரு பெரிதன்று. இனி அந்நாட்டைச் சரிவரப் பரிபாலிப்பது உண்டே, அதுதான் நாம் உம்மிடமிருந்து எதிர்பார்க்கும் பெரிய காரியம். அத்தொழில் எளிதன்று, எனக்குத் தெரியும், மிக்கக் கஷ்ட ஸாத்தியமானது; ஸாமானிய உத்தியோகஸ்தர்களை நம்பி அவர்களிடம் ஒப்புவிக்கக்கூடிய தொழிலன்று அது. அந்நாட்டை நீதியாய்ப் பரிபாலனம் செய்வது உமது பொறுப்பு. அவ்விஷயத்தில் உம்மைவிட நம்பிக்கையானவர்கள் எனக்கு வேறெவரும் கிடையாது."

"அடியேனு ஆமத் நகரத்தை ஜயித்தது? தாங்கள் விந்திய பர்வதத்தைக் கடந்து எங்களுக்கு வழிகாட்டாதிருந்திருந்தால், அப்புறம் தெரிந்திருக்கும் எங்களுடைய ஸாமர்த்தியம்! சூரியனின்றி இதர கிரகங்கள் பிரகாசிக்குமோ? தங்களுடைய மேல்பார்வையும் சமயோசித புத்தி மதியும் இல்லாமல் என்ன காரியம் நடக்கும்? தாங்களன்றோ எல்லாவற்றிற்கும் மூலகாரணம்."

கான்காஞனுடைய முகஸ்துதியைக் கவனிக்காமல் அக்பரவர்கள் அவரைப் பார்த்து "ஆமத்நகரத்தில் நமக்கு இன்னும் எவ்வளவோ கஷ்டங்கள் இருக்கின்றன. அவ்விடத்தில் மஹாவீர தீரம் பொருந்தி ஆவேசத்துடன் நம்மை எதிர்த்த அந்தப் பெண்ணரசியின் செயலை மறவாத போர் வீரர்கள் பலர் உயிருடனிருக்கின்றனர்; அவர்கள்மீது நாம் எப்போதும் கண்ணாயிருக்க வேண்டும். அம்மாதரசியின் சௌரியமும் பௌருஷமும் அல்ப சொல்பமானதன்று" எனக் கூறினார்.

தாங்கள் சொல்வது முற்றும் சரியே. சாந்த் ஸுல்தானுவை ஆமத்நகரத்தார் எளிதில் மறப்பரோ? நாம்தான் மறந்துவிடுவோமோ? கொண்ட்வானு நாட்டுத் துர்க்காவதி இராணிக்குச் சற்றேனும் சளைத்தவள் அல்லள் ஸுல்தானு.

Koviloor Digital Library


தெய்வத்தன்மை பொருந்தி விளங்கிய இந்த இரண்டு வீர மாதர்களும் தங்களுடைய அரசாட்சியின் மகிமையை உலகத்தாருக்குக் கம்பீரமாய் எடுத்துக்காட்ட அவதரித்த தேவஸ்திரீகள் போலும்."

எப்போதும் பகைவர்களின் சௌரியத்தைச் சரிவர மதித்துப் புகழும் சுபாவமுடையவராயினும் அக்பர் பெருமான் இந்தச் சமயத்தில் வேறு விஷயத்தில் தமது மனத்தைச் செலுத்தியிருந்ததால், கான்கானன் பேசியவார்த்தை இரண்டொன்றே அவர் காதில் விழுந்தன. தற்சமயம் அவருடைய புத்தி அவற்றின்மீது செல்லவில்லை.

"கான்கானன், அந்த இரண்டு ஸ்திரீகளும் இப்போது உயிர்த்திருந்தால் எனக்கு நிரம்பத் திருப்தியாயிருக்கும். துர்க்காவதிக்கு நான் முதல்தரமான எனது ஜாகிர்களில் ஒன்றைக் கொடுத்து அவளை நல்ல அந்தஸ்தில் வைத்திருப்பேன். எனது புத்திரர்களில் ஒருவனுக்குச் சாந்த் ஸுல்தானாவை மணம் புரிவித்து அவளை எனது செல்வப் புதல்வியாகப் பாவித்து வருவேன். தாங்களும்தான் அங்கே இருந்தீரே, அவளவ்வளவு தீரமாய், புருஷர்களில் எவராவது போர்புரிந்தனரா?"

"பல பராக்கிரமச் சிங்கமே, இணையற்ற சுத்தவீரராகிய மூராது இளவரசரும் நானும், அவளுடன் நின்று போர்புரிய ஆண்மையற்றுப் பின்னடைந்துவிட்டோம். அன்றையதினம் கோதாவரி நதிதீரத்தில் நடந்த யுத்தத்தில் மடிந்த மொகலாய வீரர்களை எண்ணிக்கையிடுவது ஸாத்தியமோ? அந்த இரண்டு நாள் யுத்தம் என்ன கோர யுத்தம்! என்ன கொலை! என்ன படுகளம்! தாநியல் ராஜகுமாரர் சிறிது வெற்றி யடைந்தார்; அதையும் வெற்றி யென்று சொல்லமுடியாது. கடைசியில் தாங்கள் நேரில்

Koviloor Digital Library


வந்து யுத்தத்தை நடத்திய பின்னர்தான் ஆமத்நகரம் நம் கைவசப்பட்டது."

தமது குமாரர்களுடைய நாமதேயங்களைக் கேட்கும் போது அக்பர் முகத்தில் துக்கக்குறிகள் தோன்றின; அவர் முகம் களங்கமடைந்தது; விசனம் தொண்டையை யடைத்தது; பேச நாவெழவில்லை. கடைசியில் ஒருவாறு தமது துக்கத்தை யடக்கிக்கொண்டு அவர், இடையிடை நின்று நின்று பேசலானார். அவருடைய பார்வை ஒன்றன்மீதும் நிலைக்காமல் அலைந்துகொண்டிருந்தது.

"இரணைனூரானாகிய எனது மகன் மூராது பால்ய ஆட்டங்களில் மிதமிஞ்சி உழன்று அகால மரணத்துக்கு உள்ளானான். தானியலும் சிறிது துஷ்ட வழியில் பிரவேசித்திருக்கிறதாகத் தெரிகிறது. வர வர, அவன் தனது வேலையில் சோம்பலாயிருக்கிறான். சிற்றின்பக் கேளிக்கை அதிகமாகிக்கொண்டிருக்கிறது. கான்கானான், தாங்களும் அவனுக்குப் பிதா நிலைமையில் இருக்கிறீர். உமது தவப் புதல்வியை அவனுக்கு விவாஹம் செய்துவைத்திருக்கிறீர். அவனை ஒரு கண் பார்த்துக்கொள்ளும். அவனைப் பேருக்கு மாத்திரம் ஆமத்நகரத்துக் கவர்னராக நியமித்திருக்கிறேன்; அவனிடம் எனக்கு நம்பிக்கையில்லை; ராஜ்ய நிர்வாகத்தை நீர் பார்த்துக்கொள்ளும்; அவனை நம்பி இருந்துவிடாதீர்."

"அப்படியே; எஜமானர் அவர்களது சித்தம். நான் எவ்வளவோ அதிர்ஷ்டம் செய்து என் புத்திரியை தானியலுக்குக் கொடுக்கும் பாக்கியம் பெற்றேன். என்னைவிடப் பெரியவர்களெல்லாம் அந்த விசேஷ மரியாதையை நாடுகின்றனர். இப்போது கூடப் பிஜாப்பூர் அரசர் தன் மகளைக் கொடுப்பதாகப் பிரஸ்தாபம். அவர் ஒரு தக்ஷிண தேசத்துப் பெரியவரைக்கொண்டு அந்த விவாஹத்தை முடிக்கச் சொல்லியிருக்கிறார்."

Koviloor Digital Library


"யார் அந்தப் பெரியவர்?"

"அவர் பெயர் பெரிஷ்தா. மாமூத் கஜினி படையெடுத்துவந்த காலந்தொட்டு நாளதுவரைக்குமான பாரத நாட்டின் இதிஹாஸத்தை அவர் தற்காலம் எழுதிக்கொண்டிருக்கிறார்; அபுல் பாஸலுக்கு இணையானவரெனச் சொல்லிக் கொள்கிறார்கள்."

"அபுல்பாஸல் அப்பேர்ப்பட்ட கிரந்தகர்த்தாவைப் பரிவுடன் வரவேற்று உபசரிப்பார். படோனிகூடத் தக்ஷிணத்துப் பண்டிதரைச் சிநேக பாவத்துடன் அழைத்து மகிழ்வார். இப்பேர்ப்பட்ட இரத்தினங்கள் மூவருடைய உதவியால், பிற்காலத்தில் நமது நாமதேயம் இந்நாட்டில் அழியாமல் விளங்கிக் கொண்டிருக்கும் பாக்கியம் பெறினும் பெறலாகும்" என்று கூறினார் அக்பர் பெருமான்.

"இந்நாட்டில் மட்டுமா? இதர நாடுகள் எங்கே போயின? அபுல்பாஸல் சிறப்பு, ஹிந்துஸ்தானத்தில் மட்டுமன்று, வெளிநாடுகள் பலவற்றிலும் தெரிந்திருக்கிறது. பாரசீக நாட்டரசர், தாம் அக்பருடைய வாள் பிரதாபத்தைக் கேட்டுப் பயப்பட்டறியாராயினும் அபுல்பாஸலுடைய கிரந்தங்களைக்கண்டு தாம் பயமுறுவதாக ஒருமுறை எழுதியிருக்கிறார். நாம் எல்லோரும் மண்ணுடன் மண்ணாய் நசித்துவிட்டபின்பும் அவருடைய கிரந்தங்களின் மகிமை கொழுந்துவிட்டெரிந்து கொண்டிருக்கும்" என்றார் கான்கானன்.

இதைக்கேட்டு அபுல்பாஸல் உடனே "உமது கிரந்தங்கள் மட்டும் என்ன, ஸாமான்யமானவைகளா? ஆனால் ஒன்று, கான்கானன், நீங்கள் மாத்திரம் உமது பேனாவை யாசகர்களுக்குக் கொடுத்து விடாதிருக்கவேண்டும்."

சக்கரவர்த்தியவர்கள் மலர்ந்த முகத்துடன் அபுல்பாஸலைப் பார்த்து, "நண்பரே, நீர் நமக்குப் புரியும் உதவி சொல்லத் திறமன்று. உம்முடைய வீரத்தால் எத்தனையோ நாடு

Koviloor Digital Library


கள் நமது வைகவசமாயின. உமது கிரந்தங்களால் நம்முடைய ராஜ்யத்தின் பெயரும் பிரதாபமும் உலகெங்கும் பிரசித்தியடைந்து வருகின்றன. ஆனால் இப்போது இதர விஷயங்கள் சிலவற்றில் உம்முடைய உதவி நமக்கு இன்றியமையாததாய் இருக்கிறது. நமது மூத்த பிள்ளையின் நடத்தை, வரவர அதிருப்தியாயிருந்து வருகின்றது; நாளுக்கு நாள் அவனுடைய சேஷ்டைகள் நமக்கு அளவிலா வருத்தத்தை உண்டுபண்ணுகின்றன; நமக்குப் பின்னர் அவன் சக்கரவர்த்தியாகப் போகிற விஷயத்தையும், தற்காலம் அவன் இருக்கும் நிலைமையையும் அவனுடைய நடவடிக்கைகளையும், ஒப்பிட்டுப் பார்த்தால் நமக்கு அதிகக் கவலை ஏற்படுகிறது" என்றார். ஆரம்பத்திலிருந்த மலர்ந்த தோற்றம் மாறி, வரவர அவர் முகம் இருளடைந்து வந்தது.

"தாங்கள் தக்ஷிணம் சென்றிருந்தபோது ஸலீம் இளவரசை ஆஜ்மீருக்கு அதிபதியாக நியமித்தீர்கள். அடியேனும் வங்காளத்திலிருந்து இளவரசருக்குச் சகாயமாக வந்தேன். வந்தவிடத்தில் வெகு நாள் தங்குவதற்கு ஸாத்தியமில்லாமல் போயிற்று. வங்காளத்தில் கலகங்கள் உண்டாயின. அடியேன் வங்காளம் செல்லவேண்டியதாயிற்று. ஆனால் இப்போது ஆப்கானியர்களுடைய துஷ்டத்தனம் அடியோடு அடங்கிவிட்டது. இனி அவர்கள் தலைதூக்குவார்கள் என்ற பயமில்லை. வங்காளத்தைப்பற்றி இனிச் சிறிதும் கவலைப்பட வேண்டிய அவசியமில்லை. எஜமானர் அவர்களுக்கு இஷ்டமானால், அடியேன் ஆஜ்மீர் சென்று, மிகுந்திருக்கும் இரண்டொரு ராஜபுத்திர நாடுகளையும் ஜயித்து எல்லாவற்றையும் ஒழுங்குபடுத்தி வைக்கிறேன்" என்றார் ராஜா மானஸிம்ஹர்.

"இராஜபுத்திரனுக்கு ஏற்ற வேலை!" என்று பிருதிவி ராஜர் தாழ்ந்த குரலில் சொல்லிக்கொண்டார்.

Koviloor Digital Library


ராஜா மானஸிம்ஹர் பிருதிவி சொன்னதைக் கேட்காதவர் போலிருந்தார். ஆனால் அவர் முகத்தில் மாத்திரம் சிறிது கோபக்குறி தென்பட்டது.

"ராஜா மானஸிம்ஹரே! நீர் வங்காளத்தைவிட்டு வந்துவிடவேண்டியதில்லை. நீர் அந்த மாகாணத்தைப் பத்துவருஷத்துக்குமேலாகத் திருப்திகரமாய் ஆண்டுவருகிறீர். நானிருக்கு மட்டும் நீர் அவ்விடத்திலேயே இருக்கலாம். நீர்தான் அந்த ஸ்தானத்துக்கு ஏற்றவர். ஆப்கானியர்களுக்கு ஏற்ற குரு உம்மைவிட வேறொருவரும் கிடையாது. மேலும் மேவாரைப்பற்றி நாம் இப்போது கவலைப்படவில்லை. அவ்விடத்திய ஜயாபஜயங்களைப்பற்றி நாம் நினைக்கவில்லை. நமது கவனமெல்லாம் நமது மூத்தபிள்ளையிடம் சென்றிருக்கிறது. நீர் வங்காளம் திரும்பியவுடன், மேவாரை ஸலீம் மறந்துவிட்டான்; அவனுடைய எண்ணங்கள் வேறுபட்டன. ஆக்ராவுக்குவந்து கோட்டையைப் பிடித்து ஸிம்ஹாஸனத்தில் உட்காரும் ஆசை அவனுக்கு அதிகமாய்விட்டது; அசட்டுப் பையன்! ராஜ்யபாரம் செய்வதென்றால் அவனுக்கு என்னமோ வாய்ப்பேச்சாயிருக்கிறது; ஏதோ குதிரைப் பந்தயம் என்று அவன் எண்ணுகிறான். ராஜ்யபாரம் தெய்விகமானது; அது தெய்வம் மனிதன் கையில் ஒப்படைக்கும் ஒரு தரும பரிபாலன கடமை; அதை வகிப்பது கஷ்டஸாத்தியம். அது ஒருவனுக்குக் காலக்கிரமத்தில் பகவானது அருளால் வரவேண்டியது என்னும் விஷயங்களை அவன் சிறிதேனும் அறிந்திலன். ராஜ்யபாரம் என்றால் நல்ல ஆடையாபரணங்கள் தரித்துத் தர்பாரில் வீற்றிருந்து களிப்பதுதான் என்று அவன் கருதுகிறான். அதன் உள் கஷ்டங்களை அவன் சிறிதும் அறியவில்லை. இளவரசர்கள் இவ்வாறெல்லாம் தங்கள் தகப்பன்மார்களுடைய அந்திய காலத்தில் அவருக்குப் பலவித மனோவேதனைகளை உண்டுபண்ணு

Koviloor Digital Library


கிறார்கள்" என்று சொல்லும்போது அக்பர் புன்சிரிப்பு சிரித்தாராயினும் அவருடைய அப்போதைய மனநிலையை மாநஸிம்ஹர் உள்ளவாறு உணர்ந்தார்.

"மஹாராஜா அவர்கள், ஸலீம் பட்டத்துக்கு அருகனல்லன் என்று எண்ணினால் தமக்குப்பின்னர் ராஜ்யத்துக்கு தகுந்த ஏற்பாடு செய்துவைக்க வேண்டாமா? ஸலீமுடைய பிள்ளைகள் எல்லோரும் ஸமர்த்தர்கள். ஸலீம் ஸிம்ஹாஸனத்துக்கு யோக்கியதை யற்றிருப்பதால், அவருடைய பிள்ளைகளில் ஒருவரைத் தெரிந்தெடுத்தலாகாதா?"

மாநஸிம்ஹருடைய கள்ள யோசனை அக்பருக்குத் தெரியாதா? எத்தனையோ மாநஸிம்ஹரைப் பார்த்திருக்கிறாரே அவர்! விஷயமென்னவென்றால், மாநஸிம்ஹரின் சகோதரி, ஸலீமுடைய மனைவிமார்களில் ஒருத்தி; அவளுடைய மகன் குஸ்ருகான்தான் இளவரசருடைய மூத்தமகன். அவன் நல்ல புத்திசாலி; ராஜாங்க விஷயங்களில் நல்ல பயிற்சியுடையவன்.

தம் மருமகனிடத்துள்ள ஆசை ஒரு காரணம்; ராஜ்யம் நாசமுறாமல் பத்திரமாயிருப்பது ஒரு காரணம்; கடைசியாக ஸாம்ராஜ்யம் நீடூழிகாலம் வாழ்ந்திருக்க வேண்டும் என்ற காரணம் ஒன்று; ஆகிய இம் மூவிதக் காரணங்களையும் உத்தேசித்துத்தான் மாநஸிம்ஹர் ஸலீமைத் தள்ளிவிட்டுக் குஸ்ருவுக்குப் பட்டாபிஷேகம் செய்யலாம் என்று கூறியது. அக்பர் மனத்துக்கு இந்த ஏற்பாடு சம்மதமில்லை. இவ்வித ஏற்பாட்டினால் அநேக கெடுதிகள் உண்டாகும்; ராஜ்யம் நிலையற்றுச் சின்னபின்னமாகும் என்றெண்ணினார் அக்பர். கடைசியில் அவர் மரண காலத்தில், மாநஸிம்ஹரும் அவருடைய நண்பர்களும் தங்களாலான மட்டும் அவருடைய எண்ணத்தை மாற்ற முயன்றனர்; ஒன்றும் பயன்படவில்லை: அக்பருடைய

Koviloor Digital Library


செல்வாக்கின் காரணமாய்க் கடைசியில் அக்பரது எண்ணமே முடிவில் நிறைவேறிற்று. ஸலீம் பட்டத்துக்கு வந்தது சரித்திரம் அறிந்த விஷயம்.

"ராஜா மாநஸிம்ஹரே, நீர் சொல்லும் யோசனை சரியன்று. அது என் மனத்துக்கு ஒவ்வாது. உமது சகோதரி மகன் சமர்த்தன்தான். எனக்குத் தெரியும். அவனிடந்தான் எனக்கு அளவிறந்த பிரேமை. ஆனால் தகப்பனைத் தள்ளி மகனுக்கு மகுடம் சூட்டுவதென்பது அடாத காரியம். அதனால் பல தீமைகள் பின்னடி உண்டாகும். ஒருதரம் இவ்வாறு செய்துவிட்டால், இதுவே வழக்கமாகிவிடும். ராஜ்ய முழுவதும் சண்டை சச்சரவுகள் கிளம்பி, நாடெல்லாம் படுகளமாகி இரத்தப்பிரவாகமாய் விடும். ஸலீம் நமக்குத் துரோகம் நினைத்தான் என்பது உண்மையே. ஆனால் அவனை இம்முறை மன்னித்து விட்டோம். இனி அவனை நல்லவழிக்குக் கொண்டுவர வேண்டிய பிரயத்தனங்கள் செய்யவேண்டும். நமது நண்பர் அபுல்பாஸலின் உதவியைக்கொண்டு நாம் ஸலீமைச் சீர்திருத்த உத்தேசித்திருக்கிறோம்" என்றார் அக்பர்.

"எஜமானரவர்கள் ஆஞ்ஞைப்படி நடக்க அடியேன் சித்தமாயிருக்கிறேன்."

"நாம் தக்ஷிணத்திலிருந்தபோது, ஸலீம் ஆக்ராவுக்கு வந்தான். கோட்டைக்குள் பிரவேசிக்க முடியவில்லை. அங்கிருந்து அல்லஹாபாத் சென்றான். பீஹார் நாட்டுக் கஜனாவிலிருந்த பணத்தை யெல்லாம் எடுத்துக்கொண்டான். வேண்டிய ஏற்பாடுகளெல்லாம் மும்முரமாய்ச் செய்து கொண்டிருந்தான். அப்புறம் தன் தாயாரைப் பார்ப்பதாகச் சொல்லிக்கொண்டு அவன் இரகசியமாய் இந்த அரண்மனைக்குள் வந்து போனான். நமது சேவகர்களும் நமது உத்தரவின்பேரில் அவனைத் தடங்கல் செய்யவில்லை. ஆனால்

Koviloor Digital Library


அவன் தாயாரைப் பார்க்க வந்தவனாகத் தோற்றவில்லை; வேறு ஏதோ விசேஷ காரணம் இருந்ததாகத் தெரிகிறது. ஆற்றங்கரை அவனுடைய குதிரையாட்கள் ஆயுதபாணிக ளாய் நின்றிருந்தனர். கோட்டைக்குள் பேடிகள் சிலர் அவனுடன் நுழைந்தனர். அவன் அந்தரங்க ஏற்பாடுகள் என்னவோ, நாம் தெரிந்துகொள்ளவேண்டிய அவசிய மில்லை. என்னவானாலும் அவைகளால் ஒரு தீங்கும் நேரிட வில்லை; அதனுடன் போகட்டும். இன்றைய காலை அவனைத் தர்பாருக்கு அழைத்து மரியாதை செய்து அனுப்பினோம். அவன் அல்லஹாபாத் சென்றிருக்கிறான். அபுல்பாஸல்! ஒரு பெரிய ஸைன்யத்துடன் நீர் அவ்விடம்சென்று அவனை நல்ல வழிக்குக் கொண்டுவரப் பிரயத்தனம் செய்ய வேண்டும். அபுல்பாஸல் நீர் அவ்விடம் செல்வது ஒரு ராஜத்துரோகியைத் தண்டிக்கும் சேனாதிபதி முறையில் அன்று; துஷ்ட சகவாசம் செய்யும் ஒரு அசட்டுப் பைய னுக்குச் சன்மார்க்க போதனை செய்யும்படி அவனது தகப்பனார் தம் அன்பின் மிகுதியால் அனுப்புவித்த தூதரும் குருவும் ஆயிர், தாங்கள்."

"அப்படியே செய்கிறேன்" என்றார் அபுல்பாஸல்.

"அபுல்பாஸல், நீர் மஹா ஸமர்த்தர்; அவரவர்க ளுடைய குணாதிசயங்களை யறிந்து அவற்றிற் கேற்றவாறு நடக்கும் வல்லமையுடையவர் நீர். சன்மார்க்க போதனை செய்வதற்குச் சரியானவர் நீர்தான். சாம பேத தானம் முதலிய உபாயங்கள் உமக்கு நன்றாய்த் தெரியும். ஸலீமை நல்வழிக்குக் கொண்டுவர வேண்டியது உம்முடைய பொறுப்பு. தக்ஷிணத்திலிருக்கும் நமது மகன் இன்னொருவ னுடைய அபிவிருத்தியைப்பற்றிக் கான்கானான் கவனித்து வருகிறார். அதுபோல் நமது மூத்த மகன் ஸலீமை உமது பார்வையின்கீழ் விடுகிறோம்."

Koviloor Digital Library



அபுல்பாஸல் வணங்கித் தலைகுனிந்து சக்கரவர்த்தியவர்களுடைய கட்டளையை நிறைவேற்றுவதாக வாக்களித்தார். அந்த அலுவலாய்ப் போனவர் போனவர்தான்; திரும்பவேயில்லை. ஸலீம் இளவரசர் சில ஆட்களைத் தயார் செய்து அவரைக் கொலை செய்வித்ததாக அக்காலத்து சரித்திரக்காரர்கள் எழுதியிருக்கிறார்கள்.

அப்புறம் வங்காளத்தைப்பற்றிய பிரஸ்தாபம் வந்தது. அந்த விஷயத்தைப்பற்றி மானஸிம்ஹர்தான் அதிகமாய்த் தெரிந்தவர். கான்கானானைப்போல் அவ்வளவு வாசாலகம் அவருக்குப் போதாது. அவர் தமக்குத் தெரிந்தமட்டும் வங்காளத்து நிலைமையை உள்ளங்கை நெல்லிக்கனி போல் தெளிவாய்ச் சில வார்த்தைகளால் எடுத்துரைத்தார். ஆப்கானியர்களுடைய பிரயத்தனங்களெல்லாம், விளக்கின் அந்தியகாலப் பிரகாசத்தை யொத்தன. வங்காளம் முழுவதும் மொகலாயர் வசமாய்விட்டது; அந்நாட்டுச் சிற்றரசர்களெல்லாம் அக்பருக்குக் கீழ்ப்படிந்து அவரைத் தம் தெய்வமாகக் கொண்டாடுகின்றனர். ஹிந்து அரசர்கள் யாவரும் சக்கரவர்த்தியவர்களுக்குத் தங்களாலான உதவியைத் திருப்தியாய்ச் செய்யத் தயாராயிருக்கின்றனர். இவ்விஷயங்களை யெல்லாம் ராஜா மானஸிம்ஹர் சாங்கோபாங்கமாய் எடுத்துக் கூறினார். இந்தச் சந்தர்ப்பத்தில் நரேந்திரனுடைய ஜமீன் பெயரும் பிரஸ்தாபத்துக்கு வந்தது. மானஸிம்ஹர் நரேந்திரனது பாட்டனாருடைய வீர தீரத்தைப்பற்றியும், அவர் மொகலாயருக்குப் புரிந்துள்ள உதவியைப்பற்றியும், கடைசியில் தோடர்மல்லர் வங்காளத்தில் கஷ்டநிலையில் இருந்தபோது அவரொருவரே மொகலாயர் பக்கமிருந்து போர்புரிந்த விஷயத்தைப்பற்றியும் ஆதியோடாந்தமாய் எடுத்துச் சொன்னார். முடிவாக நரேந்திரன் மொகலாயருடைய தண்டில் சேர்ந்து கடும்போர்கள்

Koviloor Digital Library



பலவற்றில், அஞ்சிப் பின்வாங்காமல் முன் நின்று சேனாதி பதிகள் மெச்சும்படி சமர்புரிந்த விஷயத்தையும் கூறினார்.

ராஜா மாநஸிம்ஹர் அவர்கள் தன்னை இவ்வளவு புகழ்ந்து பேசியதையும், அவற்றையெல்லாம் சக்ரவர்த்தி யவர்கள் செவிகொடுத்துக் கேட்டதையும் கண்டு நரேந்திரன் ஆனந்த சாகரத்தில் ஆழ்ந்தான். அக்பரவர்கள் நரேந்திரனைப் புகழ்ந்து இரண்டொரு வார்த்தை பதில் சொன்னார். நரேந் திரனுடைய தேகம் புளகாங்கித மெய்தியது; அவன் ஆனந்த பாஷ்பஞ் சொரிந்தான். பேச நாவெழவில்லை; சக்ரவர்த்தியவர்களுக்குச் சாஷ்டாங்கமாக நமஸ்காரஞ் செய்தான்.

"அமைச்சர்களே, இன்னொரு விஷயம் உங்களிடம் சொல்லவேண்டும். அதிக நாழிகை யாய்விட்டது. இரண் டொரு வார்த்தைகளில் சொல்லி முடித்துவிடுகிறேன். தமது ஜன்ம தேசமாகிய மேவார் நாட்டில் இருபது வருஷகாலம் புறங்காட்டாமல் என்னுடன் போர்புரிந்த ராணா பிரதாபஸிங் சிறிது காலத்துக்குமுன் வீர ஸ்வர்க்கமடைந்தனர்; அவரைப் போன்ற திடசித்தமுள்ள பகைவரை நாம் இதுவரைக்கும் கண்டதில்லை. சமர்புரிவதென்றால், அத்தகைய சத்துருவுடன் சமர்புரியவேண்டும். அவரன்றோ சுத்தவீரர். மாநஸிம்ஹரே! நீர் அவருடன் போர்புரிந்ததில்லையா? அவர் எப்பேர்ப் பட்டவர்?"

ராஜா மாநஸிம்ஹருக்குக் கோபம் ஒருபக்கம்வர, அதைக் கூடியமட்டும், அடக்கிக்கொண்டு, "ஆம், சமர் புரிந்திருக் கிறேன். இருபத்தைந்து வருஷத்துக்கு முன் ஹால்திகட் கணவாயில் சந்தித்திருக்கிறோம். அன்றைய தினம் மாலைக்குள் கணவாயெல்லாம் பிணக்குவியல்தான். அவர் இறப்பதற்குமுன் அவரை இன்னொரு முறை சந்தித்துப் பழிக்குப்பழி வாங்க வேண்டுமென்று நான் வைரம் கொண்

Koviloor Digital Library



டிருந்தேன். ஆனால் இப்போது பிரதாபஸிம்ஹர் மாண்டு விட்டார். போனதைப் பற்றி இனி நினைப்பானேன்? சுத்த வீரர் அவர்; பித்ருலோகத்தில் சுகமாயிருக்கட்டும்."

ராஜபுத்திர வீரம் மாத்திரமல்லாமல், ராஜபுத்திர வைரிகளும் மனஸ்தாபங்களும் அக்பருக்கு நன்றாய்த் தெரியுமாதலால், அவர் ராஜா மாநஸிம்ஹரது வார்த்தைகளின் உட்கருத்தை நன்றாக உணர்ந்தார். ஆனால் அவர் தம்மால் முடிந்த மட்டும் இந்த வைரிகளையும், விரோதங்களையும் ஒழிக்க முயன்றார். ராஜபுத்திரத் தலைவர்களைத் தமக்குக் கீழ்ப்படியும்படிச் செய்து ஸாத்தியமானமட்டும் அவர்களுடைய சுதந்திரத்துக்குக் குறைவில்லாமல் அவர்களைச் சீராய்ப் பாதுகாத்துவர வேண்டுமென்பது அவருடைய முக்கியமான கோரிக்கை.

க்ஷத்திரியர்களுக்குள் பிரதாபஸிம்ஹர் ஒருவர்தான் அக்பருக்குக் கீழ்ப்படியாதவர். ஆயினும் அக்பர் அவருடைய தைரியத்தையும் சௌரியத்தையும் புகழ்ந்தார். கூட, அச்சமயம் அக்பருக்கு ராஜ்யத்தின் வேறு பாகங்களில், தொல்லைகள் ஏற்பட்டன. இவ்வளவு காலமும் பின்வாங்காமல் தம்மை எதிர்த்துப் பொருத இரண வீரரைப் பின்னும் ஹிம்ஸிப்பதால் தன்னுடைய ஹிந்துப் பிரஜைகள் அதிருப்தியடைவார்கள் என்று அக்பர் சில சந்தர்ப்பங்களில் எண்ணினார். இக்காரணங்களைக் கொண்டு சில வருஷங்களாக அக்பர் மேவார் ராணாவுடன் மும்முரமாய்ப் போர் புரிவதை நிறுத்திவிட்டார்.

"மேவார் நாட்டுப் பிரதான நகராகிய சித்தோட் நமது கையிலிருக்கிறது. பிரதாபஸிம்ஹரின் புத்திரர் உதயபுரி என்னும் பட்டணத்தில் இருந்துவருகிறார். அந்நகரம் நல்ல மலைப்பிரதேசத்தின் நடுவிலுள்ளது; எளிதில் வெல்லக்கூடிய

Koviloor Digital Library


தன்று. இனி நாம் அவரைத் தொந்தரவு செய்யவேண்டாம். அவர் சுகமே அவ்விடம் இருக்கட்டும்."

மானஸிம்ஹருக்குக் கோபத்தால் கண்கள் சிவந்தன. பிருதிவி ராஜரோ அக்பருடைய சொற்களைக் கேட்டுச் சந்தோஷமெய்தினார்.

"இதுவுமன்றி மேவார் அரசருக்கு ஓர் ஸௌஜன்ய நிருபம் அனுப்ப உத்தேசிக்கிறேன். ஒரு நாள் இல்லாவிட்டால் ஒருநாள் அவர் தம் தகப்பனாருடைய செய்கை யுக்தமற்றதென்று உணர்ந்து மற்ற ராஜபுத்திரர்களைப் போல் என்னைச் சேர்ந்து இந்த அகண்ட ராஜ்யத்து அரசாட்சியில் எனக்கு உதவிசெய்வார் என்பது நிச்சயம். நாளையதினமே என்னைச் சேரும்படி அவரை நிர்ப்பந்திக்க எனக்கு இஷ்டமில்லை. அவருக்கே என்றைக்கு யுக்தமெனப் படுகிறதோ அன்றைக்கே அவர் நம்முடன் சேரட்டும்; அவசரமில்லை. அதுவரைக்கும், அவர் சண்டைகளின்றி சந்தோஷமாயிருக்கட்டும்."

மந்திரிகளனைவரும் அக்பரது ஏற்பாட்டை ஆமோதித்தனர். மானஸிம்ஹர் மாத்திரம் வெறுப்புடன் மௌனமாயிருந்தார். அவருடன் சேர்ந்தவர்கள் இரண்டொரு முல்லாக்கள் இருந்தனர். அவர்களுக்கு அன்னிய மதஸ்தனுடன் உடன்படிக்கை என்பது கர்ணகடூரமாய் இருந்தது. மந்திரிகளெல்லாம் வாயை மூடிக்கொண்டு இருக்கவேண்டிய காலத்துங்கூட முல்லாக்கள் பேசத் துணிந்துவிடுவார்கள்.

முல்லாக்கள் அதிருப்தி யடைவார்களென்பதை யறிந்த அக்பர், உடனே அவர்களைப் பார்த்து, "நண்பர்களே, பின்னர் சாவகாசமாய் உங்களுடன் உரையாடுகின்றேன்" என்று சொல்லிவிட்டு மற்றவர்களைப் பார்த்துப் பிரதாபஸிம்ஹரின் குமாரராகிய அமரஸிம்ஹருக்கு எனது அநுதாபக்

Koviloor Digital Library


கடிதத்தையும் உடன்படிக்கைச் சீட்டையும் எடுத்துப்போக இஷ்டமுடையவர் யார்?" எனக் கேட்டார்.

உடனே பிருதிவிராஜர் தன் ஆசனத்தை விட்டெழுந்து சக்கரவர்த்தியவர்களுக்குத் தலைவணங்கி, "மஹாராஜ், க்ஷத்திரியவம்சங்களுள் முதன்மை வகித்திருக்கும் மேவார் ராஜ குடும்பத்தினருக்கு மரியாதை செய்வதற்குப் பிரதி க்ஷத்திரியனும் முன்வருவான். பிரதாபஸிம்ஹர் புத்திரருக்குச் சக்கரவர்த்தியவர்கள் அனுப்பும் நிருபத்தை அடியேன் எடுத்துச் செல்லக் கருணை புரியவேண்டும்" என்றார்.

"ராஜபுத்திர ஸிம்ஹமே, அப்படியே நீரே எடுத்துச் செல்லலாம். உம்மைவிடப் பிரதாபஸிம்ஹருக்கு அதிகமாய் வேண்டியவர்கள் ராஜஸ்தானம் முழுவதிலும் வேறெவரும் கிடையாது. அவரைப்பற்றிப் புகழ்ந்துரைப்பதே உமக்கு ஓர் ஆநந்தமாய்விட்டது. நாம் அனுப்பும் செய்தியை நீர் எடுத்துச் சென்றால் அது அமரஸிம்ஹருக்குச் சர்க்கரைப் பந்தலில் தேன்மாரி பொழிந்ததுபோல் இருக்கும். நமது ஸம்ஸ்தானத்திலிருந்து உமக்கு இஷ்டமானவர்களைக் கூட அழைத்துச் செல்லலாம்."

"ராஜா மாநஸிம்ஹர் உத்தரவு கொடுத்தால் அவர் கீழிருக்கும் கஜபதிஸிம்ஹரை அழைத்துச் செல்வதில் எனக்குப் பரம சந்தோஷம். அவர் ஜோத்புரி ராஜகுடும்பத்தைச் சேர்ந்தவர்; எமது பீகானீர் வம்சத்துடன் சம்பந்தம் செய்திருக்கிறார். நானும் அவரும் பால்ய நண்பர்கள்; பின்னுமடியும் அதிகமாய் ஒருவரை விட்டொருவர் பிரிந்ததில்லை. ஆதலால் இப்போதும் நாங்கள் இருவரும் ஒன்றாய்ச் செல்ல உத்தரவு அளிக்கவேண்டும்."

மாநஸிம்ஹர் களித்த முகத்துடன், "என்கீழ் இருப்பவர்கள் சக்கரவர்த்தியவர்களுடைய சேவகர்களே. கஜபதியை

Koviloor Digital Library


சக்கரவர்த்தியவர்கள் போகவேண்டுமென்றால் நான் என்ன தடை சொல்லப்போகிறேன்? கஜபதி நல்ல தைரியசாலி, இட்ட இத்தொழிலை அவர் சரிவர நிறைவேற்றுவார்."

சக்கரவர்த்தியவர்கள் ஆசனத்தை விட்டெழுந்து, "சரி, கஜபதியும் உடன் செல்லட்டும். அவருடன் அவருடைய நண்பராகிய நரேந்திரனும் கூடச் செல்லலாம்" என்றார்.

மந்திரிமார்கள் யாவரும் சக்கரவர்த்தியவர்களுக்கு வந்தனஞ் செய்து செலவுபெற்றுப் போயினர். கடைசியில் நரேந்திரன் வந்தான். சக்கரவர்த்தியவர்களுக்கு வந்தனஞ் செய்யும்போது, அவர் கடைசியாய்த் தன்னிடம் காட்டிய அன்பைக் கண்டு ஆநந்தங் கொண்ட நரேந்திரனுக்குக் கண்களில் நீர் ததும்பிற்று. அக்பர் பெருமான் தன்மீது இவ்வளவு தயை வைப்பாரென அவன் கனவில்கூட எண்ணியதில்லை. சக்கரவர்த்தியவர்கள் அவனுடைய உள்ளத்தின் நிலைமையை அறிந்து தன் மகனிடம்போல் பரிவாய்ப் பேசலானார்.

"நரேந்திரநாத் ராய், நீ உன் இஷ்டப்படிக்கு ராஜஸ்தானம் செல்லலாம். தாமதம் வேண்டாம்; காரியம் ஜடுதியில் ஆகவேண்டும்" என்று சொல்லிப் பின்னும் பேசலுற்றார். "ஆக்ரா கோட்டையைவிட ராஜஸ்தானமே உனக்கு இப்போது பத்திரமான இடம். ஆக்ராவில் தார்த்தரிப் பெண்களுடைய மோகவலை லேசானதன்று; அதற்குத் தகுந்தாற்போல் பேடிகளுடைய குரூரமும் சகிக்கக்கூடியதன்று."

கடைசியாய்த் தாழ்ந்த தொனியில் அக்பர் கூறிய மொழிகளைக் கேட்டு நரேந்திரன் இடிவிழுந்தவன் போல் ஆனான்; அவனுக்குத் தன் பிரஞ்ஞைவரச் சிறிது நேரமாயிற்று. அதற்குள் அக்பர் சென்றுவிட்டார்.

Koviloor Digital Library

## ஒன்பதாம் அத்தியாயம்

## அக்பர்—அபுல்பாஸலும் படோனியும்

“ அபுல்பாஸல், இன்றைக்குப் பகலெல்லாம் வேலை நிரம்ப இருந்தது; என் பாடு நிரம்பவும் களைத்துப்போய் விட்டது. உமது சகோதரர் இயற்றிய இனிமையான கீதங்களில் இரண்டொன்றை எடுத்துப் பாடினால் கேட்க லாம்போல் இருக்கிறது.”

அப்போது நடு நிசி. அக்பர் தம் நண்பர்களிருவ ருடன் யமுனாநதீ தீரத்திலுள்ள அரண்மனையின் ஓர் அறையில் உட்கார்ந்திருந்தார். ஜன்னல்கள் வழியாய்ச் சந்திரகாந்தி பிரகாசித்துக்கொண்டிருந்தது; அடுத்தாப் போல் கீழே யமுனையாற்று ஜலம் கோட்டைச் சுவர்களின் மீது மோதும் சப்தம் மந்தமாய்க் கேட்டுக்கொண்டிருந்தது. சுற்றுப்பக்கத்துத் தோட்டங்களிலுள்ள செடிகளில் புஷ்பித் திருக்கும் மலர்களின் நறுமணம் அறைமுழுவதும் கம் மென்று வீசிக்கொண்டிருந்தது. அறைக்குள் நிலவு ஒளியில் பளபளவென்று ஜ்வலிக்கும் பளிங்குச் சுவர்களின் பக்க மாய் மிருதுவான ஆசனங்கள் போடப்பட்டிருந்தன. அறையின் மேற்கூரையில் விசித்திரமான புஷ்பங்கள் வரையப்பட் டிருந்தன. ஸாயங்காலம் அக்பர் சாப்பிட்டு விட்டுச் சயனக்கிருகம் செல்லுமுன் ஒரு மணி நேரம் தமது விருந்தாளிகளிருவருடன் சம்பாஷணை செய்ய எண்ணங்கொண்டு இவ்வறைக்குள் வந்தார்.

Koviloor Digital Library



அந்த இரண்டு விருந்தாளிகளுள் ஒருவர்தான் அபுல்பாஸல்; இன்னொருவர், கல்வியிலும் எழுதும் வன்மையிலும் அபுல்பாஸலுக்கு இளையான படேளனி என்னும் சரித்திரக்காரர். அவர் நல்ல வைதிகர். வீரசைவர்கள், வீரவைஷ்ணவர்கள் என்பதுபோல் அவர் வீர இஸ்லாமியர். இந்த அறைக்குள் வருவதற்கு எல்லோருக்கும் அநுமதி கிடையாது. அக்பருடைய ஆப்தநண்பர்கள் எனச் சொல்லப் படுபவர்களுக்குள்கூட வெகு சிலரே இந்த அறைக்குள் உட்கார்ந்து அக்பருடன் சம்பாஷிக்கும் பேற்றைப்பெற்றவர்கள். அவர்களுள் பீர்பல் என்பவர் ஒருவர். அவர் தமது விகட வார்த்தைகளால் பல தினங்கள் இவ்விடத்தில் அக்பருடைய மனக்கவலையைப் போக்கி அவரைச் சந்தோஷிப்பித்துள்ளார். இவ்வறையில் பிருதிவிராஜரும் அநேகமுறை தமது ஜன்மபூமியாகிய ராஜஸ்தானத்துக் கீதங்களைப்பாடி அக்பரை மகிழ்விப்பதுண்டு; இங்கே கிறிஸ்தவப் பாதிரிகளும், முகம்மதிய முல்லாக்களும், ஹிந்து பண்டிதர்களும் தத்தம் மதங்களின் மேன்மைகளை எடுத்துக்கூறிப் பொழுதுவிடிவது தெரியாமல் ஒருவருடனொருவர் அக்பர் முன்னிலையில் வாதாடுவதும் உண்டு. ஆனால் அன்றிரவு அக்பரின் மனது அவைகள் எவற்றின்மீதும் செல்லவில்லை. அவர் சற்றுநேரம் நிச்சிந்தையாயிருக்க விரும்பினார். அந்திய காலத்தில் அவருடைய மனக்கவலைகளை மாற்றத்தகுந்த யோக்கியதை பெற்றிருந்தவர் அபுல்பாஸல் ஒருவரே. பிரதி இரவும் அவர் அக்பர்பக்கம் உட்கார்ந்து அவருடைய எல்லையற்ற மனோவேதனைகளை நிவர்த்தித்துத் தம்மாலானமட்டும் அவர் மனத்தைச் சமாதானப்படுத்தி வந்தார்.

"பெய்ஸி இருந்தமட்டும் அவர் தம் கர்ணாமிருத கீதங்களால் என்னை மகிழ்வித்து வந்தார். அக்கீதங்களில் இரண்டொன்றை எடுத்துப் பாடும்; அல்லது உமது சொந்த

Koviloor Digital Library


கீதங்களையாவது பாடும். உமது கவிகளைப்போல் ஆழ்ந்த யோசனையும், செவிக்கு இன்பந்தரும் பதங்களும் ஒன்று சேர்ந்து வேறெவருடைய கவிகளிலும் காணப்படுவதில்லை."

அபுல்பாஸல் அவருடைய கீதங்கள் சிலவற்றை யெடுத்துப்பாடினார். அவற்றின் தாத்பரியம் பின்வருமாறு:—

"என்னை உண்மை அன்புடன் யதார்த்தமாய் நேசித்த எனது ஆதி நாளைய நண்பர்களெல்லாம் ஒவ்வொருவராய் இவ்வுலகைவிட்டு அகன்றனர். நான் எவர் துணையுமின்றித் தன்னந் தனியனாய் இந்த அகண்ட அந்தகாரவழியில் செல்கின்றேன்.

"இவ்வுலகெல்லாம் எங்கே பார்த்தாலும எண்ணிறந்த ஜனங்கள்; காடு, மலை, நாடு, நகரங்கள் எல்லாம் ஜனக் கூட்டமாயிருக்கிறது. இருந்தென்ன? சமுத்திரமெல்லாம் ஜலமிருந்தாலும், குடிக்க ஒரு துளி நீர் உதவாததுபோல், இவ்வகண்ட புவியில் ஒருவித குற்றங் குறையுமின்றி நிர்த்தோஷியான மனிதனைத் தேடித் தேடிப் பார்த்தலைந்தேன்; ஒருவரையுங் காணேன்."

"நீ என்ன தேடினாலும் அகப்படுவது கஷ்டம். ஒரு வேளை வெகுகாலம் தேடினால் அகப்படுவானோ என்னமோ? தெரியாது. தோஷமே இல்லாதவன் இவ்வுலகில் அகப்படுவது அரிது."

"உமது பாடல்களிலுள்ள ஆழ்ந்த கருத்துக்கு இணை இக்காலத்துப் பாடல்களில் கிடையாது. புராதன கவிகளின் நூல்களை ஆராய்ந்தால்தான் அகப்படும்."

"ஸ்வாமீ, நமது முன்னோர்கள் சதா ஈசுவரனது சிருஷ்டிகளினிடமே அன்பு வைத்து அவைகளைக்கொண்டே தமது அறிவைத் தீட்டிவந்தனர்; அவர்கள் அவைகளின் இரகசியங்களை நுட்பமாய்க் கிரகித்தவர்கள். நாம் இப்போது வசிப்பது மனிதன் நிர்மாணம் செய்த உலகம்;

Koviloor Digital Library


இக்காலத்தில் நகரங்களும் நகரக்காட்சிகளும், ஆடையாபரணங்களுமே அதிகரித்துவிட்டன; சிருஷ்டியின் இயற்கையழகைக் கவனிக்கும் வழக்கமே போய்விட்டது."

"நமது பிரசித்திபெற்ற பர்தோஸியவர்களுடைய பாடல்கள், பாரதவர்ஷத்துப் பூர்வ இதிஹாஸபுராணாதிகள், இவற்றிற்கு இணையான நூல்கள் ஏதேனும் நமது காலத்தில் ஏற்பட்டிருக்கின்றனவா?"

"ஏதுவுமில்லை. நமது காலத்துக் கிரந்தங்கள் புதிதாய் மலர்ந்த புஷ்பத்தைப்போல் கொஞ்சகாலம் நறுமணத்துடனிருந்து சீக்கிரத்தில் வாடியுலர்ந்து போகின்றன. ஆனால் பாரதவர்ஷம், பாரசீகம் இந்நாடுகளில் பூர்வத்தில் இயற்றப்பட்ட கிரந்தங்கள் இமயமலையடித் தேவதாரு விருக்ஷங்களைப் போல் கற்பாறைகளிடை வேரூன்றிப் பல்லாண்டு பல்லாண்டுகளாக ஜீவித்துவருகின்றன."

"இருந்தாலும், நமது அகண்ட ராஜ்யத்தில் சாஹித்யத் துறையில் இரண்டொரு கிரந்தங்களாவது அல்லது கீதங்களாவது மார்க்கண்டேயரின் நிலைமையை அடையும் என்று நான் எண்ணுகிறேன்."

"அடையலாம். ஆனால் நம்முடைய ஸம்ஸ்தான நூல்கள் ஒன்றும் அவ்வித பாக்கியம் பெறமாட்டா. ஸாமான்யப் பிரஜைகளுக்குள் வழங்கும் பாஷையில் இயற்றப்படும் நூல்களுக்கு அந்தப் பெருமை உண்டாகும். நமது ஸம்ஸ்தான பாஷை, பாரசிகப் பாஷை. நமது அரண்மனையில் தவிர்த்து, வெகு சிலரே அந்தப் பாஷையை வழங்குகின்றவர்கள்; ஸாமாந்ய ஜனங்களுக்கு அதன் பெயரே தெரியாது. நல்ல பளிங்குத் தொட்டியில் வைத்து வளர்த்த செடியில் உண்டாகும் புஷ்பத்தின் அழகைக்கண்டு களிப்பது ஒரே ஒரு நாள்தான். மறுநாள் அது வாடிவிடுகின்றது. இந்தப் புஷ்பத்தையொத்தவை நமது ஸம்ஸ்தான நூல்கள்.

Koviloor Digital Library


ஆனால் ஜனங்களுடைய நூல்களோ, காட்டில் சுயேச்சை யாய்ச் செழிப்பாக வளர்ந்து ஆகாயத்தை அளாவி நின்று உலகத்தோர் அனைவருக்கும் நிழல் கொடுத்து அவர்களை இரக்ஷிக்கும் பிரம்மாண்டமான விருக்ஷங்களுக்கு நிக ரானவை.

"ஏன், ஹிந்துக்கள்கூட நமது பாஷையை எழுதப் படிக்கக் கற்றுக்கொள்ளுகிறார்களாமே. நமக்குத் தெரிந் ததுபோல் அவர்களுக்கும் பாரசீக பாஷை தெரியும் என்று கேள்விப்படுகிறேன். ராஜா தோடர்மல்லர் அவர்கள் இந்தியா முழுவதும் பாரசீக பாஷையை ராஜ பாஷையாக அநுசரிக்கும்படி ஏற்பாடு செய்திருக்கிற விஷயம் உமக்குத் தெரியுமே."

"ஹிந்துக்கள் மஹா புத்திசாலிகள்; அவர்கள் ராஜ பாஷையை எளிதில் கற்றுக்கொண்டு விடுவார்கள். ஆனால் அவர்கள் தமது எண்ணங்கள், யோசனைகள் அனைத்தையும் வெளிப்படுத்துவது அந்தப் பாஷையிலன்று. தம் தாய்ப் பாலுடன் சிறிது சிறிதாய் உட்கொண்ட தாய்ப்பாஷையில் தான் அவர்கள் எழுதுவது, பேசுவது யாவும் நடக் கின்றன."

"அப்படியானால் அவர்கள் தம் தாய்ப் பாஷையில் சிறந்த கீதங்கள் ஏதாவது இயற்றியிருக்கின்றனரா?"

"சூர்தாஸ், கேசவதாஸ் இவர்கள் இயற்றிய கீதங்களை ஜனங்கள் அமிருதமாகப் பானம் செய்யும் விஷயம் தங்க ளுக்குத் தெரிந்ததே. துளஸிதாஸ் என்னும் மஹான் இராமாயண இதிஹாஸத்தைத் தமது சுயபாஷையாகிய ஹிந்தியில் கர்ணாமிருதமாய்ப் பாடியிருக்கிறார். வட இந்தியா முழுவதும் பிரதிக் கிராமங்களிலும் இவர்களுடைய பாடல் களைச் சிறியோர் பெரியோர் அனைவரும் தினந்தோறும் சிரவணம் செய்கிறார்கள். நாம், நமது சந்ததியார் எல்லோ

Koviloor Digital Library


ரும் மாண்டபின்னரும் அந்தக் கீதங்களைப் பாடிக்கொண் டிருப்பார்கள் என்பதற்குச் சந்தேகமில்லை."

"அபுல்பாஸல், நீர் சொல்வதெல்லாம் அர்த்த புஷ்டியாயும் யுக்தி யோசனையுடையனவாயுமிருக்கின்றன. வட இந்தியாவில் போல் இக்காலத்தில் சாஹித்யத் துறையில் வேறு பிராந்தங்களும் பிரசித்தி பெற்றிருக்கின்றனவா?"

"மாகவிம்ஹலரைக் கேட்டால் அவர் சொல்வாரே, வங்காளத்தில் காசிராம், கீர்த்திவாஸர் என்னும் நாலாசிரியர்கள், பூர்வ காலத்துப் புராண இதிஹாஸங்களை ஸாமான்ய ஜனங்கள் பேசும் பாஷையில் பாடியிருக்கின்றார்கள். வங்காள முழுவதும் அவருடைய கீதங்கள் தெரியாத குக்கிராமமே கிடையாது. இப்போது முகுந்தராம் என்றொருவர் இருக்கிறார். அவருடைய கீதங்களும் பிரசித்திபெற்றவை. அவர் சிறிது காலத்துக்கு முன்னர் மாகவிம்ஹலர் அவர்கள்முன் தமது நூதன கீதங்களைப் பாடினார்; ராஜா அவர்கள் ஆநந்த பரவசமானார்."

"ஆம், அவர் வங்காளத்துக் கீதங்களைப்பற்றிச் சிலாக்யமாகப் பேசியிருக்கிறார். எனக்கும் கேட்கவேண்டுமென் றிருக்கிறது. ஆனால் என்ன செய்வது! எனக்கு வங்காளி பாஷை தெரியாது. கற்றுக் கொள்ளலாமென்றாலோ வயதாய்விட்டது. வரவர ஓய்வு நேரமென்பதே அபூர்வமாய்விட்டது. எனக்கு அந்தப் பாக்கியம் இராமலே போய்விடுமெனத் தோன்றுகிறது."

"தக்ஷிணத்தில்கூட மஹாராஷ்டிரர்கள் பல கீதங்கள் இயற்றியிருக்கின்றனர். ஸ்ரீதாருடைய கீதங்கள் உலகப் பிரசித்தமானவை. மஹாராஜா, இவைகள்தான் தங்களுடைய காலத்துச் சாஹித்ய இரத்னங்கள். இவைகளால்தான் தமது காலத்து நாகரிகம், எண்ணங்கள் யோசனைகள் முதலியன பிற்காலத்தவருக்குத் தெரியவேண்டும்."

Koviloor Digital Library


" எனது கோடிக்கணக்கான குடிகள் தத்தம் பாஷைகளில் சிறந்த நூல்கள், கீதங்கள் இயற்றி அவற்றைப் படித்தோ பாடியோ களிப்பதைக் காண்பதில் எனக்கு அதிகத் திருப்தி. அவர்களுக்குள் பல மதகுருக்களும், மதச் சீர்திருத்தக்காரர்களும் ஏற்பட்டு ஒவ்வொருவரும் பல்லாயிரம் பிரஜைகளைத் தமது சிஷ்யர்களாகக்கொண்டு உலகத்தார் உய்யும்பொருட்டு உழைத்து வருகிறார்கள். நாமும் ஒரு நூதன மதம் ஏற்பாடு செய்தோம்; அந்த மதத்தை வெகுசிலரே தழுவியுள்ளார்."

" ஸ்வாமீ, இந்த விஷயத்தில் அந்த மதச்சீர்திருத்தக்காரர்களுடைய கருத்தும் தங்களுடைய கருத்தும் ஒன்றே. கருத்தில் யாதொரு வித்தியாசமும் கிடையாது. ஆனால் அவர்கள் உழைப்பது ஸாமாந்ய பிரஜைகளுக்கிடையில்; தாங்கள் உழைப்பதோ அரண்மனைக்குள். ஸம்ஸ்தானத்திலுள்ள அமீர்களும், பிரதானிகளுமே தங்களுடைய மதத்தைத் தழுவுகின்றவர்கள். நூறு வருஷங்களுக்கு முன்னர் காசியில் இராமாநந்தர் என்றொரு மஹான், கடவுள் ஒருவரே என்னும் உண்மையைப் பலருக்குப் போதித்தனர். அவருடைய சிஷ்யராகிய கபீர்தாஸனும், தங்களைப்போலவே ஹிந்துக்கள் முஸல்மான்கள் எல்லோரையும் ஒன்றேயான முதற்பொருளை வணங்கும்படிச்செய்து அவர்களை ஒன்று படுத்தவேண்டுமென்ற அவாக் கொண்டிருந்தார்."

" ஹிந்துக்களே, காசியா உமது கடவுளின் வாசஸ்தலம்? முகம்மதியர்களே, மக்காவா உமது கடவுளின் உறைவிடம்? அன்று, அன்று! காசியுமன்று, மக்காவுமன்று! சகோதரர்களே, உங்களுடைய மனத்தைத் தேடிப்பாரும். அவ்விடத்திலேயே இருக்கிறார் அவர். ஹிந்துக்களுடைய கடவுளும், முகம்மதியர்கள் ஆண்ட

Koviloor Digital Library


வனும் ஆகிய அந்தப் பரம்பொருள் ஒவ்வொருவனுடைய உள்ளத்திலும் வசித்திருக்கிறார்?"

என்று அவர் பலமுறை போதித்தனர்.

"என்ன அருமையான கருத்து! என்ன மேன்மை! நமது பண்டிதர்களும்தான் பொறுக்கிப் பொறுக்கி அலங்காரமான பதங்களைக் கோத்துக் கீதங்கள் பாடுகிறார்கள். அவை ஜனங்களுடைய மனத்துக்கு ஆநந்தம் கொடுப்பதில்லை. முதலில் அவர்கள் அவைகளைச் செவி கொடுத்துக் கேட்பதுகூடக் கிடையாது. கபீரைப்போன்ற சர்வமத சம்மதமான மஹான்கள் வேறெவராயினும் உண்டோ?"

"பஞ்சாபில் நூறு வருஷங்களுக்குமுன் ஒருவர் இருந்தார். அவர் ஒரு பெரிய மதகுரு. அவர் பெயர் நானக். அவரும் கபீரைப்போல் ஹிந்து முகம்மதிய ஐக்கியத்தை நாடியவர். அவருடைய மதத்தை ஹிந்துக்களும் முஸல்மான்களும் அவலம்பிக்கின்றனர். அவர்களுக்கு ஸிக் ஜாதியார்கள் எனப் பெயர். அவர்கள் மஹா தைரியசாலிகள்; நல்ல திடகாத்திரர்கள்; ராஜபக்தியில் சிறந்தவர்கள்."

"அவர்களைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறேன். அவர்களெல்லாம் உண்மையான ஒரு முதற்பொருளைப் பேதமின்றிப் பூஜிப்பதால் எனக்கு அவர்களிடம் அதிக மதிப்பு உண்டு."

"வங்காளத்திலும் நூறு வருஷங்களுக்கு முன் சைதந்யர் என்றொருவர் இருந்தார். அவரும் ஹிந்து முஸல்மான்களை ஒன்று சேர்க்க முயன்றவர்; அவர் மதத்தைத் தழுவினவர்கள் கணக்கற்றவர்கள்."

"இந்த மதாசிரியர்கள் அனைவரும் ஸாமாந்யப் பிரஜைகளைச் சேர்ந்தவர்கள்; அவர்களுடைய வாழ்க்கையும் டம்பமற்ற வாழ்க்கைதான்; அவர்கள் எப்போதும் ஸாமான்ய ஜனங்களிடை உழைத்து அவர்களைச் சீர்திருத்திவந்தார்கள்;

Koviloor Digital Library


அதனால்தான் அவர்களுக்கு அவ்வளவு ஜயம் உண்டா யிற்று; அத்தனை சிஷ்யர்கள் ஏற்பட்டனர்."

"எப்போதும் அப்படிதான். ஸாமாந்ய மனிதர்தான் ஸாமாந்ய மக்களுக்குப் போதித்து அவர்களை முன்னுக்குக் கொண்டுவரக் கூடியவர்கள்; அப்பேர்ப்பட்டவர்களுடைய பேச்சுத்தான் அவர்களிடத்தில் அம்பலம் ஏறும்; அவர்களைக் கண்டால் ஜனங்களுக்குத் தேவதா பக்தி. இயேசு கிறிஸ்து பரம தரித்திரர்; அவர் வசித்தது செம்படவர்களுடன்; அவர் போதித்தது அவ்விடத்தில்தான்; அவர் படாதபாடு கிடையாது; அவரை மனம்போன படிக்கெல்லாம் ஹிம்ஸித் தனர்; எல்லாவற்றையும் பொறுத்துக் கொண்டிருந்தார்; கடைசியில் சிலுவையிலும் அறையப்பட்டனர்; அதற்கும் அவர் வாயைத் திறக்கவில்லை. மஹா பொறுமைசாலி. முகம்மது இருந்தாரே. அவர் கதிதான் என்ன? மக்காவி னின்று மதீனு ஓடி உயிர் பிழைத்தார்."

"மேனாட்டிலிருந்து நமது ஸம்ஸ்தானத்துக்கு வந்த கிறிஸ்துவ பண்டிதர்கள் இயேசு கிறிஸ்துவின் சரித்திரத்தை எனக்கு ஸாங்கோபாங்கமாய்ச் சொல்லியிருக்கிறார்கள். எவ்வளவோ சகிக்கக்கூடாத துன்பங்களை யெல்லாம் பொறுமையுடன் அநுபவித்துக் கடைசியில் சிலுவைக்கு இரையாகிய அந்த மஹானுடைய சரித்திரத்தைக் கேட்கும் போதெல்லாம் எனது கண்களில் நீர்ததும்பும். மேனாட்டி னர்கள் யாவரும் போர்த்துக்கேசியர், டச்சுக்காரர், இங்கிலீஷ்காரர் முதலியவர்கள் — அவருடைய மதத்தை அநுசரிக்கிறார்களாம்."

அக்பர் அபுல்பாஸலைப் பார்த்துச் சற்றுநேரம் சும்மா விருந்து மறுபடியும் "ஹிந்துக்கள் முகம்மதியர்கள் இரண்டு மதத்தினரும் பூஜிக்கும் பரம்பொருள் ஒன்றேயென்னும் சித்தாந்தத்தை நம்பினவர்கள் சிலர்தான் என்பது எனக்கு

Koviloor Digital Library


ஓர் அருவருப்பன்று; அந்தச் சிலர் நல்ல யுக்தி யோசனை யுடைய புத்திமான்களாய் இருந்தால் போதும். இன்றைக்கு இல்லாவிட்டால் நாளைக்கு அநுஸரிக்கிறார்கள் மற்றவர்கள். அதைப்பற்றி நாம் கவலைப் படவேண்டியது அநாவசியம். நாம் விதையைவிதைத்து விட்டால் அறுவடை காலம் தானே வருகிறது. காஷ்மீரை ஜயித்தவுடன் நான் ஹிந்துக்கள், முகம்மதியர்கள் ஆகிய இருதாத்தாரும் தம்முள் பேதமின்றி ஈசுவரனைப் பூஜிப்பதற்காக ஓர் ஆலயம் கட்டுவித்தேன். அக்கோயில் மதிற்சுவரில் வரையப்பட்டுள்ள வார்த்தைகளை நீர் அறிவீரன்றோ ?"

அபுல்பாஸனுக்கு அம்மொழிகள் குருட்டுப் பாடமாகத் தெரியும்.

"எத்திசை நோக்கினும் யாவர்வாய்க் கேட்பினும் அனைவரும் உன்னையே நாடுகின்றனர். எப்பாஷை வழங்கினும் அப்பாஷையில் அனைவரும் உன்னையே புகழ்கின்றனர். நம்பினோர் தெய்வமும் நம்பாதோர் ஐயமும், யாவும் நீயே. சர்வமதங்களும் கோஷிக்கும் பரம்பொருள் நீ ; ஒன்றேயாவாய்; இரண்டற்றவன். எம்மதம் தொடரினும் யாவரும் கடைசியில் உன்னையே அடைகின்றனர். பள்ளிவாசலினும் ஆலயந்தனினும் கூடிப் பலவேறு விதமாய்ப் பல்லாயிரம் பெயர் நாடும் வஸ்து உன்னையன்றி வேறெதுவுமில்லை. மசூதி சென்றால் அங்கு விளங்குபவனும் நீயே ; ஆலயந்தோறும் ஆகுபவனும் நீரே. யாவரும் நாடுவது நினது கடாக்ஷமே. மசூதி சென்றும், ஆலயம் வழிபட்டும் நான் தேடியலைவது உனதருளே. ஆஸ்திகன், நாஸ்திகன் எவனுக்கும் நீ உனது நிஜஸ்வரூபத்தை வெளியிடுவதில்லை. தம் தம் மதத்தையே தழுவித் தனித்தனியாய்ப் பூஜித்தாலும் நிஜபக்தனது இருதயத்தில் நர்த்தனம் புரிகின்றாய் நீ."

Koviloor Digital Library 4102


"அடியேனுடைய உள்ளத்திலும் அவர் எழுந்தருளி அடியேனைக் காத்தருளும் நாள் என்றைக்கோ? அடியேனை இவ்வுலகத்தில் அவர் தமது பிரதிநிதியாக உழைக்கும்படி ஆஞ்ஞாபித்திருக்கிறார். படோனி என்னமோ அதிருப்தியாகத் தலையை ஆட்டுகிறாரே. நண்பரே, நீர் உமது மனத்திலுள்ளதைத் தாராளமாய் எடுத்துச் சொல்லலாம். அபுல்பாஸல் அவற்றிற்கேற்ப விடையளிப்பார். நீங்கள் இருவரும் நல்ல புத்திமான்கள். உமது வாதங்களைக் கேட்டு நானும் சிறிது பலன் பெறலாம். இப்படிப் பெரியவர்களுடைய சம்பாஷணை, வாதங்கள் முதலியவற்றைக் கேட்பதில் எனக்குப் பிரியமும் ஆவலும் அதிகம் உண்டு."

"பாரசீகம், அரேபியா எகிப்து முதலிய பல நாடுகளின் இதிஹாஸங்களை நான் கவனமாய்ப் படித்திருக்கிறேன். அவ்விடமிருந்து வந்தவர்களிடமிருந்து கேட்டுமிருக்கிறேன். எல்லாவிடங்களிலும் இஸ்லாம் மதமே அநுசரிக்கப்பட்டு வருகிறது; அவ்விடங்களில் வேறெந்த நூதன மதமும் போதிக்கப்பட்டதாகக் காணோம்."

"நீர் உரைக்கும் நாடுகளெல்லாம் ஒரே மதத்தைத் தழுவினவை. அத்தேசங்களில், குடிகளுடைய மதமே அரசருடைய மதம்; அரசருடைய மதமே குடிகளுடைய மதமும். இரண்டாம் மதம் கிடையாது."

"இப்போது அவ்விதமிருக்கலாம். ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் அவ்வாறு இருக்கவில்லையே. பாரசீகத்தில் ஜரதுஸ்த்ர மதமும், எகிப்தில் வேறொரு மதமும் தழைத்திருந்தன. அவைகளெல்லாம் முகம்மதிய மதம் ஏற்பட்டவுடன் சூரியனைக்கண்ட பனிபோல மறைந்துவிட்டன; அவ்விதமே முகம்மதிய அரசர்கள் காலத்தில் இந்தியாவிலும் ஹிந்துமதம் முதலிய விக்கிரகாராதனை மதங்களெல்லாம் இருந்தவிடம் தெரியாமல் ஒழிந்து, எங்கே பார்த்தாலும்

Koviloor Digital Library



முகம்மதிய மதமே வியாபிக்கும் என்று நம்பியிருந்தோம். அரேபியா, பாரசீகம், எகிப்து இந்நாடுகள் போலவே ஏன் இந்தியாவும் முகம்மதிய நாடாக விளங்கக்கூடாது?"

"ஸ்வாமி, உமது மதாபிமானம் மிகவும் சிரேஷ்டமானது. தங்களுடைய புலமை ஒப்புயர்வற்றது. தங்களுக்குத் தெரியாத விஷயம் ஒன்றுங் கிடையாது. இந்திய ராஜ்யத்து ஜனத்தொகைக்கும் மேட்டுப்பிரதேசமான பாரசீகம், நீல நதியால் செழித்து நிற்கும் எகிப்து, மணற்பாங்கான அரேபியா இந்நாடுகளின் ஜனத்தொகைக்கும், ஏற்றக்கோலுக்கும் அரிவாள் பிடிக்கும் போலிருக்கிறது. பாரசீகர் முதலிய ஜனங்கள் அனைவரும் ஒன்றுகூடினும் இந்திய ராஜ்யத்துப் பதினைந்து மண்டலங்களில் ஒரு மண்டலத்து ஜனத்தொகை ஆகாது; இந்த ராஜ்யத்து ஜனத்தொகை கோடிக்கணக்கானது. மஹா அலக்ஸாந்தர் தொடங்கி எத்தனையோ அந்நிய நாட்டு அரசர்கள் இந்நாட்டின்மீது படையெடுத்து வந்திருக்கின்றனர். எத்தனையோ ஜாதியார்கள் இந்நாட்டிலேயே நிலைத்துவிட்டனர். இவ்வளவு அமர்க்களங்களுக்கிடையிலும் இந்நாட்டு மதம், மதக்கோட்பாடுகள், புராணேதிக் கிரந்தங்கள் தத்துவவிசாரம் முதலியன நாசமுறாமல், க்ஷீணிக்காமல் அபிவிருத்தி யடைந்துவருகின்றன. இத்தகைய பெருமையும் உறுதியும் வாய்ந்த மதத்தை நம்மால் வேரறுத்தல் கூடுமா?"

"அபுல்பாஸல், நீர் கற்றறிந்த புலவர் பெருமான், நான் சொல்வதைச் சற்று நிதானித்துக் கேட்கவேண்டும். இந்தியாவைக் காட்டிலும் எத்தனையோ மடங்கு பெரிதான ராஜ்யங்களெல்லாம் முகம்மதைக் குருவாகக் கொண்டிருந்தன. அவர் சமாதியடைந்த நூறு வருஷங்களுக்கெல்லாம் இஸ்லாம் படைவீரர்கள் ஆசியா, ஐரோப்பா, ஆப்பிரிகா இந்த மூன்று கண்டங்களிலும் தமது மதத்தை நிலைநிறுத்தி

Koviloor Digital Library


னர். இஸ்லாமிய குதிரையாட்கள் ஆக்ஸஸ், நீலநதி, டேகஸ் ஆறு இவற்றின் ஜலங்களைப் பருகலாயினர். முகம்மதுக்குச் சொந்தமான பாக்தாத் காலிப்கள் காலத்தில் இஸ்லாம் மதம் எவ்வளவோ அபிவிருத்தி யடைந்தது. இவைகளெல்லாம் அறிந்திருந்தும் நீர் இவ்வாறு பேசுவதின் பொருள் எனக்குப் புலப்படவில்லை."

"பாக்தாத் காலிப்களின் சிறந்த குணங்களும், அவர்கள் தார்த்தரி, த்யூநிஸ், ஆல்ஜியர்ஸ், மொராக்கோ இந்நாடுகளிலிருக்கும் முரட்டு ஜாதியார்கள் எல்லோரையும் உண்மையான ஒரே கடவுளை வழிபடும்படிச் செய்ததும் யாவும் பாராட்டற்பாலன. அவர்களைப்போல மதாபிமான விஷயமாய் உழைத்தவர்கள் வெகு சிலரே. இருந்தாலும், இந்தியா, சீனு இந்த ஜனநெருக்கமான தேசங்களில் அத்தேசத்தவர்கள், முகம்மது அவதரிப்பதற்கு முன்னரே, உத்தமமான மதங்களை ஆராய்ந்தறிந்து பல்லாயிர வருஷங்களாக அம் மதங்களை அநுசரித்து வருகிறுர்கள். நண்பரே, யோசித்துப் பாாத்தால், கடைசியில் அவர்களும் முகம்மதியர் களைப்போல் உண்மையான பரம்பொருளைக் கண்டறிய முயல்கிறுர்கள். முடிவில் இரண்டு மதங்களின் லக்ஷியங்களும் நோக்கங்களும் ஒன்றே. முக்கியமான விஷயத்தில் பேதமில்லாமலிருக்கையில், அவர்கள் எவ்வழி சென்றுல் என்ன? எந்தப் பாஷை பேசினுலென்ன? எவ்விதம் சென்றுலும் எவ்வகை எவ்வுருவம் வழிபட்டாலும், கடைசியில் முகம்மதியர் செல்லுமிடத்துக்கேதான் அவர்களும் வந்து சேர்வார்கள். நமது சக்கரவர்த்தியவர்களுடைய நோக்கம், கூடியமட்டும் இருதாத்தாரையும் ஒன்று சேர்ப்பதுதான்.

"ஆனுல் நமது சக்கரவர்த்தியின் முன்னோர்கள் வேறு விதமாய் ஒன்றுபடுத்த முயன்றனர். முன் காலத்துக்,

Koviloor Digital Library



காலிப்கள் ஐரோப்பா கண்டத்தில்கூட உண்மை மதத்தைப் போதித்தனர். ஐந்நூறு வருஷகாலம் இஸ்லாம் மதம் ஸ்பெயின் நாட்டில் பரவியிருந்தது. அவர்களுடைய நோக்கத்தின் பெருமையென்ன? அதன் பிரதாபமென்ன? அவற்றுடன் கொண்டு ஒப்பிடப்போகிறீர்களோ நமது சக்கரவர்த்தியவர்களின் நோக்கங்களையும் அவர் மார்க்கத்தையும்!"

"நண்பரே, ஸ்பெயின் தேசத்தைப்பற்றிப் பேசினீரே. இப்போது இஸ்லாம் கொடி அங்கு பறக்கின்றதா? அதன் காரணமென்ன? ஸ்பெயினிலிருந்த ஸாரஸன் ஜாதியார்கள், வல்லமையில் என்ன இளைத்தவர்களா? தொகையில் குறைந்தவர்களா? அவர்கள் ஐரோப்பாவில் எத்தனையோ அரண்மனைகள் கட்டினர்; எத்தனையோ கலாசாலைகள் ஏற்படுத்தினார்; ஐரோப்பியர்களுக்கு முதன்முதலில் கலைகள் போதித்தவர்கள் அவர்களே; ஐரோப்பிய நாகரிக ஆரம்பத்துக்கு அவர்கள்தான் காரணம். இருந்தும், அவர்கள் கதி என்னவாயிற்று? அவர்களுக்கு அடங்கியிருந்த கிறிஸ்தவர்களுக்கும் அவர்களுக்கும் ஒத்துக்கொள்ளவில்லை; கிறிஸ்தவ மதத்துக்கும் இஸ்லாம் மதத்துக்கும் பொருத்தமில்லாமல் போயிற்று. எப்போது குடிகள் அவலம்பிக்கவில்லையோ அப்போதே அந்த மதம் க்ஷீணிக்கத் தொடங்கியது. குடிகள் அதிருப்தி யடைந்தால் ராஜ்யம் நிலைக்குமா? நமது பெருமை வாய்ந்த சக்கரவர்த்தியவர்கள் குடிகளைத் திருப்தி செய்து அவர்களுடைய அன்பாகிய அழியா அஸ்திவாரத்தின்மீது தமது ராஜ்யத்தைச் சாசுவதமாய் நிலைநிறுத்தப் பிரயத்தனப் படுகிறார்."

"ஸ்பெயினைவிட்டு ஸாரஸன்கள் போய்விட்ட பின்னர் ஐரோப்பாவில் இதர முகம்மதியர்கள் அவர்களுடைய ஸ்தானத்தை எடுத்துக்கொண்டனர். இப்போது

Koviloor Digital Library



ஐரோப்பாவில் இஸ்லாம் பூண்டற்றுப் போயிற்றே? நமது சக்கரவர்த்தி ஸிம்ஹாஸனத்துக்கு வருவதற்கு நூறு வருஷத்துக்குமுன் ஓர் இஸ்லாம் தலைவர், கிறிஸ்தவர்கள் தலைநகராகிய கான்ஸ்டாண்டிநோபிலைப் பிடித்துக்கொண்டார். இப்போது அவருடைய சந்ததியார்கள் ஐரோப்பா கண்டத்துள் வெகுதூரம் சென்றிருக்கின்றனர்."

"ஐரோப்பாவில் பல பாகங்களைக் கைப்பற்றிய அந்த இஸ்லாம் வீரர்களுக்குக் கடவுள் கிருபையால் இன்னும் ஜயம் உண்டாகவேண்டும். அவர்களுடைய பராக்கிரமம் சொல்லத் திறமன்று. எனக்கு ராஜாங்க விஷயங்களில் ஏதோ அற்ப அநுபவம் இருக்கிறது; அயல்நாட்டு இதிஹாசங்களையும் சிறிது படித்திருக்கிறேன்; அநுபவத்தின்பேரில் நான் சொல்லும் வார்த்தையைச் சற்றே செவி சாய்த்துப் பொறுத்துக் கேட்கவேண்டும். கேவலம் அமர்க்களத்தில் வெற்றிதரும் பராக்கிரமும் வீரமுமே ராஜ்யத்தை நிலைநிறுத்திவிடாது. துருக்கியர்கள் நல்ல சூரர்கள்தாம். இருந்தாலும் இப்போதுகூட ஐரோப்பாவில் அவர்களுடைய ராஜ்யம் வலிவாயில்லை. சிறிது சிறிது தள்ளாடிக்கொண்டுதான் இருக்கிறது. வருங்காலத்தில் எப்போதாவது ஒரு வேளை துருக்கியர்கள் தமது மூடராஜாங்கத்தைக் கண்டறிந்து அதனைச் சீர்திருத்தித் தமது கீழிருக்கும் கிறிஸ்தவப் பிரஜைகளைச் சமாதானப்படுத்தி அவர்களுடைய அன்பைப் பெற்று ராஜ்யத்தைப் பலப்படுத்தினும் படுத்தக்கூடும்."

இதைக்கேட்டவுடன் படோனிக்கு ஆத்திரம் அஸாத்தியமாய் உண்டாய்விட்டது. "அபுல்பாஸல், உண்மை மதத்தினர்கள் ஒருபோதும் நாஸ்திகர்களுடன் சமாதானத்துக்கு வரமாட்டார்கள்" என்று அவர் கோபத்துடன் கூறினர்.

"உண்மை மதத்தினர்கள் ஒருபோதும் இதர மதத்தினர்களை நிர்ப்பந்திக்கவாவது ஹிம்சிக்கவாவது மாட்டார்

Koviloor Digital Library



கள். அரசர்கள் ஜனங்களுடைய பிரதிநிதி; அரசர்கள் ராஜ்யத்துக்குத் தருமகர்த்தர்கள்; குடிகளின் விருப்பத்துக்கு இணங்கி அவர்கள் நடக்கவேண்டும்" என்று சாந்தமாய் விடையளித்தார் அபுல்பாஸல்.

படோனி சற்றுநேரம் வாய் திறவாமலிருந்தார். மதாவேசங் கொண்டவர்கள் தாங்கள் பிடித்த முயலுக்கு மூன்றேகால் என்னும் சித்தாந்தத்தை ஒருபோதும் விடமாட்டார்கள். நமது சரித்திரக்காரர், ஒருவருக்குப் பயந்து வாயைமூடும் சுபாவ முடையவரல்லர். தமக்குத் தோன்றியதை அஞ்சாமல் சக்கரவர்த்தி முன்னிலையிலும் வாய்விட்டுச் சொல்லிவிடுவார்.

"ஐம்பது வருஷகாலமாக நீர் இராஜாங்கத்தில் உழைத்து வருகிறீர். அதனால் உமக்கு எவ்வளவோ அநுபவம் உண்டாயிருக்கலாம். அதைப்பற்றி நான் ஒன்றும் சொல்லவில்லை. இருந்தாலும் உம்முடைய வார்த்தைக்கு விடையளிக்காவிட்டால், நான் இஸ்லாம் மதத்துக்கே துரோகம் புரிந்தவனாவேன். உண்மை மதத்தினர்கள், ஒருபோதும் புறச்சமயத்தாருடன் சாஸ்திர விரோதமான சமாதானம் செய்துகொள்வதில்லை என்பது திண்ணம். உமது நூதனக் கதம்ப மதக்கோட்பாடுகள் கனவுபோல் மறைந்துவிட்ட பின்னரும், இஸ்லாம் மதம் இந்தியாவில் வெற்றிபெற்று வேரூன்றும் என்பதற்குச் சிறிதும் ஐயமில்லை."

"அப்படியே ஆகட்டுமே, படோனி, தற்காலத்தில் தமது எளிய குடிசைகளிலிருந்து கோடிக்கணக்கான ஜனங்களுக்கு ஸர்வேசுவரனைப் பற்றிய உண்மையைப் போதிக்கும் மஹான்கள் செல்லும்வழியே அடியேனும் சக்கரவர்த்தியவர்களுடைய சம்மதத்தின்பேரில் சென்றேன் என்பதே எனக்கு ஒரு பெருமை. அவ்வளவு பெயர் எனக்குப் போதும். நமது கடமையை நாம் செய்துவிட்டால்,

Koviloor Digital Library


அப்புறம் அது பகவானுடைய பொறுப்பு, அது செழிப்பதும் க்ஷீணிப்பதும். அதைப்பற்றி நாம் ஏன் கவலைப்பட வேண்டும்?"

"இஸ்லாம் ராஜ்யம் நிலைபெற்றிருப்பது நாஸ்திகர்களுடைய போதனைகளால் அன்று. உண்மை மதத்தினர் கைபிடித்த கத்தியால் அது தினே தினே விருத்தியடைந்து வருகிறது. எனக்கும் சிறிது உலக சரித்திரம் தெரியும். அதன் மூலமாய் இராஜாங்க விஷயங்களையும் கொஞ்சங் கொஞ்சம் அறிவேன். சக்கரவர்த்தியவர்களுடைய ராஜாங்க வழிக்கும் அவரது முன்னோர்களாகிய மாமூது கஜினி முதலிய முகம்மதிய அரசர்களுடைய ராஜாங்க வழிக்கும் ஒன்றுக்கொன்று பொருத்தமில்லை. தம் முன்னோர்களெல்லாம் மூடரென நினைத்து நமது சக்கரவர்த்தி ஒரு நூதன வழியில் செல்கிறார். இவருடைய நூதன மார்க்கம் இவருடனே முடிவு பெறும்; இவருடைய சந்ததியார் எவரும் இவருடைய மார்க்கத்தைப் பின்பற்றமாட்டார்கள். முஸல்மான் என்பவனுக்கு அடுத்ததா இவர் மார்க்கம்? இவருடைய சந்ததியார்கள் ஹிந்துக்களை நிர்ப்பந்தித்து, அவர்களுக்கு இஸ்லாம் மதத்தைக் கற்பித்து ராஜ்யத்தைக் கத்தி கட்டாரி பலத்தால் செவ்வனே பரிபாலித்து வருவார்கள். இதர முஸல்மான் தேசங்களைப் பாரும்; நமது நாட்டைப்போல் மானக்கேடான ஸ்திதியில் ஒன்றாவது இருக்கிறதா? அக்பருடைய உபாயம் பயன் படாதென்று உணர்ந்து அவர்கள் தமது ராஜ்யங்களை ஸைன்ய பலத்தால் ஆட்சி செய்து வருகிறார்கள். கொஞ்ச காலத்துக்குள் இந்தியாவும் அத்தகைய நாடுகளில் ஒன்றாக விளங்கும் என்பது நிச்சயம்."

இம்மொழிகள் சக்கரவர்த்திக்குப் படவேண்டுமென்று பேசப்பட்டவை; படோனிக்கு வரவரக் கோபமும்

Koviloor Digital Library


அத்திரமும் அதிகரித்துவிட்டன. ஆனால் இம்மாதிரி விவாதங்களில் பண்டிதர்கள் தமக்கு யுக்தமெனத் தோன்றியதையெல்லாம் பயமின்றிப் பேசலாம்; அக்பர் கோபங்கொள்வதில்லை; இவ்வித வாதங்களைக் கேட்பதில் அவருக்கு அதிகப் பிரியம். அபுல்பாஸல் பதில் ஒன்றும் உரைக்கவில்லை. அக்பர் படோனியைப் பார்த்துச் சொல்லலானார்.

"படோனி, நீர் சொல்கிறபடி எனது சந்ததியார் பிரஜைகளைத் திருப்தி செய்து அவர்களுடைய அன்பைப் பெற்று அரசாளுவதையொழித்துக் கேவலம் கத்தி கட்டாரி பலத்தினால் அரசாண்டு விடலாமென்று யோசித்து அவ்வாறு செய்யினும் செய்வர்".

"நான் இல்லை என்று சொல்லவரவில்லை. அப்படி சைன்ய பலத்தால் ஆளப்படும் இராஜ்யம் இரண்டொரு தலைமுறைக்குள் சின்னபின்னமாய் விடும். நமது ராஜ்யத்து இரதகஜ துரகபதாதிகள் அனைத்தும் அனைவரும் நல்ல தைரியசாலிகள்தான். போர் முகத்து ஒரு போதும் புறங்காட்டாத சூரர்கள்தான். நமது கோட்டை கொத்தளங்கள் ஸாமாந்யமானவையல்ல. அவைகளின் மீது அமைக்கப்பட்டிருக்கும் பீரங்கிகள் நல்ல உரமுடையவை. இவ்வளவு இருந்தும் என்ன பயன்? அதோ விறகுவெட்டி ஒருவன், காலையில் ஆக்ரா தெருக்களில் விற்று நாளைய ஜீவனத்துக்குப் போதுமான பணம் சம்பாதிக்கலாமென் றெண்ணிக் கழுத்து நிமிர்ந்து போகும்படி விறகுச்சுமையைச் சுமந்து வருகிறானே பார்த்தீரா? கந்தைத் துணிகட்டி மஹா தரித்திரனாயிருக்கும் அவனை எதிர்க்க நமது இராஜ்யத்து ஸைந்யங்களெல்லாவற்றையும் ஒன்று திரட்டினாலும் போதாது. அவன் சந்தோஷமுற்றிருந்தால் ராஜ்யம் நிலைக்கும்; அவன் ஒப்பி நாம் அரசாட்சி செய்கிறோம்; அவன் அதிருப்தியடைந்தால் நாமும் நமது இராஜ்யமும் அடியோடு நாசமுறுவோம்;

Koviloor Digital Library



அவன் மனம் நொந்தால் நாம் அதிக நேரம் ஸிம்ஹாஸனத்தில் வீற்றிருக்க மாட்டோம். நண்பரே! எனக்கு உலக சரித்திரம் அதிகமாய்த் தெரியாது. ஆனால் நான் இந்த ஐம்பது வருஷ காலத்துக்குள் எத்தனையோ நாடுகளையும் நானாவிதமான மனிதர்களையும் பார்த்திருக்கிறேன். எந்நாட்டில் அரசன் குடிகளுக்கு வருத்தத்தையும் அதிருப்தியையும் உண்டாக்குகிறானோ, அந்நாடு அதிக நாள் விளங்கியிருப்பதில்லை.

குடியுயரக் கோனுயரும், குடி இளைத்தால் கோனும் இளைக்கும். எனது ராஜ்யத்தில், காபூல் முதல் வங்காளம் வரைக்கும் உள்ள பிரஜைகள் யாவரும் திருப்தியடைந்திருக்கிறார்கள்; அவர்கள் என்மீது எவ்வளவோ அன்பாய் இருக்கிறார்கள்; என் அரசாட்சி ஸர்வஜன சம்மதமானது; எனது புத்திர பௌத்திரர்கள் யாராவது என்னையும் எனது பிரஜைகளையும் பிரித்துவைக்கக் கங்கணங் கட்டி உழைக்கட்டும்; அவர்களுக்கு ஐம்பது வருஷ காலம் தருகிறேன். 'எதோ, அவர்கள் எண்ணம் நிறைவேறுகிறதா பார்ப்போம்' என்று முடித்தார் அக்பர்.

Koviloor Digital Library

## பத்தாம் அத்தியாயம்

### சிறை மீட்சி

சக்கரவர்த்தியவர்கள் கடைசியாய்க் கூறிய வார்த்தைகளை நரேந்திரன் மறக்கவில்லை. அவற்றைத் தனக்கோர் எச்சரிக்கையாகக் கொண்டான். இனி ஆக்ராவில் தங்கியிருந்தால் தலை போய்விடும் என்று அவன் எண்ணினான். ஸலீம் இளவரசர் தம்முடன் ஒரு ஸ்திரீயைக் கோட்டைக்குள் அழைத்து வந்ததாகவும், ஜனானாவில் ஒரு பேடிக்கு நல்ல உதை விழுந்ததாகவும், ஒரு தார்த்தாரி அடிமைப் பெண் ஜனானாவிலிருந்து ஓடிப்போய் விட்டதாகவும் வதந்தி எங்கும் பரவியது. ஸலீமுடன் வந்த ஸ்திரீ எப்படித் தப்பித்துக்கொண்டு போனாள் என்பது ஒருவருக்கும் விளங்கவில்லை. ஆனால் யாவரும் ஜெலேகாவின்மீது சந்தேகங் கொண்டனர். அவள்தான் ஒற்றனை உள்ளே அழைத்து வந்தவள்; மூவரைப் பலமாய்க் காயப்படுத்தியவளும் அவள்தான். அந்த ஒற்றன் நமது நரேந்திரனே. இந்த விஷயங்கள் சக்கரவர்த்தியவர்களுக்குக் கூடத் தெரியாது. ஆனால் நரேந்திரன் அரண்மனையை விட்டுச் சென்ற தினம்தான் ஜெலேகாவும் ஓடிப்போய்விட்டாள் என்ற சமாசாரம் எங்கும் பிரசித்தமாயிருந்தது. அரண்மனைப் பேடிகளெல்லோரும் ஒன்று சேர்ந்து எப்படியாவது இந்த விஷயத்தின் உண்மையைக் கண்டறியவேண்டுமென்று தீர்மானித்துக் கொண்டனர்; அவர்கள் அந்தரங்கமாய் எவ்வளவோ விசாரணைகளெல்லாம் செய்தனர்; நால்

Koviloor Digital Library


பக்கமும் வலையை வீசிவைத்தனர்; வேட்டை நாய்களைப் போல் மோப்பம் பிடிக்கத் தலைப்பட்டனர்.

நரேந்திரனுடைய சேவகர்கள் முன்னே போய்க் காத்திருந்தனர். அவனும் தன் பிராணனைக் காப்பாற்றிக் கொள்ளும் நிமித்தம் ஆக்ராவைவிட்டுத் தக்ஷணமே செல்லவேண்டி யிருந்தது. ஆனால் நரேந்திரன் தன் பிராணனைப் பெரிதாக நினைத்துச் செய்த வாக்குறுதியைத் தட்டுவானா? குறித்நாள் அன்றைய இரவு, சரியாய் நிசிவேளைக்கு அவன் கோட்டையின் வெளிப்புறத்தில் காத்திருந்தான். நக்கார்கானாவினின்று அர்த்த இராத்திரி மணி கேட்டது. தான் நாடிவந்த ஸ்திரீ இன்னும் வரக்காணோம். தூரத்தில், தலைநரைத்து, கூன் வளைந்து தடியூன்றி ஒரு கிழவன் முதுகில் ஒரு விறகுச் சுமையைத் தூக்கிக்கொண்டு, தள்ளாடித் தள்ளாடிப் பெருமூச்சு விட்டு வந்துகொண் டிருந்தான். வந்தவன் திடீரென்று கோட்டை வாயிலண்டை நின்றான். அங்கிருந்த காவலாளிகள் அவனைக் காலால் உதைத்துத் தள்ளினர். கிழவன் இரண்டு கரணங்கள் போட்டுக் கொண்டு தூரப்போய் விழுந்தான். விறகு சுமை அவிழ்ந்து கீழே விழுந்துவிட்டது. மெள்ளச் சமாளித்துக்கொண்டு இது தலைவிதியென்று முணுமுணுத்துக்கொண்டே எழுந்து அவ்வயோதிகன் அப்புறம் போய்விட்டான். அவன் வரும் வழியில் நரேந்திரன் நின்றிருந்தான். அருகில் வந்தவுடன் நரேந்திரனுடைய செவிகளில் 'வா' என்றொரு சிறு குரல் விழுந்தது.

நரேந்திரன் திடுக்கிட்டான்; பக்கத்தில் பீரங்கிக்குண்டு வந்து விழுந்திருந்தால்கூட அவ்வளவு திடுக்கிட்டிருக்க மாட்டான். குரல் இதற்குமுன் கேட்டிருக்கும் குரலாய் இருந்தது. திரும்பிப் பார்த்தான்; அந்த வேஷதாரியின் கண்களைச் கவனித்தான்; ஆள் இன்னாரென அறிந்து

Koviloor Digital Library


கொண்டான். விறகுவெட்டி தன் வழியே போய்க்கொண்டிருந்தான். நரேந்திரனும் ஏதோ யோசனையின்றித் தான் ஏறிவந்த குதிரைபோகும் வழியே போகிறவன்போல், விறகுவெட்டி பின் சென்றான்.

கோட்டை வாயிலுக்கு ஒரு மைல் தூரத்தில் ஒரு பெரிய வனம் இருந்தது. விறகுவெட்டி மரங்களுக்கிடையில் மறைந்துவிட்டான். அவ்விடம் அதிக இருட்டாயிருந்த போதிலும் நரேந்திரன் விறகுவெட்டியைப் பின்பற்றி வேகமாய்ச் சென்றான்.

உடனே ஜெலேகா தன் வேஷத்தைக் களைந்துவிட்டு, "நரேந்திரா, நீ உன் வாக்குத் தவறாமல் நடந்தனை. முதல் நாள் உன் கண்களின் ஒளியைப்பார்த்தபோதே நீ உண்மையாளன்; வாக்குத் தவறாதவன் என எனக்குத் தோன்றியது. இன்றையதினம் அரண்மனைப் பேடிகள் வேட்டை நாய்கள்போல் நம்மைப் பின்பற்றி வருகின்றனர். பகவான் தான் இருக்கிறார் நம்மை இன்றைக்குக் காப்பாற்ற. எப்படியாவது நாம் அவர்கள் கையில் அகப்படாமல் போய்விட வேண்டும்.

யுத்த களத்தில் நான் எப்பேர்ப்பட்ட சூரர்களையெல்லாம் பார்த்திருக்கிறேன். இவர்களைக்கண்டு பயந்துவிடுவேனா! தவிர சக்கரவர்த்தியவர்களுடைய தூதன் நான். என்னைத் தொட இந்த அற்பங்கள் துணியுமா?

"போர்வீரா, நீ ஒன்றும் அறியாத சிறுவன். இந்த அற்ப நாய்களின் சேஷ்டை இப்படிப்பட்டதென்பது உனக்குத் தெரியாது. சக்கரவர்த்தியார் மகனாயிருந்தாலும் அவர்கள் விடமாட்டார்கள்."

"ஜெலேகா, நீ யாரைக்கண்டு இவ்வாறு நடுங்குகிறாய்? அந்தக் கொடிய மிருகமாகிய முஸ்ரூருக்கா இப்படிப் பயப்படுகிறாய்?"

Koviloor Digital Library 4102


"முஸ்ரூரைப்பற்றி நமக்குக் கவலையில்லை. அவனை நன்றாய்ப் படுக்க வைத்து வந்துவிட்டேன். அவன் இன்னும் கொஞ்சகாலம் படுக்கையைவிட்டு எழுந்திருக்கமாட்டான். ஆனால் மற்ற பேடிகளெல்லாம் ஒன்று சேர்ந்து இரவு பகலாக இவ்விஷயத்தில் உழைக்கிறார்கள். அவர்களுக்கு நம்மைப்பற்றி எல்லா விஷயமும் தெரிந்திருக்கிறது. ஒருவேளை நாமிருக்குமிடங்கூட அவர்களுக்குத் தெரியுமோ, என்னமோ?"

"நாய்கள் எப்படி வேண்டுமானாலும் குரைத்துக்கொண்டிருக்கட்டும். அருணோதயத்துக்குள் நரேந்திரன் தனது ஆட்களைச் சேர்ந்துவிடுவான்."

"ஆம் அதுவரைக்கும் உயிருடனிருந்தால்—நில்! நில்!"

ஓர் ஊதல் சப்தம் வனமுழுவதும் ஒலித்தது. போர் வீரனாகிய நரேந்திரனுக்கே ஒருதரம் உடல் நடுங்கிற்று. அவன் ஜெலேகாவுக்கு அருகே வந்து அவளைத் தன் இடது கையால் கெட்டியாய்ச் சேர்த்து அணைத்துக்கொண்டு வலது கையால் கத்தியை எடுத்தான்.

மறுபடியும் அந்த ஊதல் சத்தம் கேட்டது. மரங்களுக்கிடையில் இரண்டொரு மானிட உருவங்கள் தென்பட்டன; அவ்வுருவங்கள் புதர்புதராய்க் குனிந்து குனிந்து எழுந்திருந்தன. நரேந்திரனும் ஜெலேகாவும் அவர்களுக்குத் தெரியாமல் மறைவிலிருந்தார்கள். சில நிமிஷங்களுக்கெல்லாம் மறுபடியும் நிசப்தமாயிருந்தது.

ஜெலேகா இப்போதுதான் இரண்டாவது முறை மூச்சுவிட்டாள். "உன்னை அரண்மனை வாயிலிலிருந்து அவர்கள் பின்தொடர்ந்து வருகின்றனர். நீ வனத்துக்குள் நுழைந்தது அவர்களுக்குத் தெரியும். இன்னும் அவர்கள் உன்னை விட்டபாடில்லை. அவர்களுடைய பேச்சு ஒன்றிரண்டு என் காதில் விழுந்தது. இன்னும் பலர்

Koviloor Digital Library


இவ்வனத்தில் வந்து தேடுவார்கள். நீ இனி ஒரு க்ஷணம் இங்கே தாமதித்திருக்கக்கூடாது. துரிதப்படவேண்டும்."

"ஜெலேகா! அவர்கள் என்னை ஏன் தொடர்ந்துவர வேண்டும்? அதுவும் என்னைப்பிடிக்க இரவில் ஏன் அவர்கள் கஷ்டப்படவேண்டும்? நான் ராஜ சபைக்குப் போயிருந் தேன்; பகலெல்லாம் நகரத்திலிருந்தேன்; நகர முழுவதும் சுற்றிக்கொண்டிருந்தேன்; அப்போது என்னைப் பிடித் திருக்கலாமே. இவ்வளவு சிரமமேன்?"

"நீ அறியாதவன் என்று நான் சொல்லுவதற்கென்ன? நீ இப்போது சொல்லும் வார்த்தைக்கென்ன? பட்டப் பகலில் ஆக்ரா வீதியில் அவர்கள் சக்கரவர்த்தியவர்க ளுடைய உத்தியோகஸ்தனை எதிர்ப்பார்களா? இங்கே இந்த அந்தகாரத்தில் எது செய்தாலும் கேட்பாரில்லை. இங்கே உன்னைக் கொன்று புதைத்துவிட்டால் யாருக்குத் தெரியப் போகிறது சமாசாரம்? சரி, வீண் காலக்ஷேபமேன்? உனது வீரர்களெங்கே?"

"நாற்பது மைலுக்கப்பால்."

"இன்றிரவு நாற்பது மைல் எப்படிப் போகமுடியும்?"

"வண்டிக்காரச் சம்புநாத் லாயத்தில், எனது குதிரை தயாராயிருக்கிறது."

"சரி, நல்ல ஏற்பாடுதான். சம்புநாத் அருகில்தான். இருக்கிறான். உனது கூடாரத்துக்கு வழிதெரியுமா உனக்கு?

"ஆக்ராவின் தெருக்கள் எவ்வளவு நன்றாய்த் தெரியுமோ அவ்வளவு நன்றாய்த் தெரியும்."

"சரி, புறப்பட்டுப்போ, நாம் அப்புறம் சந்திக்கலாம்."

"ஜெலேகா, நான் போனால் உன் கதி என்ன?"

"நான் எத்தனையோ அபாயங்களுக்கெல்லாம் உட்பட் டிருக்கிறேன், இது எனக்கு ஒரு லக்ஷியமில்லை. தார்த்தாரிப்

Koviloor Digital Library


பெண்ணைப் பிடித்துச் சிறை செய்யக்கூடியவர்கள் இந்த ஹிந்துஸ்தானத்தில் எவரும் கிடையாது. என்னைப்பற்றி நீ கவலைப்படவேண்டடம். எனக்குத் தப்பித்துக்கொள்ள வழி தெரியும்."

"இடிமேல் இடி இடித்தாலும் நான் உன்னை இங்கே தனியாய் விட்டு ஒரு அடி எடுத்து வைக்கமாட்டேன். இது நிச்சயம்."

"நான் இதற்குள் சாகமாட்டேன்; இன்னும் இவ்வுலகத்தில் நான் எவ்வளவோ காரியமெல்லாம் செய்ய வேண்டி இருக்கிறது. இப்போது இந்த அபாயத்தினின்றும் தப்பித்துக்கொண்டு மறுபடியும் உன்னைச் சந்திக்க எனக்கு வழி தெரியும். நீ உன் சமாசாரத்தைப் பார்த்துக்கொள்; எனக்காகக் கவலைப்பட வேண்டாம். நாழிகையாகிறது புறப்படு. சற்று நேரத்துக்குள் அந்த இரத்தப் பிசாசுகள் வந்துவிடும்."

"ஜெலேகா, நீ என்னதான் சொல்; உன்னை இவ்விடத்தில் தன்னந்தனியாய் விட்டுவிட்டு நான் போகமாட்டேன்; உன்னைப் பத்திரமான ஓரிடத்துக்குக் கொண்டுபோய்ச் சேர்த்த பிறகுதான் செல்வேன். பெண்ணே, சில தினங்களுக்கு முன் நீ என் உயிரைக் காப்பாற்றினாய். இன்றைய தினம் நான் உன்னைக் காப்பாற்றிவிட்டுத்தான் மறுவேலை பார்ப்பேன்."

"நரேந்திரா, எவ்வளவு வசீகரமாகப் பேசுகிறாய் நீ? ஆனால் தார்த்தாரிப்பெண் இதற்கெல்லாம் இசைந்துவிடமாட்டாள். போர்வீரா, வீண் வார்த்தை வேண்டாம். நீ உன் வழியே செல்; நான் உன்னை வந்துபார்க்கிறேன், ஒருநாள்."

"பெண்ணே, அவர்கள் நாடுவது என் உயிரையன்று; உன்னைப் பிடித்துக் கொல்ல வேண்டுமென்பது அவர்களுடைய உத்தேசம். தார்த்தாரிப்பெண் ஒருத்தி அரண்மனைக்

Koviloor Digital Library


காவலர்களைப் பலமாய்க் குத்திக் காயம் செய்துவிட்டு ஓடிப் போய்விட்டதாக அரண்மனையெல்லாம் பிரஸ்தாபம். மூன் றூரும் அவனுடைய பரிவாரங்களும் உன்னை இலேசில் விட மாட்டார்கள். உன்னை அவர்கள் பிடித்துக் கட்டியுருட்டிக் கொண்டு போகவும், கொஞ்சங் கொஞ்சமாக உன்னைச் சித்திரவதை செய்து கொல்லவும் நான் சம்மதிப்பேனு? அவர்களுடைய கையில் காட்டிக்கொடுத்ததுபோல் நான் உன்னை விட்டுவிட்டுப் போவேனு? இவ்விதத் துரோகச் செயல் புரிய நான் உடன்படுவேனென்று நீ எவ்வாறு எண்ணினுய்?"

நரேந்திரனது மொழிகளைக்கேட்டு ஜெலேகா நடுங்கி ஞள். ஆனுல் அதை வெளிக்குக் காண்பித்துக் கொள்ளாமல் சிரித்துக்கொண்டே, "நண்பனே, உனக்கு அந்தப்புர இரகசியங்களெல்லாம் நன்ருய்த் தெரிந்துவிட்டன. என்னை உன்னுடன் அழைத்துச் செல்வதால் உனக்கு அபாயம் ஏற்படும் அல்லவா? போ, போ உன் வழியே; ஒரு சமயம் நாம் மறுபடியும் சந்திப்போம்."

"ஜெலேகா, உனக்கு வர இஷ்டமில்லாவிட்டால் நீ இங்கேயே நில். நானும் உன் பக்கமிருந்து என் உயிருள்ள மட்டும் ஒரு கை பார்த்துவிடுகிறேன்" என்ருன் நரேந்திரன்.

நரேந்திரனது தீரமான குரலைக்கண்டு ஜெலேகாவின் எண்ணங்கள் மாறின. "நீ இன்னும் உலகத்தை அறியாத வன்; தைரியத்துக்கு மாத்திரம் குறைவில்லை. என்ன சொன்னுலும் ஒரே பிடி பிடிக்கிருய். அடிமைப் பெண்ணின் நிமித்தம் தமது பிராணனைவிடத் துணிபவர்கள் வெகு சிலரே. நான் இத்தனை நாள் தேடியலைந்த ஆண்மகன் நீயே."

சத்தமின்றி இருவரும் வனத்தினின்று வண்டிக் காரன் குடிலைக்குச் சென்றனர். குதிரை, சேணம் சவாரி யுடன் சித்தமாயிருந்தது. நரேந்திரன் ஒரே குதியாய்க்

Koviloor Digital Library



குதித்துக் குதிரைமேலேறினான். ஜெலேகாவும் அவனுக்குப் பின்னால் உட்கார்ந்து கொண்டாள். நரேந்திரன் ஒரு தோல்வாரினால் அவளைக் கெட்டியாய்த் தன்னுடன் கட்டிக்கொண்டான். மறுபேச்சின்றி இருவரும் ஆக்ரா எல்லையைத் தாண்டிவிட்டனர்.

வயல்புறஞ் சென்றவுடன் நரேந்திரன் குதிரையை வேகமாய்த் துரத்தினான். ஊர்ச் சப்தம் அடங்கி நித்திரையிலிருக்கும் பல கிராமங்களைக் கடந்து சென்றனர். ரஸ்தா வழியைவிட்டுக் கொடி வழியெல்லாம் சென்றனர். எதிரே தீபவெளிச்சம் தெரிந்ததால் அதன் பக்கம் போகாமல் சுற்று வழியாய்ப் போயினர். சந்திரோதயமாக இரண்டுமணி நேரம் இருந்தது. அதற்குள் அபாயகரமான பாதிவழி கடந்தாய்விடும்.

குதிரைமேலேறி உட்கார்ந்தது முதற்கொண்டு இது பரியந்தம் ஒருவருடனொருவர் ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை. ஜெலேகாவுக்குத் தைரியம் சொல்லக்கூட நரேந்திரன் அவள் பக்கம் திரும்பிப் பார்க்கவில்லை. மீன் குட்டிக்கு நீச்சல் கற்றுக்கொடுக்க வேண்டுமா? நரேந்திரனுடைய இடுப்பைத் தனது இடது கையால் இறுகக் கட்டிக்கொண்டு தனது வலது கையைத் தன் கட்டாரிமீது சித்தமாய் வைத்திருந்தாள். புறப்பட்டது முதற்கொண்டு தனது நுட்பமான விழிகளால் எதிரிலிருக்கும் அந்தகாரத்தை உற்றுப் பார்த்துக்கொண்டேயிருந்தாள். அவளுடைய கேசம் அவிழ்ந்து காற்றில் அலைந்துகொண்டிருந்தது; மார்பும் படபடவென்று அடித்தவண்ணமாய் இருந்தது. தன்னுடனிருப்பது ஸ்திரீ ஜாதியென்பதைக் கவனிக்காமல் நல்ல நிசியில் குதிரையை வாயுவேகமாய்த் துரத்திப்போகும் மனிதனுடன் செல்ல எத்தனை ஸ்திரீகள் துணிந்து முன் வருவார்கள்! அல்லது கட்டாரிக் கைப்பிடித்திருக்கும்

Koviloor Digital Library


ஜெலேகாவைப்போன்ற பெண்ணுடன் அந்தச் சமயத்தில் காதல் பேச்சுப் பேச எவனாவது துணிந்திருந்திருப்பானு!

வெகு தூரம் வந்துவிட்டனர். வழியில் கிராமங்கள் மார்க்கமாய்ச் செல்லும்போது அர்த்த ராத்திரியில் தனியாய்ச் செல்லும் நமது பிரயாணிகளைப் பார்த்துச் சில நாய்கள் குரைத்தன. ஓரிடத்தில் சாலையோரத்துத் தரும சத்திரத்தில் ஒரு நெருப்பைச் சுற்றிச் சில ஈட்டிகள் வைக்கப்பட்டிருந்தன. ஜெலேகா தனது நுட்பமான விழிகளால் தூரத்திலிருந்தே அவற்றைக் கண்ணுற்றனள். அவ்விடத்தில் சில போர்வீரர்கள் படுத்திருக்கிறார்களென நிச்சயித்து நரேந்திரனைப் பின்னும் இறுகக் கட்டிக்கொண்டாள். நரேந்திரன், விஷயத்தை அறிந்துகொண்டான். சாலையை விட்டிறங்கி அரைமைல் சுற்றிப்போய்த் தரும சத்திரத்துக்கப்பால் மறுபடியும் சாலையை வந்துபிடித்தான். அப்போர் வீரர்கள் தங்களுடைய சத்துருக்களால் அனுப்பப்பட்டவர்களா, அல்லது ஆக்ராவுக்குக் கஜானாப் பணத்தைக் கொண்டு வரும் காவலாளிகளா என்னும் விஷயம் நமது நரேந்திரனுக்காவது ஜெலேகாவுக்காவது தெரியாது.

பாதி வழியாய்விட்டது. இருபது மைல் தூரம் வந்துவிட்டார்கள். குதிரையை ஒரு மரத்தில் கட்டிவிட்டு ஜெலேகாவைக் கீழே இறக்கினான். "உன் தைரியம்தான் என்ன தைரியம்! ஜெலேகா, உடம்பு களைப்பாயிருக்கிறதா? இனி நமக்கு அவ்வளவு பயமில்லையெனத் தோன்றுகிறது" என்றான் நரேந்திரன்.

"பயமில்லையென்று எப்படிச் சொல்லிவிடலாம். பேடிகளுடைய சமாசாரம் உனக்குத் தெரியாது."

"ஜெலேகா, ஆக்ராவை விட்டு, நாம் இருபது மைல் வந்துவிட்டோம். இவ்விடத்தில் குதிரை மாற்றவேண்டும்."

Koviloor Digital Library


"இருபது மைல் வந்துவிட்டாலென்ன? இருநூறு மைலாய் இருந்தாலும் அவர்கள் விடமாட்டார்கள். இந்தக் குதிரை மாற்றுமிடம் அவர்களுக்குத் தெரியாதா, உனக்கு மாத்திரந்தான் தெரியுமா?"

"சிறையிலிருந்து வந்தவன் விலங்குகளின் ஞாபகமாகவே இருப்பதுபோல் நீ இருக்கிறாய். எங்கே பார்த்தாலும் உனக்கு ஆக்ரா ஜனுனுவாகவே தோன்றுகிறது. அதோ! நமது குதிரை கனைக்கிறது; என் குதிரைதான் அது. எனக்கு அதன் கனைப்பு நன்றாய்த் தெரியும். சந்திரோதயமாய்விட்டது. இரண்டு மணி நேரத்துக்குள் நாம் நம்மிடம் போய்ச் சேர்ந்துவிடலாம்.

குதிரை கட்டியிருந்த மரத்தண்டை வந்தவுடன் ஜெலேகா நரேந்திரனைப் பார்த்து, "உன் குதிரையைப் பார். நிற்க முடியவில்லை; தள்ளாடுகிறது" என்றாள்.

கிட்ட நெருங்கிப் பார்த்தார்கள். பின்னங்கால்களில் இரண்டு பெருத்த கத்திக் காயங்கள்; குதிரை நிற்குமிடத்தில் இரத்தம் தேங்கியிருந்தது.

நரேந்திரன் திகிலடைந்து "இதென்ன சமாசாரம்?" என்றான்.

"என்ன சமாசாரம்? குருடனுக்குக்கூடத் தெரியுமே. நீ போகிற இடம் அவர்களுக்குத் தெரிந்துவிட்டது. உனது குதிரையைப் பின்தொடர்ந்து கால்களை ஒடித்துவிட்டனர். இதுதான் சமாசாரம்; நமது சத்துருக்கள் சுற்றுப் பக்கத்தில் ஒளிந்துகொண்டிருக்கின்றனர்."

"அந்த அற்ப நாய்கள் எங்கே ஒளிந்து கொண்டிருக்கின்றனர்?"

"இங்கே இருக்கமாட்டார்கள்; இது வெட்ட வெளியான இடம்; அதோ அந்தப் புதர்களில் ஒளிந்துகொண்டிருப்பார்கள். வேறெங்கும் ஒளிய இடமில்லை."

Koviloor Digital Library



"அவர்களை என்ன செய்கிறேன் பார்! இந்தக் கத்தியால் கண்டம் கண்டமாய் வெட்டியெறிகிறேன். எத்தனை நாழிதான் நம் கையில் அகப்படாமல் ஒளிந்து கொண்டிருக்கப் போகிறார்கள்?"

"அவசரப்படாதே. நீ சக்கரவர்த்தியவர்களுடைய தூதன்; ஞாபகமிருக்கட்டும். இந்த இருளில் நம்மை அவர்கள் இன்னும் பார்த்திருக்கமாட்டார்கள். காலொடிந்த குதிரையைக் கவனிக்க நமக்கு நேரமில்லை; அது இறக்க வேண்டியதுதான். நாம் அவர்களுக்குத் தெரியாமல் இந்த இடத்தை விட்டுச் சென்றுவிட வேண்டும். இன்னும் இருபது மைலிருக்கிறது. சீக்கிரத்தில் போய்விடலாம்."

முதல் குதிரையைக் கையில் பிடித்துக்கொண்டு நரேந்திரன் வேண்டாவெறுப்பாய் நடந்து சென்றான். நொண்டிக் குதிரையைவிட்டுப்பிரிய அவனுக்குச் சிறிதேனும் மனம் வரவில்லை; நிரபராதியான ஜந்துவைக் கொன்றவர்களைத் தண்டிக்காமல் செல்வது அவனுக்குக் கொஞ்சமேனும் சம்மதமில்லை.

சிறிது தூரம் நடந்து சென்றார்கள். குதிரைகளின் காலடிச் சப்தம் கேட்டது. எதிரே உற்றுப் பார்த்தார்கள். ஜெலேகா காண்பித்த புதரினின்று இரண்டு குதிரை வீரர்கள் வந்துகொண்டிருந்தனர்.

"ஜெலேகா! இந்தக் குதிரையை மரத்தடியண்டை கொண்டுபோ; அவர்கள் இரண்டு பேர்; நான் ஒருவன். இருந்தாலும், இந்தக் கற்பாறை துணையிருக்கிறது. பார்த்துக்கொள்வோம் போ."

குதிரையினின்று இறங்கினது முதற்கொண்டு நரேந்திரனையும் ஜெலேகாவையும் அக்குதிரை வீரர்கள் கவனித்துக் கொண்டிருந்து அவர்கள் அருகே வந்தவுடன் எதிர்நோக்கி வந்தனர். நரேந்திரன் கத்தியைக் கையிலெடுத்துக்கொண்டு

Koviloor Digital Library



ஒரு பெரிய கற்பாறையின்மீது சாய்ந்து நின்றான். ஆக்ராவி லிருந்து இருபது மைல் தூரம் ஒட்டத்தின்மேல் வந்ததால் களைப்புற்றிருந்த குதிரையை மரத்தில் கட்டிவிட்டு ஜெலேகா மரத்தின் பின்னர் மறைந்து நின்றாள்.

சக்கரவர்த்தியவர்களுடைய ஊழியர்களாகிய குதிரை வீரர்களுக்கு நரேந்திரனையும் ஜெலேகாவையும் நன்றாய்த் தெரியுமாதலால், கைகலந்து தாக்குமுன் நய வார்த்தைகளால் தமது காரியத்தைச் சாதிக்க முடியுமா என்று ஓர் ஆசை பார்த்தார்கள்.

"இன்றிரவு நீர் செய்யும் காரியத்துக்குப் பதில் சொல்லி யாகவேண்டும். உம்மை இலேசில் விடப்போகிறதில்லை."

"நான் சக்கரவர்த்தியவர்களுடைய காரியார்த்தமாகச் செல்கிறேன். இராஜ தூதத்தின் காலை வெட்டி ராஜதூதனை வழிமறிக்கும் கொள்ளைக்காரர்களைச் சரியானபடி தண்டித்து அவ்விஷயத்தை நான் எனது .எஜமானர் சக்கரவர்த்தி யவர்களுக்குத் தெரிவிப்பேன் ; ஜாக்கிரதை !"

"ஆஹா, ராஜ தூதர்கள் செய்யும் வேலைதானே நீர் இப்போது செய்வது! பேஷ்! நல்ல வேலை செய்தீர்! அரண்மனை அடிமைப் பெண்ணை அப்படியே தூக்கி வந்து விட்டீரே! நரேந்திரநாத், உமது குற்றத்துக்கு என்ன தண்டனை, தெரியுமா? மரண தண்டனை; ஞாபகமிருக்கட்டும்; ராஜ தூதரே, உம்மை இம்முறை மன்னிக்கிறோம். நீர் உமது வழி செல்லலாம். உம்மைப்பற்றி எங்களுக்கு அவசியமில்லை. ஜோத்பாய் அடிமையைத்தான் நாங்கள் தேடிவந்தோம். அவளை விட்டுவிட்டு நீர் சுகமே உமது வழி போகலாம். அவளைத்தான் பிடித்துக்கொண்டு வரும்படி எங்களுக்கு உத்தரவு."

Koviloor Digital Library


"அன்றையதினம் கள்ளிருளில் ஒரு பெண்ணைக் குத்திக் காயப்படுத்தியது ஸேர்தபாய் இராவியாரின் உத்தரவின் பேரிலா அல்லது உங்களுடைய எஜமானன் முல்ரூருடைய காரியமா அது? அந்த மானங்கெட்ட பேடியின் பேச்சைக் கேட்டு இங்கே வந்தீர்களே. அவனிலும் கேடுகெட்ட குட்டிச் சுவர்களே! வாருங்கள், உங்களை இந்தக் கத்திக்கு இரை யாக்கிவிட்டு மறுவேலை பார்க்கிறேன். ஜீவராசிகள் எவை யாயினும் சரி, அவை அநியாய மரணமடைவதைக் கண்டு சும்மாவிரேன். கொலைப்பாதகர்களைத் துவம்ஸஞ் செய்தே தீருவேன்."

"கள்ளிருளில் ஒருவரையொருவர் குத்திக் காயப்படுத்திய சங்கதியொன்றும் எங்களுக்குத் தெரியாது. அரண்மனையிலிருந்து ஓடிவந்துவிட்ட ஜெலேகாவை எங்கள் வசம் ஒப்புவிக்கும்படி ராஜ உத்தியோகஸ்தராகிய உம்மைக் கேட்கிறோம். பதில் என்ன?"

"சரி, ஜெலேகாவைப் பிடித்துவரும்படி உங்களுக்குக் கொடுக்கப்பட்ட ராஜகட்டளை எங்கே? காண்பியுங்கள். அரசர் குதிரையைக் காலொடித்து இராஜதூதனை வழி மறிக்கும்படி உங்களுக்கு இடப்பட்ட உத்தரவு எங்கே? எனக்கு வேறோர் உத்தரவும் வேண்டாம். உமது எஜமானர் முல்ரூர் உத்தரவு துரும்புக்குச் சமானம்; ராஜ உத்தரவைக் காண்பித்துவிட்டு ஜெலேகாவை அழைத்துப் போகலாம்."

இனி வாய் வார்த்தையில் பயனில்லையென்று குதிரை வீரர்கள், "அரண்மனையை விட்டு ஓடிவந்துவிட்ட, அதோ நிற்கும், அந்த அடிமைப் பெண்ணை வெளிக்கடத்தியதற்காக, காலைய சூரியோதயத்துக்குள் நீர் பதில் சொல்ல வேண்டி வரும்"என்று சொல்லிக்கொண்டே நரேந்திரனைத் தாக்கினர்.

Koviloor Digital Library


"நாளைய சூரியோதயத்துக்குள் நான் பதில் சொல்ல வேண்டும்! சக்கரவர்த்தியினுடைய குதிரையின் காலை ஒடித்ததற்கு நீ இப்போதே பதில் சொல்லப்போகிறாய்" என்று சொல்லிக்கொண்டே நரேந்திரன் திடீரென ஒரு குதிரைவீரன்மீது பாய்ந்து, கத்திப் பிடியால் ஒரு பலமான அடி அடித்து அவனைக் கீழே உருட்டித் தள்ளிவிட்டு, "இதோ, என் குதிரைக்குப் பதில் இந்தக் குதிரை". என்று அக்குதிரையின்மீது ஏறிக்கொண்டான்.

ஜெலேகாவும் தனது கட்டாரியால் இன்னொருவனை இடது கையில் வலிவாய்க் குத்தினாள். 'எங்கே இன்னுமொரு குத்து விழுமோ எனப் பயந்து அவன் கீழே குதித்துவிட்டான். உடனே ஜெலேகாவும் ஒரு குதிரையின்மீது ஏறிக்கொண் டாள். இரண்டு வீரர்களும் கோபாவேசத்துடன் தங்க ளுடைய கத்திகளைக் கையிலெடுத்துக் கொண்டனர். ஆனால் நரேந்திரனுக்கு அவர்களை மறுபடியும் தாக்கிக் காயப்படுத்த விருப்பமில்லை.

"போய் விடுங்கள், இவ்விடத்தில் உங்களுடைய கோபத்தைக் காட்டி அவமானமடைய வேண்டாம். ஜாஸ்தி பேசினால் முஸ்ரூர் கதியாகும் உங்கள் கதியும். முஸ்ரூரைக் குத்திப் படுக்கவைத்த பெண்முன் நீங்கள் எம்மாத்திரம்? திரும்பிப்போய் முஸ்ரூரிடம், 'ராஜ தூத ருடைய குதிரையைக் கொன்றோம். அதற்குத் தண்டனை யாக எங்களுடைய குதிரைகளை இழந்தோம்' என்று சொல்லுங்கள். காலொடிந்த குதிரையையும் கையொடிந்த மனிதனையும் ஜாக்கிரதையாய்ப் பார்த்துக்கொள்ளுங்கள். இன்றைக்கு நீங்கள் தலை தப்பினது தம்பிரான் புண்ணியம். என்றைக்காயினும் ஒருநாள் நீங்கள் தூக்குமரத்தில்

Koviloor Digital Library


தான் பிராணனை விடவேண்டியவர்கள்" எனக் கூறினான் நரேந்திரன்.

எதிர்ப்பதில் பயனில்லை என அறிந்து, காயப்பட்டவன் தனது நண்பன்மீது சாய்ந்துகொண்டு இருவருமாய்ப் போய்விட்டார்கள்.

நரேந்திரனும் ஜெலேகாவும் இன்னொரு வழியாகச் சென்றார்கள். குதிரைகளிரண்டும் சுறுசுறுப்பான குதிரைகள். ஜில்லென்று காற்று அடித்துக்கொண்டிருந்தது. இருவரும் குதிரைகளை வேகமாய்த் தூரத்திச் சென்றனர். ஜெலேகா தலைதெரியாத வேகத்தில் முன்னர் சென்றாள்; நரேந்திரனால் அவளுக்குச் சரியாய்ப் போகமுடியவில்லை. அவளுடைய தலைமயிரெல்லாம் அவிழ்ந்து காற்றில் பறந்துகொண்டிருந்தது; ஆடைகளெல்லாம் அலங்கோலமாய் விழுந்து கிடந்தது. அவள் இந்தக் கோலத்தில் ஒரு சிரிப்பும் சிரித்துக் கொண்டிருந்தாள்; வெள்ளை வெளேரென்றிருந்த அவளுடைய கைகள் சேணத்தைப் பிடித்துக்கொண்டிருந்தன; அவள் அப்போது ஆகாயத்தில் பறந்துசெல்லும் தேவலோக கன்னிகையை ஒத்திருந்தாள். வழி முழுவதும் அதே வேகத்தில் சென்றார்கள். நரேந்திரனுடைய கூடாரம் கண்ணுக்குத் தென்பட்டவுடன் அவர்கள் நின்றுவிட்டார்கள்.

நரேந்திரன் கீழே இறங்கிக் குதிரைமீதிருந்த ஜெலேகாவின் அருகில் வந்தான். அவள் தோற்றத்தைப் பார்த்தான்; பிரமித்துப் போய்விட்டான். அவள் குதிரைமீது இலாகவமாய் உட்கார்ந்திருந்தது விண்ணுலக மாது வீற்றிருந்தது போலிருந்தது.

அவளுடைய முகம் சிவந்திருந்தது; நெற்றியில் வியர்வைத் துளிகள் அரும்பி இருந்தன. அப்போது

Koviloor Digital Library



சூரியோதய காலம்; கதிரவனது செங்கிரணங்கள் முகத்தின்மீது விழ, அவளுடைய பிரகாசமான கண்கள் வைரக்கற்கள்போல ஜ்வலித்தன; அவளுடைய முகத்தில் ஒரு குறும்பான புன்னகை தவழ்ந்தது. கூரிய விழிகளிலும் அதே குறும்புப் பார்வை; அதரங்கள் சிறிதே திறந் திருந்தன. கூந்தல் அவிழ்ந்து, நெற்றி, புஜங்கள் இவை களின்மீது விழுந்து கிடந்தது; ஆடை தாறுமாறுய்க் கலைந்திருந்ததால் அவளுடைய மார்பும் வயிறும் விம்முவது வெளிக்கு நன்ருய்த் தெரிந்துகொண்டிருந்தது. இவ்வளவு அலங்கோலங்களுக்கிடையிலும் அவளுடைய முகத்தின் வசீகர சக்தியையும் அவளுடைய துடியிடையின் அழகை யும் கண்டு நரேந்திரன் மையல்கொண்டான்.

குதிரைமீதிருந்து கீழே குதித்தாள். நரேந்திரன் ஜெமேலகாவை விழவொட்டாமல் கையில் பிடித்துக்கொண்டு அவள் கன்னத்தில் ஒரு முத்தங் கொடுக்க எத்தனித்தான். அவள் உடனே அவன் பிடியினின்று தன்னை விடுவித்துக் கொண்டு சற்று அகலப் போய் நின்று சிரித்தாள்; நரேந்திரன் விழித்தான்.

உடனே அவள் அன்பாய் அவனிடம் வந்து நய வார்த்தைகள் பேசினுள். அப்போது அவள் விழிகளில் நீர் ததும்பிற்று.

"போர்வீரா, தேசமற்றுத் திக்கற்று அனுதையாய் இருந்த அடிமைப் பெண்ணின் பொருட்டு நீ எவ்வளவோ சாகசங்கள் புரிந்து கடைசியில் அவளை அந்த அடிமை விலங்கினின்றும் விடுவித்தாய். உனது குணம் என்ன மேன்மையான குணம்! எனது பெற்ருேர்கள் செய்த புண்ணியம் உன்னை ஆக்ராவுக்கு இழுத்தது; என்னை

Koviloor Digital Library



அடிமைத்தளையினின்றும் விடுவித்தது; நரேந்திரா, நாம் இன்றையதினம் ஒருவரைவிட்டு ஒருவர் பிரிகிறோம். ஆனால் தார்த்தாரிப்பெண் செய்நன்றியை என்றைக்கும் மறக்காதவள். ஜெலேகா தனது பிராண நேசனைக் கனவிலும் மறந்திருக்கமாட்டாள்.

நரேந்திரன் பதில்மொழி கூற யோசித்தாவதற்குள் அவள் மறைந்துவிட்டாள். தனக்கு ஆக்ராவினின்று வழிகாட்டிவந்த ஒரு முகம்மதியப் பெண் திடீரென மறைந்துவிட்டாளெனச் சொல்லி அவன் தனது ஆட்களைவிட்டு அப்பெண்ணைத் தேடும்படிச் சொன்னான். அவர்களும் காடு மேடெல்லாம் தேடித்திரிந்தும் பயன்படவில்லை. ஜெலேகா கடைசியாய்க் கூறிய வார்த்தைகளையும், அப்போது அவள் கண்களில் ததும்பிய கண்ணீரையும் நரேந்திரன் நினைத்து நினைத்துப் பார்த்தான். என்னதான் யோசித்தாலும் அப்பெண்ணின் நிஜ ஸ்வரூபம் அவனுக்கு விளங்கவில்லை.

மாதவீ கங்கணம்

இரண்டாம் பாகம்

முற்றிற்று.



Koviloor Digital Library

# விஷ விருக்ஷம்

**310 - பக்கங்கள் :: :: விலை ரூ. 1—8—0**

பங்கிம் சந்த்ர சட்டோபாத்யாயர் 4102

வங்காளியில் எழுதியதன் தமிழ் மொழிபெயர்ப்பு

ஸ்ரீ டி. என். குமாரஸ்வாமி, பி.ஏ.,

(மிக்க அழகாய் மொழிபெயர்த்தவர்)

## பத்திரிகைகளின் புகழுரைகள்

ஜோதி :—சம்பவங்கள் கண்முன் நடப்பவைபோல், துரிதமாக ஒன்றன்பின் ஒன்ருக வந்து, வாசகர்கள் மனத்தைக் கவர்ந்து, கதை முடியுமுன், கீழே வைக்க முடியாதபடி செய்கின்றன.

ஜயபாரதி :—*முதல் நூலிலிருந்த நயத்தையும், அழகையும், வர்ணனையையும், இம்மொழிபெயர்ப்பில் இருப்பதைவிட அழகாக மொழிபெயர்க்க முடியாது.

தினமணி :—* 'நரேந்திர தத்தன் படகில் செல்லப் புறப் பட்டான்' என்ற வரியைப் படிக்கத் தொடங்கிவிட்டால் போதும்; புஸ்தகத்தை முடிக்கும்போதுதான் ஒரு ரஸிகன் மூச்சுவிடுவான். அத்தகைய மோகன சக்தியுடன் கதை செல்கிறது.

மணிக்கொடி :—* கதை சுவாரஸ்யம் என்று சொல்லி விட்டால் மாத்திரம் போதாது. அதில் ஆங்காங்கே சித்தரிக்கப்பட்ட வர்ணனைகளும், கம்பீரமான கற்பனைகளும் மிகவும் இன்புறுத்து கின்றன. * இலக்கிய மணம் கமழும்படி, இனிய நடையில், ரொம்ப அழகாக மூலத்திலிருந்து கொண்டுவந்திருக்கிருர்.

தாருல் இஸ்லாம் —* இக்கதையை மிகத் திறம்பட வரைந் திருக்கிருர். கதைப்போக்கு படிப்பவர் உள்ளத்தை மேன்மேலும் தூண்டி ஈர்த்துக்கொண்டே செல்லக்கூடியதாய் அமைந்திருக்கிறது. தமிழ் மக்கள் இந்நவீனத்தைப் படித்துப் பெரிதும் பயன்பெறுவார் களாக.

---

அல்லயன்ஸ் கம்பெனி, மயிலாப்பூர், சென்னை.

Koviloor Digital Library

# இந்திரா

ஆசிரியர் : ஸ்ரீ பங்கிம் சந்த்ர சட்டோபாத்யாயர்

மொழிபெயர்ப்பாளர் : ஸ்ரீ. எஸ். குருஸ்வாமி, பி.ஏ.

—— விலை அணா 12 ——

முதற் பதிப்பு வெளிவந்து 3-மாதங்களுக்குள்,
பூராப் பிரதிகளும் செலவாகிவிட்டன
வெனில், இந்நூலின் உயர்வைப்
பற்றி விவரிக்க வேண்டுமோ ?

## பொருளடக்கம்



### சித்திரங்கள்



---

அல்லயன்ஸ் கம்பெனி, மயிலாப்பூர், சென்னை.

Koviloor Digital Library

# ஆனந்த மடம்

பங்கிம் சந்த்ரர் வங்காளியில் எழுதியது

ஸ்ரீ. த. நா. குமாரசுவாமி, பி. ஏ.

திருத்திக்கும் வண்ணம் மொழிபெயர்ந்தது

ரூ. 1—4—0

## இதைப்பற்றிய முக்கிய அபிப்பிராயங்கள்

**The Hindu :**—The translation into Tamil *has been done remarkably well.*

நனவணிகன் :—*தமிழ் மக்கள் அவசியம் படிக்கவேண்டிய நூல்களுள் இது ஒன்று. மொழிபெயர்ப்பு அருமையாய் இருக்கிறது. கண்கவர் முறையில் அமைந்த புத்தகம்.

கலா சேவகி :—சொல் அமைப்பு இலகுவாயும், கற்பனை வெகு நேர்த்தியாயும் கதைப்போக்கு விருவிருப்பாயும் இருக்கிறது.

நவசக்தி :—இந்தியாவுக்குச் சுதந்திர உணர்ச்சி ஊட்டியது ஆனந்த மடம். மொழிபெயர்ப்பு நன்ருயிருக்கிறது.

ஹனுமான் :—இக் கதையின் போக்கே நூதன வசீகரம் படைத்தது. தேசீய ஆவேசத்தை ஊட்டும் இந்த நவீனத்தைப் படிக்கும்போது, ஒரு கதையைப் படிப்பதுபோன்ற உணர்ச்சியே நமக்கு ஏற்படவில்லை. மொழிபெயர்ப்பு என்ற எண்ணமும் நமக்கு உண்டாகவில்லை. எளிய லளிதமான தமிழ்நடை. உயர்ந்த நாவல். நல்ல மொழிபெயர்ப்பு.

மணிக்கொடி :—பங்கிம் பாபுவின் மூலத்திலுள்ள வேகம் பூராவையும் கொண்டுவந்திருக்கிருர். அழகான வர்ணனைகளை நன்றக மொழிபெயர்த்திருக்கிறர்.

கலைமகள் :—வர்ணனைகள் எல்லாம் தத்ரூபமாகக் கண்முன் வந்து நிற்கின்றன. இயற்கை வர்ணனைகளை அநாயாசமாகப் படம் பிடித்துக் காட்டுகிருர். அரண்யத்தின் காட்சிகள், பஞ்சத்தின் கொடுமை, ஆனந்த மடம், சந்தானர்களின் போர் முதலியவை உயர்ந்த சித்திரங்கள்.

---

அல்லயன்ஸ் கம்பெனி, மயிலாப்பூர், சென்னை.

Koviloor Digital Library

# ர ஜ னி

ஆசிரியர்: ஸ்ரீ பங்கிம் சந்த்ர சட்டோபாத்யாயர்

மொழிபெயர்த்தவர்: ஸ்ரீ எஸ். குருஸ்வாமி, பி. ஏ.

—— விலை 0—12—0 ——

*The Hindu*.—This, the 6th Volume of the series of Tamil Translations by Bankim Chandra's Novels published by the Alliance Company, is, as usual, attractively got up. *The Translation is good on the whole.

*தனவணிகன்.— * உலகில் மனிதர்கள் அனைவரும் எதை விரும்புகிறார்கள்? பணமா? கீர்த்தியா? மரியாதையா? அழகா? ஆரோக்கியமா? பலமா? அறிவா? கல்வியா? தர்மமா? சிநேகம், அன்பு, காதல் முதலியவைகளா? என்கிற பல பிரச்னைகளைக் கிளப்பி, ஆசிரியர் அதற்குத் தகுந்த பதிலளிக்கும் பாகம் இப்புத்தகத்தில் வெகு அருமையாக விருக்கின்றது. இது ஒரு குருட்டுப் பெண்ணின் கதை. ஸ்ரீ பங்கிம் சந்த்ரர் தலைசிறந்த நவீனங்களில் ஒன்றெனின் அது மிகையாகாது.*

*“ஈசுவரனுடைய போக்கு விசித்திரமானதென்று எனக்கு அந்த சமயம் தெரியாது. அவருடைய சம்ஸார சக்கரம், தயை தாக்ஷிண்யமின்றி அவர் நியமித்த பாதையில் சுழன்றுகொண்டே இருக்கிறது. ஏழையாயிருந்தாலும் பணக்காரனா யிருந்தாலும், இல்லாதவனாயிருந்தாலும், அப்பாதையில் அகப்பட்டுக்கொண்டால் நசுக்கப்படுவான். நான் குருடியா யிருப்பதால் எனக்காக சம்சார சக்கரம் இன்னொரு பாதையில் செல்லாது” என்று ரஜனியின் வார்த்தைகளில் ஆசிரியர் தமது கருத்தைப் பலவிடங்களில் திணித்திருக்கிறார்.*

*இக்கதை நல்ல போக்கில் அமைந்திருக்கிறது. சுருங்கக் கூறின், ஆசிரியர் தமது கலைத்திறனை வெகு அழகாக இக்கதையில் புகுத்தியிருக்கிறாரென்று கூறிவிடலாம்.* மொழிபெயர்ப்பு நன்றா யிருக்கிறது. எளிய இனிய நடை. வாசகர்களுக்கு இன்பமூட்டும் என்பதில் ஐயமில்லை. அல்லயன்ஸ் கம்பெனியார் புத்தகங்களை அழகாக அமைப்பதில் கைதேர்ந்தவர்கள். *அதற்கு இப்புத்தகமும் ஓர் உதாரணமாகும்.*

---

அல்லயன்ஸ் கம்பெனி, மயிலாப்பூர், சென்னை.

Koviloor Digital Library

# விஜயா

டாக்டர் சரத் சந்த்ர சட்டர்ஜி எழுதிய நாவல்களுள் முதன்மையானது. "இந்திரா", "ரஜனி" என்னும் பங்கிம் சந்த்ரர் நாவல்களை மொழிபெயர்த்த ஸ்ரீ S. குருஸ்வாமி பி. ஏ. தமிழில் மொழிபெயர்த்தது.

——— ரூ. 1—8—0 ———

ஜோதி :—"வாசிப்பதற்குச் சுவையாயிருக்கிறது. ஸ்ரீ குருஸ்வாமி, இதைச் சுவை குன்றாமல் மொழிபெயர்த்திருக்கிறார்.

கலைமகள் :—"இந்நவீனம் படிப்பதற்கு மிக்க ஸ்வாரஸ்யமாயிருக்கிறது. ஒவ்வொரு புத்தகாலயத்திலும் வைப்பதற்கேற்ற நூல்.

**The Mail :—The style of the translation is good & expressive and the story is free flowing.**

ஜயபாரதி :—"மொழிபெயர்ப்பு நடை சிறப்பா யிருப்பதைக் குறிப்பிட வேண்டும். சரளமான பாஷையில், சொந்தத் தமிழ்க் கதைபோல், 'அந்நிய' சொற்றொடர் இல்லாமல் மொழிபெயர்த்திருப்பதை, தமிழ் இலக்கியத்திற்கு ஒரு தொண்டெனக் கூற வேண்டும். புஸ்தகம் அச்சுப் பிழையில்லாமல் அழகாக அச்சிடப்பட்டிருக்கிறது. நல்ல பைண்ட் கட்டடத்திலிருக்கும் இப்புத்தகம் பிரசுராலயத்திற்குப் பெருமை யளிப்பதாகும்.

ஹிந்துஸ்தான் :—" நடை, மிகத் தெளிவாகவும், நயமாகவும் இருக்கிறது. " புத்தகக் கட்டடத்தின் அழகுக்கு அல்லயன்ஸ் கம்பெனியார் புகழ்பெற்றவர்கள். விஜயாவின் அமைப்பு வனப்பு மிகுந்ததா யிருக்கிறது.

குமரன் :—" ஆடவரும் பெண்டிரும் படித்து இன்புறலாம். இதுமாதிரி வங்காள மொழியிலுள்ள பல இனிய கதைகளையும், நாவல்களையும் மொழிபெயர்த்துத் தமிழுலகுக்குத் தந்துவரும் அல்லயன்ஸ் கம்பெனியாரின் தொண்டு பெரிதும் போற்றத்தக்கது.

பாரத மணி :—" ஸ்ரீ குருஸ்வாமியின் மொழி பெயர்ப்பு, வாசிப்பதற்கு எளிதாகவும் 'நல்ல ஓட்டம் கொண்டதாகவும் இருக்கிறது. கலிக்கோ பைண்டில், இவ்வளவு அழகாக, ரூ. 1—8—0 விலைக்கு 300 - பக்கங்கள் கொடுத்திருப்பது அல்லயன்ஸ் கம்பெனியாரின் சிறப்பாகும்.

---

அல்லயன்ஸ் கம்பெனி, மயிலாப்பூர், சென்னை.

Koviloor Digital Library

# ஸேவாஸதனம்

கவி சக்கரவர்த்தி ப்ரேம சந்த் ஹிந்தியில் எழுதியதை ஸ்ரீமதி அம்புஜம்மாள் சிறப்பாய் மொழிபெயர்த்தது.

ப்ரேம் சந்தின் நவீனங்கள் பல உள்ளன. அவற்றுள், " ஸேவாஸதனம் மிகவும் சிறப்புற்றது என்பது இலக்கிய அன்பர்களின் கருத்து."

விலை ரூ. **1—4—0**

## பொருளடக்கம்

(1) சர்மாவின் சங்கடம், (2) லஞ்சத்தின் வஞ்சம், (3) கலியாணமும் குடித்தனமும், (4) தாசிவீட்டில் கச்சேரி, (5) ஆசார அனுஷ்டானம், (6) பூந்தோட்டம் - புதிய நட்பு, (7) தீபாவளி இரவு, (8) அபவாத வம்பு, (9) தாசிவீட்டில் அடைக்கலம், (10) மோஹன் வரவு, (11) டால்மண்டி வீதி, (12) மோஹன் படிப்பு, (13) நவரத்தின மாலை, (14) விட்டல்தாஸின் போதனை, (15) சுமதியின் நிபந்தனை, (16) மாலை அகப்பட்டது. (17) மீட்கப்பட்டாள், (18) சாஸ்திரியும் சந்நியாசியும், (19) மோஹன் திரும்பினான், (20) இன்ஸ்பெக்டர் விடுதலை, (21) சாந்தை கல்யாணம், (22) சர்மாவின் சங்கல்பம், (23) தந்தையும் இறந்தார், (24) அக்காளும் தங்கையும், (25) காதல் பிச்சை வேண்டாம், (26) கரையேற வழி, (27) சாந்தையின் சோகம், (28) வெளியேறிய காரணம், (29) அண்ணாவின் கோபம், (30) உமாபதியின் உபதேசம், (31) பிரிந்தவர் கூடினர், (32) தீன ஜன ஸேவை.

## சில முக்கிய அபிப்பிராயங்கள்

நவசக்தி :—இப்புத்தகம் நல்ல காகிதத்தில் அச்சிடப்பட்டிருக்கிறது. மொழிபெயர்ப்பும் தெளிவாய் இருக்கிறது. ப்ரேம் சந்தின் நவீனங்களிலே மிகச் சிறந்தது " ஸேவாஸதனம் ". இது அழகாக மொழிபெயர்க்கப்பட்டிருக்கிறது.

கலைமகள் :—* மூலத்தின் சுவை குன்றாமல் வெளியிடப்பட்டிருக்கிறது. மொழிபெயர்த்தவர் ஹிந்தியில் மிக்கத் தேர்ச்சி பெற்ற ஸ்ரீமதி அம்புஜம்மாள் என்பது எல்லோரும் அறிந்த விஷயமாகும் ; இம்மொழிபெயர்ப்பிலும் அவரது திறமை நன்கு வெளியாகின்றது.

---

அல்லயன்ஸ் கம்பெனி, மயிலாப்பூர், சென்னை.

Koviloor Digital Library

# இளைஞன் கனவு

## தேச கௌரவ ஸ்ரீ சுபாஷ் சுந்திர போஸ்

வங்காளியில் எழுதியது

*இனிமையான தமிழில் மொழிபெயர்த்தவர்*

**ஸ்ரீ த. நா. குமாரசுவாமி, பி. ஏ.**

யாவரும் படிக்கவேண்டியது

——— ரூ. **1—4—0** ———

இந்நூலைப்பற்றிய மதிப்புரைகளிற் சில

ஹனுமான் :—" *கடிதங்களினிடையே வேதாந்தம், நிர்மாண வேலை, தேச ஒற்றுமை தன்னலத் தியாகம் இவைபற்றிய சிந்தனைகள் ஆங்காங்கே சிதறிக் கிடக்கின்றன. மிக மனோகரமான நடையில் ஸ்ரீ குமாரசுவாமி மொழிபெயர்த்திருக்கிறார். படிப்பவர் உள்ளத்தில் ஓர் எழுச்சியை உண்டாக்கக்கூடிய நூல். மேல்நாட்டுச் சிறந்த பதிப்புகளுடன் போட்டி போடக்கூடிய அருமையான பதிப்பு.*

ஜோதி :—" *ஸ்ரீ போஸ் உயர்ந்த லக்ஷ்யத்தை உடையவர்; துறவு மனப்பான்மை பூண்டவர். இந்த இரண்டு தன்மைகளும் இந்நூலில் நன்கு பிரதிபலிக்கின்றன.*

சங்கநாதம் :—இந்நூலை, அரிய இலக்கிய நூல்களுடன் சேர்க்க வேண்டும். ஸ்ரீ சுபாஷ் போஸ், வங்காளியில் செய்த பிரசங்கங்களையும், 1926, 1927-ஆம் ஆண்டுகளில், மாந்தலாய் முதலிய சிறைகளில் இருந்த காலத்தில், அவர் பல நண்பர்களுக்கு எழுதிய கடிதங்களையும் திரட்டி, " இளைஞன் கனவு " என்ற புத்தக ரூபமாக வங்காளியில் வெளியிடப்பட்டு பல பதிப்புகள் செலவாகி யிருக்கின்றன. ஷெ நூலை, முதல் நூலிலிருந்து மிக்க அழகாகவும் அர்த்த புஷ்டி சிறிதும் மாறாமலும், ஸ்ரீ த. நா. குமாரசாமி, பி. ஏ. அவர்கள் மொழிபெயர்த்திருக்கிறார். இக்கடிதங்கள் சுவை உணர்ச்சி கொண்டவை. ஸ்ரீ சுபாஷ் பாபுவின் தற்கால அரசியல் போக்கை ஆதரிக்காதவர்களுக்கூட இப்புத்தகத்தை ஓர் இலக்கியமென்று கருதிப் படிக்கவேண்டும்.

பாரதமணி :—ஸ்ரீ சுபாஷின், ' *அன்னையின் அழைப்பாக ' தன் வங்கச் சகோதரர்களைத் தட்டி எழுப்பும் உருக்கமிகுந்த உபதேசத்தைப் படிக்கும் ஒவ்வொருவருக்கும் இரத்தம் கொதிப் படையாமல் இருக்கமுடியாது.*

---

**அல்லயன்ஸ் கம்பெனி, மயிலாப்பூர், சென்னை.**

Koviloor Digital Library 4162

# துர்க்கேசநந்தினி

பங்கிம் சந்திர சட்டோபாத்யாயர் இயற்றியது.

வங்காளி மூலத்திலிருந்து மொழிபெயர்த்தவர் :

ஸ்ரீ கு. ப. ராஜகோபாலன், பி.ஏ. :: ரூ. 1-4-0

இந்நூலைப்பற்றி ஜோதி பத்திரிகை எழுதுவது

"வங்க சாஹித்ய தடாகத்திலே மலர்ந்து பிரகாசித்த மலர் பங்கிம் சந்திரர். அந்த மலரின் முதல் இதழ் இந்த துர்க்கேசநந்தினி என்னும் நாவல்."

விமலா விளக்கைப்போன்ற ஜோதி: திலோத்தமை இளம் சந்திரப்பிரபை; ஆயிஷா பால சூரியப் பிரகாசம்.

இளவேனிற் காலத்துப் பூங்கொடி; இளங்காற்றில் இங்கு மங்குமாகத் துவளும்பொழுது யார்தான் அதன் அருகே சென்று நின்றுகொண்டிருக்க மாட்டார்கள்? கோடை காலத்துக் காற்றில் படர்ந்த மரத்துடன் கீழே விழுந்து கிடக்கும் கொடியை யார் சீந்துவார்கள்? —பக்கம் 142.

திலோத்தமையைப்பற்றி ஜகத்ஸிங் அடைந்த மனோ வேதனையைப் பங்கிம் பின்வரும் வாக்கியங்களால் எப்படிச் சித்தரிக்கிறார் பாருங்கள் :

காரிருள் நிறைந்த ஆகாயத்தைப் பார்த்தான். அதேவிதமாக இருள் நிறைந்த தன் ஹ்ருதயத்தையும் ஆராய்ந்து பார்த்தான். பால்ய யுவதசையின் நினைவுகள் வந்தன. அதில் மனம் லயித்து ஆறுதல் பெற்றது. "ஆழ்ந்த தூக்கத்தில் கனவு கண்டாள். தூங்கும் முகத்தில் புருவ நெறிப்புத் தோன்றிற்று. தூக்கத்தின் அடையாளம் தென்பட்டது. உதடுகள் துடித்தன. நெற்றியில் வியர்வை உண்டாயிற்று. கைவிரல்கள் இறுக மூடிக்கொண்டன. திடீரென்று விழித்துக்கொண்டாள்.

ஈசுவர சிருஷ்டியின் விபரீதமான விதியென்னவென்றால் பர்வதத்தின் பாறையில் மிருதுவான கொடி முளைத்து ஓங்குகிறது. கடலின் கார்நீரில் ரத்தினங்கள் உண்டாகின்றன. தரித்திரர்கள் வீட்டில் கட்டழகிகள் பிறக்கிறார்கள். —பக்கம் 164.

மொழிபெயர்ப்பு மிக நன்றாயிருக்கிறது. அல்லயன்ஸ் கம்பெனியாருடைய எல்லாப் பிரசுரங்களைப் போலவே இந்த துர்க்கேசநந்தினியும், அச்சு பதிப்பு முதலிய எல்லா வகையிலும் நன்றாக இருக்கிறதென்று நாம் சொல்லாமலே வாசகர்கள் தெரிந்துகொண்டு விடுவார்கள்.

---

அல்லயன்ஸ் கம்பெனி, மயிலாப்பூர், சென்னை.

Koviloor Digital Library

# மாதங்கினி

## (முரட்டுத் தூர்த்தனின் தூய மனைவி)

வங்காளி மூலத்திலிருந்து டி. என். குமாரசுவாமி, பி. ஏ.
அழகாய் மொழிபெயர்த்தது

— ரூ. 1—0—0 —

நவசக்தி :—மொழி பெயர்ப்பு நடை நன்றாயிருக்கிறது. புஸ்தகம் அழகாக அச்சிடப்பட்டிருக்கிறது. ஆங்காங்கே கதையில் வரும் சந்தர்ப்பங்களுக்குத் தக்கபடி சித்திரப் படங்களும் வரையப்பட்டிருக்கின்றன. புத்தகம் கண்ணைக் கவரும் வனப்பு வாய்ந்ததா யிருக்கிறது.

ஹிந்துஸ்தான் :—கதைக் கட்டுக்கோப்பு அழகு, ஜீவன் ததும்பும் கதா பாத்திரங்கள், நயமான நடை இவை அனைத்துக்கும் பெயர்போனது பங்கிம் சந்த்ரரின் நவீனங்கள்.

பங்கிம் சந்திரரது "ஆனந்த மடம்" "விஷவிருக்ஷம்" முதலிய நவீனங்களை மொழிபெயர்த்த ஸ்ரீ. த. நா. குமாரசுவாமியே இதையும் மொழிபெயர்த்திருக்கிறார். விதிவசத்தால், ராஜமோஹன் என்ற முரட்டுத் தூர்த்தனுக்கு மனைவியாக வாய்க்கிறாள் மாதங்கினி. தனது புருஷன் நடத்தை அவளுக்குப் பிடிக்கவேயில்லை. புருஷனிடம் பக்தி, தீமையினிடம் வெறுப்பு இவ்விரு லக்ஷ்யங்களிடையே ஊசலாடுகிறது மாதங்கினியின் உள்ளம். முடிவில், தனது புருஷனது கோபாவேசத்துக்கும் துணிந்து, அவனது திட்டங்கள் பாழாகும்படிச் செய்துவிடுகிறாள். இந்தத் தர்ம சங்கடமான நிலைமையில் மாதங்கினி படும் அவஸ்தைகளைப் படிக்கும்போது நமக்குக் கண்ணில் ஜலம் வந்துவிடுகிறது. இனிமையான தமிழில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது இப்புத்தகம். கெட்டியான காகிதத்தில் பல படங்களுடன் கூடியது.

—— விலை ரூ. 1—0—0 ——

---

அல்லயன்ஸ் கம்பெனி, மயிலாப்பூர், சென்னை.

KVC0141 Noolaham Digital Library 4102

# தேவி சௌதுராணி

பங்கிம் சந்த்ரர் உயர்தரமான நாவல்களுள் ஒன்று. வங்காளியிலிருந்து மொழிபெயர்த்தவர் ஸ்ரீ. கு. ப. ராஜ கோபாலன், பி. ஏ. எல்லோராலும் புகழப்படும் நூல்.

—— ரூ. 1—4—0 ——

The Mail :—The Alliance Company have rendered valuable service to the cause of Modern Tamil Literature by their Publications which include collections of Original Tamil Short Stories and a series of Translations of Hindi & Bengali Novels. Bankim's Novels are of absorbing interest, possessing the 'take it and finish' Quality. They are based on facts of history, and the best ideals are inculcated by them.

* * *

தினமணி :—* எல்லோருடைய மனதைக் கவரும் வண்ணம் வரையப்பட்டிருக்கிறது. இதைப் படிப்பவர் ஒவ்வொருவரும் இதை மொழிபெயர்ப்பு என்று எண்ண முடியாது. புத்தகத்தைப் படிக்கத் தொடங்கியது முதல், முடியும் வரையில், கீழே வைக்க முடியாதபடி அவ்வளவு அழகாக, உணர்ச்சி ததும்ப, செவ்விய நடையில் இதை ஸ்ரீ ராஜகோபாலன் எழுதியிருக்கிறார். தமிழர்கள் இதை விரும்பி வரவேற்பார்களென்பதில் சிறிதேனும் ஐயமில்லை. புத்தகத்தை ஆடவர், பெண் மக்கள், மாணவ மாணவிகள் அனைவரும் அவசியம் படிக்கவேண்டும்.

* * *

தனவணிகன் :—* இது சரித்திர சம்பந்தமான நாவலாயிருப்பினும், அநேக அரிய கருத்துக்களைத் தன்னிடையே கொண்டிருக்கிறது. * கதை ருசியாயிருக்கிறது. தத்துவம் நிரம்பிய கதைகளில் இது ஒன்று. மொழிபெயர்ப்பு நன்றாயிருக்கிறது.

---

அல்லயன்ஸ் கம்பெனி, மயிலாப்பூர், சென்னை.